இ-ள். சந்திர சூரிய கிரணங்கள் காற்று இவைகள் அணு காததும் கிருமி துர்வாசனை சேறு தடித்தல் சாகுதிரல் ருசியின்மை யென்னும் இவைகள் பொருந்தியதும் ஆகிய ஜலமானவை ஸ்நான பானங்களுக்கு ஆகாவாம், அகிலரோக சம்பவமாம் என்க. 47

## நீராகாரநீரின் குணம்

வாதபித்த மைய வறட்சிகளை மாற்றிவிடுந்
தாதுவு முண்டாக்குந் தாகம்போம்—மாதர்மெச்ச
வாராகா ரங்கொடுக்கு மாமதுரந் தைக்கொடுக்கு
நீராகா ரத்தெளிவு நீர்.

இ-ள். மிகு மதுரமான நீராகாரத் தெளிஜலமானது வாத பித்த சிலேற்பன வறட்சிகளையுந் தாபத்தையும் விலக்கும், சுக்கிலத் தையும் அழகையும் விருத்தி செய்யும் என்க. 48

## காடிநீரின் குணம்

பித்த மயக்கமறும் பேரவுட தம்முறியும்
உற்றபிணி யிற்சிலவை யோடுங்காண்—சற்றும்
வழங்கா வசீரணமும் வன்பேதியும் போம்
பழங்காடிக் குள்ள பயன்.

இ-ள். பழமையாகிய காடிச் சலத்தினால் பித்த மயக்கமும் சோபாரோக முதலிய சிற்சில ரோகங்களும் அசீரணமும் வாதாதி சாரமும் பெரிதாகிய ஔஷதங்களின் நற்குணங்களும் விலகும். 49

## உப்புநீரின் குணம்

உப்புநீ ராலுலவை யுள்ளிலோ டிக்குத்தும்
எய்ப்பசன மாம்பித்த மேறிடுங்காண்—செப்புகின்ற
வாயிலூ றுஞ்சலமு மாதுவர்ப்பா மாதரசே
யோயுங் குடல்வாத மோர்.

இ-ள். உப்புத் தண்ணீரால் சரீரத்தில் ஓடிக் குத்துகின்ற வாயுவும் அற்ப போசனமும் பித்தமதிகரிப்பும் வாயில் துவர்ப்பாக ஊறுகிற ஜலமும் அதிகரிக்கும், ஆனால் குடல்வாதம் விலகும். 50

## சமுத்திரநீரின் குணம்

கடலின் புனலாற் கவிகை பெருநோய்
உடலின் கடுப்புதிரச் சூலை—யடர்குட்டம்
வாதகுன்மம் வெப்பிரத்த வாதநீ ராமை
கோதரம்பி லீகமறுங் கூறு.

இ-ள். கடற்சலத்தினால் கவிகையென்னும் ஒருவித உதர ரோகம் பெருவியாதி சரீரக்குடைச்சல் ரத்தகுன்மம் குஷ்டம் வாத குன்மம் உதிரவாதம் நீராமைக்கட்டி பெருவயிறு பிலீகத்தைப்பற் றிய வியாதி ஆகிய இவைகள் விலகும், பிலீகமென்பது இருதயத் துக் கிடப்புறத்திலிருக்கும் ஒருவித மாமிசக் கண்டம். 51

## இதுவுமது—விருத்தம்

குன்ம வாயு குடற்கரி யென்பது
வன்ம மான மலசல பந்தமுங்
கன்ம மாகும்வன் னோய்களுங் காணுமே
நன்மை வாரிநீர் காய்ச்சி நுகரினே.

உடற் கடுப்புட னுற்றெழு சோணிதம்
நடுக்கு வாதமு நாப்பிடிப் போடுபல்
இடுக்கி ரத்தமு னிற்று விழுவதுந்
துடுக்க தாஞ்சந்நி தோடமு மோடுமே.

இ-ள். சமுத்திர சலத்தைக் காய்ச்சியுண்டால் வாதகுன்மம் குடற்கரிரோகம் மலசலபந்தம் மிருவுழைப்பினால் வந்த வியாதிகள் தேகக்கடுப்பு சோணிதவாதம் நடுக்குவாதம் நாக்குப் பிடிப்பு பல் லிடுக்கில் இரத்தம் வருதல் பல் விழுதல் சந்நிதோஷம் ஆகிய இவைகள் விலகும் என்க. 53

## நாவல்நீரின் குணம்

### வெண்பா

நாவல்வே ரூறுசல நாளுமதி சாரத்தை
மாவலிய மேகத்தை மாற்றுங்காண்—பூவுலகில்
விந்தோ டதிசீதம் வீறுபலம் வெப்பையம்
மந்தமிவை யுண்டாக்கு மால்.

இ-ள். நாவல் வேரூறிய சலமானது பித்தாதிசாரத்தையும் மது மேகத்தையும் நீக்கும், சுக்கில விருத்தி அதிகுளிர்ச்சி தேகபலம் சுரம் சிலேஷ்ம கோபம் அக்கினிமந்தம் இவைகளை உண்டாக்கும்.

## கருங்காலிநீரின் குணம்

குட்டங் கபரோகங் குன்மம் பெருவயிறு
கெட்டைப் புழுவுமிரு நீரிழிவும்—விட்டே
யருங்கான கத்தேகு மஞ்சுகமே நல்ல
கருங்காலி நீரதனைக் கண்டு.

இ-ள். கிளிபோல் வசனிக்கும் பெண்ணே! கருங்காலி வேரூறிய சலத்தினால் குஷ்டம் பித்தக்ஷயம் பித்தகுன்மம் மகோதரம் பெரும் பூநாகக்கிருமி இரத்தப்பசையற்ற திமிர்வாதம் நீரிழிவு ஆகிய இவைகள் விலகுமென்க. 55

## இலவுநீரின் குணம்

அட்டகுன்ம நீரிழிவு மற்றிடுமே தேகத்திற்
கெட்ட விரணக் கிருமியறு—மட்டலருங்
கூந்தன்முடி மாதரசே கோதிலில வின்புனலாற்
சேர்ந்தவழ லுந்தணியுஞ் செப்பு.

இ-ள். தேன்பொருந்திய புட்பங்களையணிந்த கூந்தலையுடைய மாதரசே! இலவமரத்தின் வேரூறிய சலத்தால் அஷ்டகுன்மம் நீரிழிவு ரத்தமற்ற விரணக்கிருமி உட்சூடு இவை போம். 56

## வாழைநீரின் குணம்

வாழைநீர் சீதவெப்பு வல்லபல முண்டாக்கும்
பேழை வயிறுடைக்கும் பெண்மயிலே—யீழமல்லி
ரத்தக் கிரிச்ச மெரிநீ ரிவையுடனே
சிற்றிரணம் போக்குந் தெரி.

## இதுவுமது

சோமரோ கங்க டொலையு மிளைப்புழலை
நாமமறும் பாண்டுவகை நாடாதே—பூமிதனில்
காமை யெலும்புருக்கி காணு வணங்கரசே
வாழைநீர்க் கென்றுளத்தில் வை.

இ-ள். மாதரசே! வாழைக் கிழங்கில் ஊறுகின்ற சீதோஷ்ண நீரானது பெருவயிறு ரத்தக்கிரிச்சரம் எரிமூத்திரம் அற்பவிரணம் சோமரோகம் அயர்வு உழலை நோய் பாண்டு எலும்புருக்கி ஆகியவைகளை விலக்கும், தேகத்திற்கு வன்மையை யுண்டாக்கும் என்க. 58

## மட்டைநீரின் குணம்

மட்டை நீராற்கிரிச்ச மாறு மடமயிலே
யொட்டிநின்ற நீரிழிவு மோடுங்காண்—கெட்ட
பவுத்திரமும் புண்ணும் பறக்கும் பயந்தே
புவிக்குள்வயிற் றுக்கடுப்பும் போம்.

இ-ள். தெங்கு பனை முதலிய மட்டைகளிற் பிழிந்த நீரினால் மூத்திரக்கிரிச்சரம் நீரிழிவு பவுத்திரமேகம் விரணம் வயிற்றுக் கடுப்பு ஆகிய இவைபோமென்க. 59

## இளநீரின் குணம்

இளநீரால் வாதபித்த மேகமு மனதுந்
தெளிவாய்த் துலங்குமிரு திட்டிக்—கொளிவுங்
குளிர்ச்சியு முண்டாகுங் கொடியவன னீங்குந்
தளிர்த்தகன நொய்தாகுஞ் சாற்று.

இதுவுமது

என்று மிளநீர்நீ ரிறக்குங் கபமறுக்குந்
துன்றனலாஞ் சீதமெனச் சொல்லுவர்கா—ணின்றெழும்பும்
பித்தமொடு வாந்தியும்போம் பேதிகட் டிரண்டுமுண்டாங்
கொத்தலரும் பூங்குழலாய் கூறு.

இ-ள். கொத்துக்களினின்று மலர்ந்த வழகிய கூந்தலையுடைய பெண்ணே! முறைமையாக இளநீரைப்பருகினால் வாதகோபம் பித்ததோஷம் வெப்பம் தேகபாரிப்பு கயாதிக்கம் பயித்தியகோபம் வமனம் அதிசாரம் ஆகிய இவை நீங்கும். மனத்தெளிவு நேத்திரத் துலக்கம் குளிர்ச்சி மூத்திரப்பெருக்கம் மலப்போக்கு ஆகிய இவை உண்டாகும் இது உஷ்ண சீதளத்தையுடையது என்க. 61

## செவ்விளநீரின் குணம்

பித்தமொடு தாகம் பெருந்த வழிநடையா
லெய்தலா யாசமிவை யேகு—நித்தியமுஞ்
செவ்விளநீர் ருண்டக்காற் றீரும்பல கயமு
மவ்விளநீர் கொங்கைமின்னே யாய்.

இ-ள். சிவந்த விளநீரனைய கொங்கைகளையுடைய மின்னலைப் போன்ற இடையையுடையவளே! தினமுஞ் செவ்விளநீரை யருந்தில் பித்தவிருத்தி தாகம் வழிநடையாலாய இளைப்பு அயர்வு பற்பல க்ஷயம் ஆகியவைகள் நீங்கும். 62

## புதிய பழைய இளநீரின் குணம்

புதியிளநீர் புத்தமறும் பூதவத்தோ ருண்ணும்
பதமுடனே யுண்பார் பரிவாய்—நிதநிதமு
முண்ணப் பழவிளநீ ருண்டாம் பலவகைநோ
யெண்ணி யறிவா யினி.

இ-ள். இளவழுக்கையுடைய புதிதாகப் பறிக்கப்பட்ட இளநீரை யுண்பவருக்குப் பித்தகோபம் விலகும் பழைய இளநீரை யுண்டால் ஜலதோஷ முதலிய பற்பல ரோகங்களும் உண்டாம். 63

## பச்சை இளநீரின் குணம்

பச்சிளநீர் மேகம் பழஞ்சுரங் களைப்போக்கும்
கச்சுமுலை மாதே கபமறுக்கு—மெச்ச
வயிற்றிற் கிருமியொடு வன்சொறிகண் ணோயும்
அயர்த்தோடச் செய்யு மறி.

இ-ள். வாரிறுக்கிய தனங்களையுடைய பெண்ணே! பச்சையிளநீர் சிழ்ப்பிரமேகம் பழையசுரம் கபாதிக்கம் எறிகிருமி யானைச் சொறி கண்ணோயாகிய இவற்றை நீக்கும் என்க. 64

## கேளி இளநீரின் குணம்

கேளியுண்ண மேகம்போங் கேளாய் மடமயிலே
நீளகட்டுக் கீடநிலை யாவாங்—தாளாத
தாகமொடு மந்தமறுந் தானேகரப் பனும்போம்
மேக வனலுந்தணியு மே.

இ-ள். இளமை பொருந்திய மயில்போலுஞ் சாயலையுடைய மாதே! கேளி யிளநீரை யுண்பவர்க்கு ரத்தமேகம் மலக்கிருமி விதாகம் மந்தாக்கினி கரப்பான் அதிசுரம் ஆகியவை நீங்கும். 65

## மஞ்சள்கச்சி இளநீரின் குணம்

பித்தம்போஞ் சோபையறும் பேருலகி லியாவருக்குந்
தொத்து கபமுந் தொலையுங்காண்—தத்துகின்ற
பொல்லாப் பழஞ்சுரமும் போகுமஞ்சட் கச்சிக்குப்
பொல்லாப் பொன்றில்லைப் புகல்.

இ-ள். மஞ்சள்கச்சி இளநீரை யருந்தினால் பித்ததோஷம் சோபை சிலேஷ்மாதிக்கம் பழயசுரம் ஆகிய இவை விலகும். 66

## அடுக்கிளநீரின் குணம்

அடுக்கிள நீர்கயத்தை யண்டா தகற்றும்
வடுக்கண்ணு யின்னும் வகுப்போம்—படுக்கும்பேர்
துண்டாற் சுகமெய்து முள்ளாங் கிருமியிதைக்
கண்டா விறந்துவிடுங் காண்.

இ-ள். மாவடுவையொத்த கண்களையுடைய பெண்ணே! இன்னுஞ்சொல்வேன்: நித்திரைக்குமுன் அடுக்கிளநீரையுண்டால் கபதோஷம் மலப்பையைப்பற்றிய கிருமியும் போம், நன்மையுண்டாம்.

## கருவிளநீரின் குணம்

மருமலர்வாழ் மானேகேள் வையகத்தோர் நித்தங்
கருவிளநீ ருண்ணக் கபமுங்—கிருமிநெளி
புண்ணுங் கரப்பானும் போகுமிகக் காந்தியுறு
மெண்ணுமனப் பூரிப்பா மென்.

இ-ள். வாசனைபொருந்திய தாமரைமலரில் வசிக்கின்ற மான்போலுங் கண்களையுடைய பெண்ணே! கருமைநிற இளநீரால் கபாதிக்கமும் புழுநெளிகின்ற கரப்பானும் நீங்கும், தேஜசும் மகிழ்ச்சியும் உண்டாம் என்க. 68

## சோரியிளநீரின் குணம்

காரிருட் கூந்தற் கருங்கண் மடமயிலே
சோரியிள நீரருந்தச் சோகைதருங்—கூறியதோர்
பூச்சி கிருமியறும் பொன்மேனி யாமுடலாம்
பேச்சிற் றெளிவுண்டாம் பேசு.

இ-ள். கறுத்த கூந்தலையுங் கரிய கண்களையும் மயில்போலுஞ் சாயலையுமுடைய பெண்ணே! இரத்தவன்ன இளநீரால் வீக்கமும் வயிற்றிலுள்ள பூச்சியும் சன்னகிருமியும் போம், தேகம் அழகு தரும் தெளிந்த வசனமுமுண்டா மென்க. 69

## ஆயிரங்கச்சி இளநீரின் குணம்

வேகமுறுந் தீபனமாம் விட்டோடும் வாதகப
மாகமதிற் சேர்ந்த வரிப்பும்போம்—வாகுறுபுண்
வாயிரங்கு சீழும் வயிற்றுவலி யுந்தொலையும்
ஆயிரங் கச்சிக் கறி.

இ-ள். ஆயிரங்கச்சி இளநீரால் வெப்பம் பசி ஆமவாத கபம் தொந்தம் நமைச்சல் விரணஞ்சூழ் குன்மம் ஆகிய இவை தீரும்.

## குண்டற்கச்சி இளநீரின் குணம்

அண்டையிலே நின்றூர்க் கரோசிகெடுந் தீபனமாங்
கெண்டைவிழி மாதரசே கேளின்னுங்—கண்டபடி
குண்டற் கச்சிக்குக் கொடுந்தாக மாறிவிடும்
பண்டைப் பழமலம்போம் பார்.

இ-ள். மகரத்தைப் போன்ற கண்களையுடையவளே! குண்டற்கச்சி இளநீரால் அருசி விதாகம் நாட்பட்ட பழைய மலம் ஆகிய இவைபோம், ஜடராக்கினியுண்டாம் என்க. 71

## ஊணுக்குமுன் அருந்தும் இளநீரின் குணம்

ஊணுக்கு முன்பிளநீ ருண்டாற் பசிபோகும்
வீணுக்குக் குன்மம் விளையுங்காண்—பேணியிதை
மாலை தனிலருந்த மன்னு புழுச்சாகும்
வேலையொத்த கண்ணாய் விளம்பு.

இ-ள். வேலைநிகர்த்த கண்ணையுடைய மாதே! காலைப்புசிப்பிற்கு முந்தி இளநீருண்டால் பசி நீங்கலன்றிக் குன்மமாம்; மாலையில் உண்டால் எரிகிருமிகள் ஒழியும் என்க. 72

## உண்டபின்பு அருந்தும் இளநீரின் குணம்

வாதபித்த மீறுது வன்பயித்தி யந்தீருங்
கோதின் மலஞ்சாயுங் கொடும்பசியா—மாதரசே
மண்டியநோ யாராது மேனி மினுமினுக்கும்
உண்டபின்பு நல்லிளநீ ருண்.

இ-ள். பெண்களுயகமே! புசித்தபின்பு இளநீரையுண்டால் வாதபித்த கோபந்தணிவதுமன்றித் தனிப்பித்த தோஷம் விலகும்; தாராளமாக மலங்கழியும், அக்கினிதீபனமும் உண்டாம், நோயணுகாது தேகம் மினுமினுக்கும் என்க. 73

## காய்ந்தாறிய இளநீர் செவ்விளநீர் கெவுளிபாத்திரை இளநீர் இவைகளின் குணம்

காய்ந்தா றியவிளநீர் காசங் கபந்தீர்க்கு
மாய்ந்திடாத் தாகசுர மாற்றுங்காண்—ஆய்ந்தவொரு
செவ்விளநீர் பித்தஞ் சிதைக்குங்கெவுளி கொண்டா
லெவ்வளவுந் தாபமில்லை யெண்.

இ-ள். மட்டைசீவித் தண்ணீரில் போட்டுக்காய்ச்சி யாற்றிய இளநீரானது இருமல் சலதோஷம் வறட்சிசுரம் இவைகளைப் போக்கும்; செம்மைநிறமுள்ள இளநீர் பித்ததோஷத்தை விலக்கும்; கெவுளி பாத்திரையென்னும் இளநீரையுண்டால் உஷ்ணம் விலகும்.

## வெந்நீரின் பொதுக்குணம்

நெஞ்சதிர்ப்பு நெற்றிவலி நீங்காப் புளியேப்பம்
வஞ்சமுற வந்த வயிற்றுநோய்—விஞ்சியே
வீழாமற் கட்டோடு வெப்பிருமற் சுட்டநீர்
ஆழாக்குட் கொள்ள வறும்.

இ-ள். ஆழாக்கு என்னும் அளவாகக் குடிக்கின்ற வெந்நீரினால் எதிர்க்கின்ற உணவு நெற்றிநோவு புளியேப்பம் குன்மம் சீதக்கட்டு சுரம் காசம் ஆகிய இவைகள் போமென்க. 75

## காய்ந்தாறிய வெந்நீரின் குணம்

காய்ந்தாற வைத்தநீர் கட்டுழலை விக்கலொடு
வாய்ந்தவதி சாரபித்த மாற்றுங்காண்—சோர்ந்துவரு
மூர்ச்சை விடம்வாந்தி முன்மயக்க மேகமதி
யூர்ச்சிதமுத் தோடம்போக் கும்.

### இதுவுமது

காய்ந்தநீ ருண்ணுங்காற் கண்செவிநோய் சூலைகுன்மந்
தோய்ந்தசுர வேகந் தொடரையும்—பாய்ந்தடரும்
வாதத்தின் கோபமிவை மாறுமென லாதியருள்
வேதத்தின் வாக்கியமாம் விள்.

இ-ள். காய்ச்சி ஆற்றிய வெந்நீர் உழலைநோய் விக்கல் பேதியாற்கிளைந்த பித்தகோபம் மூர்ச்சை சிலவிஷம் வாந்தி மயக்கம் சுக்கில மேகம் திரிதோஷம் கண்ணோவு செவிக்குத்தல் சூலை குன்மம் சுரவேகம் கோழை வாதாதிக்கம் இவைகளை தீர்க்கும். 77

## கால்கூறு அரைக்கூறு காய்ந்த வெந்நீரின் குணம்

காற்கூறு காய்நீராற் காரிகையே பித்தம்போம்
மேற்கூறு பாதிசுட்ட வெந்நீரான்—மேற்கூறும்
வாதமொடு பித்தம்போம் வைத்தொருநாட் சென்றுண்டு
ரோதம்போ மோடி யொளித்து.

இ-ள். வைத்த அளவுக்குக் காற்பாகஞ் சுண்டிய வெந்நீரால் பித்த கோபம் நீங்கும். பாதி சுண்டிய வெந்நீரால் வாதபித்த தோஷம் விலகும். அதை மறுநாள் வைத்துண்ணில் திரிதோஷ கோபம் போம். 78

## முக்காற்கூறு காய்ந்த வெந்நீரின் குணம்

முப்பக் கறக்காய்ந்த முந்தவெந்நீ ரால்வாதஞ்
செப்புங் குளிர்நடுக்கல் தீச்சுரம்வெக்—கைப்பலநோய்
வாதபித்த வையமிவை மாறுஞ் சுரிகுழலே
பூதலத்து ளோரும் புகல்.

இ-ள். சரிந்த கூந்தலையுடைய பெண்ணே! முக்காற்பாகஞ் சுண்டிய வெந்நீரால் வாதவிர்த்தி குளிர் நடுக்கல் கொடுஞ்சுரம் பற்பல பேதி திரிதோஷங்கள் இவை போமென்க. 79

### ஊணுக்கு முன் பின் நடு இக்காலங்களில் அருந்தும் வெந்நீரின் குணம்

ஊணுக்கு முன்புவெந்நீ ருண்டக்காற் றீபனம்போம்
ஊணுக்குப் பின்பருந்தி லூதியமாம்—ஊணுக்குப்
பாதியிலுண் டாற்பசியும் பாதியாம் வெந்நீரே
யோதுசுர வாதமகற் றும்.

இ-ள். உணவுக்கு முந்தி வெந்நீரைக் குடித்தால் பசி மந்தப்படும், பன்பு உண்டால் நன்மையுண்டாம். சாப்பிடும்போது மத்தியிலருந்தினல் பசியும் மத்தியமாம். மேலும் வெந்நீரின் சுவபாவம் வாதசுரத்தை நீக்கு மென்க. 80

### பொற்கெண்டி வெந்நீரின் குணம்

பொற்கெண்டி யில்வெந்நீர் பூரித்துட் கொள்ளுங்காண்
மற்கொண்ட வாயுகபம் வாயருசி—யெற்கொண்ட
மெய்யழல்வெப் புந்தணியும் மேவுநற் புத்தியொடு
மெய்யறிவு மோங்குமென விள்.

இ-ள். வெந்நீரைப் பொற்கெண்டியில் ஆறவைத் தருந்தில் வாதவிருத்தி கபகோபம் அரோசகம் சரீரவுஷ்ணம் சரமாகிய இவை போம், சுக்கிலமும் நல்லறிவு ஸ்பரிச ஞானமு முண்டாமென்க. 81

### சரிகை வெள்ளிக்கெண்டி வெந்நீரின் குணம்

சரிகைவெள்ளிக் கெண்டி தனிலெட்டி லொன்ருகப்
பெருகக்காய்ச் சும்புனலைப் பெய்தே—பருகுங்கால்
வெப்பொடுதா கங்குன்மம் வீறுபித்தக் காய்ச்சலும்போந்
துப்பொடட லுஞ்செழிக்குஞ் சொல்.

இ-ள். எட்டிலொருபங்காய்க் காய்ச்சிய நீரை சரிகை வெள்ளிக்கெண்டியில் விட்டுச் சாப்பிட்டால் உஷ்ணம் தாகம் குன்மம் பித்தசுரம் இவை விலகும். தேகத்திற்கு வன்மையும் புஷ்டியும் உண்டாம். 82

### தாம்பரம் வெள்ளி பஞ்சலோகம் வெண்கலம் இப்பாத்திரங்களின் வெந்நீரின் குணம்

இரவிவட்டிற் காமிரத்த பித்தங்கள் தான்போக்கும்
இரசிவட் டிற்கைய மேகும்—வருகலப்பு
வட்டிலறல் முத்தோட மாற்றும்வெண் கலச்சலமெய்க்
கொட்டிரத்த தாதுவைச்சேர்க் கும்.

இ-ள். தாம்பரக்கிண்ணி வெந்நீர் கண் புகைச்சலையும் ரத்த பித்தப் பிணியையும் நீக்கும். வெள்ளிக்கிண்ணத்து வெந்நீரால் கபநோய் நீங்கும். பஞ்சலோகவட்டில் வெந்நீர் திரிதோஷத்தை விலக்கும். வெண்கலப் பாத்திர வெந்நீர் உதிரத்தைப் பெருக்கு மென்க. இரவி - தாம்பரம். 83

### கெண்டி வெந்நீரின் குணம்

கெண்டிதனிற் காய்ந்திடுநீ ரானதனை யாற்றியுண
அண்டிய நோயு மடர்சிரங்கும்—பண்டைக்
குடைச்சலும் கைகாற் குடைச்சலொடு சந்தின்
குடைச்சலும்போம் நன்றாகக் கூறு.

இ-ள். கெண்டியில் காய்ந்த நீரை யாற்றி யுண்ணச் சுரம் சிரங்கு அஸ்தி கைகாலிடுப்பு இவ்விடங்களில் குடைச்சல் ஆகி யவைபோம். 84

### பன்னீர்ச்செம்பு வெந்நீரின் குணம்

பன்னீர்ச்செம் பிற்காய்ந்த பானீயம் விட்டருந்த
மன்னியசு வாசம்விக்கல் மாபிரமை—பன்னரிய
பித்த சிலேத்மவளி பேசரிய தாளின்வலி
யித்தரையை விட்டகலு மெண்.

இ-ள். பன்னீர்ச் செம்பில் காய்ந்த வெந்நீரை விட்டருந்த இரைப்பு விக்கல் சித்தப்பிரமை திரிதோஷம் தாளுபாகரோகம் ஆகியவை போம். 85

### இரும்புக்கெண்டி வெந்நீரின் குணம்

இரும்புறுங் கெண்டிதனி லேந்திய வெந்நீரை
விரும்பியுணப் பாண்டு விலகும்—திரும்பவுமோ
தாதுவுமா நாடிகளுந் தாமுரக்குந் தேகமதிற்
சீதசுர முண்டாந் தெளி

இ-ள். இரும்புக்கெண்டி வெந்நீருக்குப் பாண்டு நீங்கும், தாதுவிருத்தி, நரம்புகளுக்கு உறுதியும் தேகத்தில் சீதோஷ்ணமும் உண்டாம். 86

---

## பால் வகை

### முலைப்பால் பொதுக்குணம்

தன்னியதென் றேதிற் சருவதோ டங்களும்போம்
உன்னிய தாப மொழியுங்காண்—சந்நியொடு
வாதசுரம் பித்தசுரம் வன்பகச்சு ரந்தணியுங்
கோதில் வலிமையுண் டாங் கூறு.

இதுவுமது

இருந்தோடம் போக்கு மிகற்கிரிச்சந் தீர்க்கும்
அருந்து மருந்தி னனுபானம்—பொருந்தும்
அஞ்சனத்திற் காகு மனல்வறட்சி நீக்கிவிடும்
பஞ்சினடி மாதர்முலைப் பால்.

இ-ள். முலைப்பால் எழுவகைத் தோஷங்களாகிய வெப்பம் சந்நிபாதம் வாத பித்த கப சுரங்கள் திரிதோஷம் வாதகிரிச்சரம் நாவரட்சி இவைகளை விலக்கி வன்மையைத் தரும். ஔஷத அனுபானத்திற்கும் கலிக்கத்திற்கும் ஆகுமென்க. தன்னியம் என்பது முலைப்பால். 88

## கருமை செம்மைநிற மாதர்களின் முலைப்பாற் குணம்

கரியநிற மாதர் கலசமுலைக் கீரம்
அரியவிழிக் காமருந்திற் காகா—திருநிலத்துள்
நோயணுகாச் செய்ய நுடங்கிடையார் தம்முலைப்பால்
தீயமுத்தோ டம்போக்குஞ் சேர்.

இ-ள். கரியநிற மாதர் முலைப்பால் கண் வயித்தியங்களுக்கேயன்றி ஔஷதங்களுக் குபயோகமாகாது. வியாதியில்லாத செம்மை நிற மாதர் முலைப்பால் வாதாதி முத்தோஷங்களைப் போக்கும். கீரம் - பால். 89

## பரத்தையர் முலைப்பாற் குணம்

பரத்தை முலைப்பாற்குப் பாரமுத்தோ டங்கள்
உரத்து வரும்வாத முண்டாகும்—இரத்தச்
சொறிகிரந்தி புண்ணுந் தொடர்கழ லேய்சேருங்
குறியறிந்து நீக்கிக் கொடு.

இ-ள். வேசையர் முலைப்பாலால் திரிதோஷங்கள் வாதரோகம் இரத்தச் சொறி கிரந்தி விரணம் கழல்வாதம் இவையுண்டாமென்க.

## பசுவின்பாற் பொதுக் குணம்

பாலர் கிழவர் பழஞ்சுரத்தோர் புண்ணுளி
சூலையர் மேகத்தோர் துற்பலத்தோர்—எலுமிவர்
எல்லார்க்கு மாகு மிளைத்தவர்க்குஞ் சாதகமாம்
நல்லாய் பசுவின்பால் நாட்டு.

இ-ள். பசுவின்பாலானது பாலருக்கும் விருத்தருக்கும் பழைய சுரமும் விரணம் சூலை பிரமேகந் துர்ப்பலம் அதிசுஷ்கரோகம் ஆகிய இவைகளை புடையவர்களுக்கும் ஆகுமென்க. 91

## வெண்மை, செம்மை, கருமை, கபிலை என்னும் இந்நிறமுள்ள பசுக்களின் பாற்குணம்

வெண்பசுவின் பால்போக்கும் பித்தத்தை மெய்சிவந்த
வண்பசுவின் பால்போக்கும் வாதத்தைக்—கண்சிவந்த
காராவின் பால்போக்கு மையங் கபிலைப்பால்
ஆரமிர்தாந் தோட மறுக்கும்.

இ-ள். வெண்மைநிறம் பசுவின்பால் பித்தகோபத்தையும், செம்மைநிறப் பசுவின்பால் வாதகோஷத்தையும், கருமைநிறப் பசுவின்பால் கபரோகத்தையும், கபிலைநிறப் பசுவின்பால் திரிதோஷத்தையும் போக்கும். கபிலை என்பது, கருமைகலந்த பொன்னிறமாம் என்க. 92

## காராம்பசுவின்பாற் குணம்

கண்ணோ யகற்றுங் கயரோகந் தான்போக்கு
மண்ணிலுள்ள பால்தோடம் மாற்றுங்காண்—பெண்ணே
இரத்தபித்தம் போக்கு மிராச வசியமிகும்
கறுத்தபசும் பாலதனைக் காண்.

இ-ள். பெண்ணே! காராம்பசும்பால் கண்ணோய் க்ஷயம் மற்ற பாலின் தோஷங்கள் ரத்தபித்தரோகம் இவைகளை நீக்கும் வசியமா மென்க. 93

## நாரைமான் கபிலை என்னும் பசுக்களின்பாற் குணம்

நாரைப் பசுவின்பால் நாளுமுய ரோயகற்று
மாரைநிறப் பசும்பால் வாய்த்திடினோ—வேரையுறு
முப்பிணியும் போகு மொழிகபிலை யின்பாலுக்
கெப்பிணியும் போமே யிறங்கி.

இ-ள். நாரைப்பசும்பால் முயல்வலி தீர்க்கும். கபிலைப்பசும் பாலால் திரிதோஷமும் பலபிணியும் தீருமென்க. 94

## கொம்பசையும் பசுவின்பாற் குணம்

கொம்பசையு மாப்பாலோ கூறுபித்தம் போக்கிவிடும்
தம்பவா தத்தைத் தருவிக்கும்—வம்புமுலை
மானேகேள் விந்து வளர்ப்பிக் குங்கபத்தைத்
தானே யெழுப்புமெனச் சாற்று.

இ-ள். கச்சணிந்த தனங்களையுடைய பெண்ணே! அசைகின்ற கொம்பையுடைய பசுவின்பால் பித்தரோகத்தை நீக்கும், தனுஷ் தம்பவாதம் சுக்கிலதாது கபநோய் இவைகளை விளைவிக்கும். 95

## மூன்றுமீற்று நான்காமீற்றுப் பசுக்களின்பாற் குணம்

மூன்றுமீற் றின்பான் முதிர்கபத்தைப் போக்கிவிடும்
ஏன்றநா லாமீற் றெனும்பாலுங்—கூன்றுதிரி
தோட மகலுஞ் சுகமுண்டிவ் வாப்பாற்சந்
தோட மெவர்க்குமுண்டாக் கும்.

இ-ள். மூன்றுமீற்றுப் பசுவின்பால் நீடித்த சிலேஷ்மரோயும் நான்காமீற்றுப் பசுவின்பால் வாதாதி மூன்று தோஷங்களும் நீக்கும், சரீரசவுக்கியமும் மகிழ்ச்சியும் உண்டாமென்க. 96

## ஆகாப்பசுவின்பாற் குணம்

விருத்தம்

விஞ்சுவரணை தாராநோய் மிகுத்துச்சுழலல் வெண்புள்ளி
துஞ்சியலைந்து மலமருந்தல் சுடுகாடேகி யெலும்புணலிவ்
வஞ்சுவகையி னுவின்பா லாகாதணுகி லறிதோடம்
நெஞ்சிலடையங் கபநோயா னிறைந்தவயதுங் குறைந்திடுமே

இ-ள். ஆகாப்பசுவின்பால் ஐவகைப்படும், அவையாவன: அரணைநோய் தாராநோய் மிகவுஞ்சுற்றுதலோடு வெண்மைபுள்ளி தூங்கித்திரிந்து மலம் அருந்தல் சுடுகாட்டெலும்பு உண்ணல் ஆகிய இவைகளையுடைய பசுக்களின் பாலாம். இவை சேருமாகில் வாதாதி மூன்று தோஷங்களும் மார்பிற்சேர்ந்து க்ஷயத்தை விளைவிப்பதும் ஆயுளைக் குறைப்பதுமா மென்க. 97

## பகற்பசுவின்பாற் குணம்

வெண்பா

பகற்பால் சிசுக்கட்குப் பக்குவ மென்றாலும்
விகற்ப முடன்பருக மெய்யே—யெதற்குமிகத்
தீதடரச் செய்யுமித்தாற் சோராதுட் காய்ச்சலனல்
தாதவிழும் பூங்குழலே சாற்று.

இ-ள். அழகிய கூந்தலை யுடையாளே! பகற்பசுவின்பால் குழந்தைகளுக்குப் பக்குவமா மென்றாலும் பற்பல கபநோயையும் தாம்பூலம் புளிப்பு முதலிய சேருமிடத்துக்கெடுதியையும் செய்யும், உட்சூட்டையும் வெப்பத்தையும் நீக்குமென்க. 98

## இராப்பசுவின்பாற் குணம்

பகற்பசும்பால் காய்ச்சிப் பருகின் மிகவழலும்
விகற்பமுமீளையு மிராவாம்—புகற்பித்த
வேகமும்போ மேனியெல்லா மேவியிடுந் தாதுவுமாம்
போகமிக வுண்டாம் புகல்.

இதுவுமது

இரவின்பால் கண்ணி லெழுபிணிபோக் கும்பின்
பரவியநோ யும்போக்கும் பாரில்—விரகமுற்றூர்க்
கத்தியம் பன்னவிழி யாயிழையே யாவருக்கும்
பத்தியமா மென்றைக்கும் பார்.

இ-ள், அயிலைநிகர்த்த கண்ணையும் ஆராய்ந்திழைக்கப்பெற்ற ஆபரணத்தையுமுடைய பெண்ணே! பகலிற்சுரந்து இரவு கரக்கின்ற பாலை விதிப்படி காச்சியருந்த தேக அழற்சி கபரோகம் சுவாசம் பித்தகோபம் நேத்திரவியாதி விந்துவின்கெடுதியா லனுசரித்த சிற்சில ரோகங்கள் ஆகிய இவை நீங்கும். தேகத்தில் மினுமினுப்புஞ் சுக்கிலப் பெருக்கமும் மாதர்மேல் விரும்பமுமுண்டாகும். இது பத்தியத்திற் குதவுமென்க. பகல் முழுதுஞ் சுரந்திருந்து இரவில் கறப்பது பகற்பால். 99

எருமைப்பாற் குணம்

வாதந் திமிரை வரவழைக்கும் புத்தியினற்
போதத் தெளிவைகனி போக்குங்காண்—கோதற்றே
யங்கத் துறுமருந்தை யன்றே முறித்துவிடும்
பங்கத் துறுமேதிப் பால்.

இ-ள். எருமைப்பால் திமிர்வாயுவைத் தருவிக்கும் தெளிந்த புத்தியின் கூர்மையையும் நல்லமருந்தின் குணத்தையுங் கெடுக்கும்.

வெள்ளாட்டுப்பாற் குணம்

வெள்ளாட்டுப் பாலுக்கு மேவியகற் றீபனமாந்
தள்ளாட்டு வாதபித்தஞ் சாந்தமாம்—உள்ளிரைப்புச்
சீத மதிசாரஞ் சிலேத்மமறும் புண்ணுறும்
வாத கிலேசமும்போ மாய்ந்து.

இ-ள். வெள்ளாட்டுப் பாலினால் வாதபித்த தொந்தம் சுவாச காசம் சீதமதிசாரம் கபதோஷம் விரணம் வாதத்திலுண்டாகிய வீக்கம் முதலிய துன்பம் தீரும், நல்ல பசியும் உண்டாமென்க. 101

செம்மறியாட்டுப்பாற் குணம்

செம்மறிப்பாற் பித்தஞ் சிலேத்மத்தை யுண்டாக்கும்
விம்மும் வயிறுமிக மேன்மூச்சாங்—கொம்மை
வருமுலையாய் பத்தியத்தில் வாராது வாய்வாம்
பருகுவர்க்கு நாளும் பகர்.

இ-ள். திரட்சியாய் வளர்ந்து வருவனவாகிய தனங்களை யுடைய பெண்ணே! வாதரூபமான செம்மறியாட்டுப் பால் பித்த சிலேஷ்மதொந்தம் வயிற்றுப்பிசம் மேற்சுவாசம் உண்டாகும் பத்தியத்திற் குதவாது, வாய்வு அதிகரிக்குமென்க. 102

## யானைப்பாற் குணம்

வாதம்போந் தாதுபுஷ்டி வந்தடரும் வன்பலமோ
யாதுபித் தங்கூடி யழகுதிக்கும்—தாதுமலர்த்
தேனைப்பா லிற்கலந்த தித்திப்பைப் போலிருக்கும்
யானைப்பா லுண்ணு மவர்க்கு.

இ-ள். தேனும் பாலுங்கலந்த ருசிபோன்ற யானைப்பாலைக் குடிப்பவருக்கு வாதகோபம் நீங்கும், சுக்கிலவிருத்தியும் மிகுவன்மையும் பித்தசம்பந்தமான நோயும் தேக அழகும் உண்டாகும். 103

## குதிரைப்பாற் குணம்

வீரிய விருத்தி விளைக்குமழ குண்டாகுங்
காரியத்திற் காமங் கதிப்பிக்கும்—வாரார்
கரகமெனச் செப்புமுலைக் காரிகையே கேளாய்
துரகதப்பால் செய்யுந் தொழில்.

இ-ள். வாரிணுவிறுக்கிப் பொற்கலசமெனப் புகலுங் கொங்கைகளையுடைய மங்கையரே! குதிரைப்பால் சுக்கிலப்பெருக்கத்தையும் சரீர வனப்பையும் புணர்ச்சியில் நிருவாகத்தையும் உண்டாக்குமென்க. 104

## ஒட்டைப்பாற் குணம்

ஒட்டைப்பா லுக்குமந்த மூவாதம் சூலையோ
டட்ட குணக்கரப்பா னுவதன்றி—மட்டிடாக்
காதிரைச்சன் மந்தமதி காசஞ் சுவாசமுமா
மாதரைக்கு ணுளும் வழுத்து.

இ-ள். ஒட்டைப்பாலினுல் அக்கினிமந்தம் வாதசூலை எண்வித கரப்பான் கர்ணநாதசெவிடு அதியிருமல் இரைப்பு இவையுண்டாகும். 105

## கழுதைப்பாற் குணம்

கழுதைப்பால் வாதங் கரப்பான் விரணங்
கழுதளையுள் வித்திரதி தானே—யெழுகின்ற
ஒட்டியபுண் சிழ்மேக மோடு சொறிசிரங்கு
கட்டியிவை போக்குங் கழறு.

இதுவுமது

கத்தபத்தின் பாற்குக் கரிய கிரந்தியறுஞ்
சித்தப் பிரமைபித்தந் தீருங்காண்—தத்திவரும்
ஐய மொழியு மதிக மதுரமுமாஞ்
செய்ய மடமயிலே செப்பு.

இ-ள். அழகு மிளமையும் பொருந்திய மயிலனைய பெண்ணே! கழுதைப்பால் மிகு மதுரத்தையுடையது; இது வாதநோய் கரப்பன்புண் தழுதளைரோகம் உள்விந்திரிதிக்கட்டி ஒட்டுக்கிரந்தி சிழ்ப்பிரமேகம் சொறி சிரங்கு அற்புதவிரணம் சித்தப்பிரமை பித்ததோஷம் கபநோய் இவைகளைப் போக்கும் என்க. 106

பாத்திரபேதத்தி லுண்டாகிய பாற்குணம்

செம்பிலிடும் பால்வாத சீதமொழிக் கும்பொன்மண்
கும்பத் தடுபால்போக் கும்பத்தை—யம்புவியுள்
வெள்ளி யறையிரும்பில் விட்டுக்காய்ச் சும்பாலாற்
றுள்ளி யுறையைமறுஞ் சொல்.

இ-ள். செப்புப் பாத்திரத்தில் காய்ச்சிய பால் வாதசிலேத்மத்தையும் பொன் மண் பாத்திரங்களில் காய்ச்சியபால் பித்ததோஷத்தையும் வெள்ளி வெண்கலம் இரும்பு பாத்திரங்களிற் காய்ச்சிய பால் காசரோகத்தையும் போக்குமென்க. 107

ஆடையெடுத்த பாற்குணம்

ஆடை யெடுக்கும்பா லக்கினிமந் தப்படுமே
வாடை நல்லாய் சீரணமாம் வாதமறுங்—கோடையிடி
போலு மெழுந்தபித்தம் போருமே கூரியசீர்
வேலனைய கண்ணாய் விதி.

இ-ள். கூரிய வேலையுடைய கண்களையுடைய பெண்ணே! ஏடு நீக்கிய பாலால் அக்கினி மந்தமும் சப்த தாதுக்களின் சீரணமும் உண்டாம், வாதபித்த கபதோஷங்கள் நீங்குமென்க. 108

காய்ச்சும்பாலுக்கு நீரளவை கூறல்

ஆடுபசும் பால்காய்ச்சி லட்டபா கம்புனலாம்
நீடெருமை செம்மறிக்கு நேர்நேராந்—தேடரிய
சுக்குசிறு காஞ்சொறிவேர் கூட்டிச் சுவறியபா
லொக்கும்வெள் ளாட்டுப்பாற் குறை.

இ-ள். வெள்ளாடு பசு இவைகளின் பாற்கு எட்டிலொருபங்கும் எருமை செம்மறியாடு இவைகளின் பாற்குச் சரிப்பங்கும் ஜலம் விட்டுக் காய்ச்சவேண்டும். எவ்வித பால்களுக்கும் சுக்கு சிறுகாஞ்சொறிவேர் சேர்த்துக் காய்ச்சல் அவைகள் வெள்ளாட்டுப் பாலுக்கு நேராமென்க. 109

## பாலேட்டின் குணம்

பாலேட்டாற் பித்தமறும் பாழ்ந்தகொடும் வாந்தியும்போம்
மாலாட்டு மூர்ச்சையும்போம் வன்பலமா—மேலாலே
தாதுமிகுந் தீபனமாந் தானே யிளைத்தவர்க்குக்
கோதுமறு மாமயிலே கூறு.

இ-ள். பாலிலுண்டாகும் ஏட்டினால் பயித்தியநோயும் கொடிய வாந்தியும் மூர்ச்சையும் நீங்கும் மிகுபலமும் சுக்கிலமும் ஜாடராக்கினியும் விருத்தியாம் இதைத் துற்பலதேகிகள் உண்டாலுங் குற்றமில்லை. 110

## தேங்காய்ப்பாற் குணம்

வாதமாம் பித்தமுறும் வன்கரப்ப னும்படருந்
தாதுவும்வி ருத்தியாந் தார்குழலே—யோதநல்ல
அன்ன மிறங்கு மதியுரிசை யுண்டாகுந்
தென்னங்காய்ப் பாலாற் றெளி.

இ-ள். தாழ்ந்த கூந்தலையுடைய பெண்ணே! மிகுமதுரத்தால் உணவை யுட்செலுத்துகின்ற தெங்கின்பாலால் வாதவிகாரம் பித்தாதிக்கம் கரப்பான் சுக்கில விருத்தியும் ஆம் என்க. 111

## ஆலம்பாற் குணம்

ஆலம்பால் மேக மறுத்தசையும் பல்லிறுக்குங்
கோல முடிக்குவெகு குளிர்ச்சிதரும்—ஞாலமதில்
மெத்தவுமே சுக்கிலத்தை விர்த்திசெய்யுந் தப்பாமற்
சுத்த மதிமுகத்தாய் சொல்.

இ-ள். களங்கமற்ற பூரணச் சந்திரனை நிகர்த்த முகத்தினையுடைய பெண்ணே! ஆலம்பால் பிரமேகத்தை நீக்கும், ஆடும் பற்களை யிறுக்கும், சிரசுக்குக் குளிர்ச்சியையும் தாதுபுஷ்டியையும் தருமென்க. 112

## அத்திப்பாற் குணம்

காரகமோ டுட்டினமாங் காறுகின்ற பித்தத்தை
நீரிழிவைச் சூலைகளை நீடிரத்தஞ்—சேருங்
கிரிச்சரத்தைப் போக்குங் கிளர்கோளி யென்னும்
மரச்சருமப் பாலதனை வாங்கு.

இ-ள். காரமும் உஷ்ணமுமுள்ள அத்திப்பால் பித்தம் நீரிழிவு சூலை ரத்தமூத்திர கிரிச்சரம் இவைகளை நீக்கும். கோளி-அத்திமரம். 113

## பேயத்திப்பாலின் குணம்

வெடிப்பைமே கப்படையை வீறிவரு குட்டத்
தடிப்பை முளைரணத்தைச் சாடும்—படிக்குண்மயி
லென்னவொளிர் மாதரசே யெங்குஞ் சுணைகறை
மன்னமுறு பேயத்திப் பால்.

இ-ள். மயிலென்ன விளங்குகின்ற பெண்களுயகமே! சுணைகளையுடைய பேயத்திப்பால் மாதமேபதரோகம் மேகச்சொறி குஷ்டரோகத்தடிப்பு முளைவிரணம் இவற்றை விலக்குமென்க. 114

## மட்டிப்பாற் குணம்

தலைவலிநீ ரேற்றந் தணித்த வுடல்வாத
மலைவுறு மேல்வாந்தி யரோசி—நிலைகுலையும்
வட்டுப்பால் வஞ்சம்வைத்த மாமுலை மாதேமணக்கு
மட்டுப் பாலிற்கு மருண்டு.

இ-ள். சூதாடு கருவியை வெற்றிகொள்ளும் வஞ்சம் பொருந்திய தனங்களையுடைய பெண்ணே! வாசனையையுடைய மட்டிப்பாலினால் தலைவலி சலதோஷம் பாதகேஷபகவாதம் கபவாந்தி அருசி இவைபோம். 115

## காட்டுப்பிராய், ஈழத்தலரி இவைகளின் பாற்குணம்

காட்டுப் பிராய்ப்பாலோ காணுகின்ற பல்வலியை
நாட்டில்வைக்கா தோட்டிவிடு நங்கையே—கோட்டாரும்
ஈழத்தலரிப்பா லேறுபுரைப் புண்தொடையின்
வாழைப்புற் றும்போக்கு மால்.

இ-ள். காட்டுப்பிராய் மரப்பால் தந்தநோயை நீக்கும், ஈழத்தலரிப்பால் புரைவிரணத்தையும் தொடைவாழைப் புற்றையும் விலக்கும். 116

## சங்கன் முட்செடி புங்கமரம் இவைகளின் பாற்குணம்

சங்கம்பால் வீக்கமதைத் தான்போக்கு நீர்வடிக்கு
மங்குசுர வெப்பகற்று மையமிலை—கொங்குலவு
புங்கம்பால் புண்ணாற்றும் பொல்லாத வாய்வகற்றுந்
தங்கம்போன் மெய்யளிக்குந் தான்.

இ-ள். முட்சங்கன் வேர்க்கட்டையை மெல்லியதாய் சீவிப் பிழிந்த பால் சோபையையும் நீரேற்றத்தையும் சுரவேகத்தையும்

நீக்கும்; முன்போல் பிழிந்த புங்கம்பால் விரணத்தையும் நீக்கும்; தேகத்தில் பொன் ஒளியுண்டாகு மென்க. 117

## தில்லைமரத்தின்பாற் குணம்

பாரிசவா தஞ்சன்னி பாதச்சூலங் குட்டஞ்
சேருமுட வாதம்வலி சில்விடம்போம்—பேருரைக்க
இல்லையில்லை யென்றோடு மெண்பது வாதமுமே
தில்லைமரப் பாலாற் றெளி.

இ-ள். தில்லைமரப்பாலால் பக்ஷபாதவாதம் சன்னிபாதம் சூலை குஷ்டரோகம் முடவாதம் அமரகண்டன் முதலிய ஐவகை வலிகள் சில் விஷம் 80 வித வாதரோகங்கள் ஆகிய இவைபோமென்க. 118

## திருகுகள்ளிப்பாற் குணம்

வாத முடக்கலும் வன்கிரந்தி குட்டம்போஞ்
சீதமொழி யுங்கிருமி சேராவாம்—மாதே
பருபக்க நோயுடனே பாழ்ங்கரப் பான்றீருந்
திருகுகள்ளிப் பாலாற் றெளி.

இ-ள். திருகுகள்ளிப் பாலினால் கஞ்சவாதம் கிரந்தி பெரு வியாதி சீதக்கட்டு கிருமிரோகம் பக்கசூலை கரப்பான் இவைபோ மென்க. 119

## சதுரக்கள்ளிப்பாற் குணம்

குட்டங் கடிசூலை குன்மமே கம்வாய்வு
துட்டக் கிருமியொடு தூறுபுண்ணு—முட்ட
முதிரக் கரப்பனும்போ மொய்குழலே நாளுஞ்
சதுரக்கள் ளிப்பாற்குத் தான்.

இ-ள். நெருங்கிய கூந்தலையுடைய பெண்ணே! சதுரக்கள்ளிப் பாலால் குட்டம் கடி சூலை வாதப்பிரமேகம் வாதாதிக்கம் கிருமி நெளிகின்ற துட்டவிரணம் கரப்பான் இவைகள் விலகுமென்க. 120

## மான்செவி கள்ளிப்பாற் குணம்

மான்செவிக் கள்ளிப்பாற்கு மாறு விரணங்கள்
ஏன்கிளைக்கு நன்மல மிறக்குங்காண்—ஊண்சேர்
விரிகிரந்தி நீங்கா வறட்சிசொறி யோடு
பொரிகிரந்தி யும்போம் பொரிந்து.

இ-ள். மான்செவிக் கள்ளிப்பாலால் ஆறாத புண்கள் மாமிசத் தைப்பற்றிய வரிக்கிரந்தி தேகவறட்சி படை சொறி கிரந்தி இவை நீங்கும் தோஷமற்ற மலமுஞ் சாருமென்க. 121

### இலைக்கள்ளிப்பாற் குணம் (இதுவே முயற்செவிக்கள்ளி)

செய்ய கரப்பான் செவிநோய்வா தம்போக்கும்
பையவருஞ் சூலைதனைப் பாழாக்கும்—வெய்யின்மிக
ஊது கிரந்தியோ டுட்புண்ணை யாற்றிவிடு
மேதுமிலைக் கள்ளிப்பா லோர்.

இ-ள். இலைக்கள்ளிப்பால் செங்கரப்பான் செவிநோய் வாத விகாரம் சூலை விசர்ப்பிக்கிரந்தி உள்விரணம் இவைகளை நீக்கும். ()

### கொடிக்கள்ளிப்பாற் குணம்

துய்ய கரப்பான் சொறிசிரங்கும் புண்ணும்போஞ்
செய்யகடி குட்டநோய் சேருமே—மெய்யி
லடிக்கடியாங் குன்மவலி யத்தனையுந் தீருங்
கொடிக் கள்ளிப்பாலுக்குக் கூறு.

இ-ள். கொடிக்கள்ளிப்பாலால் கரப்பான் சொறிசிரங்கு பெரு விரணம் அக்கினி கிடக்கடி குஷ்டம் அடிக்கடி வலிக்குங் குன்மம் இவைகள்போம் வன்க. 123

### எருக்கம்பாற் குணம்

எருக்கம்பாற் கட்டிகளை யேகரைக்கும் வாய்வைத்
திருக்கறவே கொன்றுவிடுந் தீராக்—செருக்கான
சன்னிவலி தீர்க்குஞ் சார்ந்தபல சிந்தூர
முன்ன முடிக்குமென் றோர்.

இ-ள். எருக்கம்பால் வாதக்கட்டிகளைக் கரைப்பதன்றி வாத நோய் சன்னிபாதம் ஐவகைவலி ஆகிய இவைகளைப்போக்கும். பற் பல சரக்குகளைச் சிந்தூரஞ்செய்ய நினைக்கில் முடிப்பிக்கும். 124

### வெள்ளெருக்கம்பாற் குணம்

வலியின் வலிசுளிக்கு மாவாதஞ் சன்னி
யெலியின் விடஞ்சுரங்க ளெல்லாம்—வலியற்றுக்
காலைத் தொழுதே கடற்புக்கும் வெள்ளெருக்கம்
பாலைத் தொடுவாரைப் பார்.

இ-ள். வெள்ளெருக்கம்பாலால் ஐவகைவலியும் சுளுக்கும் மகா வாதம் சன்னிபாதம் எலிவிஷம் குளிர்ச்சுரம் இவைபோம். 125

### காட்டாமணக்கின்பாற் குணம்

விழுமேக வெள்ளைகுன்ம மேல்விர ணங்தோலின்
விழுமேருக் கட்டியிவை யெல்லாந்—தொழுதோடுங்

கூட்டா மணக்குழம்பைக் கொண்டவனக் கொங்கையின்னே
காட்டா மணக்கம்பாற் கண்டு.

இ-ள். கலவைச்சாந்தணிந்த கொங்கைகளையுடைய பெண்ணே! காட்டாமணக்கம்பாலால் மூத்திரத்தோடு விழுகின்ற மேகம் வெள்ளை வயிற்றுவலி குறிவிரணம் சருமக்கட்டி இவைநீங்கும். 126

## எலியாமணக்கம்பாற் குணம்

எலியா மணக்கோ வெலிவிடம்வித் துப்பற்
பலவிடமு நீக்கிவிடும் பாரில்—வலுபேதி
யுண்டாகச் செய்யு முயிர்பீலி கங்குன்ம
மண்டாம லோட்டுமிதை யாய்.

இ-ள். எலியாமணக்கின்பால் எலிவிஷம் பீஜவீக்கம் வண்டுகடி முதலிய பற்பல விஷம் பீலிகநோய் வயிற்றுவலி ஆகிய இவைகளை நீக்குவதுமன்றி அதிக விரோசனத்தை யுண்டாக்கு மென்க.

## பிரமதண்டின்பாற் குணம்

கண்கூசல் கண்ணருகல் கண்ணொழுகல் கண்வலி
கண்சிவத்த லெல்லாங் கடிதேகுந்—திண்ணச்
சரமதன் றனைப்பிளக்குஞ் சாயகக்கண் மாதே
பிரமதண் டன்பாற்குப் பேர்ந்து.

இ-ள். பலம்பொருந்திய மன்மதனையும் வருத்துஞ் சாயல் போலுங் கண்களையுடைய பெண்ணே! பிரமதண்டின் பாலால் கண்கூசுதல் கண்ணூறுதல் கண்ணீர் வடிதல் கண்வலி கண்சிவப்பு ஆகிய இவைகள் போமென்க. 128

---

# தயிர்வகை



## பசுவின்தயிர்க் குணம்

பசுவின்றயிராற் பசிமிகவு முண்டாகு
மிசிவுறும் சீரணநோ யேகும்—பசையகன்ற
தாக மிளைப்பிருமல் தாங்கொணு மெய்யெரிவு
மேகு முலகி லியம்பு.

இ-ள். பசுவின் தயிரால் பசியுண்டாகும். இசிவு சீரணரோகம் தாகம் ஆயாசம் காசம் சரீர எரிச்சல் இவை நீங்கும். 129

## ஆடையெடுத்த தயிர்க்குணம்

ஆடை யெடுத்ததயிர் ஐய மிளைப்பறுக்கும்
நாடு கிரிச்சரத்தை நாடவொட்டா—தாடொவியா
லுண்டாங் கிராணி யுறைமேகம் போக்கிவிடுந்
தண்டார் குழலணங்கே சாற்று.

இ-ள். குளிர்ந்த மாலையணிந்த கூந்தலையுடைய பெண்ணே! ஏடு நீக்கிய தயிரானது சிலேஷ்மரோகம் ஆயாசம் மூத்திரகிரிச்சரம் வாதகிராணி குஷ்டரோகம் இவைகளை நீக்குமென்க. 130

## எருமைத்தயிர்க் குணம்

எருமைத் தயிருக் கெரிபித் தம்போம்
வருமைக் கரப்பனொடு வாதம்—பெருமிதஞ்சேர்
தூல வுடலமுமாந் தூயறிவு மந்தமுறுங்
கோல விழிகுளிருங் கூறு.

இ-ள். எருமைத் தயிருக்கு எரிச்சலும் பித்தநோயும்போகும். கபத்தைப்பற்றிய கரப்பான் வாதரோகம் அதிதூலரோகம் புத்தி மந்தங் கண்ணுக்குக் குளிர்ச்சி ஆகிய இவைகள் உண்டாகும். 131

## வெள்ளாட்டின் தயிர் மோர் இவைகளின் குணம்

வெள்ளாட்டின் வெண்டயிரோ மிக்கனல மாகுமதற்
குள்ளாடை யான்மந்த முண்டென்பார்—வெள்ளாட்டின்
மோரோமே கத்தை முதிரா தடித்துவிடும்
பாரோ ரறியப் பகர்.

இ-ள். வெள்ளாட்டின் தயிரால் அதி உஷ்ணம் அதன் ஏடால் மந்தம் விளையும். மோரானது பிரமேகரோகத்தைப் போக்கும். 132

## செம்மறியாட்டுத் தயிர்க் குணம்

செம்மறியின் றண்டயிரைத் தின்ன மதுரமிகுங்
கொம்மைமுலை மாதரசே கூறக்கேள்—அம்ம
கரப்பான் சொறியுங் கடும்பிரத்த வாய்வு
முரப்பா முடங்கெடுமென் றோர்.

இ-ள். இளமை பொருந்திய தனங்களையுடைய மாதரசே! மதுரமுள்ள செம்மறியாட்டின் தயிரை உண்டால் கரப்பான் சொறி மூலக்கடுப்பு ரத்தமூலம் வாதரோகம் ஆகிய இவைகள் பலப்படுவதுமன்றிச் சரீரத்திற்குத் துன்பமுண்டாகுமென்க. 133

### ஒட்டைத்தயிர்க் குணம்

தீபனமு முண்டாஞ் சிறுகரப்பான் புண்ணுமாற்
பூபதி பொன்மேனி புளகிக்குந்—தாபதமாம்
ஒட்டைத் தயிர்நிதமு முண்ணவதி தாகம்போந்
துட்டக் கிருமியறுஞ் சொல்.

இ-ள். ஒட்டைத்தயிரைக் குடித்தால் ஜடராக்கினி சிறுகரப்பான் விரணம் சரீரமேனி இவை உண்டாகும், தாகமும் மலக்கிருமி ரோகமும் நீங்குமென்க. 134

---

## மோர்வகை

### பசுமோர்க் குணம்

வீக்க மகோதரமுள் வீறுகுன்மம் பாண்டுபித்தந்
தாக்கு மருந்திட்டததி சாரமொடு—கூக்குரலே
மாறுந் திரிதோட மந்தமனற் றுகம்போம்
வீறுவின் மோருக்கு மெய்.

இ-ள். பசுவின்மோருக்கு வீக்கம் மகோதரம் வயிற்றுவலி பாண்டுரோகம் பித்தகோபம் இடுமருந்தால் வரும் நோய்கள் பேதி திரிதோஷம் அக்கினிமந்தம் வெப்பம் இவைகள் போமென்க. 135

### எருமைமோர்க் குணம்

தாகங் கிராணி சலங்கழிச்சல் காமாலை
ஆகங் குடைபுழுவு மற்றும்போ—மோகமுறுந்
தேவா மிருதமுமாஞ் சீர்மா னிடர்தமக்கு
மூவா மருந்தெருமை மோர்.

இ-ள். எருமைமோரினால் தாகம் கிராணிரோகம் சலக்கழிச்சல் காமாலை கிருமி ஆகிய இவைகள் நீங்கும் போகவிருப்பமாம், சிறந்த மானிடர்களுக்கு கெடாத வமுதமுமாகுமென்க. 136

### ஒட்டைமோர்க் குணம்

ஒட்டைமோர் மெத்தவன லோங்கியவா தந்தணிக்குங்
கிட்டுமந்த நெய்ப்பெருமை கேட்பீரேல்—நெட்டுலகின்
மந்தஞ் செய்தாலும் வலிவிந்து வைப்பெருக்கு
மந்தஞ்சேர் கண்ணு யறி.

இ-ள். ஓட்டைமோரானது பித்தவாத தொந்தத்தைச் சாந்தி செய்யும் அதன் நெய்யானது அக்கினிமந்தஞ் செய்வதா யிருந்தாலும் சுக்கில தாதுவை விருத்திசெய்யு மென்க. 137

# வெண்ணெய் வகை

## மூலைப்பால் வெண்ணெய்க் குணம்

கண்ணெரிவுங் கையெரிவுங் காலெரிவு நாசிகளி
லண்ணெரிவு மண்ணி லகன்றிடுங்காண்—தண்ணு
ரலைப்பால்மாண் பந்துக் கணிசெய்யு மாதர்
மூலைப்பால்வெண் ணெய்க்கு முறிந்து.

இ-ள். சிறந்தமாதர் மூலைப்பால் வெண்ணெய்க்குக் கண், கை, கால், நாசி, இவ்விடங்களில் உண்டாகும் எரிச்சல் நீங்கும். 138

## பசுவெண்ணெய்க் குணம்

கண்ணி லெழுநோயுங் கண்ணெரிவும் பீளையும்போ
மெண்ணும் பசியு மெழும்புங்காண்—நண்ணரிய
ஆவினறும் வெண்ணெய்க் ககலும்வன் மேகமெல்லாம்
பூவினர்க் கெல்லாம் புகல்.

இ-ள். பசுவின் வெண்ணெய்க்குக் கண்ணோய் கண்ணெரிச்சல் பீளை சாரல் பிரமேகம் இவைபோம், பசியுண்டாம். 139

## எருமை வெண்ணெய்க் குணம்

எருமைவெண் ணெய்க்கி லெரிநீ ரிழிவு
பருவ மயில்கேளிப் பாரிற்—கிருமியுறு
மந்தமாம் வாதமிகு மாரக்கபங் கரப்பான்
றொந்தமா நோயடருஞ் சொல்.

இ-ள், பருவமயில்போலுஞ் சாயலையுடைய பெண்ணே ! எருமை வெண்ணெயினால் பித்த மூத்திரகிரிச்சரம் நீங்கும் மலாசயக் கிரிமி அக்கினிமந்தம் வாதரோகம் கபாதிக்கம் கரப்பான் தொந்த ரோகம் ஆகிய இவைகள் உண்டாமென்க. 140

## வெள்ளாட்டு வெண்ணெய்க் குணம்

வெள்ளாட்டு வெண்ணெயது வீறுசுரந் தான்போக்குந்
தள்ளாடு பித்தந் தணிக்குங்காண்—தெள்ளுமொழி

மானே பசியெழுப்பும் வன்கரப்ப னைக்கடற்குட்
டானே துரத்திவிடுஞ் சாற்று.

இ-ள். வெள்ளிய மொழிமையுடைய பெண்ணே! வெள்ளாட்டு வெண்ணெய் சுரரோகம் பித்தநோய் கரப்பான் ஆகிய இவைகளை நீக்கும், பசியை உண்டாக்குமென்க. 141

### ஒட்டைவெண்ணெய்க் குணம்

கட்டழகு செய்யுநற் காரிகையீர் கேண்மின்கள்
ஒட்டைவெண் ணெய்மந்த மொடுவாதங்—கிட்டவைக்கும்
நீரழிவுக் கேற்கு நிறைபித்தம் போக்கிவிடும்
பாரறியச் சொன்னோம் பகுத்து.

இ-ள். ஒட்டை வெண்ணெயானது நல்ல அழகையும் மந்தத்தையும் வாதரோகத்தையும் உண்டாக்கும் நீரிழிவையும் பித்தகோபத்தையும் நீக்குமென்க. 142

---

## நெய்வகை

### பசுவின்நெய்க் குணம்

தாகமுழ லைசுட்கம் வாந்திபித்தம் வாயுபிர
மேகம் வயிற்றெரிவு விக்கழல்—மாகாசங்
குன்மம் வறட்சி குடற்புரட்ட லத்திசுட்டஞ்
சொன்மூலம் போக்குநிறைத் துப்பு.

இ-ள். பசுவினது நெய்யானது தாகம் உழலைப்பிணி அதிசுட்கரோகம் வாந்தி பித்தாதிக்கம் வாதவிஷம் விரணப்பிரமேகம் வயிற்றி லெரிவு பித்தவிக்கல் இருமல் வயிற்றுவலி சிலேப்பு குடல் நெளிதல் அஸ்திசோம்பல் மூலரோகம் ஆகிய இவைகளை நீக்குமென்க. துப்பு-நெய். 143

### காராம்பசுநெய்க் குணம்

காராம் பசுநெய்யாற் கண்ணுக் கொளியுண்டாம்
நீரார் விழிபுருவ நெற்றிசிரச்—சூரொழியும்
மெய்யிற் குழைவு மிளிர்பொன் னிறமும்வரும்
நெய்யா லிதுமேவ நிகழ்த்து.

இ-ள். காராம்பசு நெய்யால் நேத்திரத்திற் கொளிவும் சரீர புஷ்டியும் பொற்சாயலும் உண்டாகும். கண் புருவம் நெற்றி சிரசு இவைகளைப்பற்றிய நோய்கள் விலகுமென்க. 144

## எருமை நெய்க் குணம்

புத்திகெடு மெய்யழகு போதக் கெடுநயனம்
மெத்தவொளி மாறிவிடு மேதினியிற்—சத்தியமா
முறுவாத மொடுபித்த மாறுக் கரப்பானுங்
கோதெருமை நெய்யருந்திற் கூறு.

இ-ள். எருமை நெய்யால் அறிவு அழகு கண்ணொளி இவைகள் மத்திபமாம். வாதபித்த தோஷம் கரப்பான் இவையுண்டாமென்க. 145

## வெள்ளாட்டு நெய்க் குணம்

ஐயைப்போக் கும்வாதத் தாமையைக்கெ டுத்துவிடு
மெய்யை வளர்க்கும்விழி யைத்துலக்கும்—வையகத்திற்
பத்தியத்திற் காகும் பயமிலைவெள் ளாட்டின்னெய்
நித்தியங்கொண் டாலுங்கொண் ணீ.

இ-ள். வெள்ளாட்டின் நெய்யை யுண்ணில் அது சிலேஷ்மாதிக்கத்தையும் வாதகோபத்தையும் போக்கும், சரீரத்தை வளர்ப்பது மன்றிக் கண்ணுக்கொளியை யுண்டாக்கும், பத்தியத்திற்குதவும். 146

## செம்மறியாடு பள்ளாடு இவைகளின் நெய்க் குணம்

செம்மறியி னெய்யதனைத் தின்ன மதுரமுமாங்
கொம்மைமுலை மாதரசே கூறக்கே—ளம்முருங்காண்
பள்ளையின்னெய் பித்தொழிக்கும் பாருலகி லெல்லாருங்
கொள்ளத்தான் மந்தமுறுங் கூறு.

இ-ள். இளமை பொருந்திய தனங்களையுடைய பெண்ணே! மதுரமுள்ள செம்மறியாட்டு நெய்யால் கபரோயதிகரிக்கும். பள்ளையாட்டு நெய் பித்தரோயை யொறுக்கும். மந்தமாமென்க. 147

## கலப்பு நெய்க் குணம்

நெய்யுட் பலநெய்க்கு நீள்சுக்கி லம்பெருகும்
வெய்யபசி யுண்டாம் விடும்பித்த—மெய்யனலா
லுள்ளபித்த வெக்கைபோ மோங்குயிரு ந் தானிலைக்குங்
கொள்ளத் தெரியுங் குணம்.

இ-ள். எருமை நெய் முதலிய கலப்பு நெய்யால் சுக்கிலம் பெருகும், தீபனம் உண்டாம். பித்த தோஷம் தேகக் கொதிப்பாலாகிய பித்தசுரம் போம், உயிரைத் தாங்குகின்ற உடலும் பலக்குமென்க.

## பன்றி, உடும்பு, காக்கை இவைகளின் நெய்க் குணம்

பன்றிநெய் நீர்க்கடுப்பு பாயுமூ லத்திரத்தங்
கன்றியவாதக் கடுப்புமுதற்—றுன்றியநோய்
போக்கு முடும்பின்னெய் போமிரத்தம் போக்கிவிடுங்
காக்கைநெய் காமாலைக்காங் காண்.

இ-ள். பன்றி நெய்யானது மூத்திரக் கடுத்தலையும் ரத்த மூலக் கிராணியையும் வாதக்கடுப்பு முதலிய பிணிகளையும் நீக்கும். உடும்பின் நெய் ரத்தக்கிராணியை நீக்கும். காக்கை நெய் காமாலைக் குதவும். 149

## ஆமை, ஓணன், கரடி இவைகளின் நெய்க் குணம்

ஊணுமை நெய்மூல மோட்டு மோணுனெய்க்குக்
காணுப் புறவலிநோய் காணுவாம்—பூணர்
முலையாய் கரடிநெய்க்கு முன்வாத மோடும்
புலையாருங் கால்வெடிப்பும் போம்.

இ-ள். ஆபரணங்களை யணிந்த தனங்களையுடைய பெண்ணே! ஆமை நெய் ரத்தமூலம் நீக்கும். ஓணன் நெய்யால் பின்னிசிவு தீரும். கரடி நெய்யால் வாதவேகமும் பாதவெடிப்பும் நீங்குமென்க.

## ஆமணக்கு நெய்க் குணம்

ஆமணக்கு நெய்யா னலமுண்டா மியாவர்க்கும்
பூமணக்கு மேனி புரிகுழலே—வாய்மணக்கக்
கொள்ளியில் வயிறுவிடுங் கோரமுள்ள வாயுவறு
முள்ளில்வரு குன்மம்போ மோர்.

### இதுவுமது

அம்பொனிற மும்விந்து மாங்குடலி னேற்றமறு
மைம்பொறிச் சூடெறிவு மாறுங்காண்—அம்புவியிற்
பாமணக்கு மின்பமொழிப் பாவாய் நலஞ்செறிந்த
ஆமணக்கின் நெய்யுண் டறு.

இ-ள். புட்பங்கள் பரிமளிக்காநின்ற அழகு பொருந்திய கட்டப்பட்ட கூந்தலையும் இனிய மொழியையுமுடைய பெண்ணே! உஷ்ணதிக்கமுள்ள முத்துக்கொட்டை நெய்யை முறைமைப்படிக்குக் குடித்தால் விரோசனமாம். இதனால் கோரவாதம் குன்மம் குடலேற்றம் தேகம் கண் மூக்கு செவி வாய் இவைகளில் உண்டாகிற யெரிச்சலும் நீங்கும், பொன்னிறமும் தாதுவிருத்தியும் உண்டாகும். 152

## சிற்றாமணக்கு நெய்க் குணம்

மருந்தி னழலும் வலியான் மூலத்துட்
பொருந்து மழலுமறப் போக்குங்—குருந்திற்கு
நற்றா யெனவளர்க்கு நாளுமழ லைத்தணிக்குஞ்
சிற்றா மணக்கினெய்தான் றேர்.

இ-ள். சிற்றாமணக்கு நெய் பற்பல ஔஷதங்களின் வெப்பங்களையும் வாயுவினால் மூலத்தி லுண்டாகின்ற உஷ்ணங்களையும் நீக்கும், சிசுக்களைத் தாய் வளர்ப்பதுபோல உடலை வளர்ப்பிக்குமென்க.

## எள்ளின் நெய்க் குணம்

புத்திநய னக்குளிர்ச்சி பூரிப்பு மெய்ப்புளகஞ்
சத்துவங் காந்தி தனியிளமை—மெத்தவுண்டாங்
கண்ணோய் செவிநோய் கபாலஅழல் காசநோய்
புண்ணோய்போ மெண்ணெய்யாற் போற்று.

இ-ள். எள்ளினது நெய்யால் புத்திக்குத் தெளிவு விழிக்குக் குளிர்ச்சி மனமகிழ்ச்சி தேகபுஷ்டி பலம் தேஜசு வாலிபத்தன்மை இவைகள் உண்டாகும். நேத்திரநோய் கர்ணரோகம் கபால உஷ்ணம் காசம் விரணம் ஆகிய இவைகள் நீங்குமென்க. 154

## வாதுமை நெய்க் குணம்

அழலெல்லா மாற்று மரிய வுடம்பி
லழலோடு விந்துவையுண் டாக்கும்—வழுவழுப்பைப்
பூண்ட கபம்போக்கும் பொறிகட் கொளிசெய்யு
நீண்டவப் பம்விதை நெய்.

இ-ள். வாதுமைநெய் ஔஷதங்களினாலும் உழைப்பினாலும் விளைத்த வெப்பங்களையும் கபதோஷத்தையும் நீக்கும். சமோஷ்ணஞ் சுக்கிலம் பஞ்சேந்திரியங்களுக் கொளி இவைகளை உண்டாக்கு மென்க. 155

## வேப்ப நெய்க் குணம்

வாதம்போம் பித்தமிகு மாறாக் கிரந்தியொடு
மேதுகரப் பான்சிரங்கு முன்னிசுவும்—ஓதுடலின்
நாப்ப ணுறுசுரமு நாடுசந்நி யுந்தொலையும்
வேப்பநெய் யென்றொருகால் விள்.

இ-ள். வேப்பின் நெய்க்கு மகாவாதம் கிரந்தி கரப்பான் சிரங்கு ஆகிருஷ்ணஸ்தம்பனவாதம் சுரம் சந்நி நீங்கும். பித்தமாம்.

## இலுப்பை நெய்க் குணம்

கரப்பா னடருங் கடிசிரங்கு புண்ணா
மூரப்பா மிடுப்புல்லி யோடு—கரப்பான்

பாகுமொழி மாதே பலமுண்டாந் தூர்ப்பலம்
போகுமிலுப் பையின்நெய்க் கே.

இ-ள். கற்கண்டனைய மொழிக் காரிகையே! இலுப்பை நெய்யால் கரப்பான் கடிவிஷம் சிரங்கு விரணம் வன்மை இவை உண்டாம், சகல வாதமும் தூர்ப்பலமும் நீங்குமென்க. 157

## புன்னை நெய்க் குணம்

புன்னையிலுண் டாநெய்யாற் பொங்குசந்தி பாதமுதன்
மன்னியலைக் குங்கொடிய வாயுவுமுன்—பின்னிசிவும்
பொல்லா வலியினமும் புண்கிருமி யுந்தொலையு
மல்லார் குழலே யறி.

இ-ள். இருண்ட கூந்தலையுடைய பெண்ணே! புன்னை நெய்யால் சந்நிபாதம் மகாவாதரோகம் முன்னிசிவும் பின்னிசிவும் ஐவகை வலி விரணம் கிருமி ஆகிய இவைகள் நீங்குமென்க. 158

## புங்கின் நெய்க் குணம்

அங்க மழகிடும்வெற் பாம்புங்கி னெய்தனக்குத்
தங்கம்போற் காந்தியது தானுண்டாந்—திங்கண்முக
மானே கரப்பான்போம் வன்சொறி யுஞ்சிரங்குந்
தானே விலகுமெனச் சாற்று.

இ-ள். சந்திரனை யொத்த முகத்தையும் மானையொத்த கண்களையுமுடைய பெண்ணே! மலைப்புங்கின் பருப்பு நெய்க்கு அழகும் ஒளியும் உண்டாம்; கரப்பானும் சொறி சிரங்குட் ஒழியும். 159

## தேங்காயின் நெய்க் குணம்

தேங்காயி னெய்யதனாற் றீயால் வருபுண்போம்
பாங்காகக் கூந்தற் படர்தேறு—நீங்காத
பல்லடியின் னோயும் படர்தா மரைச்சிரங்கு
மல்லடர்ப் போமென் றறி.

இ-ள். தேங்காய் நெய்யினாய் தீயால் வருவிரணம் தந்தமூலரோகம் படர்தாமரை சிரங்கு ஆகிய இவைகள் போம். தலைமயிர் வளரும். 160

## கடுகு நெய்க் குணம்

கோட்டுநோய் பித்தரத்தங் குட்ட மடல்வாதம்
வீட்டு கபமூல விரணமறும்—பூட்டின்
முடிகிமெழு சூலையொடு மொத்தநோ யேகுங்
கடுகின்னெய் யாலெனலாங் காண்.

இ-ள். சூடுள்ள கடுகுநெய்யால் குன்மம் ரத்தபித்தம் குஷ்டம் ாவாதம் க்ஷயம் மூளை மூலவிரணம் சூலை முதலிய பிணிகள் ங்குமென்க. கோஷ்டு - வயிறு. 161

## நீரடிமுத்து நெய்க்குணம்

பூசுகுடி வாதகுணம் பொங்கு கிரந்திபுடை
வீசுகுட்டஞ் சூலையிவை விட்டேகும்—தேகஞ்சச்
சீரடியை யொத்தநடைத் தெய்வ மடமயிலே
நீரடிமுத் தின்னெய்யை நீ.

இ-ள். அழகு பொருந்திய அன்னத்தையொத்த நடையையும் தய்வத்தன்மை பொருந்திய மயில்போலுஞ் சாயலையுடைய பண்ணே! நீரடிமுத்துநெய் மேலிற்பூசினும் உள்ளுக்குக் குடிக் னும் வாதகுட்டம் சிரங்கு சொறி பெருவியாதி சூலை இவை நீங்கு மன்க. 162

## செங்கொட்டை நெய்க்குணம்

தாதுவும் புருணமுமாந் தத்துறு பரங்கிப்புண்
கோறி புரியிருமைக் குட்டிணங்கள்—காதுங்
கரிமுகி யூரற் கரப்பான் றிமிர்போ
மெரிமுகிநெய் யாலென் றறி.

இ-ள். எரிமுகியென்னுஞ் செங்கொட்டை நெய்யால் தடிப்பு ரங்கிப்புண் கருங்குட்டம் வெண்குட்டம் முதலிய குட்டரோகங்கள் ருஞ்சொறி கரப்பான் திமிர்வாதம் ஆகிய இவைகள் போம் சுக்கில ிருத்தியும் கருப்போற்பத்தியும் உண்டாகும். புருணம்-கருப்பம்.

## முக்கூட்டுநெய் சேர்க்கும் விதி

மூவெண்ணெ யண்டமெண் முத்தாமுத் தாவெண்ணெய்
மூவெண் கலாதி முறையேகேள்—மேவுநெறி
யொன்றிரண்டு மூன்றாகு மொன்றிரண்டு மூன்றாகு
மொன்றிரண்டு மூன்றாகு முற்று.

இ-ள். வாதமுதலிய மூன்று தோஷங்களுக்குக் கூட்டவேண் டிய முறைமை: வாததேகிகளுக்குப் பசுவின்நெய் 3-பங்கு எண் ணெய் 2-பங்கு ஆமணக்குநெய் 3-பங்கு பித்த தேகிகளுக்கு எண் ணெய் 1-பங்கு ஆமணக்குநெய் 2-பங்கு பசுவின்நெய் 3-பங்கு சிலேத்ம தேகிகளுக்கு ஆமணக்குநெய் 1-பங்கு பசுவின்நெய் 2-பங்கு எண்ணெய் 3-பங்கு இவ்வாறு கூட்டவேண்டும். 164

## முக்கூட்டுநெய்க் குணம்

நாவுநெய்க் கைய நுவலாநெய்க் குப்பித்தம்
மேவுமுத்து நெய்க்கனிலம் வீறுவாம்—பூவுலகில்

மூன்றுமளவாய்க் காய்ச்சி மூழ்கிலந் தப்பிணியா
லூன்றுநோ யியாவும்போ மோர்.

இ-ள். எள்ளின்நெய் பசுநெய் ஆமணக்குநெய் இவைக்கு முறையே பித்தவாத கோபங்கள் மீறாமல் பித்தம் நிலையிற் பொருந்துவனவாம், ஆதலால் அம் மூவித நெய்களையும் கிரமப்படிக் கூட்டிக் காய்ச்சி ஸ்நானஞ் செய்யில் திரிதோஷங்களால் வருஞ் சகல ரோகமும் நீங்கும். 165

## ஐங்கூட்டு நெய்க்குணம்

அஞ்செண் ணெய்க்காணி லாலித்த பின்னிசிவுந்
தஞ்சமென வாய்வுந் தணியுங்காண்—பஞ்சாய்ப்
பறக்குமே சந்நிசுரம் பாரிலையைச் சேட்டை
பிறக்குமே நன்று யியம்பு.

இ-ள். ஆமணக்கு எள்ளு வேம்பு புன்னை புங்கு இவற்றின் நெய்களை கலந்து தயிலமாகச்செய்து உபயோகிக்கில் பின்னிசிவு மகாவாதம் சந்நிபாதசுரம் கபதோஷம் ஆகிய இவை நீங்குமென்க.

---

# சாணவகை

## பசுவினது சாணத்தின் குணம்

ஆவினது சாண மடிபடுவீக் கம்முதிரந்
தாவி வருகிருமி சார்ந்தகப—மேவுசுரந்
தங்குந்தா கம்போக்குஞ் சாற்றின்மெய்ச் சுத்தியப்பால்
தெங்கின்பா லுக்கொக்குந் தேர்.

இ-ள். பசுஞ்சாணம் கல் முதலியவைகளால் அடிப்பட்ட வீக்கம் ஒழுகுகின்ற உதிரம் கிருமிரோகம் கபசுரதாகம் இவைகளை நீக்கும் தேகசுத்தியுண்டாகும், இது தெங்கின்பாலை ஒக்குமென்க. 167

## எருமைச் சாணத்தின் குணம்

வயிற்றுப் பிரமிரத்த வாந்திகா மாலை
நியமித்த பெரும்பாடு புண்ணீங்கும்—வியத்த
கருமைச் சாரங்கவிழிக் காரிகையே நாளும்
எருமைச்சா ணத்தி னியல்பு.

இ-ள். மான்போலுங் கண்களையுடைய மையணிந்த பெண்ணே எருமை சாணத்தால் வயற்றுபொருமல் ரத்தவாந்தி காமாலை பெரும்பாடு புண் இவைகள் நீங்கும். 168

### வெள்ளாட்டுப் புழுக்கையின் குணம்

உருக்கைநீ ருக்கு முதரநோய் போக்குந்
திருக்கான வாதநோய் நீக்கு—நெருக்கான
தோட்டுக் குழையணங்கே தொல்புவியோர் சொல்விடுவெள்
ளாட்டுப் புழுக்கை யது.

இ-ள். காயாபரணத்தை யணிந்த அரமகளிரை யொத்த பெண்ணே! வெள்ளாட்டுப்புழுக்கை உருக்கை அல்லது எஃகு என்னும் உலோகத்தைப் பஸ்மிக்கும். மகோதரத்தையும் வாதநோயையும் நீக்கும். 169

---

## மூத்திரவகை

### சிறுநீரின் குணம்

காணாக் கடியோங் கதித்தெழுந்த வீக்கமது
காணாது காயசித்தி கைக்குளநற்—பூணே
பதித்தகொங்கை மாதே பகர்மாந் தருக்கு
ளுதித்தசிறு நீருக்கென் றோர்.

### இதுவுமது விருத்தம்

அங்கியுவ ருறைசிறுநீர் வாசம்போக்கு
மதைப்பருகி லுருமலிகைப் பரத்தநோயும்
பொங்கிவரு மேகவி காரங் கிரந்திப்
புண்களும்போ மதைநசியம் புரியிற்சூடுந்
தங்கியதோ ரபஸ்மாரஞ் சந்நியாசஞ்
சருவவிடம் விடசுரமுந் தவறுண்டோடும்
இங்கதனைத் தொட்டலம்பிற் கண்முகங்கா
திவ்விடத்து ளெழும்விரண மிரியுங்காணே.

இ-ள். மாந்தர்களின் ஜடராக்கினி யுவர்ச்சுவையை யுடைய சிறுநீரினால் காணாக்கடி விஷமும் சோபையும் வாததோஷமுந் தீரும்; அதை முறைப்படிப்பருகில் இருமல் சுவாசம் அசிர்க்கரம் மேகமூத்திரம் கிரந்திவிரணம் ஆகியவைகள்போம்; நசியஞ்செய்தால் சிரம் அபஸ்மாரம் சந்நியாசம் சர்வவிஷம் விஷசுரம் ஆகியவைகள் நீங்கும்; அந்த நீராற் கழுவினால் விழி முகம் செவி இவ்விடங்களில் பிறக்கின்ற கட்டிகள் விலகும்; அன்றியும் காயசித்திக்கு உதவும். ()

### பசு மூத்திரக் குணம்

வெண்பா

விடபாண்டு சோபைபல வீக்கஞ் சகல
விடமுதிர மாலையென மெத்தப்—புடவிதனிற்

பேசலக்க ணோடுதந்தப் பீடையும கன்றிடுமே
கோசலத்தா லாரணங்கே கூறு.

இ-ள். கோசலத்தால் விஷபாண்டு சோபை பற்பல வீக்கம் சகல விஷம் அசிர்க்கு காமாலை பன்னோய் முதலிய பிணிகள்போம்.

### எருமைமூத்திரக் குணம்

உதரநோய் பாண்டோ டுரத்தகா மாலை
விதிர வருசோபை மேகம்—முதிர்கிருமி
யாகியநோ யேகு மடவெருமை மூத்திரத்தால்
மீதிலன லுண்டாகு மே.

இ-ள். எருமை மூத்திரத்தால் பெருவயிறு பாண்டு காமாலை பிரமேகம் சோபை கிருமி முதலிய நோய்களும்போம் இதிற் சூடுண்டாமென்க. 173

### வெள்ளாட்டுமூத்திரக் குணம்

சோபையொடு பாண்டுவைத் தூரத்தும் பலவீக்க
தாபமற்றும் முதிரத்தைப் போக்கும்—கோபமுடன்
உள்ளாட்டுத் தூர்ச்சதை யோங்குதர நோயகற்றும்
வெள்ளாட்டு மூத்திரம் விரைந்து.

இ-ள். வெள்ளாட்டுமூத்திரஞ் சோபை பாண்டு பற்பல வீக்கத் தினெரிச்சல் ரத்தப்போக்கு தூர்மாமிசம் மகோதரம் இவைகளை நீக்குமென்க. 174

### யானைமூத்திரக் குணம்

அதிதூலஞ் சோபை யனிலங் கிருமி
யெதிர்விடங்க ருங்கரப்பா னேகும்—அதிராத
யானை யெனப்பலமு மங்கபுஷ்டியுங் கொடுக்கும்
யானைவிடு மூத்திரமென் றோது.

இ-ள். யானை மூத்திரத்தால் அதிதூலநோய் சோபை வாய்வு கிருமிவிஷம் கருங்கரப்பான் இவைகள்போம்; ஆனையைப்போன்ற வன்மையும் சரீரபுஷ்டியும் உண்டாமென்க. 175

### குதிரைமூத்திரக் குணம்

பாதவன் மீகம் படர்தடிப்பு நீள்கிருமி
வாத மொடுகபமு மாறுங்கா—ணோதரிய
பொற்குவட்டை யொத்தமுலைப் பூவையரே சூடுடைய
நற்குதிரை மூத்திரத்தி னால்.

இ-ள். பொன்மலையை யொத்த கொங்கைகளையுடைய மாதே! சூடுள்ள குதிரை மூத்திரத்தால் பாதப்புற்று கண்டுகண்டாகத் தடித்த கிருமிரோகம் வாதநோய் கபதோஷம் இவைகள்போம்.

### ஒட்டைமூத்திரக் குணம்

மேலையூ ருந்தடிப்பு வீசி யெழுஞ்சந்நி
சூலை யுதாவர்த்தந் தொடர்குன்மஞ்—சீலநனே
மண்டலகுட் டேகும் வருமொட்டை மூத்திரத்தா
லுண்ட னலமாதே யுரை.

இ-ள். வெப்பத்தையுடைய ஒட்டை மூத்திரத்தினால் சரீரத்திலோடிப் புடைக்கின்ற தடிப்பு சந்நிபாதம் சூலைபிடிப்பு உதாவர்த்த வாதம் வயிற்றுவலி மண்டலகுஷ்டம் இவை நீங்குமென்க. 177

### கழுதைமூத்திரக் குணம்

வேசரிநீ ரால்வெப்பம் வீரியநட் டங்குட்டங்
காச மிரைப்புவிடங் காற்கிருமி—வீசிடுபுண்
மேக மபஸ்மாரம் வெடியச் சுரங்கிரந்தி
போகுமின்னுஞ் சேய்பிணியும் போம்.

இ-ள். கழுதை மூத்திரத்தால் உஷ்ணம் தாதுநஷ்டம் அவதம்பாகுஷ்டம் காசம் இரைப்பு சில்விஷம் கால்களுள்ள கிருமி விரணம் தந்திமேகம் அபஸ்மாரம் ஜிஹ்வாகண்டகரோகம் கிரந்திபாலரோகங்கள் இவைபோம். வேசரி-கழுதை. 178

---

## மதுரவகை

### செங்கரும்பு ரசதாளிக்கரும்பு புல்லகண்ட கரும்பு இவைகளின் குணம்

விருத்தம்

செங்கரும் பதனற்சாறு தீர்த்திடும் பித்தமெல்லாம்
அங்குறு மிரசதாளிக் ககன்றிடுந் தாகவேகம்
மங்குறுப் புல்லகண்டம் வாதகோ பத்தைப்போக்கும்
கங்குல்வார் குழலினாளே காரிய மறிந்துகூறே.

இ-ள். இருண்டு நீட்சியுற்ற கூந்தலையுடைய பெண்ணே! செங்கரும்பின் ரசம் பித்ததோஷத்தை நீக்கும், ரசதாளிக் கரும்பினது சாற்றினால் தாகவெப்பம் போம், புல்லகண்டம் என்கிற கரும்புச் சாறுனது வாததோஷத்தை நீக்குமென்க. 179

### நாணற்கரும்பின் குணம்

வெண்பா

வாயுபித்தம் வாந்திநீர் மாறு மதிதூல
நோயு ளெழும்வயிற்றி னோய்கலங்கு—மோயாத
ஈளையொடு பாண்டு மெதிரா தடங்கிநிற்கு
நாளுநா ணற்கரும்பி னால்.

இ-ள். நாணற்கரும்பின் ரசத்தினுல் வாதபயித்தியம் வமன அருசி அதிதூலம் வயிற்றிலெழுநோய் இரைப்பு பாண்டு இவை மீருமற் சாந்தமாம். 18

## கரும்பின்சாறு, வெல்லம் இவைகளின் மிதாமித குணம்

கரும்பிரச மெத்தவுண்டாற் காணுங் கபநோய்
விரும்பிவெல்ல மெத்தவுண்டால் மேகந்—தருமதுநீ
ருண்டா மவைமித மாயுண்டால் மேகபித்தம்
மிண்டாமற் சாந்தமுறும் விள்.

இ-ள். கரும்பின் ரசத்தை மிகவுங் குடிக்கில் சிலேஷ்ம நோயுண்டாம், வெல்லத்தை அதிகமாகத்தின்றுல் மதுமேகங்காணும் மிதமாகப் புசித்தால் பிரமேகம் பித்தகோபம் இவை மீருமல் அடங்குமென்க. 18

## தேன்பாகின் குணம்

அனலா லெழுந்த வருசிசர்த்தி தாழும்
புனலாருங் கோழையது பொங்கும்—கனலாருந்
தேன்பாகுக் கென்றுமதைச் சேரோ ஷதியதனுல்
கான்பாவ நோய்க்கூட்டங் காண்.

இ-ள். தேன்பாகினுல் பித்த அரோசகம் வாந்தி நீங்கும், நெஞ்சிற் கோழைகட்டுண்டாம்; இதை ஔஷதிகளிற் சேர்த்து உபயோகித்தால் கபதோஷ முதலிய நோய்கள் விலகுமென்க. 182

## மணப்பாகின் குணம்

பித்த வருசிகெடும் பேசிலற்ப வாதமறுந்
தத்தனலம் மெள்ளவுள்ளே தாவிவரு—மெத்த
வணப்பாகை யொத்தமொழி மாதே முறுகா
மணப்பாகுக் கென்றே மதி.

இ-ள். பாகை நிகர்த்த மொழியையுடைய பெண்ணே! மணப்பாகினுல் பயித்திய அரோசகமும் அற்பவாதமும் நீங்கும். அன்றியும் சரீரத்தில் உஷ்ணரம்பமாமென்க. 183

## முதிர்ந்தபாகு, பழையவெல்லப்பாகு இவைகளின் குணம்

முதிர்பாகு வயிற்றெரிவு மூத்திரக்கட் டோடே
யதிர்வாத மாதியநோ யாகுந்—துதிபழைய
வெல்லப்பா குக்கருசி வீறுபித்தம் பேதிவாய்
வில்லையப்பா மாதே யினி.

இ-ள். முறுகிய வெல்லப்பாகினுல் வயிற்றெரிச்சலும் வாதகுண்டலிமூத்திரம் கம்பவாதம் உண்டாம். பழைய வெல்லப்பாகுக்கு அரோசிகம் பித்தாதிக்கம் அதிசாரம் வாதகோபம் நீங்கும். 184

## நல்லவெல்லத்தின் குணம்

குன்மபித்தம் போக்குமதி கோழைதனை யுண்டாக்குந்
துன்மலத்துட் கிடத்தைத் தோன்றுவிக்கும்—நன்மைபோல்
வெல்லமது நீரை விளைவிக்கு மாமதுர
வெல்லமென நாளும் விளம்பு.

இ-ள். நல்லவெல்லம் பித்தகுன்மத்தை நீக்கும், நெஞ்சிற் கபக்கட்டு மலாசயக்கிருமி மதுமேகம் இவை யுண்டாக்குமென்க. 185

## உண்டை வெல்லத்தின் குணம்

சூலமே கங்குன்ம முட்சூலை விந்துவுமாங்
காலடர்கு மட்டல்பித்தங் காசமும்போம்—நீலவரிக்
கெண்டை விழியாய் கெழுமியநா ணற்கன்ன
லுண்டைவெல்ல மிக்குண்பார்க் கோது.

இ-ள். கறுத்துச் செவ்வரிபொருந்திய மகரநோக்கியே! நாணற் கருப்பஞ் சாற்றாலாகிய உண்டை வெல்லத்துக்கு மூலமுளை மதுரப் பிரமேகம் வயிற்றுநோய் பக்கநோய் சுக்கிலவிருத்தி இவையுண்டாம் வாதரோகமும் பித்தமும் இருமலும்போம் என்க. 186

## தெங்கின்வெல்லம் பனைவெல்லம் இவைகளின் குணம்

தெங்கின் வெல்லத்தாற் செரியாக் குணஞ்சோபை
யங்கமுறு நீரு மதிகரிக்குந்—தங்குபனை
வெல்லத்தால் வாதபித்தம் வீறுகபஞ் சந்நிநோய்
வல்லருசி குன்மமறு மால்.

இ-ள். தெங்கின் வெல்லத்தால் செரியாமாந்தம் வீக்கம் நீரேற்றம் இவை யதிகரிக்கும். பனைவெல்லத்தால் வாத பித்த தொந்தம் சிலேத்மதோடம் சந்நிபாதம் அரோசகம் வாதகுன்மம் இவை தீரும். 187

## ஈச்சம் வெல்லத்தின் குணம்

நீடுபே ரீச்சினயிர் நின்மலப்புத் திக்குமந்த
மோடு கபவாத முட்சீத—மாடுமிதி
பித்த முடனே பெருந்திமிர்நோய் வியாதிகளை
யித்தரையி லுண்டாக்கு மெண்.

இ-ள். பேரீச்சவெல்லம் புத்திமந்தம் சிலேத்மவாதம் உள்ளிற் சீதளம் பித்தகோபம் திமிர்வாயு உண்டாகும். அயிர்-வெல்லம்.

## சருக்கரையின் குணம்

அருந்து மருந்திற் கனுபான மாகப்
பொருந்துமடல் வாந்திபித்தம் போக்கும்—வருந்தருசி
நீக்கும் மதிகபத்தை நின்று மகிழ்ச்சியையுண்
டாக்கு நறுஞ்சருக்க ரை.

இ-ள். சருக்கரையானது மருந்துகளுக்கு அனுபானமாயிருப்பதுந்தவிர வாந்தி பித்தம் அரோசகத்தையும் போக்கும், கெட்டிப்பட்ட கபத்தையிளக்கி மகிழ்ச்சியைத் தருமென்க. 189

## சீனிச்சருக்கரையின் குணம்

சீனிச் சருக்கரைக்குத் தீராத வன்சுரமுங்
கூனிக்கும் வாதத்தின் கூட்டுறவு—மேனிற்கு
வாந்தி யொடுகிருமி மாறாத விக்கலுமே
போந்திசையை விட்டுப் புரண்டு.

இ-ள். சீனிச்சருக்கரைக்கு வாதசுரம் வக்கிரிக்கின்ற வாத நோய்கள் வாந்தி கிருமிரோகம் நீங்காதவிக்கல் இவைபோமென்க.

## கற்கண்டின் குணம்

ஈறின் தடிப்பு மிருமலும்பல் வாந்திகளுஞ்
சீறுகப முட்டினமுஞ் சேராதே—தேறியநற்
சொற்கண் டிளங்குயில்கள் சூழு மடவனமே
கற்கண் டெனவுரைக்குங் கால்.

இ-ள். இனிய சொற்கேட்டிளங் குயில்கள் சூழும் இளமை தங்கிய அன்னத்தை நிகர்த்த நடையையுடைய மாதே! கற்கண்டினால் பல்லரணை காசம் பற்பல வாந்தி அதிகரித்த சிலேத்மதோடம் வெப்பம் ஆகிய இவைகள் தீருமென்க. 191

## தெங்கின் கற்கண்டின் குணம்

நெஞ்சிற் றிமிருஞ்செந் நீரிலழுக் கும்படையு
மஞ்சுகப வாதமொடு வாதமுமே—விஞ்சுமிளந்
தொங்கின தேர்க்கயர்வுந் தூயபுத்தி மந்தமுமாந்
தெங்கினது கண்டாற் றெளி.

இ-ள். தெங்கின் கற்கண்டினால் தொண்டைக்குள் திமிர் உதிரத்தில் அழுக்கு சொறிமேகம் சிலேத்ம வாததொந்தம் வாதம் இளைத்த தேகிகளுக்கு ஆயாசம் மந்தபுத்தி ஆகிய இவை யுண்டாமென்க. 192

## பனங்கற்கண்டின் குணம்

மேக வனலு மிகவீசும் சூரிகையா
லாகமுறு கனலு மாறுங்காண்—மோகனத்திற்
றங்கிவரு நீர்ச்சுருக்குந் தாகவெப்ப முந்தணியு
மிங்குபனங் கற்கண்டுக் கே.

இ-ள். பனங்கற்கண்டுக்கு மேகசுரம் சூரிகையின் வெப்பம் தங்கிவரும் நீர்ச்சுருக்கு உஷ்ணதாகம் இவை நீங்குமென்க. 193

யுடைய விநாயகக்கடவுளது பரிமளம் பொருந்திய செந்தாமரை மலரையொத்த சிவந்த திருவடிகள் காப்பாகும்.

சிவபெருமான் ஆன்மாக்கள் முத்தியடையும் பொருட்டுத் தனு கரணாதிகளைப்படைத்து, ஊண் உறக்க முதலிய தொழிற்குரிய வைகளாக்கி உபகரித்தலை அவ்வான்மாக்கள் உணராது அஞ்ஞானத் தால் யான் எனது என்னுஞ் செருக்குற்றுச் செய்கின்ற இருவினைக் கீடாக வியாதிகளினால் மெலிந்து வருந்துமேயென அவ்வான்மாக் களுக்குத் தாயாகிய பார்வதிதேவியார் இரக்கமுற்று விண்ணப்பஞ் செய்தலைச் சிவபெருமான் திருவுளத்தமைத்து அப்பிணிகளை நீக் குவதற்குச் சாதனமாகிய பலபல ஔடதிவகைகளை உபதேசித் தருள, அந்த வுபதேசத்தைப் பெற்றுக்கொண்ட பார்வதிதேவி யார் சம்ஸ்கிருத பாஷையில் சுலோகபூர்வமாகத் தேவி திரவிய ரத் திணகரம் என்று அருளிச்செய்த சாஸ்திரத்தைத் தமிழ்ப்பாடலாகச் செய்தமையாலும், உமாதேவியாரது கிருபா நோக்கத்தாலன்றிக் கல்வியுஞ் செல்வமும் எய்துவதரிதாகலானும், உமையருளாற் கூறு தற்கென்றும் ஒவ்வோர் ஔடதிவகைகளும் அநேக அற்புதங்களை யுடையவைகளாதலின் அவைகளின் பெருமைதோன்ற அற்புத சிந்தாமணியென அடைமொழி கொடுத்தும், இலக்கண அமைவில் லாத ஏனையநாட்டுப் பாடல்களைப்போலல்லாது சிவபெருமான் தமது திருவாக்கினால் இயற்றமிழாசிரியராகிய அகத்திய மகா முனிவருக் கருள்செய்யப்பட்டதும், அசாத்திய ரோகங்களையும் நீக்கிச் சரீரத்துக்கு உறுதிபயப்பதுபோலத் தன்னைத் தோத்திரிக் கின்றவர்களுடைய தீராத மகா பாதகங்களையும் தீர்த்து அருளுத லின் செம்பவள வேழமுகனென்றும், செந்தாமரைமலர் இனிமை யும் குளிர்ச்சியுந் தந்து வெம்மைநோய் முதலியவைகளை நீக்குவது போல் விநாயகக்கடவுளது திருவடிகள் அடியார்களுடைய பிறவித் துன்பமாகிய வெம்மை நோயைப் போக்கி நித்தியாநந்த வீட்டைத் தருதலின் கந்தமலர்ச் செஞ்சரணமென்றும் கூறினார்.

பரமசிவ வணக்கம்

எல்லாப் பதார்த்தமுமா யெங்குநிறை யொன்றைமுன்னூற்
சொல்லாப் பதார்த்தத்தைத் துப்புரவை—வல்லார்கள்
கூடற் பதார்த்தத்தைக் கொண்டேத்திக் கூறுதும்யாங்
கோடற் பதார்த்த குணம்.

இ-ள். தாவர சங்கமப் பொருள்களும், எவ்விடத்தும் நீக்க மறப் பரிபூரணமாக நிறைந்திருக்கின்ற ஒருபொருளும், இத்தல

மையுடையதென்று துணிந்து சொல்லப்படாத பொருளும், அநு பவிக்கப்படும் பொருளும், ஐம்பொறிகளையும் வென்று வல்லவர்க ளாகிய பரமயோகிகள் சேருவதற்குரிய பொருளுமாயிருக்கின்ற பரமசிவத்தைத் தியானித்துத் தோத்திரஞ்செய்து யாவரும் நாடோறும் உண்ணத்தகுவனவாகி இவ்வுலகத்திலிருக்கின்ற பாதார்த்தங்களின் குணங்களைச் சொல்லுகிறோம்—எ-று. 2

## கணபதி, குமரவேள், சிவன், உமை, தன்வந்திரி, சித்தர்கள் துதி

சீரார் பதார்த்தகுண சிந்தா மணிக்காணுந்
தாரார் கஜமுகனுஞ் சண்முகனு—நீராருஞ்
செஞ்சடைய னும்பரையுந் தேவ வயித்தியனும்
விஞ்சுசித்த நாதர்களு மே.

இ-ள். திருவாத்திப்பூ மாலையைச்சூடிய யானைமுகத்தையு டைய விநாயகக்கடவுளும், ஆறு திருமுகங்களையுடைய குமரக்கடவு ளும், கங்கை யணிந்த சிவந்த சடையினையுடைய பரமசிவமும், உமாதேவியாரும், தேவவயித்தியராகிய தன்வந்திரியும், சித்தர் களுக்குள் மேலாகிய ஒன்பது சித்தர்களும் சிறப்புப்பொருந்திய இந்தப் பதார்த்தகுண சிந்தாமணியாகிய ஆயுள்வேதத்துக்குக் காப் பாவர்—எ-று. 3

## பதார்த்த உற்பத்தியின் வரலாறு

### விருத்தம்

தேடரு மகண்டவொளிப் பிழம்பாய் ஞான
　　தீதபூ ரணமாய்த்தற் செயல்கொண் டெல்லா
மூடவிட வல்லதுமாய்த் தனித்தவொன் றுண்
　　மூழ்கிநின்ற முக்குணச்சிற் சத்தி தன்னில்
நாடனம் பிறந்ததிற்கா லுதித்த திற்றீ
　　நாரமண் ணுண் டாய்மண்தா னல்க வந்த
ஓடதியி லனமுமதி லுலகுநிற்கு
　　முயர்வாய்ந்தவ்வோடதியி னுரிமைசொல்வாம்.

இ-ள். யாவருந்தேடிக் காண்பதற் கருமையாகிய சகலசோ தித்திரட்சியாயும் ஞானத்தின்மேற்பட்ட பூரணமாயும் தனது செய்கையால் யாவற்றையும் ஒடுக்கவும் தோற்றுவிக்கவும் வல்லதா கியும் தனக்கொப்பும் உயர்வுமில்லாது தானே யாவருக்குங் கடவு ளாகியும் இருக்கின்ற ஒருபரவேதத்தினுள் மறைந்துநின்ற முக் குணங்களையுடைய ஞானசத்தியினிடத்துப் பற்றுகின்ற அநந்தம் என்னும் ஆகாயமும் அவ்வாகாயத்தில் வாயுவும் அவ்வாயுவில்

தேயுவும் அத்தேயுவில் அப்பும் அவ்வப்புவில் பிருதிவியும் தோன்றி, அப்பிருதிவி தோன்றுவிக்க உண்டான ஔஷதியென்னும் நெல் முதலிய மூலிகையில் அன்னமுண்டாகி அந்த அன்னத்தினால் உலகத்துயிர்கள் நிலைபெற்றிருக்கும்படியான உயர்வை ஆராய்ந் துணர்ந்த அந்த ஔஷதியாகிய பதார்த்தகுணங்களைச் சொல்லு கிறோம் என்க. 4

## ஔஷதத்தின் வகை

### கட்டளைக் கலித்துறை

விருக்கஞ் செடிகொடி புல்லான தொவ்வொன்றின் விரியனந்த
வருக்கந் தமிற்சில வேராதி வித்து வரைக்குமெட்டா
யிருக்கும் பதார்த்த மவற்றிலொவ் வொன்றிங் கிருநிலத்துட்
செருக்கும்பன் னோயை முருக்குங் குணங்கண்டு தேர்வரிதே.

இ-ள். இந்த அகன்ற பூமியினிடத்து முளைத்த ஔஷதி நான்கு வகைப்படும். அவையாவன: மரம்-செடி-கொடி-புல் என்பவை களாம். இதில் ஒவ்வொரு வருக்கங்களினின்றும் பிரிவுற்ற பேதகங் களைச் சொல்லுமிடத்து அளவிறந்தவைகளாம். அவைகளிற் சில வேர்முதல் வித்தீறு எண்வகைப் பதார்த்தங்களாக விருக்கின்றன. இவற்றுள் ஒவ்வொன்றும் பற்பல ரோகங்களைக்கொடுக்கும். ஆத லால், அப்பதார்த்தங்களின் குணங்களைக்கண்டறிதல் அரிது என்க. 5

## பதார்த்தவகை ருசிகள்

### வெண்பா

ஆதியுரி யுண்ணீ ரடைமலர்மென் காய்விதையென்
றோது பதார்த்தமிவை யோரெட்டும்—பூதலத்துட்
கைப்புவர்ப்புத் தித்திப்புக் கார்ப்புளிப் புத்துவர்ப்பு
வைப்பிவையா றும்பொருந்து மால்.

இ-ள். இப்பூமியில் நான்கு வகையாகிய ஔஷதிகளிருக்கிற எண்வகைப் பதார்த்தங்களாவன: வேர்-பட்டை-கட்டை-ரசம்-இலை-புட்பம்-பழம்-வித்து யென்பவைகளாம். இவற்றுள் ஒவ் வொன்றும் கசப்பு - உப்பு - தித்திப்பு - கார்ப்பு - புளிப்பு - துவர்ப்பு ஆகிய ஆறு வகை ருசிகளையும் பெற்றிருக்கும் என்க. 6

## அவையடக்கம்

பதார்த்தகுணஞ் சொல்வதெவன் பார்க்கின்ற வெல்லாம்
பதார்த்தமெனி னீக்கிற் பழியாம்—பதார்த்தமெனக்
கூறுகடற் குள்ள ணுவின் கூற்றி னவியத்தோர்
கூறுரைத்த னம்பாருக் குள்.

இ-ள். கண்களாற் பார்ப்பவைகளெல்லாம் பதார்த்தங்களா மென்றால் அப்பதார்த்தங்களின் வகைகளும் குறைகுணங்களும் எவ் வாறு திரிந்து சொல்லப்படும். சொல்லாமல் நீக்கிவிட்டாலோ பாப முண்டாகும். ஆதலால் பதார்த்தமெனச் சொல்லப்படுகிற சமுத் ரத்துக்குள் ஓரணுவில் கோடி-கோடி-கோடா கோடியில் ஒரு ரிவு இந்த வுலகத்திலிருக்கும் மனிதர்களுக்குத் தெரியும்படிக்குச் சான்றோம் என்க. அவ்வியக்தம் - எண்பது கோடி, கோடி-கோடி, காடா கோடியாம். பதார்த்தங்களின் குறைகுணங்கள் தெரிந்தால் ஔஷதங்களுக்குச் சேர்க்கும்போது கிரமம் அறிந்து சேர்க்கப் டும். கிரமம் அறியாமல் சேர்த்தால் வியாதி நீங்காமலிருப்பது ன்றிப் பிணியாளன் சரீரத்திற்கும் அபாயம் நேரிடும். ஆதலால் க்கிற் பழியாம் என்றார். 7

## நாற்பயன்



இந்தப் பதார்த்தகுண சிந்தாமணி என்னுஞ் சாஸ்திரத்திற் சொல்லப்பட்ட பதார்த்தங்களின் குணங்களை யெல்லாம் நன்றா றிந்து அவற்றுள் நித்திய போசனத்துக்கு உதவத்தக்க பதார்த் ங்களை சித்தபாகம் வீமபாகம் நளபாகம் தேவபாகம் என்னுஞ் ாஸ்திரங்களிற் சொல்லிய பிரகாரம் பாகஞ்செய்து புசிக்கவேண் ும். ஔஷதங்களுக்கு உதவத்தக்க பதார்த்தங்களை சுத்திக்கிர ம் என்னுஞ் சாஸ்திர விதிப்பிரகாரஞ் சுத்திசெய்து சிகிச்சா ரம் என்னுஞ் சாஸ்திரக் கிரமப்படி முப்பத்திரண்டுவித ஔ தங்களாகக் கைப்பாகத்துடன் செய்து முடித்து ஜீவரக்ஷாமிர்தம் ன்னுஞ் சாஸ்திரத்தில் சுரயோகம் ஆதியாகக் கீடபேத ரோக ாக வகுக்கப்பட்டிருக்கின்ற சகல ரோகத்தையும் சிகிச்சாக்கிரமம் ன்னுஞ் சாஸ்திரக் கிரமப்பிரகாரம் கொடுத்து நிவர்த்தி செய்ய வேண்டும். இவ்வாறு மேற்சொல்லிய பதார்த்தங்களை உண்டு அனுபவிப்பது மன்றிச் சூரியோதயமுன் விழித்தல் முதலாகச் சொல்லப்பட்ட தினக்கிரமங்களும் தவறாமல் நடப்பவர்கள் அறம் பொருள் இன்பம் வீடு என்னும் புருஷார்த்தங்களை அடைவதற் கேதுவான ஆரோக திடகாக்கிரமும் சந்தான சௌபாக்கியமும் தீர்க்காயுளும் பெற்று இவ்வுலகத்தில் வாழ்வார்கள்.

# பஞ்சபூத வகை

## பிருதிவின் குணம்

பூச விரணம் பொருமல்போம் பொன்முதலாம்
ஆசையுள்ள பண்ட மதிலுண்டாம்—நேசமதாய்த்
தின்றிடிற் பாண்டு செழிக்குமிகத் தேமொழியே
சென்றுலகில் மண்குணத்தைத் தேர்.

இ-ள். மண்ணையரைத்துப் பற்றுப்போடுவதால் வாதத்தினு லும் உதிரத்தினுலும் பிறக்குங் கட்டியாகிய விரணங்களும் வாதப் பொருமலும் போம். அன்றியும் சொர்ண ரத்தின முதலியவைகள் பிறப்பதற்கு இடமாம். இதனைத் தின்றால் மிருத்திகாயுக்த பாண்டு ரோக முண்டாகும். 1

## அப்புவின் குணம்

காசமறுந் தந்தங் கழலாது மேகமுதல்
வீசு மளறணியும் வீரியமாம்-வாசமென
உந்திவளர் குன்ம முதிரஞ் சொறியிவைபோம்
இந்தநறுந் தண்ணீ ருக்கே.

இ-ள். அப்புவென்கிற தண்ணீரால் நேத்திரத்தைப்பற்றிய பித்தகாசம் பித்தப் பிரமேகம் தேக உஷ்ணம் பித்தகுன்மம் வெட்டு காயங்களினுற் பெருகாநின்ற உதிரம் சொறி ஆகிய இவைகள் போம். பற்களுக் குறுதியும் சுக்கில விருத்தியும் உண்டாம் என்க. 2

## தேயுவின் குணம்

கண்டைக்கா னோயும்வலி காதம்போங் காய்ந்தக்கால்
விண்டே பலபிணியும் விட்டேகும்—விண்டோய்
பொருப்பனைய வட்டமுலைப் பூவையே நாளு
நெருப்பி னதுகுணங்கா ணீ.

இ-ள். தேயுவென்கிற நெருப்பினுல் கண்டைக்காலென்கிற சிறுதொடையினது நோயும், தேகக்கடுப்பும், வாதசிலேஷ்மங்களி னுல் பிறக்கின்ற சிற்சில ரோகங்களும் நீங்கும் என்க. 3

## வாயுவின் குணம்

மேகக் கடுப்பை விளைவிக்கும் வீறிநின்ற
தாக மனவிளைப்பைச் சாந்திசெய்பு—மேகத்தின்
புண்ணேய்க்கும் பொல்லாது பூவையரே ரூட்சைக்குங்
கண்ணோய்க்கு மாகாது காற்று.

இ-ள். வாயுவென்கிற காற்றானது வெள்ளை விழும்போது ஆண் குறியின் துவாரத்தில் கடுந்தலை யுண்டாக்குவதுந் தவிர, மிகுதாகம் தேக உஷ்ணம் இளைப்பு ஆகிய இவைகளைத் தணிக்கும். ஆனால் மது மேகவிரணம் சுரம் கண்ணோய் இவற்றிற்கு ஆகாது என்க. 4

### ஆகாயத்தின் குணம்

உலகுமன மும்மலவா மோடதியு மண்ணுஞ்
சகலமன லுங்காலுஞ் சாற்ற—அலகில்
அநந்தம் பொருளு மடங்கவுமூழி நல்கும்
அநந்தந் தனைக்கண் டறி.

இ-ள். ஜீவராசிகளும் அன்னரசமும் பலவகைப்பட்ட ஔஷதிகளும் பிருதிவு அப்பு தேயு வாயுக்களும் சொல்வதற்கு அளவுபடாத சகல பதார்த்தங்களும் அடங்குவதற்கு இடந்தருகின்ற ஆகாயத்தின் றன்மையைக் கண்டு நீ அறிவாயாக என்க. மேற்கூறிய ஐம்பூதங்களுள் ஒவ்வொன்றினின்றும் பிரிவுற்ற பேதங்களையும் அவற்றின் குணங்களையும் தனித்தனியே சொல்லப்புகின் மிகவும் பெருகும். ஆதலால் அவைகளைப் பூதகுணகம மகாகுணபாட முதலிய நூல்களிற் காண்க. 5

---

## நிலத்தின் வகை

### குறிஞ்சிநிலத்தின் குணம்

குறிஞ்சி வருநிலத்திற் கொற்றமு முண்டிரத்தம்
உறிஞ்சி வருசுரமு முண்டாம்—அறிஞரைக்
கையமே தங்குதரத் தாமைவல்லை யுங்கதிக்கும்
ஐயமே தங்கு மறி.

இ-ள். சிலேஷ்ம வீடாகிய குறிஞ்சியென்று பெயர்பெற்ற மலைப்பூமியில் விளைகின்ற சகல ஔஷத முதலிய பொருள்களுக்கும் வன்மையுண்டாம். இதில் வசிப்பவர்க்கு உதிரத்தை முறிக்கின்ற சுரமும் வயிற்றில் ஆமைக்கட்டியும் உண்டாகும் என்க. 6

### நெய்தல் நிலத்தின் குணம்

நெய்தனில மேறுவர்ப்பை நீங்கா துறினுமது
வெய்தனில மேதங்கு வீடாகும்—நெய்தன்
மருங்குடலை முக்காக்கு வல்லுறுப்பை வீக்குங்
கருங்குடலைக் கீழிறக்குங் காண்.

இ-ள். நெய்தல் நிலம் மிகுந்த உவர்ப்பை யகலாதிருந்தாலும் அது பித்தவாயு தங்குவதற்கே இடமாம். இதில் வசிப்பவர் தேகத்திலுள்ள நட்பத் தாபங்களில் சிலேஷ்ம நீரானது கண்டு தடித்தலை யுண்டாக்குவதுந் தவிர, பாத முதலிய வன்மையான உறுப்புக்களில் சிலீபத ரோகத்தையும் குடலண்ட விருத்தியையும் உண்டாக்குமென்க. 7

## முல்லைநிலத்தின் குணம்

முல்லை நிலத்தமைய மூரிநிரை மேவினுமவ்
வெல்லை நிலத்தபித்த மெங்குறுங்காண்—அல்லையெனின்
வாதமொழி யாததனுண் மன்னு மவைவழிநோய்ப்
பேதமொழி யாதறையப் பின்பு.

இ-ள். முல்லைநிலம் ஆடு எருது பசு இவைகளின் கூட்டத்தை யுடைத்தா யிருந்தாலும் அது பித்ததோஷம் அதிகரிப்பதற்கே யிடமாம். அப்படியல்ல வெனில், அத்துடன் வாததோஷமும் நீக்கமின்றிப் பொருந்தும். அவ்விருவகைத் தோஷங்களால் உற்பத்தியாகிய ரோகபேதங்களைச் சொல்லப்புகின் அரிதாகும் என்க. 8

## மருதநிலத்தின் குணம்

மருதநில நன்னீர் வளமொன்றைக் கொண்டே
பொருத மாதியநோய் போக்கும்—கருதநிலந்
தாறிரதஞ் சூழ வருந்துவரென் றூற்பிணியெல்
லேறிரதஞ் சூழ்விக்கு மில்.

இ-ள். மருதநிலம் நல்ல நீர்வளப்பம் ஒன்றினால் வாதபித்த சிலேஷ்மங்களா லுண்டாகின்ற ரோகங்களைப் போக்கும். அன்றியும் அந்நிலத்தில் விளைகின்ற அறுசுவைப் பதார்த்தங்கள் சேர்ந்த உணவை உண்பவர் தம்பேரைச் சொன்னாலும் ரோகங்கள் இவ்வுலகத்தில் இல்லை என்க. 9

## பாலைநிலத்தின் குணம்

பாலை நிலம்போற் படரைப் பிறப்பிக்க
மேலைநில மியாது விரித்ததற்கு—வேலைநில
மூப்பிணிக்கு மில்லா முறையே யவற்றாலா
மெப்பிணிக்கு மில்லாமனை தெண்.

இ-ள். பாலைநிலம் துன்மை தருதற்கிடமாவதுந் தவிர உலகிற் சொல்லும் வாதபித்த கபங்களுக்கும் அவைகளால் முறையே வருஞ் சகல பிணிகளுக்கும் இடமாமென்க. 10

# ஜலவகை

## மாரிசலத்தின் குணம்

சீத முறுங்குளிர்ச்சி சேருமே சித்தத்துட்
போதந் தெளிவாய்ப் பொருந்துங்கா—ணூதமொடு
விந்தும் வளர்ந்துவரு மேதினியி லெவ்வுயிர்க்குஞ்
சிந்துமழை நீராற் றெளி.

இ-ள். சீதளம்பொருந்திய மாரிநீரால் இப்பூலோகத்திலுள்ள சீவராசிகளுக்குக் குளிர்ச்சி நல்லறிவு சுக்கிலம் சோணிதம் இவைகள் அதிகரிக்கும் என்க. 11

## ஆலாங்கட்டிசலத்தின் குணம்

வெண்மாசி மேகமுடன் வீறும் பெரும்பாடு
கண்மாசி காந்தல் கடிதகற்றுந்—தண்மீறும்
விக்கற் சுவாசமுடன் மெய்ம்மயக்க மும்போக்கும்
கக்குமா லாங்கட்டி காண்.

இ-ள். ஆலாங்கட்டி நீரானது சிலேஷ்மப்பிரமேக பெரும்பாடு, நேத்திரத்திற் புகைக்கம்மல், கை கால் எரிவு விக்கல் சுவாசம் மயக்கம் இவைகளை நீக்கும், குளிர்ச்சியை யுண்டாக்கும் என்க. 12

## பனிநீரின் குணம்

பனிச்சலத்தை யெல்லுதயம் பானஞ்செய் வாரைத்
தனிச்சொறி சிரங்குகுட்டந் தாபந்—தனிவாதம்
முத்தோஷ நீரிழிவு மூடமுலங்கி ராணியிவை
கொத்தோடு தாழ்ந்தகலுங் கூறு.

இ-ள். பனிநீரைச் சூரியோதயகாலத்தில் அருந்தினவர்க்குச் சொறி கிரந்தம் குஷ்டம் தாபம் காசம் கிராணி தனிவாதம் திரிதோஷம் தேகவறட்சி நீரிழிவு இவைகள் அடியோடு நீங்கும் என்க. 13

## தண்ணீரின் குணம்

தண்ணீர் குணமெல்லாந் தான்கேள் மடமயிலே
மண்ணின் குணமல்லான் மற்றுமுண்டோ-உண்ணுங்கால்
ஆறுகுள மேரிமடு வாழ்ந்தகூ பஞ்சுனையுள்
ளூறருவி யென்னு முலகு.

இ-ள். தண்ணீர் குணங்களெல்லாம் மண்ணின் குணமே யன்றி வேறில்லை. அதன் விவரம், ஆறு குளம் ஏரி மடு கிணறு சுனை என்னும் ஆறுவகை இடங்களிற்றங்கி அவ்வவற்றின் குணங்

களைப்பெற்ற நீரை யுண்ணுமிடத்தில் அவ்வவ்விடப் பெயர்பெற்ற நீரெனச் சொல்வார் என்க. 14

## ஆற்றுநீரின் குணம்

ஆற்றுநீர் வாத மனலங் கபத்தோடு
தோற்றுகின்ற தாகந் தொலைக்குமே—ஆற்றமிகுந்
தேகத்தி னோயையெல்லாஞ் சீறித் துரத்திவிடும்
போகத்திற் றுவுமாம் போற்று.

இ-ள். ஆற்றுநீரானது வாதம் பித்தகோபம் சுபதோஷம் தாகம் சரீரத்திற் பித்த சம்பந்தமான சிற்சில ரோகம் ஆகிய இவைகளைப் போக்கும், சுக்கில விருத்தியை உண்டாகும் என்க. 15

## கங்கைநதிநீரின் குணம்

கங்கைநதி நீர்பிறவிக் காட்டுக்கோ பேரனலாந்
துங்கமுற வம்புனலைத் துய்க்குங்கால்—அங்கவெப்பு
மந்தங் கயம்பித்தம் வாயுமே கங்காந்தல்
உந்துந்தா கங்களும்போ முன்.

இ-ள். பிறவியாகிய காட்டுக்கு அக்கினியை நிகர்த்த கங்கா நதி நீரை அருந்தினல் உட்சூடு மந்தாக்கினி க்ஷயம் பித்தகோபம் வாதாதிக்கம் சீழ்ப்பிரமேகம் தேகயெரிச்சல் தாகம் ஆகிய இவை நீங்கும் என்க. 16

## யமுனைநதிநீரின் குணம்

யமுனைநதி நீரா லதிகசுரம் வெண்குட்டஞ்
சமனைநிகர் காசம்வெட்டை தாகம்—வமனமுறு
பித்த மிரைப்பிளைப்புப் பேசரிய தாதுநட்டஞ்
சுத்தவெள்ளைப் பாண்டிவைபோஞ் சொல்.

இ-ள். யமுனைநதி நீரில் அதிகசுரம் வெண்குஷ்டரோகம் இருமல் வெட்டை தாகம் பித்தவாந்தி சுவாசம் அயர்ச்சி விந்துநஷ்டம் வெண்பாண்டுரோகம் ஆகிய இவைகள் ஒழியும் என்க. 17

## கோதாவிரிநதியின் குணம்

கோதா விரியென்னுங் கோதினதி நீரதனல்
வாதாதி முத்தோட வஞ்சினமும்—பேதாபே
தச்சொறியு முட்சிரங்குந் தாவு குளிர்ச்சுரமு
மிச்சகுவிட் டேகு மிசை.

இ-ள். கோதாவிரிநதி நீரினல் முத்தோஷக்கோபம் பலவிதச் சொறிகள் உள்சிரங்கு நடுக்கற்சுரம் ஆகிய இவைபோம் என்க. 18

## துங்கபத்திரா நதிநீரின் குணம்

மாதுங்க பத்திரைநீர் வன்றூக மென்று [illegible]
யோதுங் கரப்பா னரோசிகநோய்—தாதுநட்டம்
நேத்திரதோ ஷங்காச நீரடைப்பு [illegible]
கோத்திரமென் றேநிவை போக்கும்.

இ-ள். துங்கபத்திராநதி நீரானது [illegible] முருக்கிரோகம் கரப்பான் விந்துநஷ்டம் கண்புகைச்சல் [illegible] மூத்திரக்கிரிச்சரம் சரீர நிறமாறல் ஆகிய இவைகளை நீக்கும். 19

## நருமதா நீரின் குணம்

நருமதா வென்னு நதிப்புனலால் வாந்தி
சுரம்விக்கல் காமாலை பின்றேஷம் [illegible]
கைகா லரிவுநீர்க் கட்டுகோ ழைக்கட் [illegible]
டைவாத மென்பவைபோ மாம்.

இ-ள். நருமதாநதி நீரினால் வாந்தி [illegible] விக்கல் காமாலை வயிற்றுப்பிசம் கைகால் எரிவு [illegible] சிலேஷ்மவாததொந்தம் ஆகிய இவைகள் நீங்கும். 20

## சிந்துநதி நீரின் குணம்

சிந்து நதிப்புனலாற் றேகத் [illegible]
புந்திமயக் கம்மேகம் புண்வியர்வை [illegible]
அத்திசுரம் வெட்டை யடர்மூத் [illegible]
முற்றியதா கப்பிணிபோ மென்.

இ-ள். சிந்துநதி நீரால் சரீர [illegible] மயக்கம் வெட்டை புண் வியர்வை தாதுநஷ்டம் [illegible] அஸ்திசுரம் வெள்ளை மூத்திரகிரிச்சரம் தாகம் ஆகிய இவைகள் விலகுமென்க.

## வைகைநதி நீரின் குணம்

வைகை நதிப்புனலால் வாதநீர் [illegible]
செய்கைதவிர்க் குஞ்சோகை [illegible] மெய்யெரிவு
தாக நடுக்கனிலங் தாதுநட்டம் [illegible]
மேகுமிந்த வையம்விடுத்தே.

இ-ள். வைகையாற்றுச் [illegible] குஷ்டம் சோபாரோகம் கரப்பான் [illegible] வாதம் தாதுநஷ்டம் சில் விஷம் ஆகிய இவைகள் [illegible]. 22

களைப்பெற்ற நீரை யுண்ணுமிடத்தில் அவ்வவ்விடப் பெயர்பெற்ற நீரெனச் சொல்வார் என்க. 14

### ஆற்றுநீரின் குணம்

ஆற்றுநீர் வாத மனலங் கபத்தோடு
தோற்றுகின்ற தாகந் தொலைக்குமே—யூற்றமிகுந்
தேகத்தி னோயையெல்லாஞ் சீறித் துரத்திவிடும்
போகத்திற் றுவுமாம் போற்று.

இ-ள். ஆற்றுநீரானது வாதம் பித்தகோபம் சுபதோஷம் தாகம் சரீரத்திற் பித்த சம்பந்தமான சிற்சில ரோகம் ஆகிய இவை களைப் போக்கும், சுக்கில விருத்தியை உண்டாகும் என்க. 15

### கங்கைநதிநீரின் குணம்

கங்கைநதி நீர்பிறவிக் காட்டுக்கோ பேரனலாங்
துங்கமுற வம்புனலைத் துய்க்குங்கால்—அங்கவெப்பு
மந்தங் கயம்பித்தம் வாயுமே கங்காந்தல்
உந்துந்தா கங்களும்போ முன்.

இ-ள். பிறவியாகிய காட்டுக்கு அக்கினியை நிகர்த்த கங்கா நதி நீரை அருந்தினால் உட்சூடு மந்தாக்கினி க்ஷயம் பித்தகோபம் வாதாதிக்கம் சிழ்ப்பிரமேகம் தேகயெரிச்சல் தாகம் ஆகிய இவை நீங்கும் என்க. 16

### யமுனைநதிநீரின் குணம்

யமுனைநதி நீரா லதிகசுரம் வெண்குட்டஞ்
சமனைநிகர் காசம்வெட்டை தாகம்—வமனமுறு
பித்த மிரைப்பிளைப்புப் பேசரிய தாதுநட்டஞ்
சுத்தவெள்ளைப் பாண்டிவைபோஞ் சொல்.

இ-ள். யமுனைநதி நீரில் அதிகசுரம் வெண்குஷ்டரோகம் இருமல் வெட்டை தாகம் பித்தவாந்தி சுவாசம் அயர்ச்சி விந்துநஷ்டம் வெண்பாண்டுரோகம் ஆகிய இவைகள் ஒழியும் என்க. 17

### கோதாவிரிநதியின் குணம்

கோதா விரியென்னுங் கோதினதி நீரதனால்
வாதாதி முத்தோட வஞ்சினமும்—பேதாபே
தச்சொறியு முட்சிரங்குந் தாவு குளிர்ச்சுரமு
மிச்சகுவிட் டேகு மிசை.

இ-ள். கோதாவிரிநதி நீரினால் முத்தோஷக்கோபம் பலவிதச் சொறிகள் உள்சிரங்கு நடுக்கற்சுரம் ஆகிய இவைபோம் என்க. 18

### துங்கபத்திரா நதிநீரின் குணம்

மாதுங்க பத்திரைநீர் வன்றூக வென்புருக்கி
யோதுங் கரப்பா னரோகநோய்—தாதுநட்டம்
நேத்திரதோ ஷங்காச நீரடைப்பு மெய்விவன்னக்
கோத்திரமென் றூநிவை போக்கும்.

இ-ள். துங்கபத்திராநதி நீரானது வெப்பம் என்புருக்கிரோகம் கரப்பான் விந்துநஷ்டம் கண் புகைச்சல் இருமல் மூத்திரக்கிரிச்சரம் சரீர நிறமாறல் ஆகிய இவைகளை நீக்கும். 19

### நருமதா நீரின் குணம்

நருமதா வென்னு நதிப்புனலால் வாந்தி
சுரம்விக்கல் காமாலை மின்றூஷம்—பொருமலிரு
கைகா லரிவுநீர்க் கட்டுகோ ழைக்கட்டோ
டைவாத மென்பவைபோ மாங்கு.

இ-ள். நருமதாநதி நீரினால் வாந்தி சுரம் விக்கல் காமாலை வயிற்றுப்பிசம் கைகால் எரிவு பித்தகிரிசரம் கபச்சேர்க்கை சிலேஷ்மவாதரொந்தம் ஆகிய இவைகள் நீங்குமென்க. 20

### சிந்துநதி நீரின் குணம்

சிந்து நதிப்புனலாற் றேகந் துறுங்கடுப்புப்
புந்திமயக் கம்மேகம் புண்வியர்வை—விந்துநட்டம்
அத்திசுரம் வெட்டை யடர்மூத் திரச்சிக்கல்
முற்றியதா கப்பிணிபோ முன்.

இ-ள். சிந்துநதி நீரால் சரீரக் குடைச்சல் புத்தி மயக்கம் வெட்டை புண் வியர்வை தாதுநஷ்டம் அஸ்தி தாதுகதசுரம் வெள்ளை மூத்திரகிரிச்சரம் தாகம் ஆகிய இவைகள் விலகுமென்க.

### வைகைநதி நீரின் குணம்

வைகை நதிப்புனலால் வாதநீர் குஷ்டமொடு
செய்கைதவிர்க் குஞ்சோகை திண்கரப்பான்—மெய்யெரிவு
தாக நடுக்கனிலந் தாதுநட்டஞ் சில்விடமு
மேகுமிந்த வையம்விடுத்தே.

இ-ள். வைகையாற்றுச் சலத்தினுல் வாதமேகம் குஷ்டம் சோபாரோகம் கரப்பான் தேகவெரிச்சல் தாகம் பாதக்ஷேபகவாதம் தாதுநஷ்டம் சில் விஷம் ஆகிய இவைகள் நீங்குமென்க. 22

## சித்திரநதி நீரின் குணம்

சித்திர நதிப்புனற்குத் தேகத் துறுங்கடுப்புத்
தொத்துகரப் பான்வாந்தி சூலைகுன்மங்—குத்துகின்ற
மூத்திரதோ ஷத்தோடு மூடுவா தாதிக்கங்
கோத்தவுன் வீக்கமும்போங் கூறு.

இ-ள். சித்திரநதி நீரினால் சரீரநோவு கரப்பான் வாந்தி சூலை குன்மம் தேகத்தின் குத்தல் வயிற்றுவலி மூத்திரதோஷம் சங்கவா திரிதோஷம் வாதகோபம் சரீரவீக்கம் ஆகிய இவைகள் போமென்க. 23

## காவேரிநதி நீரின் குணம்

காவிரிநீ ராற்பொருமல் காச்சுவா சஞ்சோபை
நீவுதொண்டைக் கட்டிளைப்பு நீரேற்றம்—பூவுலகின்
மன்னுதிரக் கட்டியொடு வாயுலர லென்பவைபோம்
பின்னுடற்குக் காந்தியுமாம் பேசு.

இ-ள். காவிரியாற்றுச் சலத்தினால் வயிற்றுப்பிசம் இருமல் இரைப்பு வீக்கம் கபக்கட்டு ஆயாசம் சலதோஷம் இரத்தகுன்மம் நாவறட்சி ஆகிய இவைகள் நீங்கும், அழகுண்டாமென்க. 24

## தாம்பிரபரணிநதி நீரின் குணம்

தாம்பிரபர ணிப்புனலாற் சர்வசுரம் பித்துவிழுத்
தூம்பிரமுட் காய்ச்சல் சுவாசநோய்—சோம்பிமிகக்
கக்குகய மென்புருக்கி கைகா லெரிவுடனே
மிக்குறுதா கங்களும்போம் விள்.

இ-ள். தாம்பிரபரணிநதி ஜலத்தினால் சகலசுரம் பித்ததோஷம் கண்புகைச்சல் உட்சுரம் சுவாசரோகம் க்ஷயம் எலும்புருக்கி கை கால் எரிவு அதிதாகம் ஆகிய இவைகள் விலகுமென்க. 25

## பச்சையாற்று நீரின் குணம்

பச்சையாற் றுப்புனலைப் பார்த்துவந்த பேர்தமக்கு
நச்சிருமல் லீளைகப நண்ணுமே—நிச்சயமா
யவ்வளவோ வெண்ணி லனிலமுதி ரக்கடுப்புங்
கவ்வுசுர முங்காணுங் காண்.

இ-ள். பச்சையாற்று நீரால் நச்சிருமல் இரைப்பு கபாதிக்கம் வாதகோபம் இரத்தக்கடுப்பு சுரம் இவை உண்டாம் என்க. 26

### குளத்து நீரின் குணம்

குளத்து சலந்தானே கொடிதான வாதம்
வளர்த்திவிடு மப்பான் மதுவாங்—குளிர்ச்சியையு
மெத்தவுண் டாக்குமென மேதினியோர் தங்களுக்குக்
கொத்தலரும் பூங்குழலாய் கூறு.

இ-ள். புட்பக்கொத்துக ளலரும் அழகிய கூந்தலையுடைய பெண்ணே! குளத்துச்சலமானது வாதரோகத்தை விருத்திசெய்வதுமன்றி மதுப்பிரமேக சலத்தையும் சீதளத்தையும் உண்டாக்கும். 27

### தாமரைக்குளத்து நீரின் குணம்

தண்டா மரைக்குளத்திற் றங்கு புனலதனு
லுண்டாகும் வாதபித்த முண்மையே—பண்டான
வெக்கைநோய் மாறுது வீறு தபனமுமாய்
பைக்கருங்கண் மாதே வழுத்து.

இ-ள். மையணிந்த கண்களையுடைய மாதே! தாமரைக்குளத்துத் தண்ணீரால் வாதபித்ததொந்தம் புராதனசுரம் அதிதாகம் ஆகிய இவைகள் அதிகரிக்கும் என்க. 28

### அல்லிக்குளத்து நீரின் குணம்

அல்லிக் குளத்தினீர்க் கக்கினிமந் தப்பேதி
மெல்லிச் சொறிசிரங்கு வெப்புடனே—தொல்லுலகில்
தாலுதனி லட்சரமுந் தாதுநட்ட முங்கொடுக்குங்
கோல மலர்த்திருவே கூறு.

இ-ள். அல்லிக்குளத்துஜலம் அஜீர்ணபேதி சொறி புண் சுரம் தாலுகண்டகரோகம் தாதுநஷ்டம் இவைகளை உண்டாக்குமென்க.

### அதிகுளிர்ச்சியுள்ள குளத்து நீரின் குணம்

சீத மிகுந்தசலம் தேகத் தளர்ச்சிவிக்கல்
வாத கபங்கடிகள் வாந்திநளி—மோதிருமல்
வீறுகுன்ம நோயை விளைக்குஞ் சரீரமதி
லூறுமெனி னேய்பலவா முன்.

இ-ள். அதி குளிர்ச்சியையுடைய சரகூறிய குளத்து ஜலமாது தேகங்கட்டுவிடல் விக்கல் வாதசிலேஷ்மம் தொந்தம் வண்டுகடி முதலியதும் விஷம் வாந்தி குளிர் காசம் வயிற்றுவலி ஆகிய இவைகளை யுண்டாக்கும். அதில் சரீரம் ஊறுமானுல் பற்பல ரோகங்களும் உண்டாகும் என்க. 30

## ஏரிநீர் சுனைநீர் இவைகளின் குணம்

ஏரிசலம் வாதமிகு மஃதே துவர்ப்பாகுங்
கூறியதோர் கற்சுனைநீர் கூறுங்காற்—சீரியதோர்
வாதமொடு பித்தமெழும் வைத்தொருநாட் பின்னுண்ணிற்
சீதமில்லை யுட்டினமாஞ் செப்பு.

இ-ள். துவர்ப்புச் சுவையையுடைய ஏரிஜலமானது வாயு விர்த்தியும், கற்சுனை ஜலம் வாத பித்ததோஷம் அதை ஒருநாள் வைத்திருந்து மறுநா ளருந்த குளிர்ச்சி நீங்கி உஷ்ணமுண்டாகும் என்க.

## ஓடைநீரின் குணம்

ஓடை தருசலம் உண்ணவதி தாகமுமா
மேடையெனத் தோட்பலனு மெத்தவா—மோடைமலர்க்
கண்ணு யதுதுவர்ப்புங் காணு மதுரமுமாம்
எந்நாளும் பாரி லியம்பு.

இ-ள். மலரையொத்த கண்களையுடைய பெண்ணே! துவர்ப்பும் மதுரமுமுள்ள ஓடைநீர் குடிப்பவர்களுக்குத் தாகமும் புஜபலமுமுண்டு என்க. 32

## கிணற்றுநீரின் குணம்

ஆசாரக் கூபத் தறலா லதிதாகம்
வீசாகச் சூடுபசி மெய்க்காந்தன்—மாசூலை
மெய்யுள்வலி இடைதுளைப்பு விம்மயக்கஞ் சோபைபித்தம்
பையவரு மீளையும் பார்.

இ-ள். குற்றமில்லாத கிணற்று ஜலத்தில் மிகுதாகம் உஷ்ணம் தீபனம் தேக அழற்சி சூலை சரீரத்துட்கடுப்பு இடுப்புக் குடைச்சல் மயக்கம் விக்கம் பித்ததோஷம் சுவாசம் ஆகிய இவைகள் விளங்குமென்க. 33

## சுனைநீரின் குணம்

சுனைப்புனலைத் துய்த்தார்க்குஞ் சூழ்ந்ததிற் றோய்ந்தார்க்குங்
கனைப்புறுசீ தச்சுரதமுங் காணும்—வினைக்குரிய
வாதமுறு மத்தால் வருமே நடுக்கலின்னும்
ஓதுபித்த கோபமுமா முன்.

இ-ள். சுனைத்தண்ணீரை யுண்டவர்க்கும் அதில் ஸ்நானஞ் செய்தவருக்கும் இருமலோடுங்கூடிய சீதசுரம் வாதகோபம் கபவாதரோகம் பயித்தியதோஷம் இவை உண்டாகும் என்க. 34

## ஊற்றுநீரின் குணம்

ஊற்றுசலம் பித்த மொழிக்கு மினிப்பாகும்
ஆற்றிவிடுந் தாகத்தை யப்பொழுதே—கூற்றுவிழிக்

கொம்ப ரிடையாய் குணகுணங்க ளேத்தெளிவாய்
நம்பியுல கோரறிய நாட்டு.

இ-ள். மதுரம்பொருந்திய ஊற்று ஜலமானது மிகுந்த பித்தத்தையும் உடனே சாந்தியையும் செய்யு மென்க. 35

## பாறைநீரின் குணம்

பாறைமீ தூறுகின்ற பானீயந் தன்னையுண்ணி
லேறுமுடல மெல்லா மீரிப்பே—வீறுகின்ற
வாதகோ பத்துடனே மாறாச் சுரமுமெழும்
ஓதசனத் துண்டா முவர்ப்பு.

இ-ள். போஜனாந்தத்தில் உவர்ப்பைத் தருகின்ற பாறை ஜலத்தினால் தேகஞ்சில்லிடலும் வாதகோபமும் தீராச்சுரமும் உண்டாமென்க. 36

## சுக்கான் பாறை நீரின் குணம்

### விருத்தம்

நீர்க்க டுப்பொடு நெஞ்சினிற் கபக்கட்டு
பார்க்கிற் பித்தம் பலபிணி சூழ்வதாந்
தீர்க்க வாயுவைத் தீர்த்திடுஞ் சிந்தைநோய்
தாக்குஞ் சுக்கான் றனிப்பாறைத் தோயமே.

இ-ள். சுக்கான் பாறைஜலம் மூத்திரக்கடுப்பு நெஞ்சிற்கபக் கட்டு பித்தாதிக்கம் கபத்தைப்பற்றிய சிற்சில ரோகங்கள் மனோவியாதி ஆகிய இவைகளை யுண்டாக்கும். ஆனால் மகா வாதரோகத்தை விலக்குமென்க. 37

## கரும்பாறை நீரின் குணம்-வெண்பா

கரும்பாறைத் தண்ணீர் கனசோபை வாந்தி
பெரும்பாடு பித்தசுரம் பீடை—யருந்தயக்க
நீர்க்கடுப்புத் தாகமிவை நீக்கிவித்தை புத்தியழ
கேற்கவளர்ப் பிக்குமெய்யை யெண்.

இ-ள். கரும்பாறை ஜலமானது வீக்கம் வாந்தி அசிர்க்காரோகம் பித்தசுரம் மயக்கம் மூத்திரக்கடுப்பு தாகம் ஆகிய இவைகளை விலக்கும். வீரியம் புத்தி அழகு இவற்றை உண்டாக்குமென்க.

## அருவிநீரின் குணம்

அருவிநீர் மேக மகற்றுங் கபத்தை
வருவிக்கும் ரத்தபித்த மாற்றும்—பெருமிதமாம்
வேலை யுலகின் மிகுத்தபல முண்டாக்குங்
காலை மலர்முகத்தாய் காண்.

இ-ள். தாமரைமலரை நிகர்த்த முகத்தையுடைய பெண்ணே மலைபருவிஜலம் பிரமேகமும் ரத்தபித்த ரோகத்தையும் விலக்கும் சிலேஷ்மமும் தேகபலமும் உண்டாக்கு மென்க. 39

அடவிநீரின் குணம்

அடவிப் புனலா லதிசீ தாதிக்கம்
உடலிற் கனப்பிளைப்பு முண்டாம்—உடல்வயிறு
நாவிவ் விடம்வெதும்பு நண்ணுந் தலைப்பாரந்
தீவவ் வடற்சுரமாந் தேர்.

இ-ள். கான்யாற்று ஜலத்தைக் குடிப்பவர்க்கு அதிக சீதளம் தேகபாரிப்பு இளைப்பு சரீரம் வயிறு நாபி ஆகிய இவ்விடங்களில் வெப்பம் தலைக்கனம் வலியவிஷம் சுரம் உண்டாகுமென்க. 40

சிவந்தநீரின் குணம்

விருத்தம்

காசபித் தத்தாற் காந்தியு மேகிடும்
ஊச லூட்டின முட்சுரங் காந்தலாம்
நாச தாதுவு நண்ணிடு மென்றுரை
வாச மிற்கிவப் பாம்புனல் வண்மையே.

இ-ள். சிவந்தநிறத் தண்ணீரால் இருமலாற்பிறந்த பித்தவுஷ்ணம் விலகும். சுரம் எரிவு விந்துநஷ்டம் உண்டா மென்க. 41

கறுத்தநீரின் குணம்

வெண்பா

கறுத்தஜலம் வாந்தி கரப்பான்வெப் புக்காந்தல்
இறுத்தநெஞ்சுக் கட்டிரு மீளை—மறைப்பில்சுர
நீக்கரிய நெஞ்செரிப்பு நீள்தோடந் தாகநளிர்
போக்குமன லங்கொடுக்கும் போற்று.

இ-ள். கருமை நிறத்தண்ணீர் வாந்தி கரப்பான் உஷ்ணம் எரிவு மார்சளி காசம் சுவாசம் விடாச்சுரம் புளித்தேப்பம் சகல தோஷம் தாகம் நடுக்கல் இவைகளை விலக்கும், பசியைத் தரும் என்க. 42

வயல்நீரின் குணம்

மேகம்போந் தாகம்போம் வெட்டையுட னேசுரம்போந்
தேகங் குளிர்ச்சியுற்றுத் தேறுங்காண்—சோகமெல்லா
மாறு மிரத்தகய மாறுநோய்க் கோபமிக
மாறும் வயற்புனற்கு வை.

இ-ள். நெற்கழனிகளிலிருக்கும் தண்ணீரால் பிரமேக விதாகம் வெள்ளை சுரம் மூர்ச்சை இரத்தகாசம் சுரவேகம் இவைகள் விலகும்; சப்த தாதுக்களுங் குளிர்ச்சியடைந்து தேகம் பலக்குமென்க.

## நண்டுக்குழிநீரின் குணம்

வாந்தியறுந் தாகமறு மாறாத விக்கலறுங்
காந்த லெரிவுங் கடிதேகுந்—தோய்ந்துவருங்
கண்டுக் குயர்ந்த கனிமொழியே பன்னாளு
நண்டுக் குழிநீரை நாடு.

இ-ள். கற்கண்டினு மினிய மொழியையுடைய பெண்ணே! வயல்களிருக்கின்ற நண்டுக்குழிநீரினால் வமனம் விதாகம் நீங்காத விக்கல் தேகவெப்பம் எரிவு ஆகிய இவை போம் என்க. 44

## பாசிநீர் முதலிய பலநீரின் குணம்

### விருத்தம்

பாசித்தண்ணீர் நோயாக்கும் பருந்தவோடைத் தெளிவூறல், நேசித்திடவே பிணியில்லை நிலைநீர்க்குண்டாங் குடல்வாதம், மாசித் தண்ணீர் பித்தகற்றும் வளர்க்குஞ் சுரத்தைச் சரகூறல், தேசத் தண்ணீர் குணந் தன்னைத் தெளியச்சொன்னோந் திண்ணமிதே.

இ-ள். வழுவழுத்த பாசிஜலம் பல பிணிகளை யுண்டாக்கும், ஊற்றுள்ள ஓடை ஜலத்தால் சகல நோய்களும் நீங்கும், கட்டுக் கடை ஜலத்தால் குடல்வாதம் பிறக்கும், பனிமாசுபடிந்த ஜலமானது பித்த கோபத்தை விலக்கும், சரகூறிய ஜலம் சுராதிக்கத்தைச் செய்யுமென்க. 45

### இதுவுமது

ஆற்றுத்தண்ணீர்க் கழகுண்டா மடைந்தசுனைக்கு மகோதரமாந்
தூற்றுமாறி மெய்யிறுக்குந் துலையாக்கிணறே கயங்கிரட்டும்
மாற்றுங்குளமே வியாதியில்லை மாறாக்குளமே வியாதியுண்டு
தோற்றுமதுர மொழிமயிலே துலங்குதண்ணீர் குணங்காணே.

இ-ள். மதுரம் பொருந்திய சொல்லையும் மயில்போலுஞ் சாயலையுமுடைய பெண்ணே! சிவநதி ஜலத்தால் அழகுண்டாம், நிழலையடைந்த சுனைஜலத்தால் பெருவயிறும், மழைஜலம் தளர்ந்த தேகத்தையும் இறுக்கும், இறைப்பில்லாத கிணற்றுஜலம் க்ஷயத்தை வளர்க்கும், வரத்தும் போக்குமுள்ள குளத்து ஜலத்தால் நோயில்லை, இவ்வாறு மாற்றாத குளத்துஜலம் பிணியைத்தரும் என்க. 46

## ஸ்நானபானங்களுக் குதவாதநீர்

### வெண்பா

சந்திரா தித்தர்வலி சாராத நீர்புழுதாற்
கந்தமதி சேறு கனப்பிலையு—திர்ந்தநீர்
தங்குசுவை யில்லாநீர் சாற்றுமிவை ஸ்நானபா
னங்களுக் காகாவுறிநோ யாம்.

இ-ள். சந்திர சூரிய கிரணங்கள் காற்று இவைகள் அணு காததும் கிருமி துர்வாசனை சேறு தடித்தல் சரகுதிரல் ருசியின்மை யென்னும் இவைகள் பொருந்தியதும் ஆகிய ஜலமானவை ஸ்நான பானங்களுக்கு ஆகாவாம், அகிலரோக சம்பவமாம் என்க. 47

## நீராகாரநீரின் குணம்

வாதபித்த மைய வறட்சிகளை மாற்றிவிடுந்
தாதுவு முண்டாக்குந் தாகம்போம்—மாதர்மெச்ச
வாராகா ரங்கொடுக்கு மாமதுரத் தைக்கொடுக்கு
நீராகா ரத்தெளிவு நீர்.

இ-ள். மிகு மதுரமான நீராகாரத் தெளிஜலமானது வாத பித்த சிலேற்பன வறட்சிகளையுந் தாபத்தையும் விலக்கும், சுக்கிலத் தையும் அழகையும் விருத்தி செய்யும் என்க. 48

## காடிநீரின் குணம்

பித்த மயக்கமறும் பேரவுட தம்முறியும்
உற்றபிணி யிற்சிலவை யோடுங்காண்—சற்றும்
வழங்கா வசீரணமும் வன்பேதியும் போம்
பழங்காடிக் குள்ள பயன்.

இ-ள். பழமையாகிய காடிச் சலத்தினால் பித்த மயக்கமும் சோபாரோக முதலிய சிற்சில ரோகங்களும் அசீரணமும் வாதாதி சாரமும் பெரிதாகிய ஔஷதங்களின் நற்குணங்களும் விலகும். 49

## உப்புநீரின் குணம்

உப்புநீ ராலுலவை யுள்ளிலோ டிக்குத்தும்
எய்ப்பசன மாம்பித்த மேறிடுங்காண்—செப்புகின்ற
வாயிலூ றுஞ்சலமு மாதுவர்ப்பா மாதரசே
யோயுங் குடல்வாத மோர்.

இ-ள். உப்புத் தண்ணீரால் சரீரத்தில் ஓடிக் குத்துகின்ற வாயுவும் அற்ப போசனமும் பித்தமதிகரிப்பும் வாயில் துவர்ப்பாக ஊறுகிற ஜலமும் அதிகரிக்கும், ஆனால் குடல்வாதம் விலகும். 50

## சமுத்திரநீரின் குணம்

கடலின் புனலாற் கவிகை பெருநோய்
உடலின் கடுப்புதிரச் சூலை—யடர்குட்டம்
வாதகுன்மம் வெப்பிரத்த வாதநீ ராமை
கோதரம்பி லீகமறுங் கூறு.

இ-ள். கடற்சலத்தினால் கனிகையென்னும் ஒருவித உதர ரோகம் பெருவியாதி சரீரக்குடைச்சல் ரத்தகுன்மம் குஷ்டம் வாத குன்மம் உதிரவாதம் நீராமைக்கட்டி பெருவயிறு பிலீகத்தைப்பற் றிய வியாதி ஆகிய இவைகள் விலகும், பிலீகமென்பது இருதயத் துக் கிடப்புறத்திலிருக்கும் ஒருவித மாமிசக் கண்டம். 51

இதுவுமது—விருத்தம்

குன்ம வாயு குடற்கரி யென்பது
வன்ம மான மலசல பந்தமுங்
கன்ம மாகும்வன் னோய்களுங் காணுமே
நுன்மை வாரிநீர் காய்ச்சி நுகரினே.

உடற் கடுப்புட னுற்றெழு சோணிதம்
நடுக்கு வாதமு நாப்பிடிப் போடுபல்
இடுக்கி ரத்தமு ளிற்று விழுவதுந்
துடுக்க தாஞ்சந்தி தோடமு மோடுமே.

இ-ள். சமுத்திர சலத்தைக் காய்ச்சியுண்டால் வாதகுன்மம் குடற்கரிரோகம் மலசலபந்தம் மிருவுழைப்பினால் வந்த வியாதிகள் தேகக்கடுப்பு சோணிதவாதம் நடுக்குவாதம் நாக்குப் பிடிப்பு பல் லிடுக்கில் இரத்தம் வருதல் பல் விழுதல் சந்திதோஷம் ஆகிய இவைகள் விலகும் என்க. 53

நாவல்நீரின் குணம்

வெண்பா

நாவல்வே ரூறுசல நாளுமதி சாரத்தை
மாவலிய மேகத்தை மாற்றுங்காண்—பூவுலகில்
விந்தோ டதிசீதம் வீறுபலம் வெப்பையம்
மந்தமிவை யுண்டாக்கு மால்.

இ-ள். நாவல் வேரூறிய சலமானது பித்தாதிசாரத்தையும் மது மேகத்தையும் நீக்கும், சுக்கில விருத்தி அதிகுளிர்ச்சி தேகபலம் சுரம் சிலேஷ்ம கோபம் அக்கினிமந்தம் இவைகளை உண்டாக்கும்.

கருங்காலிநீரின் குணம்

குட்டங் கபரோகங் குன்மம் பெருவயிறு
கெட்டைப் புழுவுமிரு நீரிழிவும்—விட்டே
யருங்கான கத்தேகு மஞ்சுகமே நல்ல
கருங்காலி நீரதனைக் கண்டு.

இ-ள். கிளிபோல் வசனிக்கும் பெண்ணே! கருங்காலி வேரூறிய சலத்தினுல் குஷ்டம் பித்தக்ஷயம் பித்தகுன்மம் மகோதரம் பெரும் பூநாகக்கிருமி இரத்தப்பசையற்ற திமிர்வாதம் நீரிழிவு ஆகிய இவைகள் விலகுமென்க. 55

## இலவுநீரின் குணம்

அட்டகுன்ம நீரிழிவு மற்றிடுமே தேகத்திற்
கெட்ட விரணக் கிருமியறு—மட்டலறுங்
கூந்தன்முடி மாதரசே கோதிலில வின்புனலாற்
சேர்ந்தவழ லுந்தணியுஞ் செப்பு.

இ-ள். தேன்பொருந்திய புட்பங்களையணிந்த கூந்தலையுடைய மாதரசே! இலவமரத்தின் வேரூறிய சலத்தால் அஷ்டகுன்மம் நீரிழிவு ரத்தமற்ற விரணக்கிருமி உட்சூடு இவை போம். 56

## வாழைநீரின் குணம்

வாழைநீர் சீதவெப்பு வல்லபல முண்டாக்கும்
பேழை வயிறுடைக்கும் பெண்மயிலே—யீழமல்லி
ரத்தக் கிரிச்ச மெரிநீ ரிவையுடனே
சிற்றிரணம் போக்குந் தெரி.

## இதுவுமது

சோமரோ கங்க டொலையு மிளைப்புழலை
நாமமறும் பாண்டுவகை நாடாதே—பூமிதனில்
காழை யெலும்புருக்கி காணு வணங்கரசே
வாழைநீர்க் கென்றுளத்தில் வை.

இ-ள். மாதரசே! வாழைக் கிழங்கில் ஊறுகின்ற சீதோஷ்ண நீரானது பெருவயிறு ரத்தக்கிரிச்சரம் எரிமூத்திரம் அற்பவிரணம் சோமரோகம் அயர்வு உழலை நோய் பாண்டு எலும்புருக்கி ஆகியவைகளை விலக்கும், தேகத்திற்கு வன்மையை யுண்டாக்கும் என்க. 58

## மட்டைநீரின் குணம்

மட்டை நீராற்கிரிச்ச மாறு மடமயிலே
யொட்டிநின்ற நீரிழிவு மோடுங்காண்—கெட்ட
பவுத்திரமும் புண்ணும் பறக்கும் பயந்தே
புவிக்குள்வயிற் றுக்கடுப்பும் போம்.

இ-ள். தெங்கு பனை முதலிய மட்டைகளிற் பிழிந்த நீரினால் மூத்திரக்கிரிச்சரம் நீரிழிவு பவுத்திரமேக விரணம் வயிற்றுக் கடுப்பு ஆகிய இவைபோமென்க. 59

## இளநீரின் குணம்

இளநீரால் வாதபித்த மேரு மனதுந்
தெளிவாய்த் துலங்குமிரு திட்டிக்—கொளிவுங்
குளிர்ச்சியு முண்டாகுங் கொடியவன னீங்குந்
தளிர்த்தகன நொய்தாகுஞ் சாற்று.

இதுவுமது

என்று மிளநீர்நீ ரிறக்குங் கபமறுக்குந்
துன்றனலாஞ் சீதமெனச் சொல்லுவர்கா—ணின்றெழும்பும்
பித்தமொடு வாந்தியும்போம் பேதிகட் டிரண்டுமுண்டாங்
கொத்தலரும் பூங்குழலாய் கூறு.

இ-ள். கொத்துக்களினின்று மலர்ந்த வழகிய கூந்தலையுடைய பெண்ணே! முறைமையாக இளநீரைப்பருகினால் வாதகோபம் பித்ததோஷம் வெப்பம் தேகபாரிப்பு கயாதிக்கம் பயித்தியகோபம் வமனம் அதிசாரம் ஆகிய இவை நீங்கும். மனத்தெளிவு நேத்திரத் துலக்கம் குளிர்ச்சி மூத்திரப்பெருக்கம் மலப்போக்கு ஆகிய இவை உண்டாகும் இது உஷ்ண சீதளத்தையுடையது என்க. 61

## செவ்விளநீரின் குணம்

பித்தமொடு தாகம் பெருத்த வழிநடையா
லெய்தலா யாசமிவை யேகு—நித்தியமுஞ்
செவ்விளநீர் ருண்டக்காற் றீரும்பல கயமு
மவ்விளநீர் கொங்கைமின்னே யாய்.

இ-ள். சிவந்த விளநீரனைய கொங்கைகளையுடைய மின்னலைப் போன்ற இடையையுடையவளே! தினமுஞ் செவ்விளநீரை யருந்தில் பித்தவிருத்தி தாகம் வழிநடையாலாய இளைப்பு அயர்வு பற் பல க்ஷயம் ஆகியவைகள் நீங்கும். 62

## புதிய பழைய இளநீரின் குணம்

புதியிளநீர் புத்தமறும் பூதவத்தோ ருண்ணும்
பதமுடனே யுண்பார் பரிவாய்—நிதநிதமு
முண்ணப் பழவிளநீ ருண்டாம் பலவகைநோ
யெண்ணி யறிவா யினி.

இ-ள். இளவழுக்கையுடைய புதிதாகப் பறிக்கப்பட்ட இளநீரை யுண்பவருக்குப் பித்தகோபம் விலகும் பழைய இளநீரை யுண்டால் ஜலதோஷ முதலிய பற்பல ரோகங்களும் உண்டாம். 63

## பச்சை இளநீரின் குணம்

பச்சிளநீர் மேகம் பழஞ்சுரங் களைப்போக்கும்
கச்சுமுலை மாதே கபமறுக்கு—மெச்ச
வயிற்றிற் கிருமியொடு வன்சொறிகண் ணோயும்
அயர்த்தோடச் செய்யு மறி.

இ-ள். வாரிறுக்கிய தனங்களையுடைய பெண்ணே! பச்சை யிளநீர் சிழ்ப்பிரமேகம் பழையசுரம் கபாதிக்கம் எறிகிருமி யானைச் சொறி கண்ணோயாகிய இவற்றை நீக்கும் என்க. 64

## கேளி இளநீரின் குணம்

கேளியுண்ண மேகம்போங் கேளாய் மடமயிலே
நீளகட்டுக் கீடிலை யாவாங்—தாளாத
தாகமொடு மந்தமறுந் தானேகரப் பனும்போம்
மேக வனலுந்தணியு மே.

இ-ள். இளமை பொருந்திய மயில்போலுஞ் சாயலையுடைய மாதே! கேளி யிளநீரை யுண்பவர்க்கு ரத்தமேகம் மலக்கிருமி விதாகம் மந்தாக்கினி கரப்பான் அதிசுரம் ஆகியவை நீங்கும். 65

## மஞ்சள்கச்சி இளநீரின் குணம்

பித்தம்போஞ் சோபையறும் பேருலகி லியாவருக்குந்
தொத்து கபமுந் தொலையுங்காண்—தத்துகின்ற
பொல்லாப் பழஞ்சுரமும் போகுமஞ்சட் கச்சிக்குப்
பொல்லாப் பொன்றில்லைப் புகல்.

இ-ள். மஞ்சள்கச்சி இளநீரை யருந்தினால் பித்ததோஷம் சோபை சிலேஷ்மாதிக்கம் பழயசுரம் ஆகிய இவை விலகும். 66

## அடுக்கிளநீரின் குணம்

அடுக்கிள நீர்கயத்தை யண்டா தகற்றும்
வடுக்கண்ணு யின்னும் வகுப்போம்—படுக்கும்பேர்
துண்டாற் சுகமெய்து முள்ளாங் கிருமியிதைக்
கண்டா லிறந்துவிடுங் காண்.

இ-ள். மாவடுவையொத்த கண்களையுடைய பெண்ணே! இன்னுஞ்சொல்வேன்: நித்திரைக்குமுன் அடுக்கிளநீரையுண்டால் கபதோஷம் மலப்பையைப்பற்றிய கிருமியும் போம், நன்மையுண்டாம்.

## கருவிளநீரின் குணம்

மருமலர்வாழ் மானேகேள் வையகத்தோர் நித்தங்
கருவிளநீ ருண்ணக் கபமுங்—கிருமிநெளி
புண்ணுங் கரப்பானும் போகுமிகக் காந்தியுறு
மெண்ணுமனப் பூரிப்பா மென்.

இ-ள். வாசனைபொருந்திய தாமரைமலரில் வசிக்கின்ற மான்போலுங் கண்களையுடைய பெண்ணே! கருமைநிற இளநீரால் கபாதிக்கமும் புழுநெளிகின்ற கரப்பானும் நீங்கும், தேஜசும் மகிழ்ச்சியும் உண்டாம் என்க. 68

## சோரியிளநீரின் குணம்

காரிருட் கூந்தற் கருங்கண் மடமயிலே
சோரியிள நீரருந்தச் சோகைதருங்—கூறியதோர்
பூச்சி கிருமியறும் பொன்மேனி யாமுடலாம்
பேச்சிற் றெளிவுண்டாம் பேசு.

இ-ள். கறுத்த கூந்தலையுங் கரிய கண்களையும் மயில்போலுஞ் சாயலையுமுடைய பெண்ணே! இரத்தவன்ன இளநீரால் வீக்கமும் வயிற்றிலுள்ள பூச்சியும் சன்னகிருமியும் போம், தேகம் அழகு தரும் தெளிந்த வசனமுமுண்டா மென்க. 69

## ஆயிரங்கச்சி இளநீரின் குணம்

வேகமுறுந் தீபனமாம் விட்டோடும் வாதகப
மாகமதிற் சேர்ந்த வரிப்பும்போம்—வாகுறுபுண்
வாயிரங்கு சீழும் வயிற்றுவலி யுந்தொலையும்
ஆயிரங் கச்சிக் கறி.

இ-ள். ஆயிரங்கச்சி இளநீரால் வெப்பம் பசி ஆமவாத கபம் தொந்தம் நமைச்சல் விரணஞ்சூழ் குன்மம் ஆகிய இவை தீரும்.

## குண்டற்கச்சி இளநீரின் குணம்

அண்டையிலே நின்றூர்க் கரோசிகெடுந் தீபனமாங்
கெண்டைவிழி மாதரசே கேளின்னுங்—கண்டபடி
குண்டற் கச்சிக்குக் கொடுந்தாக மாறிவிடும்
பண்டைப் பழமலம்போம் பார்.

இ-ள். மகரத்தைப் போன்ற கண்களையுடையவளே! குண்டற்கச்சி இளநீரால் அருசி விதாகம் நாட்பட்ட பழைய மலம் ஆகிய இவைபோம், ஜடராக்கினியுண்டாம் என்க. 71

### ஊணுக்குமுன் அருந்தும் இளநீரின் குணம்

ஊணுக்கு முன்பிளநீ ருண்டாற் பசிபோகும்
வீணுக்குக் குன்மம் விளையுங்காண்—பேணியிதை
மாலை தனிலருந்த மன்னு புழுச்சாகும்
வேலையொத்த கண்ணாய் விளம்பு.

இ-ள். வேலைநிகர்த்த கண்ணையுடைய மாதே! காலைப்புசிப்பிற்கு முந்தி இளநீருண்டால் பசி நீங்கலன்றிக் குன்மமாம்; மாலையில் உண்டால் எரிகிருமிகள் ஒழியும் என்க. 72

### உண்டபின்பு அருந்தும் இளநீரின் குணம்

வாதபித்த மீறுது வன்பயித்தி யந்தீருங்
கோதின் மலஞ்சாயுங் கொடும்பசியா—மாதரசே
மண்டியதோர் வாராது மேனி மினுமினுக்கும்
உண்டபின்பு நல்லிளநீ ருண்.

இ-ள். பெண்களுயகமே! புசித்தபின்பு இளநீரையுண்டால் வாதபித்த கோபந்தணிவதுமன்றித் தனிப்பித்த தோஷம் விலகும்; தாராளமாக மலங்கழியும், அதிதீபனமும் உண்டாம், நோயணுகாது தேகம் மினுமினுக்கும் என்க. 73

### காய்ந்தாறிய இளநீர் செவ்விளநீர் கெவுளிபாத்திரை இளநீர் இவைகளின் குணம்

காய்ந்தா றியவிளநீர் காசங் கபந்தீர்க்கு
மாய்ந்திடாத் தாகசுர மாற்றுங்காண்—ஆய்ந்ததொரு
செவ்விளநீர் பித்தஞ் சிதைக்குங்கெவுளி கொண்டா
லெவ்வளவுந் தாபமில்லை யெண்.

இ-ள். மட்டைசீவித் தண்ணீரில் போட்டுக்காய்ச்சி யாற்றிய இளநீரானது இருமல் சலதோஷம் வறட்சிசுரம் இவைகளைப் போக்கும்; செம்மைநிறமுள்ள இளநீர் பித்ததோஷத்தை விலக்கும்; கெவுளி பாத்திரையென்னும் இளநீரையுண்டால் உஷ்ணம் விலகும்.

### வெந்நீரின் பொதுக்குணம்

நெஞ்சதிர்ப்பு நெற்றிவலி நீங்காப் புளியேப்பம்
வஞ்சமுற வந்த வயிற்றுநோய்—விஞ்சியே
வீழாமற் கட்டோடு வெப்பிருமற் சுட்டநீர்
ஆழாக்குட் கொள்ள வறும்.

இ-ள். ஆழாக்கு என்னும் அளவாகக் குடிக்கின்ற வெந்நீரினால் எதிர்க்கின்ற உணவு நெற்றிநோவு புளியேப்பம் குன்மம் சீதக்கட்டு சுரம் காசம் ஆகிய இவைகள் போமென்க. 75

## காய்ந்தாறிய வெந்நீரின் குணம்

காய்ந்தாற வைத்தநீர் கட்டுமுழலை விக்கலொடு
வாய்ந்தவதி சாரபித்த மாற்றுங்காண்—சோர்ந்துவரு
மூர்ச்சை விடம்வாந்தி முன்மயக்க மேகமதி
யூர்ச்சிதமுத் தோடம்போக் கும்.

இதுவுமது

காய்ந்தநீ ருண்ணுங்காற் கண்செவிநோய் சூலைகுன்மந்
தோய்ந்தசுர வேகந் தொடரையும்—பாய்ந்தடரும்
வாதத்தின் கோபமிவை மாறுமென வாதியருள்
வேதத்தின் வாக்கியமாம் விள்.

இ-ள். காய்ச்சி ஆற்றிய வெந்நீர் உழலைநோய் விக்கல் பேதியாற்கிளைந்த பித்தகோபம் மூர்ச்சை சிலவிஷம் வாந்தி மயக்கம் சுக்கில மேகம் திரிதோஷம் கண்ணோவு செவிக்குத்தல் சூலை குன்மம் சுரவேகம் கோழை வாதாதிக்கம் இவைகளை தீர்க்கும். 77

## கால்கூறு அரைக்கூறு காய்ந்த வெந்நீரின் குணம்

காற்கூறு காய்நீராற் காரிகையே பித்தம்போம்
மேற்கூறு பாதிசுட்ட வெந்நீரான்—மேற்கூறும்
வாதமொடு பித்தம்போம் வைத்தொருநாட் சென்றுண்டு
ரோதம்போ மோடி யொளித்து.

இ-ள். வைத்த அளவுக்குக் காற்பாகஞ் சுண்டிய வெந்நீரால் பித்த கோபம் நீங்கும். பாதி சுண்டிய வெந்நீரால் வாதபித்த தோஷம் விலகும். அதை மறுநாள் வைத்துண்ணில் திரிதோஷ கோபம் போம். 78

## முக்காற்கூறு காய்ந்த வெந்நீரின் குணம்

முப்பக் கறக்காய்ந்த முந்தவெந்நீ ரால்வாதஞ்
செப்புங் குளிர்நடுக்கல் தீச்சுரம்வெக்—கைப்பலநோய்
வாதபித்த வையமிவை மாறுஞ் சுரிகுழலே
பூதலத்து ளோரும் புகல்.

இ-ள். சரிந்த கூந்தலையுடைய பெண்ணே! முக்காற்பாகஞ் சுண்டிய வெந்நீரால் வாதவிர்த்தி குளிர் நடுக்கல் கொடுஞ்சுரம் பற்பல பேதி திரிதோஷங்கள் இவை போமென்க. 79

### ஊணுக்கு முன் பின் நடு இக்காலங்களில் அருந்தும் வெந்நீரின் குணம்

ஊணுக்கு முன்புவெந்நீ ருண்டக்காற் றீபனம்போம்
ஊணுக்குப் பின்பருந்தி லூதியமாம்—ஊணுக்குப்
பாதியிலுண் டாற்பசியும் பாதியாம் வெந்நீரே
யோதுசுர வாதமகற் றும்.

இ-ள். உணவுக்கு முந்தி வெந்நீரைக் குடித்தால் பசி மந்தப்படும், பன்பு உண்டால் நன்மையுண்டாம். சாப்பிடும்போது மத்தியிலருந்தினால் பசியும் மத்திபமாம். மேலும் வெந்நீரின் சுவபாவம் வாதசுரத்தை நீக்கு மென்க. 80

### பொற்கெண்டி வெந்நீரின் குணம்

பொற்கெண்டி யில்வெந்நீர் பூரித்துட் கொள்ளுங்காண்
மற்கொண்ட வாயுகபம் வாயருசி—யெற்கொண்ட
மெய்யழல்வெப் புந்தணியும் மேவுநற் புத்தியொடு
மெய்யறிவு மோங்குமென விள்.

இ-ள். வெந்நீரைப் பொற்கெண்டியில் ஆறவைத் தருந்தில் வாதவிருத்தி கபகோபம் அரோசகம் சரீரவுஷ்ணம் சுரமாகிய இவை போம், சுக்கிலமும் நல்லறிவு ஸ்பரிச ஞானமு முண்டாமென்க. 81

### சரிகை வெள்ளிக்கெண்டி வெந்நீரின் குணம்

சரிகைவெள்ளிக் கெண்டி தனிலெட்டி லொன்றாகப்
பெருகக்காய்ச் சும்புனலைப் பெய்தே—பருகுங்கால்
வெப்பொடுதா கங்குன்மம் வீறுபித்தக் காய்ச்சலும்போந்
துப்பொடுட லுஞ்செழிக்குஞ் சொல்.

இ-ள். எட்டிலொருபங்காய்க் காய்ச்சிய நீரை சரிகை வெள்ளிக்கெண்டியில் விட்டுச் சாப்பிட்டால் உஷ்ணம் தாகம் குன்மம் பித்தசுரம் இவை விலகும். தேகத்திற்கு வன்மையும் புஷ்டியும் உண்டாம். 82

### தாம்பரம் வெள்ளி பஞ்சலோகம் வெண்கலம் இப்பாத்திரங்களின் வெந்நீரின் குணம்

இரவிவட்டிற் காமிரத்த பித்தங்கள் தான்போக்கும்
இரசிவட் டிற்கைய மேகும்—வருகலப்பு
வட்டிலறல் முத்தோட மாற்றும்வெண் கலச்சலமெய்க்
கொட்டிரத்த தாதுவைச்சேர்க் கும்.

இ-ள். தாம்பரக்கிண்ண வெந்நீர் கண் புகைச்சலையும் ரத்த பித்தப் பிணியையும் நீக்கும். வெள்ளிக்கிண்ணத்து வெந்நீரால் கபநோய் நீங்கும். பஞ்சலோகவட்டில் வெந்நீர் திரிதோஷத்தை விலக்கும். வெண்கலப் பாத்திர வெந்நீர் உதிரத்தைப் பெருக்கு மென்க. இரவி - தாம்பரம். 83

## கெண்டி வெந்நீரின் குணம்

கெண்டிதனிற் காய்ந்திடுநீ ரானதனை யாற்றியுண
அண்டிய நோயு மடர்சிரங்கும்—பண்டைக்
குடைச்சலும் கைகாற் குடைச்சலொடு சந்தின்
குடைச்சலும்போம் நன்றாகக் கூறு.

இ-ள். கெண்டியில் காய்ந்த நீரை யாற்றி யுண்ணச் சுரம் சிரங்கு அஸ்தி கைகாலிடுப்பு இவ்விடங்களில் குடைச்சல் ஆகி யவைபோம். 84

## பன்னீர்ச்செம்பு வெந்நீரின் குணம்

பன்னீர்ச்செம் பிற்காய்ந்த பானீயம் விட்டருந்த
மன்னியசு வாசம்விக்கல் மாபிரமை—பன்னரிய
பித்த சிலேத்மவளி பேசரிய தாளின்வலி
யித்தரையை விட்டகலு மெண்.

இ-ள். பன்னீர்ச் செம்பில் காய்ந்த வெந்நீரை விட்டருந்த இரைப்பு விக்கல் சித்தப்பிரமை திரிதோஷம் தாளுபாகரோகம் ஆகியவை போம். 85

## இரும்புக்கெண்டி வெந்நீரின் குணம்

இரும்புநறுங் கெண்டிதனி லேந்திய வெந்நீரை
விரும்பியுணப் பாண்டு விலகுந்—திரும்பவுமோ
தாதுவுமா நாடிகளுந் தாமுரக்குந் தேகமதிற்
சீதசுர முண்டாந் தெளி

இ-ள். இரும்புக்கெண்டி வெந்நீருக்குப் பாண்டு நீங்கும், தாதுவிருத்தி, நரம்புகளுக்கு உறுதியும் தேகத்தில் சீதோஷ்ணமும் உண்டாம். 86

---

# பால் வகை

## முலைப்பால் பொதுக்குணம்

தன்னியதென் றோதிற் சருவதோ டங்களும்போம்
உன்னிய தாப மொழியுங்காண்—சந்நியொடு
வாதசுரம் பித்தசுரம் வன்பகச்சு ரந்தணியுங்
கோதில் வலிமையுண்டாங் கூறு.

இதுவுமது

இருந்தோடம் போக்கு மிகற்கிரிச்சந் தீர்க்கும்
அருந்து மருந்தி னனுபானம்—பொருந்தும்
அஞ்சனத்திற் காகு மனல்வறட்சி நீக்கிவிடும்
பஞ்சினடி மாதர்முலைப் பால்.

இ-ள். முலைப்பால் எழுவகைத் தோஷங்களாகிய வெப்பம் சந்நிபாதம் வாத பித்த கப சுரங்கள் திரிதோஷம் வாதகிரிச்சரம் நாவரட்சி இவைகளை விலக்கி வன்மையைத் தரும். ஔஷத அனுபானத்திற்கும் கலிக்கத்திற்கும் ஆகுமென்க. தன்னியம் என்பது முலைப்பால். 88

கருமை செம்மைநிற மாதர்களின் முலைப்பாற் குணம்

கரியநிற மாதர் கலசமுலைக் கீரம்
அரியவிழிக் காமருந்திற் காகா—திருநிலத்துள்
நோயணுகாச் செய்ய நுடங்கிடையார் தம்முலைப்பால்
தீயமுத்தோ டம்போக்குஞ் சேர்.

இ-ள். கரியநிற மாதர் முலைப்பால் கண் வயித்தியங்களுக்கேயன்றி ஔஷதங்களுக் குபயோகமாகாது. வியாதியில்லாத செம்மை நிற மாதர் முலைப்பால் வாதாதி முத்தோஷங்களைப் போக்கும். கீரம் - பால். 89

பரத்தையர் முலைப்பாற் குணம்

பரத்தை முலைப்பாற்குப் பாரமுத்தோ டங்கள்
உரத்து வரும்வாத முண்டாகும்—இரத்தச்
சொறிகிரந்தி புண்ணுந் தொடர்கழ லுநோய்சேருங்
குறியறிந்து நீக்கிக் கொடு.

இ-ள். வேசையர் முலைப்பாலால் திரிதோஷங்கள் வாதரோகம் இரத்தச் சொறி கிரந்தி விரணம் கழல்வாதம் இவையுண்டாமென்க.

பசுவின்பாற் பொதுக் குணம்

பாலர் கிழவர் பழஞ்சுரத்தோர் புண்ணுளி
சூலையர் மேகத்தோர் துற்பலத்தோர்—எலுமிவர்
எல்லார்க்கு மாகு மிளைத்தவர்க்குஞ் சாதகமாம்
நல்லாய் பசுவின்பால் நாட்டு.

இ-ள். பசுவின்பாலானது பாலருக்கும் விருத்தருக்கும் பழைய சுரமும் விரணம் சூலை பிரமேகந் துர்ப்பலம் அதிசுஷ்கரோகம் ஆகிய இவைகளை யுடையவர்களுக்கும் ஆகுமென்க. 91

## வெண்மை, செம்மை, கருமை, கபிலை என்னும் இந்நிறமுள்ள பசுக்களின் பாற்குணம்

வெண்பசுவின் பால்போக்கும் பித்தத்தை மெய்சிவந்த
வண்பசுவின் பால்போக்கும் வாதத்தைக்—கண்சிவந்த
காராவின் பால்போக்கு மையங் கபிலைப்பால்
ஆரமிர்தாந் தோட மறுக்கும்.

இ-ள். வெண்மைநிறம் பசுவின்பால் பித்தகோபத்தையும், செம்மைநிறப் பசுவின்பால் வாததோஷத்தையும், கருமைநிறப் பசுவின்பால் கபரோகத்தையும், கபிலைநிறப் பசுவின்பால் திரிதோஷத்தையும் போக்கும். கபிலை என்பது, கருமைகலந்த பொன்னிறமாம் என்க. 92

## காராம்பசுவின்பாற் குணம்

கண்ணோ யகற்றுங் கயரோகந் தான்போக்கு
மண்ணிலுள்ள பால்தோடம் மாற்றுங்காண்—பெண்ணே
இரத்தபித்தம் போக்கு மிராச வசியமிகும்
கறுத்தபசும் பாலதனைக் காண்.

இ-ள். பெண்ணே! காராம்பசும்பால் கண்ணோய் க்ஷயம் மற்ற பாலின் தோஷங்கள் ரத்தபித்தரோகம் இவைகளை நீக்கும் வசியமா மென்க. 93

## நாரைமான் கபிலை என்னும் பசுக்களின்பாற் குணம்

நாரைப் பசுவின்பால் நாளுமுய ரோயகற்று
மாரைநிறப் பசும்பால் வாய்த்திடினோ—வேரையுறு
முப்பிணியும் போகு மொழிகபிலை யின்பாலுக்
கெப்பிணியும் போமே யிறங்கி.

இ-ள். நாரைப்பசும்பால் முயல்வலி தீர்க்கும். கபிலைப்பசும் பாலால் திரிதோஷமும் பலபிணியும் தீருமென்க. 94

## கொம்பசையும் பசுவின்பாற் குணம்

கொம்பசையு மாப்பாலோ கூறுபித்தம் போக்கிவிடும்
தம்பவா தத்தைத் தருவிக்கும்—வம்புமுலை
மானேகேள் விந்து வளர்ப்பிக் குங்கபத்தைத்
தானே யெழுப்புமெனச் சாற்று.

இ-ள். கச்சணிந்த தனங்களையுடைய பெண்ணே! அசைகின்ற கொம்பையுடைய பசுவின்பால் பித்தரோகத்தை நீக்கும், தனுஷ்டம்பவாதம் சுக்கிலதாது கபநோய் இவைகளை விளைவிக்கும். 95

## மூன்றுமீற்று நான்காமீற்றுப் பசுக்களின்பாற் குணம்

மூன்றுமீற் றின்பான் முதிர்கபத்தைப் போக்கிவிடும்
ஏன்றநா லாமீற் றெனும்பாலுங்—கூன்றுதிரி
தோட மகலுஞ் சுகமுண்டிவ் வாப்பாற்சந்
தோட மெவர்க்குமுண் டாக் கும்.

இ-ள். மூன்றுமீற்றுப் பசுவின்பால் நீடித்த சிலேஷ்மநோயும் நான்காமீற்றுப் பசுவின்பால் வாதாதி மூன்று தோஷங்களும் நீக்கும், சரீரசவுக்கியமும் மகிழ்ச்சியும் உண்டாமென்க. 96

## ஆகாப்பசுவின்பாற் குணம்

விருத்தம்

விஞ்சுவரணை தாராநோய் மிகுத்துச்சுழலல் வெண்புள்ளி
துஞ்சியலைந்து மலமருந்தல் சுடுகாடேகி யெலும்புணலிவ்
வஞ்சுவகையி னுவின்பா லாகாதணுகி லறிதோடம்
நெஞ்சிலடையங் கபநோயா னிறைந்தவயதுங் குறைந்திடுமே

இ-ள். ஆகாப்பசுவின்பால் ஐவகைப்படும், அவையாவன: அரணைநோய் தாராநோய் மிகவுஞ்சுற்றுதலோடு வெண்மைபுள்ளி தூங்கித்திரிந்து மலம் அருந்தல் சுடுகாட்டெலும்பு உண்ணல் ஆகிய இவைகளையுடைய பசுக்களின் பாலாம். இவை சேருமாகில் வாதாதி மூன்று தோஷங்களும் மார்பிற்சேர்ந்து க்ஷயத்தை விளைவிப்பதும் ஆயுளைக் குறைப்பதுமா மென்க. 97

## பகற்பசுவின்பாற் குணம்

வெண்பா

பகற்பால் சிசுக்கட்குப் பக்குவ மென்றாலும்
விகற்ப முடன்பருக மெய்யே—யெதற்குமிகத்
தீதடரச் செய்யுமித்தாற் சேராதுட் காய்ச்சலனல்
தாதவிழும் பூங்குழலே சாற்று.

இ-ள். அழகிய கூந்தலை யுடையாளே! பகற்பசுவின்பால் குழந்தைகளுக்குப் பக்குவமா மென்றாலும் பற்பல கபநோயையும் தாம்பூலம் புளிப்பு முதலிய சேருமிடத்துக்கெடுதியையும் செய்யும், உட்சூட்டையும் வெப்பத்தையும் நீக்குமென்க. 98

## இராப்பசுவின்பாற் குணம்

பகற்பசும்பால் காய்ச்சிப் பருகின் மிகவழலும்
விகற்பமுமீ ளையு மிராவாம்—புகற்பித்த
வேகமும்போ மேனியெல்லா மேவியிடுந் தாதுவுமாம்
போகமிக வுண்டாம் புகல்.

### இதுவுமது

இரவின்பால் நண்ணி லெழுபிணிபோக் கும்பின்
பரவியநோ யும்போக்கும் பாரில்—விரகமுற்றூர்க்
கத்தியம் பன்னவிழி யாயிழையே யாவருக்கும்
பத்தியமா மென்றைக்கும் பார்.

இ-ள், அயிலைநிகர்த்த கண்ணையும் ஆராய்ந்திழைக்கப்பெற்ற ஆபரணத்தையுமுடைய பெண்ணே! பகலிற்சுரந்து இரவு கறக்கின்ற பாலை விதிப்படி காச்சியருந்த தேக அழற்சி கபரோகம் சுவாசம் பித்தகோபம் நேத்திரவியாதி விந்துவின்கெடுதியா லனுசரித்த சிற்சில ரோகங்கள் ஆகிய இவை நீங்கும். தேகத்தில் மினுமினுப்புச் சுக்கிலப் பெருக்கமும் மாதர்மேல் விரும்பமுமுண்டாகும். இது பத்தியத்திற் குதவுமென்க. பகல் முழுதுஞ் சுரந்திருந்து இரவில் கறப்பது பகற்பால். 99

### எருமைப்பாற் குணம்

வாதந் திமிரை வரவழைக்கும் புத்தியினற்
போதத் தெளிவைநனி போக்குங்காண்—கோதற்றே
யங்கத் துறுமருந்தை யன்றே முறித்துவிடும்
பங்கத் துறுமேதிப் பால்.

இ-ள். எருமைப்பால் திமிர்வாயுவைத் தருவிக்கும் தெளிந்த புத்தியின் கூர்மையையும் நல்லமருந்தின் குணத்தையுங் கெடுக்கும்.

### வெள்ளாட்டுப்பாற் குணம்

வெள்ளாட்டுப் பாலுக்கு மேவியநற் றீபனமாந்
தள்ளாட்டு வாதபித்தஞ் சாந்தமாம்—உள்ளிரைப்புச்
சீத மதிசாரஞ் சிலேத்மமறும் புண்ணறும்
வாத கிலேசமும்போ மாய்ந்து.

இ-ள். வெள்ளாட்டுப் பாலினால் வாதபித்த தொந்தம் சுவாசகாசம் சீதமதிசாரம் கபதோஷம் விரணம் வாதத்திலுண்டாகிய வீக்கம் முதலிய துன்பம் தீரும், நல்ல பசியும் உண்டாமென்க. 101

### செம்மறியாட்டுப்பாற் குணம்

செம்மறிப்பாற் பித்தஞ் சிலேத்மத்தை யுண்டாக்கும்
விம்மும் வயிறுமிக மேன்மூச்சாங்—கொம்மை
வருமுலையாய் பத்தியத்தில் வாராது வாய்வாம்
பருகுவர்க்கு நாளும் பகர்.

இ-ள். திரட்சியாய் வளர்ந்து வருவனவாகிய தனங்களையுடைய பெண்ணே! வாதரூபமான செம்மறியாட்டுப் பால் பித்த சிலேஷ்மதொந்தம் வயிற்றுப்பிசம் மேற்சுவாசம் உண்டாகும் பத்தியத்திற் குதவாது, வாய்வு அதிகரிக்குமென்க. 102

## யானைப்பாற் குணம்

வாதம்போந் தாதுபுஷ்டி வந்தடரும் வன்பலமோ
யாதுபித் தங்கூடி யழகுதிக்குந்—தாதுமலர்த்
தேனைப்பா லிற்கலந்த தித்திப்பைப் போலிருக்கும்
யானைப்பா லுண்ணு மவர்க்கு.

இ-ள். தேனும் பாலுங்கலந்த ருசிபோன்ற யானைப்பாலைக் குடிப்பவருக்கு வாதகோபம் நீங்கும், சுக்கிலவிருத்தியும் மிருவன்மையும் பித்தசம்பந்தமான நோயும் தேக அழகும் உண்டாகும். 103

## குதிரைப்பாற் குணம்

வீரிய விருத்தி விளக்குமழ குண்டாகுங்
காரியத்திற் காமங் கதிப்பிக்கும்—வாரார்
கரகமெனச் செப்புமுலைக் காரிகையே கேளாய்
துரகதப்பால் செய்யுந் தொழில்.

இ-ள். வாரிணுவிறுக்கிப் பொற்கலசமெனப் புகலுங் கொங்கைகளையுடைய மங்கையரே! குதிரைப்பால் சுக்கிலப்பெருக்கத்தையும் சரீர வனப்பையும் புணர்ச்சியில் நிருவாகத்தையும் உண்டாக்குமென்க. 104

## ஒட்டைப்பாற் குணம்

ஒட்டைப்பா லுக்குமந்த மூவாதம் சூலையோ
டட்ட குணக்கரப்பா னுவதன்றி—மட்டிடாக்
காதிரைச்சன் மந்தமதி காசஞ் சுவாசமுமா
மாதரைக்கு ஞாளும் வழுத்து.

இ-ள். ஒட்டைப்பாலினால் அக்கினிமந்தம் வாதசூலை எண்வித கரப்பான் கர்ணநாதசெவிடு அதியிருமல் இரைப்பு இவையுண்டாகும். 105

## கழுதைப்பாற் குணம்

கழுதைப்பால் வாதங் கரப்பான் விரணங்
கழுதளையுள் வித்திரதி தானே—யெழுகின்ற
ஒட்டியபுண் சீழ்மேக மோடு சொறிசிரங்கு
கட்டியிவை போக்குங் கழறு.

### இதுவுமது

கத்தபத்தின் பாற்குக் கரிய கிரந்தியறுஞ்
சித்தப் பிரமைபித்தந் தீருங்காண்—தத்திவரும்
ஐய மொழியு மதிக மதுரமுமாஞ்
செய்ய மடமயிலே செப்பு.

இ-ள். அழகு மிளமையும் பொருந்திய மயிலனைய பெண்ணே! கழுதைப்பால் மிகு மதுரத்தையுடையது; இது வாதநோய் கரப்பன்புண் தழுதளைரோகம் உள்விந்திரிதிக்கட்டி ஒட்டுக்கிரந்தி சீழ்ப் பிரமேகம் சொறி சிரங்கு அற்புதவிரணம் சித்தப்ரமை பித்த தோஷம் கபநோய் இவைகளைப் போக்கும் என்க. 106

### பாத்திரபேதத்தி லுண்டாகிய பாற்குணம்

செம்பிலிடும் பால்வாத சீதமொழிக் கும்பொன்மண்
கும்பத் தடுபால்போக் கும்பத்தை—யம்புவியுள்
வெள்ளி யறையிரும்பில் விட்டுக்காய்ச் சும்பாலாற்
றுள்ளி யுறையைமறுஞ் சொல்.

இ-ள். செப்புப் பாத்திரத்தில் காய்ச்சிய பால் வாதசிலேத்மத்தையும் பொன் மண் பாத்திரங்களில் காய்ச்சியபால் பித்ததோஷத்தையும் வெள்ளி வெண்கலம் இரும்பு பாத்திரங்களிற் காய்ச்சிய பால் காசரோகத்தையும் போக்குமென்க. 107

### ஆடையெடுத்த பாற்குணம்

ஆடை யெடுக்கும்பா லக்கினிமந் தப்படுமே
வாடை நல்லாய் சீரணமாம் வாதமறுங்—கோடையிடி
போலு மெழுந்தபித்தம் போகுமே கூரியசீர்
வேலனைய கண்ணாய் விதி.

இ-ள். கூரிய வேலையுடைய கண்களையுடைய பெண்ணே! ஏடு நீக்கிய பாலால் அக்கினி மந்தமும் சப்த தாதுக்களின் சீரணமும் உண்டாம், வாதபித்த கபதோஷங்கள் நீங்குமென்க. 108

### காய்ச்சும்பாலுக்கு நீரளவை கூறல்

ஆடுபசும் பால்காய்ச்சி லட்டபா கம்புனலாம்
நீடெருமை செம்மறிக்கு நேர்நேராந்—தேடரிய
சுக்குசிறு காஞ்சொறிவேர் கூட்டிச் சுவறியபா
லொக்கும்வெள் ளாட்டுப்பாற் குரை.

இ-ள். வெள்ளாடு பசு இவைகளின் பாற்கு எட்டிலொருபங்கும் எருமை செம்மறியாடு இவைகளின் பாற்குச் சரிப்பங்கும் ஜலம் விட்டுக் காய்ச்சவேண்டும். எவ்வித பால்களுக்கும் சுக்கு சிறுகாஞ்சொறிவேர் சேர்த்துக் காய்ச்சல் அவைகள் வெள்ளாட்டுப் பாலுக்கு நேராமென்க. 109

## பாலேட்டின் குணம்

பாலேட்டாற் பித்தமறும் பாழ்த்தகொடும் வாந்தியும்போம்
மாலாட்டு மூர்ச்சையும்போம் வன்பலமா—மேலாலே
தாதுமிகுந் தீபனமாந் தானே யிளைத்தவர்க்குக்
கோதுமறு மாமயிலே கூறு.

இ-ள். பாலினுண்டாகும் ஏட்டினால் பயித்தியரோயும் கொடிய வாந்தியும் மூர்ச்சையும் நீங்கும் மிகுபலமும் சுக்கிலமும் ஜாடராக்கினியும் விருத்தியாம் இதைத் துற்பலதேகிகள் உண்டாலுங் குற்றமில்லை. 110

## தேங்காய்ப்பாற் குணம்

வாதமாம் பித்தமுறும் வன்கரப்ப னும்படருந்
தாதுவும்வி ருத்தியாந் தார்குழலே—யோதநல்ல
அன்ன மிறங்கு மதியுரிசை யுண்டாகுந்
தென்னங்காய்ப் பாலாற் றெளி.

இ-ள். தாழ்ந்த கூந்தலையுடைய பெண்ணே! மிகுமதுரத்தால் உணவை யுட்செலுத்துகின்ற தெங்கின்பாலால் வாதவிகாரம் பித்தாதிக்கம் கரப்பான் சுக்கில விருத்தியும் ஆம் எண்க. 111

## ஆலம்பாற் குணம்

ஆலம்பால் மேக மறுத்தசையும் பல்லிறுக்குங்
கோல முடிக்குவெகு குளிர்ச்சிதரும்—ஞாலமதில்
மெத்தவுமே சுக்கிலத்தை விர்த்திசெய்யுந் தப்பாமற்
சுத்த மதிமுகத்தாய் சொல்.

இ-ள். களங்கமற்ற பூரணச் சந்திரனை நிகர்த்த முகத்தினையுடைய பெண்ணே! ஆலம்பால் பிரமேகத்தை நீக்கும், ஆடும் பற்களை யிறுக்கும், சிரசுக்குக் குளிர்ச்சியையும் தாதுபுஷ்டியையும் தருமென்க. 112

## அத்திப்பாற் குணம்

காரகமோ டுட்டினமாங் காறுகின்ற பித்தத்தை
நீரிழிவைச் சூலைகளை நீடிரத்தஞ்—சேருங்
கிரிச்சரத்தைப் போக்குங் கிளர்கோளி யென்னும்
மரச்சருமப் பாலதனை வாங்கு.

இ-ள். காரமும் உஷ்ணமுமுள்ள அத்திப்பால் பித்தம் நீரிழிவு சூலை ரத்தமூத்திர கிரிச்சரம் இவைகளை நீக்கும். கோளி-அத்திமரம். 113

## பேயத்திப்பாலின் குணம்

வெடிப்பைமே கப்படையை வீறிவரு குட்டத்
தடிப்பை முளைரணத்தைச் சாடும்—படிக்குண்மயி
லென்னவொளிர் மாதரசே யெங்குஞ் சுணைகறை
மன்னமுறு பேயத்திப் பால்.

இ-ள். மயிலென்ன விளங்குகின்ற பெண்கணுயகமே! சுணைகளையுடைய பேயத்திப்பால் மாதமேபதரோகம் மேகச்சொறி குஷ்டரோகத்தடிப்பு முளைவிரணம் இவற்றை விலக்குமென்க. 114

## மட்டிப்பாற் குணம்

தலைவலிநீ ரேற்றந் தணித்த வுடல்வாத
மலைவுறு மேல்வாந்தி யரோசி—நிலைகுலையும்
வட்டுப்பால் வஞ்சம்வைத்த மாமுலை மாதேமணக்கு
மட்டுப் பாலிற்கு மருண்டு.

இ-ள். சூதாடு கருவியை வெற்றிகொள்ளும் வஞ்சம் பொருந்திய தனங்களையுடைய பெண்ணே! வாசனையையுடைய மட்டிப் பாலினல் தலைவலி சலதோஷம் பாதக்ஷேபகவாதம் கபவாந்தி அருசி இவைபோம். 115

## காட்டுப்பிராய், ஈழத்தலரி இவைகளின் பாற்குணம்

காட்டுப் பிராய்ப்பாலோ காணுகின்ற பல்வலியை
நாட்டில்வைக்கா தோட்டிவிடு நங்கையே—கோட்டாரும்
ஈழத்தலரிப்பா லேறுபுரைப் புண்தொடையின்
வாழைப்புற் றும்போக்கு மால்.

இ-ள். காட்டுப்பிராய் மரப்பால் தந்தநோயை நீக்கும், ஈழத்தலரிப்பால் புரைவிரணத்தையும் தொடைவாழைப் புற்றையும் விலக்கும். 116

## சங்கன் முட்செடி புங்கமரம் இவைகளின் பாற்குணம்

சங்கம்பால் வீக்கமதைத் தான்போக்கு நீர்வடிக்கு
மங்குசுர வெப்பகற்று மையமிலை—கொங்குலவு
புங்கம்பால் புண்ணுற்றும் பொல்லாத வாய்வகற்றுந்
தங்கம்போன் மெய்யளிக்குந் தான்.

இ-ள். முட்சங்கன் வேர்க்கட்டையை மெல்லியதாய் சீவிப் பிழிந்த பால் சோபையையும் நீரேற்றத்தையும் சுரவேகத்தையும்

நீக்கும்; முன்போல் பிழிந்த புங்கம்பால் விரணத்தையும் நீக்கும்; தேகத்தில் பொன் ஒளியுண்டாகு மென்க. 117

## தில்லைமரத்தின்பாற் குணம்

பாரிசவா தஞ்சன்னி பாதச்சூலங் குட்டஞ்
சேருமுட வாதம்வலி சில்விடம்போம்—பேருரைக்க
இல்லையில்லை யென்றேடு மெண்பது வாதமுமே
தில்லைமரப் பாலாற் றெளி.

இ-ள். தில்லைமரப்பாலால் பக்ஷபாதவாதம் சன்னிபாதம் சூலை குஷ்டரோகம் முடவாதம் அமரகண்டன் முதலிய ஐவகை வலிகள் சில் விஷம் 80 வித வாதரோகங்கள் ஆகிய இவைபோமென்க. 118

## திருகுகள்ளிப்பாற் குணம்

வாத முடக்கலும் வன்கிரந்தி குட்டம்போஞ்
சீதமொழி யுங்கிருமி சேராவாம்—மாதே
பருபக்க நோயுடனே பாழ்ங்கரப் பான்றீருந்
திருகுகள்ளிப் பாலாற் றெளி.

இ-ள். திருகுகள்ளிப் பாலினுல் கஞ்சவாதம் கிரந்தி பெரு வியாதி சீதக்கட்டு கிருமிரோகம் பக்கசூலை கரப்பான் இவைபோ மென்க. 119

## சதுரக்கள்ளிப்பாற் குணம்

குட்டங் கடிசூலை குன்மமே கம்வாய்வு
துட்டக் கிருமியொடு தூறுபுண்ணு—முட்ட
முதிரக் கரப்பனும்போ மொய்குழலே நாளுஞ்
சதுரக்கள் ளிப்பாற்குத் தான்.

இ-ள். நெருங்கிய கூந்தலையுடைய பெண்ணே! சதுரக்கள்ளிப் பாலால் குட்டம் கடி சூலை வாதப்பிரமேகம் வாதாதிக்கம் கிருமி நெளிகின்ற துட்டவிரணம் கரப்பான் இவைகள் விலகுமென்க. 120

## மான்செவி கள்ளிப்பாற் குணம்

மான்செவிக் கள்ளிப்பாற்கு மாறு விரணங்கள்
ஏன்கிளைக்கு நன்மல மிறக்குங்காண்—ஊண்சேர்
விரிகிரந்தி நீங்கா வறட்சிசொறி யோடு
பொரிகிரந்தி யும்போம் பொரிந்து.

இ-ள். மான்செவிக் கள்ளிப்பாலால் ஆறுத புண்கள் மாமிசத் தைப்பற்றிய விரிக்கிரந்தி தேகவறட்சி படை சொறி கிரந்தி இவை நீங்கும் தோஷமற்ற மலமுஞ் சாருமென்க. 121

இலைக்கள்ளிப்பாற் குணம் (இதுவே முயற்செவிக்கள்ளி)

செய்ய கரப்பான் செவிநோய்வா தம்போக்கும்
பையவருஞ் சூலைதனைப் பாழாக்கும்—வெய்யின்மிக
வூது கிரந்தியோ டட்புண்ணை யாற்றிவிடு
மேதுமிலைக் கள்ளிப்பா லோர்.

இ-ள். இலைக்கள்ளிப்பால் செங்கரப்பான் செவிநோய் வாத விகாரம் சூலை விசர்ப்பிக்கிரந்தி உள்விரணம் இவைகளை நீக்கும். ()

கொடிக்கள்ளிப்பாற் குணம்

துய்ய கரப்பான் சொறிசிரங்கும் புண்ணும்போஞ்
செய்யகடி குட்டநோய் சேருமே—மெய்யி
லடிக்கடியாங் குன்மவலி யத்தனையுந் தீருங்
கொடிக் கள்ளிப்பாலுக்குக் கூறு.

இ-ள். கொடிக்கள்ளிப்பாலால் கரப்பான் சொறிசிரங்கு பெரு விரணம் அக்கினி கிடக்கடி குஷ்டடம் அடிக்கடி வலிக்குங் குன்மம் இவைகள்போம் வன்க. 123

எருக்கம்பாற் குணம்

எருக்கம்பாற் கட்டிகளை யேகரைக்கும் வாய்வைத்
திருக்கறவே கொன்றுவிடுந் தீராக்—செருக்கான
சன்னிவலி தீர்க்குஞ் சார்ந்தபல சிந்தூர
முன்ன முடிக்குமென் றோர்.

இ-ள். எருக்கம்பால் வாதக்கட்டிகளைக் கரைப்பதன்றி வாத நோய் சன்னிபாதம் ஐவகைவலி ஆகிய இவைகளைப்போக்கும். பற் பல சரக்குகளைச் சிந்தூரஞ்செய்ய நினைக்கில் முடிப்பிக்கும். 124

வெள்ளெருக்கம்பாற் குணம்

வலியின் வலிசுளிக்கு மாவாதஞ் சன்னி
யெலியின் விடஞ்சுரங்க ளெல்லாம்—வலியற்றுக்
காலைத் தொழுதே கடற்புக்கும் வெள்ளெருக்கம்
பாலைத் தொடுவாரைப் பார்.

இ-ள். வெள்ளெருக்கம் பாலால் ஐவகைவலியும் சுளுக்கும் மகா வாதம் சன்னிபாதம் எலிவிஷம் குளிர்ச்சுரம் இவைபோம். 125

காட்டாமணக்கின்பாற் குணம்

விழுமேக வெள்ளைகுன்ம மேல்விர ணங்கோலின்
விழுமேருக் கட்டியிவை யெல்லாந்—தொழுதோடுங்

கூட்டா மணக்குழம்பைக் கொண்டவனக் கொங்கையின்னே
காட்டா மணக்கம்பாற் கண்டு.

இ-ள். கலவைச்சாந்தணிந்த கொங்கைகளையுடைய பெண்ணே! காட்டாமணக்கம்பாலால் மூத்திரத்தோடு விழுகின்ற மேகம் வெள்ளை வயிற்றுவலி குறிவிரணம் சருமக்கட்டி இவைநீங்கும். 126

## எலியாமணக்கம்பாற் குணம்

எலியா மணக்கோ வெலிவிடம்வித் துப்பற்
பலவிடமு நீக்கிவிடும் பாரில்—வலுபேதி
யுண்டாகச் செய்யு முயிர்பீலி கங்குன்ம
மண்டாம லோட்டுமிதை யாய்.

இ-ள். எலியாமணக்கின்பால் எலிவிஷம் பீஜவீக்கம் வண்டு கடி முதலிய பற்பல விஷம் பீலிகநோய் வயிற்றுவலி ஆகிய இவைகளை நீக்குவதுமன்றி அதிக விரோசனத்தை யுண்டாக்கு மென்க.

## பிரமதண்டின்பாற் குணம்

கண்கூசல் கண்ணருகல் கண்ணொழுகல் கண்வலி
கண்சிவத்த லெல்லாங் கடிதேகுந்—திண்ணச்
சரமதன் றனைப்பிளக்குஞ் சாயகக்கண் மாதே
பிரமதண் டன்பாற்குப் பேர்ந்து.

இ-ள். பலம்பொருந்திய மன்மதனையும் வருத்துஞ் சாயல் போலுங் கண்களையுடைய பெண்ணே! பிரமதண்டின் பாலால் கண் கூசுதல் கண்ணூறுதல் கண்ணீர் வடிதல் கண்வலி கண்சிவப்பு ஆகிய இவைகள் போமென்க. 128

---

# தயிர்வகை

## பசுவின்தயிர்க் குணம்

பசுவின்றயிராற் பசிமிகவு முண்டாகு
மிசிவுறும் சீரணநோ யேகும்—பசையகன்ற
தாக மிளைப்பிருமல் தாங்கொணு மெய்யெரிவு
மேகு முலகி லியம்பு.

இ-ள். பசுவின் தயிரால் பசியுண்டாகும். இசிவு சீரண ரோகம் தாகம் ஆயாசம் காசம் சரீர எரிச்சல் இவை நீங்கும். 12

### ஆடையெடுத்த தயிர்க்குணம்

ஆடை யெடுத்ததயிர் ஐய மிளைப்பறுக்கும்
நாடு கிரிச்சரத்தை நாடவொட்டா—தாடொலியா
லுண்டாங் கிராணி யுறைமேகம் போக்கிவிடுந்
தண்டார் குழலணங்கே சாற்று.

இ-ள். குளிர்ந்த மாலையணிந்த கூந்தலையுடைய பெண்ணே! ஏடு நீக்கிய தயிரானது சிலேஷ்மரோகம் ஆயாசம் மூத்திரகிரிச்சரம் வாதகிராணி குஷ்டரோகம் இவைகளை நீக்குமென்க. 130

### எருமைத்தயிர்க் குணம்

எருமைத் தயிருக் கெரிபித் தம்போம்
வருமைக் கரப்பனொடு வாதம்—பெருமிதஞ்சேர்
தூல வுடலுமாந் தூயறிவு மந்தமுறுங்
கோல விழிகுளிருங் கூறு.

இ-ள். எருமைத் தயிருக்கு எரிச்சலும் பித்தநோயும்போகும். கபத்தைப்பற்றிய கரப்பான் வாதரோகம் அதிதூலரோகம் புத்தி மந்தங் கண்ணுக்குக் குளிர்ச்சி ஆகிய இவைகள் உண்டாகும். 131

### வெள்ளாட்டின் தயிர் மோர் இவைகளின் குணம்

வெள்ளாட்டின் வெண்டயிரோ மிக்கனல மாகுமதற்
குள்ளாடை யான்மந்த முண்டென்பார்—வெள்ளாட்டின்
மோரோமே கத்தை முதிரா தடித்துவிடும்
பாரோ ரறியப் பகர்.

இ-ள். வெள்ளாட்டின் தயிரால் அதி உஷ்ணம் அதன் ஏடால் மந்தம் விளையும். மோரானது பிரமேகரோகத்தைப் போக்கும். 132

### செம்மறியாட்டுத் தயிர்க் குணம்

செம்மறியின் றண்டயிரைத் தின்ன மதுரமிகுங்
கொம்மைமுலை மாதரசே கூறக்கேள்—அம்ம
கரப்பான் சொறியுங் கடும்பிரத்த வாய்வு
முரப்பா முடங்கெடுமென் றோர்.

இ-ள். இளமை பொருந்திய தனங்களையுடைய மாதரசே! மதுரமுள்ள செம்மறியாட்டின் தயிரை உண்டால் கரப்பான் சொறி மூலக்கடுப்பு ரத்தமூலம் வாதரோகம் ஆகிய இவைகள் பலப்படுவதுமன்றிச் சரீரத்திற்குத் துன்பமுண்டாகுமென்க. 133

### ஒட்டைத்தயிர்க் குணம்

தீபனமு முண்டாஞ் சிறுகரப்பான் புண்ணுமாற்
பூபதி பொன்மேனி புளகிக்குந்—தாபதமாம்
ஒட்டைத் தயிர்நிதமு முண்ணவதி தாகம்போந்
துட்டக் கிருமியறுஞ் சொல்.

இ-ள். ஒட்டைத்தயிரைக் குடித்தால் ஜடராக்கினி சிறுகரப்பான் விரணம் சரீரமேனி இவை உண்டாகும், தாகமும் மலக்கிருமி ரோகமும் நீங்குமென்க. 134

---

## மோர்வகை

### பசுமோர்க் குணம்

வீக்க மகோதரமுள் வீறுகுன்மம் பாண்டுபித்தந்
தாக்கு மருந்திட்டதநி சாரமொடு—கூக்குரலே
மாறுந் திரிதோட மந்தமனற் றுகம்போம்
வீறுவின் மோருக்கு மெய்.

இ-ள். பசுவின்மோருக்கு வீக்கம் மகோதரம் வயிற்றுவலி பாண்டுரோகம் பித்தகோபம் இடுமருந்தால் வரும் நோய்கள் பேதி திரிதோஷம் அக்கினிமந்தம் வெப்பம் இவைகள் போமென்க. 135

### எருமைமோர்க் குணம்

தாகங் கிராணி சலங்கழிச்சல் காமாலை
ஆகங் குடைபுழுவு மற்றும்போ—மோகமுறுந்
தேவா மிருதமுமாஞ் சீர்மா னிடர்தமக்கு
மூவா மருந்தெருமை மோர்.

இ-ள். எருமைமோரினால் தாகம் கிராணிரோகம் சலக்கழிச்சல் காமாலை கிருமி ஆகிய இவைகள் நீங்கும் போகவிருப்பமாம், சிறந்த மானிடர்களுக்கு கெடாத வமுதமுமாகுமென்க. 136

### ஒட்டைமோர்க் குணம்

ஒட்டைமோர் மெத்தவன லோங்கியவா தந்தணிக்குங்
கிட்டுமந்த நெய்ப்பெருமை கேட்பீரேல்—நெட்டுலகின்
மந்தஞ் செய்தாலும் வலிவிந்து வைப்பெருக்கு
மந்தஞ்சேர் கண்ணை யறி.

இ-ள். ஒட்டைமோரானது பித்தவாத தொந்தத்தைச் சாந்தி செய்யும் அதன் நெய்யானது அக்கினிமந்தஞ் செய்வதா யிருந்தாலும் சுக்கில தாதுவை விருத்திசெய்யு மென்க. 137

# வெண்ணெய் வகை

## முலைப்பால் வெண்ணெய்க் குணம்

கண்ணெரிவுங் கையெரிவுங் காலெரிவு நாசிகளி
லண்ணெரிவு மண்ணி லகன்றிடுங்காண்—கண்ணு
ரலைப்பால்மாண் பந்துக் கணிசெய்யு மாதர்
முலைப்பால்வெண் ணெய்க்கு முறிந்து.

இ-ள். சிறந்தமாதர் முலைப்பால் வெண்ணெய்க்குக் கண், கை, கால், நாசி, இவ்விடங்களில் உண்டாகும் எரிச்சல் நீங்கும். 138

## பசுவெண்ணெய்க் குணம்

கண்ணி லெழுநோயுங் கண்ணெரிவும் பீளையும்போ
மெண்ணும் பசியு மெழும்புங்காண்—நண்ணரிய
ஆவினறும் வெண்ணெய்க் ககனும்வன் மேகமெல்லாம்
பூவினர்க் கெல்லாம் புகல்.

இ-ள். பசுவின் வெண்ணெய்க்குக் கண்ணோய் கண்ணெரிச்சல் பீளை சாரல் பிரமேகம் இவைபோம், பசியுண்டாம். 139

## எருமை வெண்ணெய்க் குணம்

எருமைவெண் ணெய்க்கி லெரிநீ ரிழிவு
பருவ மயில்கேளிப் பாரிற்—கிருமியுறு
மந்தமாம் வாதமிகு மாரக்கபங் கரப்பான்
றொந்தமா நோயடருஞ் சொல்.

இ-ள், பருவமயில்போலுஞ் சாயலையுடைய பெண்ணே! எருமை வெண்ணெயினுல் பித்த மூத்திரகிரிச்சரம் நீங்கும் மலாசயக் கிரிமி அக்கினிமந்தம் வாதரோகம் கபாதிக்கம் கரப்பான் தொந்த ரோகம் ஆகிய இவைகள் உண்டாமென்க. 140

## வெள்ளாட்டு வெண்ணெய்க் குணம்

வெள்ளாட்டு வெண்ணெயது வீறுசுரந் தான்போக்குந்
தள்ளாடு பித்தந் தணிக்குங்காண்—தெள்ளுமொழி

மானே பசியெழுப்பும் வன்கரப்ப னைக்கடற்குட்
டானே துரத்திவிடுஞ் சாற்று.

இ-ள். வெள்ளிய மொழிமையுடைய பெண்ணே! வெள்ளாட்டு வெண்ணெய் சுரரோகம் பித்தநோய் கரப்பான் ஆகிய இவைகளை நீக்கும், பசியை உண்டாக்குமென்க. 141

## ஒட்டைவெண்ணெய்க் குணம்

கட்டழகு செய்யுநற் காரிகையீர் கேண்மின்கள்
ஒட்டைவெண் ணெய்மந்த மொடுவாதங்—கிட்டவைக்கும்
நீரழிவுக் கேற்கு நிறைபித்தம் போக்கிவிடும்
பாரறியச் சொன்னோம் பகுத்து.

இ-ள். ஒட்டை வெண்ணெயானது நல்ல அழகையும் மந்தத்தையும் வாதரோகத்தையும் உண்டாக்கும் நீரிழிவையும் பித்த கோபத்தையும் நீக்குமென்க. 142

# நெய்வகை

## பசுவின்நெய்க் குணம்

தாகமுழ லைசுட்கம் வாந்திபித்தம் வாயுபிர
மேகம் வயிற்றெரிவு விக்கழல்—மாகாசங்
குன்மம் வறட்சி குடற்புரட்ட லத்திசுட்டஞ்
சொன்மூலம் போக்குநிறைத் துப்பு.

இ-ள். பசுவினது நெய்யானது தாகம் உழலைப்பிணி அதிசுட்கரோகம் வாந்தி பித்தாதிக்கம் வாதவிஷம் விரணப்பிரமேகம் வயிற்றி லெரிவு பித்தவிக்கல் இருமல் வயிற்றுவலி சிலேப்பு குடல் நெளிதல் அஸ்திசோம்பல் மூலரோகம் ஆகிய இவைகளை நீக்குமென்க. துப்பு-நெய். 143

## காராம்பசுநெய்க் குணம்

காராம் பசுநெய்யாற் கண்ணுக் கொளியுண்டாம்
நீரார் விழிபுருவ நெற்றிசிரச்—சூரொழியும்
மெய்யிற் குழைவு மிளிர்பொன் னிறமும்வரும்
நெய்யா லிதுமேவ நிகழ்த்து.

இ-ள். காராம்பசு நெய்யால் நேத்திரத்திற் கொளிவும் சரீர புஷ்டியும் பொற்சாயலும் உண்டாகும். கண் புருவம் நெற்றி சிரசு இவைகளைப்பற்றிய நோய்கள் விலகுமென்க. 144

### எருமை நெய்க் குணம்

புத்திகெடு மெய்யழகு போதக் கெடுநயனம்
மெத்தவொளி மாறிவிடு மேதினியிற்—சத்தியமா
முறுவாத மொடுபித்த மாறுக் கரப்பானுங்
கோதெருமை நெய்யருந்திற் கூறு.

இ-ள். எருமை நெய்யால் அறிவு அழகு கண்ணொளி இவைகள் மத்திமமாம். வாதபித்த தோஷம் கரப்பான் இவையுண்டாமென்க. 145

### வெள்ளாட்டு நெய்க் குணம்

ஐயைப்போக் கும்வாதத் தாமையைக்கெ டுத்துவிடு
மெய்யை வளர்க்கும்விழி யைத்துலக்கும்—வையகத்திற்
பத்தியத்திற் காகும் பயமிலைவெள் ளாட்டின்னெய்
நித்தியங்கொண் டாலுங்கொண் ணீ.

இ-ள். வெள்ளாட்டின் நெய்யை யுண்ணில் அது சிலேஷ்மாதிக்கத்தையும் வாதகோபத்தையும் போக்கும், சரீரத்தை வளர்ப்பது மன்றிக் கண்ணுக்கொளியை யுண்டாக்கும், பத்தியத்திற்குதவும். 146

### செம்மறியாடு பள்ளாடு இவைகளின் நெய்க் குணம்

செம்மறியி னெய்யதனைத் தின்ன மதுரமுமாங்
கொம்மைமுலை மாதரசே கூறக்கே—ளம்முருங்காண்
பள்ளையின்னெய் பித்தொழிக்கும் பாருலகி லெல்லாருங்
கொள்ளத்தான் மந்தமுறுங் கூறு.

இ-ள். இளமை பொருந்திய தனங்களையுடைய பெண்ணே! மதுரமுள்ள செம்மறியாட்டு நெய்யால் கபரோயதிகரிக்கும். பள்ளையாட்டு நெய் பித்தரோயை யொறுக்கும். மந்தமா மென்க. 147

### கலப்பு நெய்க் குணம்

நெய்யுட் பலநெய்க்கு நீள்சுக்கி லம்பெருகும்
வெய்யபசி யுண்டாம் விடும்பித்த—மெய்யனலா
லுள்ளபித்த வெக்கைபோ மோங்குயி நுந் தானிலைக்குங்
கொள்ளத் தெரியுங் குணம்.

இ-ள். எருமை நெய் முதலிய கலப்பு நெய்யால் சுக்கிலம் பெருகும், தீபனம் உண்டாம். பித்த தோஷம் தேகக் கொதிப்பாலாகிய பித்தசுரம் போம், உயிரைத் தாங்குகின்ற உடலும் பலக்குமென்க.

## பன்றி, உடும்பு, காக்கை இவைகளின் நெய்க் குணம்

பன்றிநெய் நீர்க்கடுப்பு பாயுமூ லத்திரத்தங்
கன்றியவாதக் கடுப்புமுதற்—றுன்றியநோய்
போக்கு முடும்பின்னெய் போமிரத்தம் போக்கிவிடுங்
காக்கைநெய் காமாலைக்காங் காண்.

இ-ள். பன்றி நெய்யானது மூத்திரக் கடுத்தலையும் ரத்த மூலக் கிராணியையும் வாதக்கடுப்பு முதலிய பிணிகளையும் நீக்கும். உடும்பின் நெய் ரத்தக்கிராணியை நீக்கும். காக்கை நெய் காமாலைக் குதவும். 149

## ஆமை, ஓணன், கரடி இவைகளின் நெய்க் குணம்

ஊணுமை நெய்மூல மோட்டு மோணுனெய்க்குக்
காணுப் புறவலிநோய் காணுவாம்—பூணுர்
முலையாய் கரடிநெய்க்கு முன்வாத மோடும்
புலையாருங் கால்வெடிப்பும் போம்.

இ-ள். ஆபரணங்களை யணிந்த தனங்களையுடைய பெண்ணே! ஆமை நெய் ரத்தமூலம் நீக்கும். ஓணன் நெய்யால் பின்னிசிவு தீரும். கரடி நெய்யால் வாதவேகமும் பாதவெடிப்பும் நீங்குமென்க.

## ஆமணக்கு நெய்க் குணம்

ஆமணக்கு நெய்யா னலமுண்டா மியாவர்க்கும்
பூமணக்கு மேனி புரிகுழலே—வாய்மணக்கக்
கொள்ளியில் வயிறுவிடுங் கோரமுள்ள வாயுவறு
முள்ளில்வரு குன்மம்போ மோர்.

### இதுவுமது

அம்பொனிற மும்விந்து மாங்குடலி னேற்றமறு
மைம்பொறிச் சூடெறிவு மாறுங்காண்—அம்புவியிற்
பாமணக்கு மின்பமொழிப் பாவாய் நலஞ்செறிந்த
ஆமணக்கின் நெய்யுண் டறு.

இ-ள். புட்பங்கள் பரிமளிக்காநின்ற அழகு பொருந்திய கட்டப்பட்ட கூந்தலையும் இனிய மொழியையுமுடைய பெண்ணே! உஷ்ணதிக்கமுள்ள முத்துக்கொட்டை நெய்யை முறைமைப்படிக்குக் குடித்தால் விரோசனமாம். இதனால் கோரவாதம் குன்மம் குடலேற்றம் தேகம் கண் மூக்கு செவி வாய் இவைகளில் உண்டாகிற யெரிச்சலும் நீங்கும், பொன்னிறமும் தாதுவிருத்தியும் உண்டாகும். 15[illegible]

### சிற்றாமணக்கு நெய்க் குணம்

மருந்தி னழலும் வலியான் மூலத்துட்
பொருந்து மழலுமறப் போக்குங்—குருந்திற்கு
நற்றா யெனவளர்க்கு நாளுமழ லைத்தணிக்குஞ்
சிற்றா மணக்கினெய்தான் றேர்.

இ-ள். சிற்றாமணக்கு நெய் பற்பல ஔஷதங்களின் வெப்பங்களையும் வாயுவினால் மூலத்திலுண்டாகின்ற உஷ்ணங்களையும் நீக்கும், சிசுக்களைத் தாய் வளர்ப்பதுபோல உடலை வளர்ப்பிக்குமென்க.

### எள்ளின் நெய்க் குணம்

புத்திநய னக்குளிர்ச்சி பூரிப்பு மெய்ப்புளகஞ்
சத்துவங் காந்தி தனியிளமை—மெத்தவுண்டாங்
கண்ணோய் செவிநோய் கபாலஅழல் காசநோய்
புண்ணோய்போ மெண்ணெய்யாற் போற்று.

இ-ள். எள்ளினது நெய்யால் புத்திக்குத் தெளிவு விழிக்குக் குளிர்ச்சி மனமகிழ்ச்சி தேகபுஷ்டி பலம் தேஜசு வாலிபத்தன்மை இவைகள் உண்டாகும். நேத்திரநோய் கர்ணரோகம் கபால உஷ்ணம் காசம் விரணம் ஆகிய இவைகள் நீங்குமென்க. 154

### வாதுமை நெய்க் குணம்

அழலெல்லா மாற்று மரிய வுடம்பி
லழலோடு விந்துவையுண் டாக்கும்—வழுவழுப்பைப்
பூண்ட கபம்போக்கும் பொறிகட் கொளிசெய்யு
நீண்டவப் பம்விதை நெய்.

இ-ள். வாதுமைநெய் ஔஷதங்களினாலும் உழைப்பினாலும் விளைந்த வெப்பங்களையும் கபதோஷத்தையும் நீக்கும். சமோஷ்ணஞ் சுக்கிலம் பஞ்சேந்திரியங்களுக் கொளி இவைகளை உண்டாக்குமென்க. 155

### வேப்ப நெய்க் குணம்

வாதம்போம் பித்தமிகு மாறாக் கிரந்தியொடு
மேதுகரப் பான்சிரங்கு முன்னிசுவும்—ஓதுடலின்
நாப்ப ணுறுசுரமு நாடுசந்நி யுந்தொலையும்
வேப்பநெய் யென்றொருகால் விள்.

இ-ள். வேப்பின் நெய்க்கு மகாவாதம் கிரந்தி கரப்பான் சிரங்கு ஆகிருஷ்ணஸ்தம்பனவாதம் சுரம் சந்நி நீங்கும். பித்தமாம்.

### இலுப்பை நெய்க் குணம்

கரப்பா னடருங் கடிசிரங்கு புண்ணு
முரப்பா மிடுப்புல்லி யோடு—கரப்பான்

பாகுமொழி மாதே பலமுண்டாந் துர்ப்பலம்
போகுமிலுப் பையின்நெய்க் கே.

இ-ள். கற்கண்டனைய மொழிக் காரிகையே! இலுப்பை நெ யால் கரப்பான் கடிவிஷம் சிரங்கு விரணம் வன்மை இவை உண் டாம், சகல வாதமும் துர்ப்பலமும் நீங்குமென்க. 15

## புன்னை நெய்க் குணம்

புன்னையிலுண் டாநெய்யாற் பொங்குசந்தி பாதமுதன்
மன்னியலைக் குங்கொடிய வாயுவுமுன்—பின்னிசிவும்
பொல்லா வலியினமும் புண்கிருமி யுந்தொலையு
மல்லார் குழலே யறி.

இ-ள். இருண்ட கூந்தலையுடைய பெண்ணே! புன்னை நெ யால் சந்நிபாதம் மகாவாதரோகம் முன்னிசிவும் பின்னிசிவும் ஐவகை வலி விரணம் கிருமி ஆகிய இவைகள் நீங்குமென்க. 15

## புங்கின் நெய்க் குணம்

அங்க மழகிடும்வெற் பாம்புங்கி னெய்தனக்குத்
தங்கம்போற் காந்தியது தானுண்டாங்—திங்கண்முக
மானே கரப்பான்போம் வன்சொறி யுஞ்சிரங்குந்
தானே விலகுமெனச் சாற்று.

இ-ள். சந்திரனை யொத்த முகத்தையும் மானையொத்த கண் களையுமுடைய பெண்ணே! மலைப்புங்கின் பருப்பு நெய்க்கு அழகு ஒளியும் உண்டாம்; கரப்பானும் சொறி சிரங்குட் ஒழியும். 15

## தேங்காயின் நெய்க் குணம்

தேங்காயி னெய்யதனாற் றீயால் வருபுண்போம்
பாங்காகக் கூந்தற் படர்தேறு—நீங்காத
பல்லடியின் னோயும் படர்தா மரைச்சிரங்கு
மல்லடர்ப் போமென் றறி.

இ-ள். தேங்காய் நெய்யினால் தீயால் வருவிரணம் தந்தமூ ரோகம் படர்தாமரை சிரங்கு ஆகிய இவைகள் போம். தலைமயி வளரும். 16

## கடுகு நெய்க் குணம்

கோட்டுநோய் பித்தரத்தங் குட்ட மடல்வாதம்
வீட்டு கபமூல விரணமறும்—பூட்டின்
முடிகியெழு சூலையொடு மொத்தநோ யேகுங்
கடுகின்நெய் யாலெனலாங் காண்.

இ-ள். சூடுள்ள கடுகுநெய்யால் குன்மம் ரத்தபித்தம் குஷ்டம் ரகாவாதம் க்ஷயம் மூளை மூலவிரணம் சூலை முதலிய பிணிகள் நீங்குமென்க. கோஷ்டு - வயிறு. 161

நீரடிமுத்து நெய்க்குணம்

பூசுகுடி வாதகுணம் பொங்கு கிரந்திபுடை
வீசுகுட்டஞ் சூலையிவை விட்டேகும்—தேகஞ்சச்
சீரடியை யொத்தநடைத் தெய்வ மடமயிலே
நீரடிமுத் தின்னெய்யை நீ.

இ-ள். அழகு பொருந்திய அன்னத்தையொத்த நடையையும் தெய்வத்தன்மை பொருந்திய மயில்போலுஞ் சாயலையுடைய பெண்ணே! நீரடிமுத்துநெய் மேலிற்பூசினும் உள்ளுக்குக் குடிக்கினும் வாதகுட்டம் சிரங்கு சொறி பெருவியாதி சூலை இவை நீங்குமென்க. 162

செங்கொட்டை நெய்க்குணம்

தாதுவும் புருணமுமாந் தத்துறு பரங்கிப்புண்
கோறி புரியிருமைக் குட்டிணங்கள்—காதுங்
கரிமுகி யூரற் கரப்பான் றிமிர்போ
மெரிமுகிநெய் யாலென் றறி.

இ-ள். எரிமுகியென்னுஞ் செங்கொட்டை நெய்யால் தடிப்பு பரங்கிப்புண் கருங்குட்டம் வெண்குட்டம் முதலிய குட்டரோகங்கள் கருஞ்சொறி கரப்பான் திமிர்வாதம் ஆகிய இவைகள் போம் சுக்கில விருத்தியும் கருப்போற்பத்தியும் உண்டாகும். புருணம்-கருப்பம்.

முக்கூட்டுநெய் சேர்க்கும் விதி

மூவெண்ணெ யண்டமெண் முத்தாமுத் தாவெண்ணெய்
மூவெண் கலாதி முறையேகேள்—மேவுநெறி
யொன்றிரண்டு மூன்றாகு மொன்றிரண்டு மூன்றாகு
மொன்றிரண்டு மூன்றாகு முற்று.

இ-ள். வாதமுதலிய மூன்று தோஷங்களுக்குக் கூட்டவேண்டிய முறைமை: வாததேகிகளுக்குப் பசுவின்னெய் 3-பங்கு எண்ணெய் 2-பங்கு ஆமணக்கு நெய் 3-பங்கு பித்த தேகிகளுக்கு எண்ணெய் 1-பங்கு ஆமணக்கு நெய் 2-பங்கு பசுவின் நெய் 3-பங்கு சிலேத்ம தேகிகளுக்கு ஆமணக்கு நெய் 1-பங்கு பசுவின் நெய் 2-பங்கு எண்ணெய் 3-பங்கு இவ்வாறு கூட்டவேண்டும். 164

முக்கூட்டுநெய்க் குணம்

நாவுநெய்க் கைய நுவலாநெய்க் குப்பித்தம்
மேவுமுத்து நெய்க்கனிலம் வீறுவாம்—பூவுலகில்

மூன்றுமளவாய்க் காய்ச்சி மூழ்கிலந் தப்பிணியா
லூன்றுநோ யியாவும்போ மோர்.

இ-ள். எள்ளின்நெய் பசுநெய் ஆமணக்குநெய் இவைக்கு முறையே பித்தவாத கோபங்கள் மீறாமல் பித்தம் நிலையிற் பொருந்துவனவாம், ஆதலால் அம் மூவித நெய்களையும் கிரமப்படிக் கூட்டிக் காய்ச்சி ஸ்நானஞ் செய்யில் திரிதோஷங்களால் வருஞ் சகல ரோகமும் நீங்கும். 165

### ஐங்கூட்டு நெய்க்குணம்

அஞ்செண் ணெய்க்காணி லாலித்த பின்னிசிவுந்
தஞ்சுமென வாய்வுந் தணியுங்காண்—பஞ்சாய்ப்
பறக்குமே சந்நிசுரம் பாரிலையைச் சேட்டை
பிறக்குமே நன்று யியம்பு.

இ-ள். ஆமணக்கு எள்ளு வேம்பு புன்னை புங்கு இவற்றின் நெய்களை கலந்து தயிலமாகச்செய்து உபயோகிக்கில் பின்னிசிவு மகாவாதம் சந்நிபாதசுரம் கபதோஷம் ஆகிய இவை நீங்குமென்க.

---

## சாணவகை

### பசுவினது சாணத்தின் குணம்

ஆவினது சாண மடிபடுவீக் கம்முதிரந்
தாவி வருகிருமி சார்ந்தகப—மேவுசுரந்
தங்குந்தா கம்போக்குஞ் சாற்றின்மெய்ச் சுத்தியப்பால்
தெங்கின்பா லுக்கொக்குந் தேர்.

இ-ள். பசுஞ்சாணம் கல் முதலியவைகளால் அடிப்பட்ட வீக்கம் ஒழுகுகின்ற உதிரம் கிருமிரோகம் கபசுரதாகம் இவைகளை நீக்கும் தேகசுத்தியுண்டாகும், இது தெங்கின்பாலை ஒக்குமென்க. 167

### எருமைச் சாணத்தின் குணம்

வயிற்றுப் பிரமிரத்த வாந்திகா மாலை
நியமித்த பெரும்பாடு புண்ணீங்கும்—வியத்த
கருமைச் சாரங்கவிழிக் காரிகையே நாளும்
எருமைச்சா ணத்தி னியல்பு.

இ-ள். மான்போலுங் கண்களையுடைய மையணிந்த பெண்ணே! எருமை சாணத்தால் வயற்றுபொருமல் ரத்தவாந்தி காமாலை பெரும்பாடு புண் இவைகள் நீங்கும். 168

### வெள்ளாட்டுப் புழுக்கையின் குணம்

உருக்கைநீ ருக்கு முதரநோய் போக்குந்
திருக்கான வாதநோய் நீக்கு—நெருக்கான
தோட்டுக் குழையணங்கே தொல்புவியோர் சொல்லிடுவெள்
ளாட்டுப் புழுக்கை யது.

இ-ள். காயாபரணத்தை யணிந்த அரமகளிரை யொத்த பெண்ணே! வெள்ளாட்டுப்புழுக்கை உருக்கை அல்லது எஃகு என்னும் உலோகத்தைப் பஸ்மிக்கும். மகோதரத்தையும் வாதநோயையும் நீக்கும். 169

---

# மூத்திரவகை

### சிறுநீரின் குணம்

காணுக் கடியோங் கதித்தெழுந்த வீக்கமது
காணு து காயசித்தி கைக்குளநற்—பூணே
பதித்தகொங்கை மாதே பகர்மாந் தருக்கு
ளுதித்தசிறு நீருக்கென் றோர்.

### இதுவுமது விருத்தம்

அங்கியுவ ருறைசிறுநீர் வாசம்போக்கு
மதைப்பருகி லிருமலிகைப் பரத்தநோயும்
பொங்கிவரு மேகவி காரங் கிரந்திப்
புண்களும்போ மதைநசியம் புரியிற்சூடுங்
தங்கியதோ ரபஸ்மாரஞ் சந்நியாசஞ்
சருவவிடம் விடசுரமுந் தவறுண்டோடும்
இங்கதனைத் தொட்டலம்பிற் கண்முகங்கா
திவ்விடத்து ளெழும்விரண மிரியுங்காணே.

இ-ள். மாந்தர்களின் ஜடராக்கினி யுவர்ச்சுவையை யுடைய சிறுநீரினுல் காணுக்கடி விஷமும் சோபையும் வாததோஷமுந் தீரும்; அதை முறைப்படிப்பருகில் இருமல் சுவாசம் அசிர்க்கரம் மேகமூத்திரம் கிரந்திவிரணம் ஆகியவைகள்போம்; நசியஞ்செய்தால் சிரம் அபஸ்மாரம் சந்நியாசம் சர்வவிஷம் விஷசுரம் ஆகியவைகள் நீங்கும்; அந்த நீராற் கழுவினுல் விழி முகம் செவி இவ்விடங்களில் பிறக்கின்ற கட்டிகள் விலகும்; அன்றியும் காயசித்திக்கு உதவும். ()

### பசு மூத்திரக் குணம்

வெண்பா

விடபாண்டு சோபைபல வீக்கஞ் சகல
விடமுதிர மாலையென மெத்தப்—புடவிதனிற்

பேசலக்க ணுடுதந்தப் பீடையுங் கன்றிடுமே
கோசலத்தா லாரணங்கே கூறு.

இ-ள். கோசலத்தால் விஷபாண்டு சோபை பற்பல வீக்கம் சகல விஷம் அசிர்க்கு காமாலை பன்னோய் முதலிய பிணிகள்போம்.

## எருமைமூத்திரக் குணம்

உதரநோய் பாண்டோ டுரத்தகா மாலை
விதிர வருசோபை மேகம்—முதிர்கிருமி
யாகியநோ யேகு மடவெருமை மூத்திரத்தால்
மீதிலனை லுண்டாகு மே.

இ-ள். எருமை மூத்திரத்தால் பெருவயிறு பாண்டு காமாலை பிரமேகம் சோபை கிருமி முதலிய நோய்களும்போம் இதிற் சூடுண்டாமென்க. 173

## வெள்ளாட்டுமூத்திரக் குணம்

சோபையொடு பாண்டுவைத் தூரத்தும் பலவீக்க
தாபமற்றும் மூதிரத்தைப் போக்கும்—கோபமுடன்
உள்ளாட்டுத் தூர்ச்சதை யோங்குதர நோயகற்றும்
வெள்ளாட்டு மூத்திரம் விரைந்து.

இ-ள். வெள்ளாட்டுமூத்திரஞ் சோபை பாண்டு பற்பல வீக்கத் தினெரிச்சல் ரத்தப்போக்கு தூர்மாமிசம் மகோதரம் இவைகளை நீக்குமென்க. 174

## யானைமூத்திரக் குணம்

அதிதூலஞ் சோபை யனிலங் கிருமி
யெதிர்விடங்க ருங்கரப்பா னேகும்—அதிராத
யானை யெனப்பலமு மங்கபுஷ்டியுங் கொடுக்கும்
யானைவிடு மூத்திரமென் றோது.

இ-ள். யானை மூத்திரத்தால் அதிதூலநோய் சோபை வாய்வு கிருமிவிஷம் கருங்கரப்பான் இவைகள்போம்; ஆனையைப்போன்ற வன்மையும் சரீரபுஷ்டியும் உண்டாமென்க. 175

## குதிரைமூத்திரக் குணம்

பாதவன் மீகம் படர்தடிப்பு நீள்கிருமி
வாத மொடுகபமு மாறுங்கா—ணோதரிய
பொற்குவட்டை யொத்தமுலைப் பூவையரே சூடுடைய
நற்குதிரை மூத்திரத்தி னால்.

இ-ள். பொன்மலையை யொத்த கொங்கைகளையுடைய மாதே! சூடுள்ள குதிரை மூத்திரத்தால் பாதப்புற்று கண்டுகண்டாகத் தடித்த கிருமிரோகம் வாதநோய் கபதோஷம் இவைகள்போம்.

## ஒட்டைமூத்திரக் குணம்

மேலையூ ருந்தடிப்பு வீசி யெழுஞ்சந்நி
சூலை யுதரவர்த்தந் தொடர்குன்மஞ்—சீலநனே
மண்டலகுட் டேகும் வருமொட்டை மூத்திரத்தா
லுண்ட னலமாதே யுரை.

இ-ள். வெப்பத்தையுடைய ஒட்டை மூத்திரத்தினுல் சரீரத்திலோடிப் புடைக்கின்ற தடிப்பு சந்நிபாதம் சூலைபிடிப்பு உதரவர்த்த வாதம் வயிற்றுவலி மண்டலகுஷ்டம் இவை நீங்குமென்க. 177

## கழுதைமூத்திரக் குணம்

வேசரிநீ ரால்வெப்பம் வீரியநட் டங்குட்டங்
காச மிரைப்புவிடங் காற்கிருமி—வீசிடுபுண்
மேக மபஸ்மாரம் வெடியச் சுரங்கிரந்தி
போகுமின்னுஞ் சேய்பிணியும் போம்.

இ-ள். கழுதை மூத்திரத்தால் உஷ்ணம் தாதுநஷ்டம் அவதம் பாகுஷ்டம் காசம் இரைப்பு சில்விஷம் கால்களுள்ள கிருமி விரணம் தந்திமேகம் அபஸ்மாரம் ஜிஹ்வாகண்டகரோகம் கிரந்திபாலரோகங்கள் இவைபோம். வேசரி-கழுதை. 178

---

# மதுரவகை

## செங்கரும்பு ரசதாளிக்கரும்பு புல்லகண்ட கரும்பு இவைகளின் குணம்

### விருத்தம்

செங்கரும் பதனற்சாறு தீர்த்திடும் பித்தமெல்லாம்
அங்குறு மிரசதாளிக் ககன்றிடுந் தாகவேகம்
மங்குறுப் புல்லகண்டம் வாதகோ பத்தைப்போக்கும்
கங்குல்வார் குழலிஞளே காரிய மறிந்துகூறே.

இ-ள். இருண்டு நீட்சியுற்ற கூந்தலையுடைய பெண்ணே! செங்கரும்பின் ரசம் பித்ததோஷத்தை நீக்கும், ரசதாளிக் கரும்பினது சாற்றினுல் தாகவெப்பம் போம், புல்லகண்டம் என்கிற கரும்புச் சாறுனது வாததோஷத்தை நீக்குமென்க. 179

## நாணற்கரும்பின் குணம்

### வெண்பா

வாயுபித்தம் வாந்திநீர் மாறு மதிநூல
நோயு ளெழும்வயிற்றி னேம்கலங்கு—மோயாத
ஈளையொடு பாண்டு மெதிரா தடங்கிநிற்கு
நாளுநா ணற்கரும்பி னுல்.

இ-ள். நாணற்கரும்பின் ரசத்தினால் வாதபயித்தியம் வமனம் அருசி அதிதூலம் வயிற்றிலெழுநோய் இரைப்பு பாண்டு இவை மீறுமற் சாந்தமாம். 180

## கரும்பின்சாறு, வெல்லம் இவைகளின் மிதாமித குணம்

கரும்பிரச மெத்தவுண்டாற் காணுங் கபநோய்
விரும்பிவெல்ல மெத்தவுண்டால் மேகந்—தருமதுநீ
ருண்டா மவைமித மாயுண்டால் மேகபித்தம்
மிண்டாமற் சாந்தமுறும் விள்.

இ-ள். கரும்பின் ரசத்தை மிகவுங் குடிக்கில் சிலேஷ்ம நோயுண்டாம், வெல்லத்தை அதிகமாகத்தின்றால் மதுமேகங்காணும், மிதமாகப் புசித்தால் பிரமேகம் பித்தகோபம் இவை மீறாமல் அடங்குமென்க. 181

## தேன்பாகின் குணம்

அனலா லெழுந்த வருசிசர்த்தி தாழும்
புனலாருங் கோழையது பொங்கும்—கனலாருந்
தேன்பாகுக் கென்றுமதைச் சேரோ ஷதியதனால்
கான்பாவ நோய்க்கூட்டங் காண்.

இ-ள். தேன்பாகினால் பித்த அரோசகம் வாந்தி நீங்கும், நெஞ்சிற் கோழைகட்டுண்டாம்; இதை ஔஷதிகளிற் சேர்த்து உபயோகித்தால் கபதோஷ முதலிய நோய்கள் விலகுமென்க. 182

## மணப்பாகின் குணம்

பித்த வருசிகெடும் பேசிலற்ப வாதமறுந்
தத்தனலம் மெள்ளவுள்ளே தாவிவரு—மெத்த
வணப்பாகை யொத்தமொழி மாதே முறுகா
மணப்பாகுக் கென்றே மதி.

இ-ள். பாகை நிகர்த்த மொழியையுடைய பெண்ணே! மணப்பாகினால் பயித்திய அரோசகமும் அற்பவாதமும் நீங்கும். அன்றியும் சரீரத்தில் உஷ்ணரம்பமாமென்க. 183

## முதிர்ந்தபாகு, பழையவெல்லப்பாகு இவைகளின் குணம்

முதிர்பாகு வயிற்றெரிவு மூத்திரக்கட் டோடே
யதிர்வாத மாதியநோ யாகுந்—துதிபழைய
வெல்லப்பா குக்கருசி வீறுபித்தம் பேதிவாய்
வில்லையப்பா மாதே யினி.

இ-ள். முறுகிய வெல்லப்பாகினால் வயிற்றெரிச்சலும் வாதகுண்டலிமூத்திரம் கம்பவாதம் உண்டாம். பழைய வெல்லப்பாகுக்கு அரோசிகம் பித்தாதிக்கம் அதிசாரம் வாதகோபம் நீங்கும். 184

### நல்லவெல்லத்தின் குணம்

குன்மபித்தம் போக்குமதி கோழைதனை யுண்டாக்குந்
துன்மலத்துட் கிடத்தைத் தோன்றுவிக்கும்—நன்மைபோல்
வெல்லமது நீரை விளைவிக்கு மாமதுர
வெல்லமென நாளும் விளம்பு.

இ-ள். நல்லவெல்லம் பித்தகுன்மத்தை நீக்கும், நெஞ்சிற் கபக்கட்டு மலாசயக்கிருமி மதுமேகம் இவை யுண்டாக்குமென்க. 185

### உண்டை வெல்லத்தின் குணம்

சூலமே கங்குன்ம முட்சூலை விந்துவுமாங்
காலடர்கு மட்டல்பித்தங் காசமும்போம்—நீலவரிக்
கெண்டை விழியாய் கெழுமியநா ணற்கன்ன
லுண்டைவெல்ல மிக்குண்பார்க் கோது.

இ-ள். கறுத்துச் செவ்வரிபொருந்திய மகரநோக்கியே! நாணற்கருப்பஞ் சாற்றாலாகிய உண்டை வெல்லத்துக்கு மூலமுளை மதுரப்பிரமேகம் வயிற்றுநோய் பக்கநோய் சுக்கிலவிருத்தி இவையுண்டாம் வாதரோகமும் பித்தமும் இருமலும்போம் என்க. 186

### தெங்கின்வெல்லம் பனைவெல்லம் இவைகளின் குணம்

தெங்கின் வெல்லத்தாற் செரியாக் குணஞ்சோபை
யங்கமுறு நீரு மதிகரிக்குந்—தங்குபனை
வெல்லத்தால் வாதபித்தம் வீறுகபஞ் சந்நிநோய்
வல்லருசி குன்மமறு மால்.

இ-ள். தெங்கின் வெல்லத்தால் செரியாமாந்தம் வீக்கம் நீரேற்றம் இவை யதிகரிக்கும். பனைவெல்லத்தால் வாத பித்த தொந்தம் சிலேத்மதோடம் சந்நிபாதம் அரோசகம் வாதகுன்மம் இவை தீரும். 187

### ஈச்சம் வெல்லத்தின் குணம்

நீடுபே ரீச்சினயிர் நின்மலப்புத் திக்குமந்த
மோடு கபவாத முட்சீத—மாடுமிதி
பித்த முடனே பெருந்திமிர்நோய் வியாதிகளை
யித்தரையி லுண்டாக்கு மெண்.

இ-ள். பேரீச்சவெல்லம் புத்திமந்தம் சிலேத்மவாதம் உள்ளிற்சீதளம் பித்தகோபம் திமிர்வாயு உண்டாகும். அயிர்-வெல்லம்.

### சருக்கரையின் குணம்

அருந்து மருந்திற் கனுபான மாகப்
பொருந்துமடல் வாந்திபித்தம் போக்கும்—வருந்தருசி
நீக்கும் மதிகபத்தை நின்று மகிழ்ச்சியையுண்
டாக்கு நறுஞ்சருக்க ரை.

### நல்லவெல்லத்தின் குணம்

குன்மபித்தம் போக்குமதி கோழைதனை யுண்டாக்குந்
துன்மலத்துட் கிடத்தைத் தோன்றுவிக்கும்—நன்மைபோல்
வெல்லமது நீரை விளைவிக்கு மாமதுர
வெல்லமென நாளும் விளம்பு.

இ-ள். நல்லவெல்லம் பித்தகுன்மத்தை நீக்கும், நெஞ்சிற் கபக்கட்டு மலாசயக்கிருமி மதுமேகம் இவை யுண்டாக்குமென்க. 185

### உண்டை வெல்லத்தின் குணம்

சூலமே கங்குன்ம முட்சூலை விந்துவுமாங்
காலடர்கு மட்டல்பித்தங் காசமும்போம்—நீலவரிக்
கெண்டை விழியாய் கெழுமியநா ணற்கன்ன
லுண்டைவெல்ல மிக்குண்பார்க் கோது.

இ-ள். கறுத்துச் செவ்வரிபொருந்திய மகரநோக்கியே! நாணற் கருப்பஞ் சாற்றாலாகிய உண்டை வெல்லத்துக்கு மூலமுளை மதுரப் பிரமேகம் வயிற்றுநோய் பக்கநோய் சுக்கிலவிருத்தி இவையுண்டாம் வாதரோகமும் பித்தமும் இருமலும்போம் என்க. 186

### தெங்கின்வெல்லம் பனைவெல்லம் இவைகளின் குணம்

தெங்கின் வெல்லத்தாற் செரியாக் குணஞ்சோபை
யங்கமுறு நீரு மதிகரிக்குந்—தங்குபனை
வெல்லத்தால் வாதபித்தம் வீறுகபஞ் சந்நிநோய்
வல்லருசி குன்மமறு மால்.

இ-ள். தெங்கின் வெல்லத்தால் செரியாமாந்தங் வீக்கம் நீரேற்றம் இவை யதிகரிக்கும். பனைவெல்லத்தால் வாத பித்த தொந்தம் சிலேத்மதோடம் சந்நிபாதம் அரோசகம் வாதகுன்மம் இவை தீரும். 187

### ஈச்சம் வெல்லத்தின் குணம்

நீடுபே ரீச்சினயிர் நின்மலப்புத் திக்குமந்த
மோடு கபவாத முட்சீத—மாடுமிதி
பித்த முடனே பெருந்திமிர்நோய் வியாதிகளை
யித்தரையி லுண்டாக்கு மெண்.

இ-ள். பேரீச்சவெல்லம் புத்திமந்தம் சிலேத்மவாதம் உள்ளிற் சீதளம் பித்தகோபம் திமிர்வாயு உண்டாகும். அயிர்-வெல்லம்.

### சருக்கரையின் குணம்

அருந்து மருந்திற் கனுபான மாகப்
பொருந்துமடல் வாந்திபித்தம் போக்கும்—வருந்தருசி
நீக்கும் மதிகபத்தை நின்று மகிழ்ச்சியையுண்
டாக்கு நறுஞ்சருக்க ரை.

நல்லவெல்லத்தின் குணம்

குன்மபித்தம் போக்குமதி கோழைதனை யுண்டாக்குந்
துன்மலத்துட் கிடக்கைத் தோன்றுவிக்கும்—நன்மைபோல்
வெல்லமது நீரை விளைவிக்கு மாமதுர
வெல்லமென நாளும் விளம்பு.

இ-ள். நல்லவெல்லம் பித்தகுன்மத்தை நீக்கும், நெஞ்சிற் கபக்கட்டு மலாசயக்கிருமி மதுமேகம் இவை யுண்டாக்குமென்க. 185

உண்டை வெல்லத்தின் குணம்

சூலமே கங்குன்ம முட்சூலை விந்துவுமாங்
காலடர்கு மட்டல்பித்தங் காசமும்போம்—நீலவரிக்
கெண்டை விழியாய் கெழுமியநா ணற்கன்ன
லுண்டைவெல்ல மிக்குண்பார்க் கோது.

இ-ள். கறுத்துச் செவ்வரிபொருந்திய மகரநோக்கியே! நாணற் கருப்பஞ் சாற்றலாகிய உண்டை வெல்லத்துக்கு மூலமுளை மதுரப் பிரமேகம் வயிற்றுநோய் பக்கநோய் சுக்கிலவிருத்தி இவையுண் டாம் வாதரோகமும் பித்தமும் இருமலும்போம் என்க. 186

தெங்கின்வெல்லம் பனைவெல்லம் இவைகளின் குணம்

தெங்கின் வெல்லத்தாற் செரியாக் குணஞ்சோபை
யங்கமுறு நீரு மதிகரிக்குந்—தங்குபனை
வெல்லத்தால் வாதபித்தம் வீறுகபஞ் சந்நிநோய்
வல்லருசி குன்மமறு மால்.

இ-ள். தெங்கின் வெல்லத்தால் செரியாமாந்தம் வீக்கம் நீரேற் றம் இவை யதிகரிக்கும். பனைவெல்லத்தால் வாத பித்த தொந் தம் சிலேத்மதோடம் சந்நிபாதம் அரோசகம் வாதகுன்மம் இவை தீரும். 187

ஈச்சம் வெல்லத்தின் குணம்

நீடுபே ரீச்சினயிர் நின்மலப்புத் திக்குமந்த
மோடு கபவாத முட்சீத—மாடுமிதி
பித்த முடனே பெருந்திமிர்நோய் வியாதிகளை
யித்தரையி லுண்டாக்கு மெண்.

இ-ள். பேரீச்சவெல்லம் புத்திமந்தம் சிலேத்மவாதம் உள்ளிற் சீதளம் பித்தகோபம் திமிர்வாயு உண்டாகும். அயிர்-வெல்லம்.

சருக்கரையின் குணம்

அருந்து மருந்திற் கனுபான மாகப்
பொருந்துமடல் வாந்திபித்தம் போக்கும்—வருந்தருசி
நீக்கும் மதிகபத்தை நின்று மகிழ்ச்சியையுண்
டாக்கு நறுஞ்சருக்க ரை.

இ-ள். சருக்கரையானது மருந்துகளுக்கு அனுபானமாயிருப்பதுந்தவிர வாந்தி பித்தம் அரோசகத்தையும் போக்கும், கெட்டிப்பட்ட கபத்தையிளக்கி மகிழ்ச்சியைத் தருமென்க. 189

## சீனிச்சருக்கரையின் குணம்

சீனிச் சருக்கரைக்குத் தீராத வன்சுரமுங்
கூனிக்கும் வாதத்தின் கூட்டுறவு—மேனிற்கு
வாந்தி யொடுகிருமி மாறாத விக்கலுமே
போந்திசையை விட்டுப் புரண்டு.

இ-ள். சீனிச்சருக்கரைக்கு வாதசுரம் வக்கிரிக்கின்ற வாதநோய்கள் வாந்தி கிருமிரோகம் நீங்காதவிக்கல் இவைபோமென்க.

## கற்கண்டின் குணம்

ஈறின் தடிப்பு மிருமலும்பல் வாந்திகளுஞ்
சீறுகப முட்டினமுஞ் சேராதே—தேறியநற்
சொற்கண் டிளங்குயில்கள் சூழு மடவனமே
கற்கண் டெனவுரைக்குங் கால்.

இ-ள். இனிய சொற்கேட்டிளங் குயில்கள் சூழும் இளமைதங்கிய அன்னத்தை நிகர்த்த நடையையுடைய மாதே! கற்கண்டினால் பல்லரணை காசம் பற்பல வாந்தி அதிகரித்த சிலேத்மதோடம் வெப்பம் ஆகிய இவைகள் தீருமென்க. 191

## தெங்கின் கற்கண்டின் குணம்

நெஞ்சிற் றிமிருஞ்செந் நீரிலழுக் கும்படையு
மஞ்சுகப வாதமொடு வாதமுமே—விஞ்சுமிளந்
தொங்கின தேர்க்கயர்வுந் தூயபுத்தி மந்தமுமாந்
தெங்கினது கண்டாற் றெளி.

இ-ள். தெங்கின் கற்கண்டினால் தொண்டைக்குள் திமிர் உதிரத்தில் அழுக்கு சொறிமேகம் சிலேத்ம வாததொந்தம் வாதம் இளைத்த தேகிகளுக்கு ஆயாசம் மந்தபுத்தி ஆகிய இவை யுண்டாமென்க. 192

## பனங்கற்கண்டின் குணம்

மேக வனலு மிகவீசும் சூரிகையா
லாகமுறு கனலு மாறுங்காண்—மோகனத்திற்
றங்கிவரு நீர்ச்சுருக்குந் தாகவெப்ப முந்தணியு
மிங்குபனங் கற்கண்டுக் கே.

இ-ள். பனங்கற்கண்டுக்கு மேகசுரம் சூரிகையின் வெப்பம் தங்கிவரும் நீர்ச்சுருக்கு உஷ்ணதாகம் இவை நீங்குமென்க. 193

ஈச்சங்கற்கண்டின் குணம்

அரிய மருந்தையெலா மன்றே முறிக்குந்
திரிவிதக பத்தைவராச் செய்யுந்—தெரிவரிய
பன்னோய் விளைக்கும் பகாறிவை மங்குவிக்கு
மன்னோய்வீச் சங்கண் டிசை.

இ-ள். ஈச்சங்கற்கண்டு அவுஷதங்களையும் அறிவையுங் கெடுக்கும், மூன்றுவித க்ஷயங்களையும் காணற்கரிய பல பிணிகளையுந்தரும்.

தேனில் உண்டாகுங் கற்கண்டின் குணம்

தேனிற் பிறந்த செழுங்கண்டாற் கண்விழிக்கு
ளூனிற் படர்படல மோடிடுங்காண்—கானத்திற்
காகுஞ் சுரமாகு மண்டும் பசிகபங்கா
ணேகுஞ் சுரமேகு மெண்.

இ-ள். தேனிலுண்டாகுங் கற்கண்டினால் கண்ணிற் படருகின்ற துர்மாமிசபடலம் உதராக்கினி கபநோய் வாதநோய் சுரரோகம் இவை நீங்கும். இசைப்பாட்டுக்குரிய குரற்றொனி யுண்டாகும். 195

---

# மதுவின்வகை

தெங்கின்மதுக் குணம்

நாதவிந் நூறு நளிர்பாண் டொடுசோபை
வாதபித் தங்கிராணி வன்கரப்பான்—பேதியிவை
பொங்கி யதிகரிக்கும் புத்திகொடு மேகமுண்டாந்
தெங்கின்மது விற்கென் றே செப்பு.

இ-ள். தெங்கின் கள்ளுக்குச் சோணித சுக்கிலப்பெருக்கம் பாண்டுரோகஞ் சோபை மாதபித்ததொந்தம் ரத்தக்கழிச்சல் கரப்பான்பேதி பிரமேகம் இவைகள் உண்டாகும், அறிவுங் கெடுமென்க.

பனையின்மதுக் குணம்

விந்துதிர மூறுமதி வெப்புடனே தாகம்போம்
பந்தமாந் தாதுவுமோ பாரிக்கு—முந்துபித்தந்
தோன்றும்பா ஷாணங்கள் சுத்தியுமாந் தோகைமின்னே
யேன்ற பனைமதுவிற் கே.

இ-ள். மயில்போலுஞ் சாயலையுடைய பெண்ணே! பனங்கள்ளுக்குச் சுக்கில சோணிதவிருத்தி சப்ததாதுக்களும் உறுதி பித்தா

திக்கம் இவை யுண்டாகும், தேக உஷ்ணமும் விதாகமும் நீங்கும், இதில் பாஷாணவகைகள் சுத்தியாகுமென்க. 197

ஈச்சமதுக் குணம்

வெப்பகலு மெய்குளிரு மேகங் கிரிச்சரம்போஞ்
செப்பருசி போம்பித்தஞ் சேருங்கா—ணெப்படியும்
பூச்சுத் திமிருண்டாம் பொங்கறிவுங் கெட்டிடுமே
ஈச்ச மதுவதனுக் கே.

இ-ள். ஈச்சங்கள் உள் அழலை பிரமேகம் மூத்திரக் கிரிச்சரம் அரோசகம் புத்தி ஆகிய இவை நீங்கும், சரீரத்தில் குளிர்ச்சி பித்த கோபம் வீக்கம் திமிர்வாயுவு ஆகிய இவைகள் உண்டாமென்க. 198

முந்திரிகையின் மதுக்குணம்

முந்திரிகைக் கள்ளுக்கு மூடுதிரி தோடம்போம்
விந்துறுமி ரத்தமுறும் வெப்பகலும்—இந்தவகைக்
கள்ளெல்லாங் காமமுறுங் காமமற்றூ ருண்டக்கால்
விள்ளரி தோடமிலை மெய்.

இ-ள். முந்திரிகை மதுவென்கிற திராட்சப்பழச் சாராயத் திற்கு வாதபித்த கபதோஷங்களும் தேக அழற்சியும் நீங்கும், விந்துவும், சத்தத்தாதுவும் விருத்தியாம், இந்த மதுவருக்கங்களெல் லாம் காமத்தை யுண்டாக்கும், ஆதலால் காமமற்ற பெரியோர் அருந்தில் குற்றமில்லை என்க. 199

அரிசி வேலம்பட்டை தெங்கு இவைகளின் மதுக்குணம்

சாலிமது வாதத்தாற் சளிநீருண் டாக்கும்
வேலின்மது பித்தமழைக்கும் வேண்டாவாஞ்—சாலவுயர்
தெங்கின் மதுசீதந் திரிதோட முண்டாக்கு
மங்குவிடு கள்குலையே யாம்.

இ-ள். அரிசியிலிறக்கிய சாராயம் விருத்தி வாதகபத்தையும் நீரேற்றத்தையும் உண்டாக்கும். வேலம்பட்டைச் சாராயம் பித்த கோபத்தை வருவிக்கும். உயர்ந்த தென்னங்கள்ளானது குளிர்ச்சி யையும் வாதபித்த கபதோஷங்களையும் உண்டாக்கும் என்க. 200

அத்திமரத்தின் மதுக்குணம்

அத்திமே கஞ்சு டதிமயக்கந் தாகமும்போ
மத்திமர வேரினுண் டாமதுவில்—நித்தியமுஞ்

சீனியே னும்பேயன் செங்கனியே னுங்கலந்தே
பானுவுத யங்குடித்துப் பார்.

இ-ள். அத்திமர வேரிலிறங்கிய கள்ளில் சீனிச்சருக்கரையாவது பேயன்வாழைக்கனியாவது கலந்து தினம் சூரியோதயகாலத்தில் உண்டுவர அஸ்திமேகம் உட்சூடு மூர்ச்சை தாகம் நீங்கும். 201

---

# தேன் வகை

## மலைத்தேனின் குணம்

ஐயிருமல் லீளைவிக்க லக்கிப்புண் வெப்புடல்நோய்
பைய வொழியும் பசியுமுறும்—வையகத்தி
லெண்ணுமிசை யாமருந்திற் கேற்ற வனுபான
நண்ணுமலைத் தேனென்றி னால்.

இ-ள். மலையிலிருக்குங் குறிஞ்சித்தேனினால் சிலேத்மகாசம் சுவாசம் விக்கல் கண் விரணம் சுரம் தேகக்கடுப்பு நீங்கும். தீபனம் நல்ல தொனியுமுண்டாம். இது ஔஷத அனுபானங்களுக் குதவும்.

## கொம்புத்தேனின் குணம்

வாதபித்த வையகத்தை மாற்றுமுள மாந்தைதனைக்
காதமென வோடக் கடியுங்காண்—பூதரமாம்
வம்புமுலை மாதே வருமருசி நீக்கிவிடுங்
கொம்புத்தே னன்றுகுங் கூறு.

இ-ள். வாரிறுக்கிய மலையனைய கொங்கைகளையுடைய பெண்ணே! மாமரம் முதலிய மரக்கொம்புகளிற் கட்டுகின்ற தேன் திரிதோஷங்களையும் உளமாந்தையும் அரோசகத்தையும் நீக்குமென்க.

## மரப்பொந்துத்தேனின் குணம்

பசிவெப்பாம் வாந்திமந்தம் பல்விக்கல் வெய்ய
ருசிமுக் கபந்தூல ரோகங்—கசிவகலாக்
கொந்துத்தேன் பாடுங் குழலணங்கே காவின்மரப்
பொந்துத்தே னுண்டாயிற் போம்.

இ-ள். அன்பு நீங்காத வாசனை பொருந்திய வண்டுகள் பாடுங் கூந்தலையுடைய பெண்ணே! மரப்பொந்துத்தேனினால் ஜடராக்கினியும் உஷ்ணமும் உண்டாம். வமனம் மந்தாக்கினி பலவித விக்கல் ரோகம் அரோசகம் இருமல் சுவாசம் க்ஷயம் அதிதூல ரோகம் ஆகிய இவைகள் போமென்க. 204

## புற்றுத்தேனின் குணம்

கொப்பணியு மாதே குவலயத்து ளெல்லார்க்கு
மொப்பநின்ற வைய மொழிக்குங்காண்—கொப்பளிக்குங்
காச்சுவா சம்வாந்தி கண்ணிலெழு நோய்களறும்
வீசுபுற்றுத் தேனுக்கு மெய்.

இ-ள். கொப்பென்னுங் காதணியையுடைய பெண்ணே! புற்றில் கட்டுகின்ற தேனுக்குக் கபதோஷம் இருமல் ஈளை வாந்தி நேத்திர ரோகம் ஆகிய இவைகள் நீங்குமென்க. 205

## மனைத்தேனின் குணம்

புண்ணும் புரையும்போம் போகாக் கரப்பனது
மெண்ணரிய தீபனமா மேந்திழையே—கண்ணுகளிற்
பூச்சிபுழு வெட்டுகபம் பொல்லா விருமலறும்
பேச்சின்மனைத் தேனுக்குப் பேசு.

இ-ள். வீடுகளிற் கட்டுகின்ற தேனுக்கு விரணம் புரையோடல் கரப்பான் நேத்திர விரணக்கிருமி புழுவெட்டு சிலேத்மகோபம் காசம் இவைகள் நீங்கும், ஜடராக்கினி யுண்டாமென்க. 206

## புதிய தேனின் குணம்

ஆயுளுட னுட்டின மரோசிய கக்கபமு
மேயவழ கும்வளர்ந் தேறுங்—காய்தூய்
மதிய மெனும்வதன மாதரசே நாளும்
புதியநறுந் தேனுற் புகல்.

இ-ள். சந்திரனென்றுரைக்கும் வதனத்தையுடைய மாதரசே! புதுத்தேனினால் நிறைந்த ஆயுளும் சரீர வெப்பமும் தேஜசும் உண்டாம். மிகவுஞ் சேர்ந்தால் அருசியுஞ் நெஞ்சிற்கபமும் விளையும். 207

## பழைய தேனின் குணம்

வாதம் பெருக்கை வயிற்றெரிவைத் தந்துறையைச்
சேதப் படுத்துமின்னுஞ் செப்பவோ—மாதரசே
சத்திப் புறுமரசந் தன்னைத்தூண் டும்புளிப்புத்
தித்திப் புறும்பழைய தேன்.

இ-ள். பெண்களுக்குள் நாயகம் போல்பவளே! புளிப்பும் இனிப்புங் கலந்த சுவையையுடைய பழைய தேனனது வாதரோகக் கூட்டத்தையும் வயிற்றெரிச்சலையும் வாத மூலரோகத்தையும் விளைக்கும். மருந்தினது நற்குணங்களைக் கெடுக்குமென்க. 208

# மரவகை

## சந்தனமரத்தின் குணம்

நற்சந் தனமரத்தா னல்லறிவு மின்பமெழிற்
பொற்செந் திருவருளும் பூமிசத்துண்—மெச்சுஞ்
கரும வழகுந் தனிமோ கமுமாம்
பிருமுநோ யேகும் பிறழ்ந்து.

இ-ள். சாதிச் சந்தனமரக்கட்டையைக் கிரமப்படி யனுபவிப்பவர்கட்கு நல்ல விவேகமும் மனமகிழ்ச்சியும் லட்சுமிவிலாசமும் சருமதாது ஒளியும் மாதரிச்சையுமுண்டாம். கிழ்ப்பிரமியம் நீங்கும்.

## தேவ்தாருவின் குணம் (இது தேவதாரம் என மருவியது)

தேவ தருக்குணந்தான் சேர்த்துவளர் பீநசத்தைக்
காவகத்தி லோட்டுங் கரப்பலவே—பாவலர்கள்
சொல்லும் புராண சுரமொடுநீ ரேற்றத்தை
வெல்லு மனற்றணிக்கும் விள்.

இ-ள். தேவிதாருக்கட்டை நாசிரோகம் பழையசுரம் சலதோடம் சரீரவெப்பம் ஆகிய இவைகளை நீக்குமென்க. 210

## சரளதேவதாருவின் குணம்

சரளமெனுந் தேவ தாருவினாற் கண்ணீர்
விரளமா குங்கபமும் வீடுந்—தரளவெயிற்
றுமயஞ்சு வாசம்வலி யண்ணுதம் வாதம்
போவயஞ்சு ரத்துரமும் போம்.

இ-ள். சரளதேவதாருக் கட்டையினால் கபஸ்ராவரோகம் சிலேஷ்மதோஷம் தந்தநோய் இரைப்பு ஐவகைவலி கர்ணநாதரோகம் நடுக்குவாதம் கபச்சுரம் இவைகள் நீங்குமென்க. அள்-காது. 211

## அகில்மரத்தின் குணம்

தளர்ந்த விருத்தருக்காந் தக்க மணத்தா
லுளைந்த சுரமுழுது மோடும்—வளர்ந்திகழு
மானே யகிற்புகைக்கு வாந்தி யரோசகம்போந்
தானே தளர்ச்சியறுஞ் சாற்று.

இ-ள் வண்மைதிகழும் பெண்ணே! அகில்கட்டை (சந்தனம்) விருத்தர்களுடைய தளர்ந்த தேகத்தையும் இறுக்கும். இதன்வாசனையால் சிற்சில சுரம் நீங்கும். புகையால் வாந்தியும் அருசியும் அயர்ச்சியும் நீங்குமென்க. 212

## அகரு மரத்தின் குணம்

நாசி யடைப்பு நவிரவிடி தாளுநோய்
விசுநமைப் புடைகள் விட்டேகும்—பேசிற்
சுகரு மயக்குந் துணைமுலையாய் நல்ல
அகரு மரத்தா லறி.

இ-ள். சுகரும்மயக்குந் தனங்களையுடைய பெண்ணே! அகருக்கட்டையினால் பீநசம் தலைக்குத்து வாதம் தினவுள்ள புடைகள் ஆகிய இவைகள் போகுமென்க. 213

## சரக்கொன்றை மரத்தின் குணம்

குட்டங் கிருமிகொடுக் குஞ்சூலை வாதமையந்
துட்ட மலமருசி தூரப்போந்—தட்டிச்
சுரக்கின்ற பேதியுண்டாந் துய்யத் துவர்க்குஞ்
சரக்கொன்றைக் காரணங்கே சாற்று.

இ-ள். தெய்வமகளிரனைய தெரிவையே! சரக்கொன்றை மரத்தால் பெருவியாதி கிருமி ரோகம் சூலைவாத கபதொந்தம் விஷமலம் அரோசகம் இவை போம்; இதில் துவர்ப்பு உண்டு, விரோசனமாம்.

## சிறுகொன்றை மரத்தின் குணம்

சிறுகொன்றை நற்கசப்பாஞ் சென்னி யனலா
லுறுகின்ற கண்களிநோ யோடே—பெருமுடலி
னுட்டினமுன் மூலமிவை யோடு மதிபலமுங்
கட்டழகு முண்டதனாற் காண்.

இ-ள். மிகுந்த கசப்பையுடைய சிறுகொன்றை மரத்தால் கபாலச் சூட்டினால் உதித்த நேத்திரரோகங்களும் தேக உஷ்ணம் உள் மூலமும் நீங்கும்-சரீரவலிமையும் அழகும் உண்டாகும் என்க. 215

## நரிக்கொன்றை மரத்தின் குணம்

பையவே யூறிப் படருமியா னைச்சொறியு
நொய்ய கிருமிகொண்ட நூண்புடையு—மெய்யி
லரிக்கின்ற வன்புடைய மாழிபுகு மாதே
நரிக்கொன்றை தன்னை நவில்.

இ-ள். நரிக்கொன்றை மரத்திற்கு யானைச்சொறியும் தவிட்டுக் கிருமிப்புடையும் தினவுள்ள விரணப்புடையும் நீங்கும். 216

## மைக்கொன்றை மரத்தின் குணம்

குடல்வாதஞ் சூலை கொடுமேக மெல்லா
மடைவாகப் போக்க வலைந்தே—படிமீதி

லெக்கொன்றைத் தேடிநெஞ்சி லெண்ண மிடுவானேன்
மைக்கொன்றை யீங்கிருந்து மால்.

இ-ள். மைக்கொன்றைமரம் குடல் விருத்திவாயுவையும் சூலை மேகரோகங்களையும் போக்குமென்க. 217

மருதமரத்தின் குணம்

ஓதமெனு நீரிழிவை யோட்டும் பிரமேகங்
காதமென வோடக் கடத்துங்காண்—போத
மயக்க மொடுதாக மாறுச் சுரத்தின்
தயக்கமறுக் கும்மருதந் தான்.

இதுவுமது

குட்டரோ கங்கிருமி கோர வயிற்றுவலி
துட்டவறட் சூலை தொலையுங்காண்—கிட்டிப்
பொருதம்பா மென்னும்விழிப் பூவையரே நாளு
மருதம்பா ரென்றளவில் மாய்ந்து.

இ-ள். போர்புரியும் அம்பாமென்னும் கண்களையுடைய பெண்ணே! மருதமரமானது வெகு மூத்திரம் பிரமியம் மயக்கம் விதாகம் நீங்காத சுரத்தில்வரும் ஆயாசம் பெருவியாதி கிருமிரோகம் உதரநோய் வறட்சூலை இவைகளைப் போக்கும் என்க. 219

வேங்கைமரத்தின் குணம்

குற்றிருமல் வெட்டையொடு கூறுமுள மாந்தையிவை
யெத்திரையும் வாராதிசையுங் காண்—சத்தியமாய்ப்
புண்ணிருமல் சீழொழுகல் போகு மலமிறங்குங்
கண்ணொளிரும் வேங்கைக்குக் காண்.

இ-ள். வேங்கை மரத்தில் குற்றிருமல் வெள்ளை விழுதல் உள் மாந்தை விரணம் காசம் சீழ்ப்பிரமேகம் ஆகிய இவைகள் நீங்கும். கண்ணுக்கு ஒளியும் மலவிரோசனமும் உண்டாமென்க. 220

வன்னிமரத்தின் குணம்

வாதசன்னி தோடமறு மாறுத் தழலுளதென்
றோதுவரிவ் வன்னிக் குவமையுண்டோ—பூதலத்திற்
கானார் விடமுங் கபமுஞ் சொறியும்போந்
தேனே யிதையறிந்து செப்பு.

இ-ள். தேன்போன்ற மொழியினையுடைய பெண்ணே! வெப்பத்தையுடைய வன்னிமரத்திற்கு வாதசன்னிபாதம் திரிதோஷம் சிலேஷ்மகோபம் புடை இவை நீங்கும். 221

## புரசைமரத்தின் குணம் - (இதுவே பலாசு)

புரசுவா தம்பித்தம் பொங்குகபங் குன்மங்
கிருமி யுடனே கிராணி—பெருவலிநோ
யோட்டுமதி தீபனத்தை யுண்டாக்கு மப்பொழுதே
தீட்டியவேற் கண்ணாய் தெளி.

இ-ள். தீட்டிய வேல்போன்ற கண்களையுடைய பெண்ணே! புரசமரமானது வாதாதிக்கம் பித்தகோபம் சிலேஷ்ம கோஷம் வயிற்றுநோய் மலக்கிருமி கிராணிரோகம் தேகக்குடைச்சல் ஆகிய இவைகளை நீக்கும். உதராக்கினியை யுண்டாக்குமென்க. 222

## இருவாட்சி மரத்தின் குணம்

கண்ணொளிவு மெய்யிற் கமழ்மண மு நீடழகு
நண்ணும் வலிமூர்ச்சை நாசமாம்—பண்ணளியுங்
கங்குலும்வாழ் வார்குழலே காரமொடு வெப்புமிகத்
தங்குமிரு வாட்சிமரத் தால்.

இ-ள். இசையையுடைய வண்டுகளும் கங்குலும் வாழ்கின்ற நீண்ட கூந்தலையுடைய பெண்ணே! உஷ்ணமும் கார்ப்புச்சுவையு முள்ள இருவாட்சி மரத்தால் நேத்திரப் பிரகாசமும் தேகத்தில் சுபாவ வாசனையும் வனப்புமுண்டாம், தேகக்குத்தலும் மூர்ச்சா ரோகமும் நீங்கும். 223

## காட்டாத்தியின் குணம்

அதிசார மந்தமிக வாலித்த காசம்
விதிராம் விடமும் விலகு—மெதிரொருவர்
மூட்டாத்தீ யென்றுமதி மோகந் தருமணங்கே
காட்டாத்திக் கென்றுளத்திற் காண்.

இ-ள். மூட்டாத அக்கினியென்னும் அதிமோகந்தரும் பெண்ணே! காட்டாமரத்திற்கு அதிசாரபேதி அக்கினிமாந்தம் இருமல் தாவரசங்கம விஷம் ஆகிய இவைகள் நீங்குமென்க. 224

## பெருங்குமிழ மரத்தின் குணம்

பெரியகுமி ழின்பேரைப் பேசின்மே கத்தி
னெரிவுசுக்கி லக்கடுப்பு மேகும்—பிரியாத
வல்ல வனற்சுரமும் வாதசுர மும்தணியும்
மெல்லெனமுத் தோடம்போம் விள்.

இ-ள். பெருங்குமிழ் மரத்தினால் மதுமேக எரிச்சல் வெள்ளை விழல் நீர்க்கடுத்தல் பித்தசுரம் வாதசுரம் திரிதோஷ மிவைகள் போம். 225

## மாவிலங்க மரத்தின் குணம்

சுரங்கடியின் றோடந் தொலையாத வாத
முரம்பெறுவி டங்க ளொழியும்—அரவுஞ்
சருமா வடிவேலுங் கண்டஞ்சுங் கண்ணு
யொருமா விலங்குக் குரை.

இ-ள். அரவும் மாவடுவும் வேலும் கண்டு பின்னிடையும் கண்களையுடைய பெண்ணே! மாவிலங்க மரத்திற்கு சுரம் கடிகளின் தோஷம் மகா வாத ரோகங்கள் சர்ப்ப விஷம் ஆகிய இவை போகு மென்க. 226

## அழிஞ்சில் மரத்தின் குணம்

அழிஞ்சிலது மாருதத்தை யையத்தைத் தாழ்த்து
மொழிஞ்சபித் தத்தை யுயர்த்து—விழுஞ்சீழாங்
குட்டமெனு நோயகற்றுங் கூறுமருந் தெய்திடில்
திட்ட மெனவறிந்து தேர்.

இ-ள். அழிஞ்சில் மரமானது வாத கோபம்: கபதோஷம் சீழ் வடியும் பெருநோய் இவற்றை நீக்கும். பித்தாதிக்கத்தைச் செய்யும். 227

## கடலழிஞ்சில் மரத்தின் குணம்

தீதில் கடலழிஞ்சில் செய்யுங் குணங்கேளா
யோது மதுமே மொழிப்பதன்றி—வாதத்தில்
வந்தசலம் பித்தசல மாகபச் சலந்தாகத்
தொந்தசல மும்போக்குஞ் சொல்.

### இதுவுமது

கமல விரணங் கசிதீ ரகற்றும்
நிமல சுரம்விலக்கு நேரே—கமலமுக
மாதே கடலழிஞ்சில் வன்பட்டை பேதிகட்டுஞ்
சீதமே கம்போக்குந் தேர்.

இ-ள். கடலழிஞ்சில் மரமானது மதுநீர் வாதாதி மூன்றுநீர் தாகத்தைத் தாரின்ற தொந்த மூத்திரம் படர்தாமரை சொட்டு மூத்திரம் தனிச்சுரம் அதிசாரம் சீதமேகம் இவைகளைப் போக்கு மென்க. 229

## மோதகவல்லி மரத்தின் குணம் (கொழுக்கட்டை மரம்)

பொங்கிவரு வள்ளைப் புனலினசிர்க் குங்காலா
லங்கியுந்த வீழுமிரத் தாமயநோய்—தங்கவே
போதகத் துச்சியெனப் பூரித்த மாமுலையாய்
மோதக பூருகத்தை முன்.

இ-ள். யானை மத்தகத்தை நிகர்த்துப் பூரித்து நெருங்கி தனங்களையுடைய பெண்ணே! மோதகவல்லி மரத்தினால் அதி காரமும் வாதத்தால் மூலாக்கினி தள்ள வீழாநின்ற ரத்த சீதமு நீங்கும். புருகம் - மரம். 2

## பூதமரத்தின் குணம்

பூததரு ருட்சையது போக்கும் பலவிஷத்தை
வாதமென்ற நோயனைத்து மாற்றுங்காண்—தீதுபுரி
சன்னிகளைத் தப்பாது சண்ணிவிடும் பூதலத்து
ளுண்ணி மகிழ்வா யுரை.

இ-ள். பூதவிருட்சம் என்கிற ஆலமரம் கறம் பற்பல விஷ வாதரோகங்கள் சன்னிபாதங்கள் ஆகிய இவைகளை நீக்குமென்க.

## வாகை மரத்தின் குணம்

வாகைகா ரங்கசப்பை வைத்திருக்கு முள்ளபடி
யோகை யுறப்பசியை யுண்டாக்குந்—தோகையரே
தீரா விடத்தோடு சில்விடத்தை யுந்தீர்க்குஞ்
சூரனாய்த் தோன்று மறி.

### இதுவுமது

வாகை யணல்விரணம் வாதை வறட்சியுடன்
தாக சுரமுந் தணிக்குங்கா—ஞைகமதி
வக்கர மெல்லா மகற்றிவிடும் பூவனமே
யக்கணத்தி லென்றே யறி.

இ-ள். கார்ப்பும் கைப்புமுள்ள வாகைமரம் ஜடராக்கினியை விருத்தி செய்யும், சர்ப்ப விஷங்கள் பித்தவிரணம் வாதச்சொறி தாகசுரம் கந்ததாளி ரோகங்கள் ஆகிய இவைகளை நீக்குமென்க.

## கருவாகை மரத்தின் குணம்

விரணமோ டட்டினமுன் வீறுகின்ற வாய்வுந்
திரண மெனுங்கிருமிச் சேர்வு—மரணமுறச்
செய்யுங் கபத்தின் செயலுங் குடிவிலகும்
வெய்யகரு வாகைக்கு விள்.

இ-ள். கருவாகை மரத்திற்குப் புண் வெப்பம் விரதகோபம் சன்னக்கிருமி மரணமுறச்செய்யும் க்ஷயரோகம் இவை நீங்கும். 234

## இலவ மரத்தின் குணம்

நீர்க்கடுப்பு நீரெரிவு நீண்டொழுகு மேகம்போ
மார்க்கும்நல் விந்தடைக்கு மாண்மையுறும்—பார்க்குள்

நிலவு மதிவதன நேரிழையே ஒப்பா
மிலவு மரத்தா லியம்பு.

இ-ள். விளங்குகின்ற சந்திரனையொத்த முகத்தினையுடைய பெண்ணே! உஷ்ணமுள்ள இலவுமரத்தினால் வாதகிரிச்சுரம் மூத்திரம் தந்துமேகம், இவைபோம் சுக்கிலமும் ரசதாதுவும் பலப்படும்.

## முள்ளிலவமரத்தின் குணம்

தந்துமே கஞ்சிறு நீர்க்காரை வெப்பம்வாய்
வுந்தவரு பேதியிவை யோட்டுங்காண்—மூந்திக்
கிளர்வெள்ளை பாயும்வரிக் கெண்டை விழியாய்
வளர்முள் ளிலவை மரம்.

இ-ள். விளங்குகின்ற வள்ளையை நிகர்த்த காதுகளைத் தாவுங் கெண்டையையொத்த கண்களையுடைய பெண்ணே! முள்ளிலவமரம் பஞ்சி நூலைப்போல வீழ்கின்ற தந்துமேகத்தையும் மூத்திர நாளச் சூட்டையும் வாதாதி சாரத்தையும் போக்குமென்க. 236

## விளாமரத்தின் குணம்

காச சுவாசங் கதித்த வருசிமுதற்
பேசரிய காகமிவை பேசுங்காண்—வீசு
தபித்தலைச்செய் பித்தந் தரிக்குமோ பூவிற்
கபித்த மரமிருக்குங் கால்.

இ-ள். கபித்தம் என்கிற விளாமரத்தினால் இருமல் இரைப்பு கதித்த அரோசகம் சொலற்கரிதாகிய தாகம் தபித்தலைச்செய் பித்தரோகம் ஆகிய இவைகள் நீங்குமென்க. 237

## கருநெல்லிமரத்தின் குணம்

பதினைந் தெனுஞ்சன்னி பாதந் தயக்கம்
மதினைந்தி டச்செய்வினை மாறும்—பதியிற்
சனித்த கருவுருவந் தானும்வே றாகுங்
கனித்தகரு நெல்லிமரத் தால்.

இ-ள் கருநெல்லி மரத்தினால் பதினைந்துவகைச் சன்னிபாதங்களும் மயக்கமும் மனோவியாதியும் நீங்கும் காயசித்தியாமென்க. 238

## அருள்மரத்தின் குணம்

வாத மகலும் வளருகின்ற மந்தமறுஞ்
சீதாத்தஞ் சோபை சுரந்திடுங்காண்—ஓதும்
இருளாருங் கூந்த லெழிலணங்கே முத்த
அருளென்னும் நன்மரத்தா லாய்.

இ-ள். கருநிறம் பொருந்திய கூந்தலையும் அழகையுமுடைய பெண்ணே! அருள்என்கிற முதிர்ந்த மாதுளமரத்தினால் வாத கோபம் மந்தாக்கினி சீத ரத்தபேதி சுரவீக்கமாகிய இவைகள்போ மென்க. 239

## வேப்பமரத்தின் குணம்

ஓதரிய வேம்பை யுரைக்கிற் சுரமுடனே
வாதமர மூலகண மந்தம்போங்—தீதா
யுதிரு மெரிபூச்சி குன்ம மொழியுஞ்
சிதறுமலம் போகுமெனத் தேர்.

இ-ள். வேப்பமரத்திற்குச் சுரம் வாதகோபம் மூலகணமாந்தம் எரிகிருமி வயிற்றுநோய் சிதறுகின்ற மலப்பேதி இவை நீங்கு மென்க. 240

## மலைவேப்பமரத்தின் குணம்

மலட்டுப் புழுவும் வயிற்றின் வலியு
மலட்டு வாய்வும்போ மடங்கிக்—கொலட்டு
முலைவேஞ் சினவேற்கண் ணேதிமமே கேளாய்
மலைவேம்பின் பேரை வழுத்து.

இ-ள். கருமானுலைபிற் காய்ச்சிய சினவேலனைய கண்களை யுடைய அன்னமே! மலைவேப்ப மரத்திற்கு மலட்டுக்கிருமி ரத்த குன்மரோகம் ஓடி ஓடிச் குத்துகின்ற வாதம் ஆகிய இவைகள் விலகுமென்க. 241

## சருக்கரை வேப்பமரத்தின் குணம்

காயசித்தி யாகுங் கடிய சிலேத்மமறுந்
தூயவிந்து நாதமிவை சுத்தியுமாந்—தூயவருக்
கெத்திக்குங் கிட்டு மிலையருந்தில் வாயெல்லாந்
தித்திக்கும் வேம்புதற்குத் தேர்.

இ-ள். தூயவர்களுக் கெத்திக்கினுங் கட்டுகின்ற இலையில் மதுரமுள்ள சருக்கரை வேம்பினால் காயசித்தியும் சுக்கிலசோணித சுத்தியும் உண்டாம், கபரோகம் நீங்குமென்க. 242

## பாலைமரத்தின் குணம்

வாதப் பெருக்குபித்த மாறுச் சுவாசமுத
லோதுசர்வ தோடம்விட் டோடுங்காண்—தீதுபுரி
வேலைப் பொருவுவிழி மெல்லியலே காட்டிலுறை
பாலைக் கெனவுன்னிப் பார்.

இ-ள். வேலனைய கண்களையுடைய பெண்ணே! பாலைமரத்திற்கு வாதநோய்க் கூட்டங்கள் பித்தரோகம் தமகசுவாசம் திரிதோஷம் ஆகிய இவைகள் ஒழியுமென்க. 243

## வெட்பாலைமரத்தின் குணம்

அக்கினியை வைத்திருக்கு மந்தவா தம்போக்குந்
திக்குள்திரி தோடத்தைத் தீர்த்துவிடுஞ்—சொக்கவிரு
கட்பாலைக் கூற்றைவைத்த கான மடமயிலே
வெட்பாலை நன்மருந்தாம் விள்.

இ-ள். மயங்கும்படியான விருகண்ணிடத்தில் யமனை வைத்த பண்ணே! அக்கினிக் குணத்தையுடைய வெட்பாலை மரமானது வாதவலியையும் திரிதோஷ கோபத்தையும் நீக்குமென்க. 244

## தீம்பாலைமரத்தின் குணம்

மேகவெட்டை சன்னி விடபாக நேத்திரநோய்
தாகமுத்தோ டஞ்சர்த்தி சாரனலம்—வேகமோ
டேறுசலம் பீநசமி ரத்தமுந்தீம் பாலையெனுந்
தூறுவா திக்ககலுஞ் சொல்.

இ-ள். தித்திப்புப் பாலைமரத்திற்கு மேக உஷ்ண வெள்ளை சன்னி விஷபாகம் கண்ணோய் தாகம் திரிதோஷம் வாந்தி பித்த கோபம் நீரேற்றம் நாசிநோய் ரத்தக்கிராணி இவை நீங்கும். தூறுவாதி-தீம்பாலை. 245

## மலைப்பாலைமரத்தின் குணம்

விக்கல்வலி வாந்திகுன்ம மீறுபக்கச் சூலையோடு
மைக்கரப்பான் மந்தமிவை மாறுங்காண்—மைக்கண்
நிரைப்பாலை யொத்தமொழி நேரிழையே கேளாய்
வரைப்பாலை யையுண்ட வர்க்கு.

இ-ள். மையணிந்த கண்களையும் பாலன்ன மொழியையுமுடைய நேரிழையே கேட்பாயாக, மலைப்பாலை மரத்திற்கு விக்கல் ஐவகைவலி வாந்தி வயிற்றுவலி விலாக்குத்தல் கிரந்கரப்பான் மந்தாகினி இவை நீங்குமென்க. 246

## குடசப்பாலைமரத்தின் குணம்

வாதமறும் பேதிகட்டு மாறுத நீரிழிவுங்
காதம்போ மேகங் கடக்குங்காண்—தீதடரப்
பொங்கு கரப்பானும் போகா விரணமும்போ

இ-ள். குடசப்பாலை மரத்திற்கு வாதநோய் அதிசாரம் நீரிழிவு தந்திப் பிரமேகம் மிகக் கொடிதாகப் பொங்கும் கரப்பான் சிரங்கு ஆகிய இவைபோமென்க. 247

## குளப்பாலைமரத்தின் குணம்

சுவாசகா சம்பக்கச் சூலையதி சார
மவாச வியர்ப்போ டனலங்—தவாத
கரப்பா னிவைவிலகுங் காரிகையே நாளு
முரப்பாங் குளப்பாலை யுண்.

இ-ள். பலமுள்ள குளப்பாலை மரத்தினால் சுவாசகாசம் பக்கச் சூலை அதிசாரவியர்வை சுரம் கரப்பான் இவைபோமென்க. 248

## முள்முருக்கமரத்தின் குணம் (இது கல்யாணமுருக்கு)

முள்ளூ முருக்கதுதான் மோதுகின்ற சாத்திகுன்மங்
கள்ளமறத் தீர்க்குங் கனற்சுரமும்—விள்ளரிய
அக்கரமும் போக்கு மனல்வாய்வேக் காடகற்று
மிக்க வலிகொடுக்கும் விள்.

இ-ள். முள்முருக்கமரம் வாந்தி வயிற்றுவலி பித்தசுரம் அக்கரம் அனல் வாய்வேக்காடு ஆகிய இவற்றை நீக்கி மிகுவன்மையை யுண்டாக்குமென்க. 249

## ஊழலாற்றிமரத்தின் குணம்

அடவி வதிரூழ லாற்றி யெனுமூலி
படவிரணம் புண்கொறுக்கை பாமை—கடிதடத்தால்
வந்தவரை யாப்புவெள்ளை வாதப் பிடிப்புகுட்ட
மிந்தவகை நோயகலு மெண்.

இ-ள். காட்டில் வளர்கின்ற ஊழலாற்றி மரத்தால் மேகவிரணம் ஒட்டுப்புண் ஆண்குறி விரணம் பாமையென்கிற சிரங்கு போகத்தால் வந்த அரையாப்பு வெள்ளை கீல்வாதம் பெருநோய் ஆகிய இவைகள் நீங்குமென்க. 250

## வெள்வேல்மரத்தின் குணம்

பித்த மயக்கமறும் பேருலகின் மாணிடருக்
குற்ற சுரவாத மோடுங்காண்—குத்துகின்ற
சந்துக் குடைச்சல்விடுஞ் சர்வாங்க வாதம்போம்
கொந்துதவும் வெள்வேலுக் கு.

இ-ள். வெள்வேல் மரத்திற்குப் பித்தமயக்கம் வாதசுரம் சந்துக்குடைச்சல் சர்வாங்க வாதரோகம் ஆகிய இவைகள் நீங்குமென்க. 251

## மூங்கில் மரத்தின் குணம்

சூதக வாய்வினது சோணிதந் தங்காதுவரு
மாதே சுரந்தணியும் வாதம்போம்—பூதரமே
லோங்கி வளர்ந்திழைபு மோங்கலெனு மூங்கிலுக்கு
வாங்குஞ் சுவாசம்போ மாய்ந்து.

இ-ள். மலையிலோங்கி வளர்ந்திழைகின்ற மூங்கில் மரத்திற்கு
ஈதாந்த ருதுச் சோணிதக்கட்டு சுரம் வாத நோய் இரைப்பு இவை
ள் போமென்க. 252

# செடி வகை

## ஆவாரையின் குணம்

சொல்லுதற்கு மட்டோ தொலையாத மேகநீ
ரெல்லா மொழிக்கு மெரிவகற்று—மெல்லவச
மாவாரைப் பம்பரம்போ லாட்டுந் தொழிலணங்கே
யாவாரை மூலி யது.

இ-ள். நிதானமாய் வசமாவாரைப் பம்பரம்போ லாட்டுகின்ற
ாழிலையுடைய மாதே! ஆவாரைச் செடியானது சர்வ பிரமேக
த்திர ரோகங்களையும் ஆண்குறி எரிவந்தத்தையும் கெடுக்கு
ன்க. 253

## பொன்னுவாரையின் குணம்

வெடிப்பு துவக்குதிரல் மேகப் புடைகள்
தடிப்பு தினவுதடி தங்கா—அடிக்கடியிங்
கென்னுவறைய விசையா லெழிலணங்கே
பொன்னு வரையதனைப் போற்று.

இ-ள். என்னுவினுற் சொல்லமுடியாத வழகினையுடைய மாதே!
ன்னுவாரைச் செடியினுல் சருமவெடிப்பு சொறிந்தால் சருமத்
ர் சிந்துதல் மேகப்படைகள் கண்டு கண்டாகத் தடித்தல் நமைச்
சுரனுக்கடி ஆகிய இவைகள் போமென்க. 254

## நீர்ப்பூலாவின் குணம்

மாந்தங் கனம்பொருமல் மாறுச் சலத்துடனே
சேர்ந்த சொறிசிரங்குந் தீருங்காண்—ஏந்தெழிலைச்
சேர்ப்பாகக் கொண்ட செழுந்திருவே பூவினுறை
நீர்ப்பூலாப் பூண்டை நினை.

இ-ள். ஏந்து எழிலைச் சேகரமாகக் கொண்ட இலக்குமி மனைய பெண்ணே! நீர்ப்பூலாச் செடியால் மாந்தம் கனச்சூடு வயிறிரைச்சல் சொறி சிரங்கு அதிமூத்திரம் ஆகிய இவை ஒழியுமென்க. 255

## பேய்மிரட்டியின் குணம்—(இதுவே வெதும்படக்கி)

மாந்த கணங்கழிச்சல் மாறா வயிற்றுவலி
சேர்ந்து வருங்கரப்பான் தீச்சுரமும்—பேர்ந்துவிடும்
வேய்மிரட்டுந் தோளுடைய மெல்லியலே ராசியமாய்ப்
பேய்மிரட்டி யென்றொருகாற் பேசு.

இ-ள். மூங்கிலை மிரட்டுந் தோள்களையுடைய பெண்ணே! பேய்மிரட்டியால் கணமாந்தம் பேதி வயிற்றுநோய் கரப்பான் கோரசுரம் ஆகிய இவைகள் போமென்க. 256

## குன்மக் குடோரியின் குணம்

சூலையோ டீளைதொலை யாதகா சங்கயநோய்
காலனென்ற குன்மங் கலங்குங்காண்—ஞாலமிசை
நன்மைக் குரியகுண நல்குவமென் றூற்றிலுறுங்
குன்மக் குடோரி தனக்கு.

இ-ள். ஆற்றோரங்களிலிருக்கும் குன்மக்குடோரிச் செடியால் சூலை சுவாசம் இருமல் க்ஷயம் குன்மரோகம் இவை நீங்குமென்க.

## விடத்தேரின் குணம்

மூளையைவரு விக்கின்ற மூலரோ கத்தை
யளையுமுதி ரத்தை யடங்கா—துளை தாக
வேகத்தைப் போக்கிவிடும் வெய்யவிடத் தேர்சக்ர
வாகத்தைக் காய்முலையாய் வாழ்த்து.

இ-ள். வெப்பத்தையுடைய விடத்தேரின் செடிக்கு மூளையை வருவிக்கின்ற மூலம் வயிற்றுப் பிடுங்கலையுடைய ரத்தக்கிராணி அதிதாகம் இவை போமென்க. 258

## தகரையின் குணம்

தகரை படர்தா மரையைச் சொறியைத்
தகர வடிக்குமந்தந் தன்னை—டிகலான
அத்தி சுரத்தையு மதஞ்செய்யு மிம்மூலி
யுத்தமமா மென்றே யுரை.

இ-ள். தகரைச் செடியானது படர்தாமரை சொறி அக்கினிமந்தம் அஸ்தாது சுரம் ஆகிய இவைகளை நீக்குமென்க. 259

நின்றால் சிணுங்கி, நிலம்புரண்டி இவைகளின் குணம்

நின்றாற் சிணுங்கியது நீலவிடம் போக்குமினுங்
குன்றாந் தனத்தியரைக் கூட்டுவிக்கு—மென்று
மலம்புரண்ட நோயகற்று மாள்வசிய மாக்கும்
நிலம்புரண்டி மூலி நினை.

இ-ள். நின்றாற்சிணுங்கிச் செடியானது சர்ப்பவிஷத்தை நீக்கும், ஸ்திரீ வசியத்திற்காகும். நிலம்புரண்டிச் செடியானது அற்பவிஷ ரோகங்களை யொழிக்கும், புருஷ வசியத்திற்குதவும் என்க.

உரலாமணக்கின் குணம்

உரலா மணக்குக் குரத்த வலிசூலை
விரைவான குன்மமும்போம் விள்ளப்—பிரிவாம்
முளைமூல மோடிரத்தம் வாத விரணங்
கொளுமேக மெல்லாம்போங் கூறு.

இதுவுமது

எலியா மணக்கோ எலிவிடமுஞ் சேர்ந்த
பலவிஷமு மோட்டிவிடும் பாரில்—வனுபேதி
யுண்டாக்கு விக்கு முரத்தகுன்மம் பீலிக
மண்டாம லோட்டிவிடு மால்.

இ-ள். உரலாமணக்குஞ்செடிக்கு சரீர நோவு குத்தல் குன்மம் முளைமூலம் கழல்வாத விரணம் ரத்தமேக முதலிய சில மேகங்கள் எலிவிஷம் சில்விஷம் வயிற்றுவலி பீலிகரோகம் ஆகிய இவைகள் நீங்கும். இது விரோசனத்தை யுடையது என்க. 262

சணப்பின் குணம்

கைப்பும் உறைப்புங் கலந்திருக்குந் தின்றக்கால்
மெய்ப்புள்ள பித்தம் விலக்குங்காண்—நெய்ப்பாங்
சுருப்பங்க ளெல்லாங் கரைந்து விழுமே
உருப்பங்க மாஞ்சணப்புக் கோ.

இ-ள். கசப்பும் காரமுமுள்ள சணப்புச் செடிக்குப் பித்தகோபம் சில வாதரோகங்களும் நீங்கும், இளங்கருப்பங்கள் கரையும்.

மாமாலையின் குணம்

பாண்டுடனே மெய்யிற் படர்சோகை யைத்தூரத்துந்
தூண்டுநீ ராம்பலெனுந் துன்பொழிக்கும்—பூண்டதோர்
நீரை யிறக்கு நெடுந்துயர மாற்றிவிடு
நாரியரே மாமாலை நன்று.

இ-ள். மாமாலைச் செடியானது பாண்டுரோகம் சரீரத்திற் படர் சோகை நீராம்பல் ரோகம் ஆகிய இவைகளை நீக்கும். அதிக மாக நீரை யிறக்குமென்க. 264

## கோடகசாலையின் குணம்

கோடகசா லைக்குக் கொடியவனல் மேகமொடு
போடகங் கிரந்திகுஷ்டம் புண்ணுறும்—நாடகஞ்செய்
யப்பித்த வாய்வுமலர் குட்டம் விரணமும்போம்
பொற்புற்ற பொன்னே புகல்.

இ-ள். அழகு பொருந்திய திருவனைய பெண்ணே! கோடக சாலைச் செடிக்குச் சுரம் வாதப்பிரமேகம் விஷ்டபோக ரோகம் சிரங்கு குஷ்டம் விரணம் பித்தவாத தொந்தம் ஜிஹ்வா கண்டரோ கம் ஆகிய இவைகள் விலகுமென்க. 265

## வட்டக்கிலுகிலுப்பையின் குணம்

வட்டக் கிலுகிலுப்பை மாறுச் சொறிகிரந்தி
துட்டகண்ட மாலைபல சோபைநோ—வட்டமுலை
மானே விரணவகை மாந்தமுத னோயெல்லாந்
தானே யகற்றுமெனச் சாற்று.

இ-ள். வட்டமாய்ப் பரந்த முலைகளை யுடைய பெண்ணே. வட்டக் கிலுகிலுப்பைச் செடி சொறிகிரந்தி கண்டமாலை பற்பல சோகை விரணங்கள் அக்கினிமந்தம் இவற்றை நீக்கும். 266

## வெள்ளைக்கிலுகிலுப்பையின் குணம்

விடவினங்க ளைப்பிடித்து விண்ணோற்றும் வந்த
விடசன்னி நோயை விரட்டுந்—தடமாரும்
வெள்ளைக் கிலுகிலுப்பை மென்பூண் டதுபுவிக்குட்
கிள்ளைக் குதலைமின்னே கேள்.

இ-ள். கிளிபோன்ற குதலை மொழியையுடைய மின்போல் பவளே! மலையில் முளைத்த வெள்ளைக் கிலுகிலுப்பை தாவரசங்கம் விஷங்களையும் விச்சன்னிபாத ரோகத்தையும் நீக்குமென்க. 267

## சந்திரகாந்தி சூரியகாந்தி இவைகளின் குணம்

சந்திரகாந் திக்குத் தழலெரிச்சல் நீர்க்கடுப்பும்
உந்தவலி யாவு மொடுங்குங்காண்—சந்திலுறும்
பாரிய வாதம் பருகுநீ ரேற்றமும்போஞ்
சூரிய காந்திக்குச் சொல்.

இ-ள். சந்திரகாந்திச் செடிக்குப் பித்த எரிவும் நீர்க்கடுப்பும் தொப்புள் வலியும் நீங்கும். சூரியகாந்திச் செடிக்குச் சகஜுவர்த்த வாதரோகமும் சலதோஷமும் நீங்குமென்க. 268

## பேயகத்தின் குணம் (இதுவே சீமையகத்தியாம்)

தம்மைக்கண் டாலிரத தாதுவிலாம் பொட்டுகளும்
வெம்மைப் புடைநமையும் வீறுநெய்—யம்மையுறுந்
தூயகத்தி யுங்கலங்குந் தோதகக் கண்மாதே
பேயகத்தி மூலிகண்ட பேர்

இ-ள். பேயகத்தியால் ரசதாதுக்கிருமிகளும் உஷ்ணச்சொறியும் தினவும் நீங்கும், இரத்தநரம்பு பிரகாசிக்கும். நெய்-இரத்தம், அம்மை-அழகு. 269

## ஈச்சுரமூலியின் குணம்

பலபலவீக் கஞ்சன்னி பாதங்க ளோடு
நலமகல் விடங்கள் நடுக்குங்—கலகலெனப்
பேச்சுரமுண் டாகுமலர்ப் பெண்ணனமே நீகேளாய்
ஈச்சுர மூலி தனக் கின்று.

இ-ள். மலரில் வசிக்கும் பெண்ணன்னம் போன்றவளே! ஈச்சுர மூலியால் விஷசோபை முதலிய சோபைகளும் சன்னிகளும் பல விஷங்களும் நீங்கும். உரத்தவார்த்தை யுண்டாமென்க. 270

## நிலவிளாவின் குணம்

அழன்றகண வேக மதிதாகந் தீருஞ்
சுழன்றுவரு பித்தந் தொலையு—முழன்று
பொருநிலமே கத்துடனே புண்சுரமும் போகு
மருநிலவி ளாவத் தயர்ந்து.

இ-ள். நிலாவிளாவினால் வெதும்புகின்ற கணச்சுரம் அதிதாகம் பித்தகோபம் மாறுப்பிரமேகம் விரணசுரம் இவை நீங்கும். 271

## சங்கங்குப்பியின் குணம்

கரப்பான் கிரந்தி கருங்குட்ட ரோக
முரப்பான மேக மொழியுங்—கருப்பக்
கருங்கிரந்தி செவ்வாப்புக் கட்டிகளு மேகு
மருஞ்சங்கங் குப்பிக் கறி.

### இதுவுமது

வெட்டை சொறிசிரங்கு வீறி வருஞ்சூலை
துட்டவா தங்கபந்து ணுக்கிருமல்—கெட்டவிடம்

அங்கங்கொள் பூச்சியிவை யாவும்போம் பித்தமுறுஞ்
சங்கங்குப் பிக்கெனவே சாற்று.

இ-ள். சங்கங்குப்பிச்செடிக்கு அரைக்கடுவன் சிரங்கு விசர்ச்சி காருஷ்டம் வாதப்பிரமேகம் கர்ப்பத்திலுண்டாகிய கருங்கிரந்தி குண்டாலக்கட்டி வெள்ளை தவளைச்சொறி விரணம் கில்லிக்கம் குத்தல் மகாவாதம் சிலேத்மதோஷம் வறட்டிருமல் சர்ப்பவிஷம் ரத்தக்கிருகி ஆகிய இவைகள்போகும், பித்தாதிக்கமென்க. 272, 273

## கறிமுள்ளியின் குணம்

ஈளை யிரும விரைப்புச்சு வாசமறும்
வாளைவென்ற கண்ணாய் வழுத்தக்கேள்—நாளையென்
றில்லைக் கபச்சுரம தின்றே விலகிடுநங்
கொல்லைக் கறிமுள்ளி கொள்.

இ-ள். வாளைவென்ற கண்களையுடையாளே! சொல்லக்கேட்பாயாக, கறிமுள்ளியினால் நெஞ்சிற் கோழைக்கட்டு காசம் தமகசுவாசம் சிலேத்மசுரம் ஆகிய இவைகள் நீங்குமென்க. 274

## செம்முள்ளியின் குணம்

செம்முள்ளி யென்றூற் சிலேத்மம் நடுநடுங்கும்
விம்முமுலை மாதே விளம்பக்கேள்—நம்முகின்ற
மாந்தகண மையமிவை மாறுஞ் சிறுவருக்குச்
சேர்ந்தசுர தோடமும்போஞ் செப்பு.

இ-ள். விம்முகின்ற தனங்களையுடைய பெண்ணே! விளம்பக்கேள் செம்முள்ளியினால் கபப்பெருக்கம் கணமாந்தம் சுவாசம் குழந்தைகளுக்குண்டாகின்ற சுரதோஷம் இவைபோம். 275

## கண்டங்கத்திரியின் குணம்

காசஞ் சுவாசங் கதித்தகய மந்தமனல்
வீசுஞ்சுரஞ் சன்னி விளைதோட—மாசுறுங்கா
லித்தரையு ணிற்கா வெரிகாரஞ் சேர்கண்டங்
கத்தரியுண் டாமாகிற் காண்.

இ-ள். வெப்பமுங் கார்ப்புமுள்ள கண்டங்கத்திரியினால் காசம் சுவாசம் க்ஷயம் அக்கினிமந்தம் சீதச்சுரம் சன்னிபாதம் ஏழுவகை தோஷங்கள் வாதரோகம் ஆகிய இவைகள் போமென்க. 276

## தேட்கொடுக்கின் பொதுக்குணம்

தேட்கொடுக்குண் டாயிற் றினவடக்குந் தப்பாது
நாட்பட்ட புண்கரப்பான் நாசமாங்—கீட்பட்ட

மாந்த கணமுமறு மாநிலத்துட்—சில்விடம்போம்
போர்தமருந் தாகும் புகல்.

இ-ள். தேட்கொடுக்குச் செடியால் நமைச்சல் பழைய விரணம் கடுவன் கணமாந்தம் சில விஷம் ஆகிய இவை விலகுமென்க.

## பெருந்தேட்கொடுக்கின் குணம்

சுடுகாடு முட்டா னெனப்பெரியோர் சொல்லும்
நெடியபெருந் தேட்கொடுக்கால் நீரார்—பொடிக்கிருமி
புண்கிரந்தி மேகப்புண் பொல்லாக் கருங்கிரந்தி
விண்கரந்து போகாதோ விள்.

இ-ள். சுடுகாடு முட்டானென்கிற பெருந்தேட்கொடுக்கால் ரசதாதுவைப்பற்றிய அணுக்கிருமி விரணக்கிரந்தி மேகப்புண் கருங்கிரந்தி ஆகிய இவைகள் நிவர்த்தியாகுமென்க. 278

## சிறுதேட்கொடுக்கின் குணம்

சிறுதேட் கொடுக்கதனாற் சேயிழையே கேளாய்
சொறிசிரங்கு புண்கரப்பான் சூலை—கொறுமாந்தை
மேகவெட்டை பித்தவெட்டை மீளா வெலும்புருக்கி
யாகம் விடுத்தோடு மறி.

இ-ள். செவ்விய ஆபரணத்தை யணிந்த பெண்ணே! சிறுதேட்கொடுக்கால் நமைச்சிரங்கு விரணக்கரப்பான் சீல்வீக்கம் கொறுக்கு மாந்தம் ஒழுக்குப்பிரமேகம் பித்தவெள்ளை அஸ்திசிராவம் ஆகியவைகள் நீங்குமென்க. 279

## நிலவேம்பின் குணம்

வாதசுர நீரேற்ற மாற்றுஞ் சுரதோடங்
காதமென வோடக் கடியுங்காண்—மாதரசே
பித்த மயக்கறுக்கும் பின்புதெளி வைக்கொடுக்குஞ்
சுத்தநில வேம்பின் றொழில்.

இ-ள். பெண்ணரசியே! நிலவேம்பு வாதசுரம் மேகநீர்க்கோவை சுரதோஷம் பித்த மயக்கம் ஆகியவைகளை நீக்கும், தெளிவை யுண்டாக்குமென்க. 280

## சிவனார்வேம்பின் குணம்

சாய்க்குமிடிப் புண்பழம்புண் சர்மகுட் டம்பிளவை
தீக்கடுகால் வன்பெருநோய் சிந்துமா—நோய்க்கு
விதையாதி வேம்பினால் மெய்க்கழகு காலை
யுதையாதி வேம்பினை யுண்.

இ-ள். சிவனார் வேம்பினால் ஆகந்துகவிரணம் நாட்பட்டபுண் சர்மகுட்டம் ராஜப்பிளவை சர்ப்பவிஷம் மகாவாதம் குஷ்டு அ கினிமந்தம் இவை நீங்கும் அழகுண்டாம். தீக்கடு-மகாவிஷம். 281

## நீர்முள்ளியின் குணம்

பாண்டு குளுப்பையறும் பாரித்த நீரேற்ற
மாண்டுவிடு நீர்க்கட்டு மாறுங்காண்—பூண்டதொரு
வீக்கமெலா நீதாய் விடுமேநீர் முள்ளிக்குத்
தாக்கு மயில்விழியாய் சாற்று.

இ-ள். கூரியவேலனைய கண்களையுடைய பெண்ணே! நீர் முள்ளிச் செடிக்குப் பாண்டு குளுப்பை சலக்கோவை மூத்திரச்சிக் கல் வீக்கங்கள் ஆகியவைகள் விலகுமென்க. 282

## பெருமருந்தின் குணம்

திரிதோடம் வெப்பு சிரங்கும் சொறிநஞ்சோ
டறிதேமல் வன்புடைய மண்டா—தொருவா
னருமருந்தை யொத்த வணங்கே யுலகிற்
பெருமருந்தை நீயெடுத்த பின்.

இ-ள். தேவாமிர்தத்தையொத்த பெண்ணே! பெருமருந் தினால் வாதாதிமுத்தோடம் சுரம் நமைச்சிரந்தி விடம் தினவு தேமல் மேகப்படை இவைகள் நீங்கும். 283

## ஊமத்தையின் குணம்

நாய்க் கடியால்வந்து நலிசெய்யும் விரணமும்போம்
வாய்க்குழிப்புண் கட்டிகளு மாறுங்காண்—தீக்குணத்தைச்
சேமத்தில் வைத்தவிடந் தீருமுத் தோடமறும்
ஊமத்தை யின்குணத்தை யுள்.

இ-ள். ஊமத்தையினால் நாய்க்கடிப்புண் குழிவிரணம் வித் திரிசி கட்டிகள் நஞ்சுதிரிதோடம் ஆகிய இவை நீங்கும். 284

## கருவூமத்தையின் குணம்

வந்துவிர தங்கள்கட்டு மேனிதருங் குட்டமொடு
வந்தவியர்ப் பரிப்பை மாற்றுங்காண்—முந்தப்
பெருமத்தஞ் செய்சுரத்தைப் போக்குங் கயப்பாங்
கருவூமத் தைமூலி காண்.

இ-ள். கசப்பையுடைய கருவூமத்தை சுக்கிலத்தையும் பாத ரசத்தையும் கட்டும் உடலுக்கு அழகையுண்டாக்கும், பெருவியாதி வியர்வைத்தினவு பயித்தியம் சுரம் இவை நீங்கும். 285

## பொன்னூமத்தையின் குணம்

பொன்னூ மத்தையாகிற் பூவையரே புண்கிரந்தி
தொன்மைக் கிராணி வருகருமவ—ன்பேதி
சுத்த சுரத்துடனே போர விடச்சுரமுஞ்
சத்தவதி சாரமும்போஞ் சொல்.

இ-ள். பெண்ணே! பொன்னூமத்தையினால் விரணக்கிரந்தி நாட்சென்ற கிராணி அதிசாரம் பித்தவிஷசுரங்கள் பேதி இவை நீங்குமென்க. 286

## மருளூமத்தையின் குணம்

சீதசுரம் நீரேற்றஞ் சில்விடங்கள் மந்தத்தோ
டுதையிவை யெல்லா மொழியுங்காண்—போத
இருளூருங் கூந்த லெழின்மாதே கான
மருளூமத் தைக்கறிந்து வை.

இ-ள். இருண்ட கூந்தலையுடைய அழகு பொருந்திய பெண்ணே! மருளூமத்தையால் குளிர்சுரஞ் சரீரத்திற் சலக்கோவை அற்ப வீரியம் அக்கினிமந்தம் வாததோஷம் இவை விலகுமென்க. 287

## நிலக்குமிழின் குணம்

பேதியொடு கண்சொருகற் போராத சீதளமும்
வாதவலி கொட்டாவி மாந்தமும்போம்—ஓதச்
சலக்குமிழை யொத்த தனக்கருங்கண் மாதே
நிலக்குமிழைக் கையிலெடு நீ.

இ-ள். நீர்க்குமிழியனைய கொங்கைகளையுங் கறுத்த கண்களையுமுடைய பெண்ணே! நிலக்குமிழினால் சலமந்தப்பேதி விழி சொருகல் சீதளிப்பு வாதக்கடுப்பு அதிகொட்டாவி மந்தம் ஆகியவைகள் போம். 288

## நிலத்துத்தியின் குணம்

தொடங்குரசங் கட்டி தொலையவப்பு லோக
மடங்கி நீறுகவெண்ணி னம்பொற்—குடம்போ
னலத்துத்தி பூத்தமுலை நல்லா ரமிர்தே
நிலத்துத்தி மூலி நினை.

இ-ள். தேமல் படர்ந்த குடம்போன்ற தனங்களையுடைய பெண்ணே! நிலத்துத்தியானது ஆரம்ப மூலரோகத்தையும் வித்திரிக் கட்டிகளையும் போக்கும் கருவங்கத்தைப் பஸ்பஞ் செய்யும்.

### பெரும்பீளைச்செடியின் குணம்

பாடான பேதியெனப் பன்னுபெரும் பீளைக்கு
மேடான வீக்கம் விலகுங்காண்—நாடருய்யப்
பேய்பூத மும்பறக்கும் பேசிற் பலபிணிபோங்
தூயோ ரறிவதைச் சொல்.

இ-ள். பாஷாண பேதியென்கிற பெரும்பீளைச்செடிக்கு மிகு சோபையும் பைசாச முதலிய சங்கை தோஷமுங் கல்லடைப்பு முதலிய சில ரோகங்களுந் தீருமென்க. 290

### சிறுபீளைச்செடியின் குணம் (இதுவே கற்பேதியாம்)

பாண்டு பெரும்பாடு பகர்மூத்தி ரக்கிரிச்சம்
பூண்டதிரி தோடமிவை போகுங்காண்—தாண்டிப்
பறியவே ளைத்துரத்தும் பாரவயிற் கண்ணாய்
சிறியபீ ளைக்குச் சிதைந்து.

### இதுவுமது

நீரடைப்புக் கல்லடைப்பு நீங்காக் குடற்சூலை
பேரிடரி ரத்தகணம் போக்குங்காண்—வாரிறுக்கும்
பூண்முலையே கேளாய் பொருந்துஞ் சிறுபீளை
யாமிதுகற்|பேதி யறி.

இ-ள். மாரனை வெற்றிகொள்ளும் வேலனைய கண்களையுடைய பெண்ணே! சிறுபீளைச் செடிக்குத் தேகம் வெளிறல் அசிர்க்கர ரோகம் வாத மூத்திரக்கிரிச்சரம் முத்தோஷம் மூத்திரச்சிக்கல் அஸ்மரி ஆந்திர பித்தவாதம் சோணித வாதங்கள் ஆகியவைகள் போமென்க. 292

### பல்லிப்பூண்டின் குணம்

வல்விடந் தோடசுரம் வாதபித் தங்களொடு
பல்வலியும் பஞ்சாய்ப் பறக்குங்காண்—நல்லோர்பாற்
சொல்லிப்பார் பாடாண தாளகமுஞ் சுத்தியதாம்
பல்லிப்பூண் டுண்டாயிற் பார்.

இ-ள். பல்லிப் பூண்டில் சர்ப்பவிஷம் சுரதோஷம் வாதபித்த தொந்தம் பல்வலி இவைபோம், பாஷாணமுந் தாளகமுஞ் சுத்தியாம்.

## தாணிப்பூண்டு, பொரிப்பூண்டு இவைகளின் குணம்

தாணிப்பூண் டேயிருந்தாற் றூஷிவரு மேகத்தை
நாணிப்போ கச்செய்யு நானிலத்துள்—வீணி
லெரிகிரந்தி மேக மிருக்குமோ ஆறிற்
பொரிபூண்டின் பேரைப் புகல்.

இ-ள். தாணிப்பூண்டு ரத்த பிரமேகத்தை நீக்கும். பொரி பூண்டினால் அக்கினி கிடகிரந்தி மேகம் நீங்கும். 294

## குருவிச்சுப்பூண்டின் குணம்

குருவிச்சுப் பூண்டெனவே கூப்பிட்டாற் போதும்
வருவிச்ச குட்டம் மலடும்—ஒருமிச்ச
மேகக் கரப்பான் விடமாந்தஞ் சீதாத்தம்
பேதமறப் போமொருகாற் பேசு.

இ-ள். குருவிச்சுப் பூண்டினால் பெருவியாதி மலடு சிலேஷ்ம மேகங் கரப்பான் விஷமாந்தம் சீதரத்த கிராணி இவைகெடும். 295

## தலைச்சுருளின் குணம்

பாண்டகற்று மெய்யிற் படர்குட்ட நோய்விலக்கும்
நீண்ட விருதயநோய் நீக்குங்காண்—தாண்டதம்பை
முன்னே யொழித்துவிடு மூவாத் தலைச்சுருளி
யென்னே யுலகி லிசை.

இ-ள். தலைச்சுருளிப்பூண்டு உடல்வெளுப்பு படர் குஷ்டம் இருதயநோய் ஆகந்துகசோபை இவைகளைப் போக்கும். 296

## கறுப்பு மணத்தக்காளியின் குணம்

வெவ்வெழலு மாறும் விரிகுறர்க்கம் மற்போடி
மெல்ல சிசுவுக்கா மூலவைவிடுஞ்—செவ்வி
யருமணிக் கச்சுமுலை யாயிழையே கேளாய்
கருமணத்தக் காளிதனைக் கண்டு.

இ-ள். அரிய விரத்தினக் கச்சணிந்த தனங்களையுடைய பெண்ணே ! கருமணத்தக்காளியினால் பயித்திய வெப்பம் சுரசாத ரோகம் வாததோஷம் இவைபோம். இது பாலர் சிகிச்சைகளுக்குதவும். 297

## சிவப்பு மணத்தக்காளியின் குணம்

கந்ததா ளிப்புண்ணைக் கைங்கையினு ளுள்ளுக்குள்
வந்தவேக் காட்டைமிக மாற்றுங்காண்—முந்தனில்

ஐய வினையை யாற்றிவிடு நற்புலத்துச்
செய்யமணத் தக்காளிச் சீர்.

இ-ள். சிவப்பு மணத்தக்காளியானது கந்ததாளி விரணம் உட்சுரவேகம் வாதகபதொந்தம் ஆகிய இவைகளைப் போக்குமென்க.

## நல்வேளையின் குணம்

சிரநோய் வலிகுடைச்சல் தீராச் சயித்திய
முரநோ யிவைக ளொழியு—முரமேவும்
வில்வேளைக் காயும் விழியாய் பசிகொடுக்கும்
நல்வேளை தன்னை நவில்.

## இதுவுமது

நல்லவே ளைப்பூண்டை நாடுங்கால் வாதமும்போஞ்
சொல்லும் ஐயத்துடனே சோபையறும்—மெல்லமெல்லத்
தக்கவன ஆம்பித்துந் தாமெழும்புஞ் சாந்தமின்றி
சக்கரநோய் விஞ்சு மறி.

இ-ள். கரும்பு வில்லேந்திய மதனனைக் கோபிக்குங் கண்களையுடைய பெண்ணே! நல்வேளையினால் சிரஸ்தாபரோகம் சரீரநோய் குடைச்சல் சீதளம் மார்வலி வாததோடம் கபரோகம் வீக்கம் இவைபோம், பசியுஞ் சூடும் பித்தாதிக்கமும் ஜிஹ்வாகண்டக ரோகமுமுண்டாம். 300

## நாய்வேளையின் குணம்

வாதமுடற் கடுப்பு வன்சூலை காதிரைச்ச
லோதமிகு பீநசமு மோடுங்காண்—போதெரிந்து
காய்வேளைக் காயும்விழிக் காரிகையே வையமதில்
நாய்வேளை யுண்டு நவில்.

இ-ள். புட்பபாணம் விடுத்துக் கோபிக்காநின்ற மதனனைச் சினக்கும் விழிக் காரிகையே! நாய்வேளையால் வாதப்பொருமல் தேகக்கடுப்பு குத்தல் கர்ணநாதரோகம் சிலேத்ம பீனிசநோய் இவைகள் போம். 301

## கொள்ளுக்காய்வேளையின் குணம்

வாதமிக்க தென்பார்க்கும் வாய்வறட்சி யென்பார்க்கு
மீதுதந்த மூலநோ யென்பார்க்கு—மோதமுற்ற
கொள்ளுக்கா தாரகபந் தோற்றியதென் பார்க்குமொரு
கொள்ளுக்காய் வேளைதனைக் கூறு.

இ-ள். கொள்ளுக்காய் வேளையினால் வாதாதிக்கமும் நாவறட்சியும் தந்தமூலநோயும் சொள்ளுவடியச் செய்கின்ற கபமும்போம்.

## கல்லுருவிப்பூண்டின் குணம்

கல்லுருவிப் பூண்டுபல கட்டிகளை யுங்கரைக்கும்
வல்லுதிரக் கட்டறுக்கும் வந்தபுண்ணை—வெல்லரிய
மேகத்தை வல்விடத்தை மீறுமெதா டுக்கிடுமு
லோகத்தைச் சுத்திசெய்யு மோர்.

இ-ள். கல்லுருவிப்பூண்டு பல கட்டிகள் ரத்தத்தடிப்பு கிரந்தி பிரமேகம் சர்ப்பவிஷம் இவைகளை நீக்கும். இரும்பைச் சுத்தி செய்யும். 303

## எரிசாலை, குதிரைக்குளம்படி இவைகளின் குணம்

பூவில் எரிசாலைப் பூண்டிக் கிழுப்புவலி
கூவியழுஞ் சூலையனி லங்குறையுந்—தாவு
குதிரைநடை வாயுசன்னி கூறுதின வும்போங்
குதிரைக் குளம்படியைக் கூறு.

இ-ள். எரிசாலைப் பூண்டுக்கு தனுஸ்தம்பவாதமும் கீல் குத்தலும் வாதகோபமும் நீங்கும். குதிரைக் குளம்படிப் பூண்டுக்கு அஸ்வ வாதமுஞ் சன்னியுந் தினவும் விலகும்; இதனைக் குளித்திப் பூண்டு என்பர். 304

## சுளுக்குநாயகத்தின் குணம்—விருத்தம்

சுளுக்கு நாயகந் தோடஞ் சுரமொடு
சுளுக்கும் வாங்குந் தொடுத்தகை கால்களின்
சுளுக்கு மேற்கற டுங்கரைக் குஞ்சொன்னோம்
சுளுக்கு மேல்வீ ழிரத்தந் துடைக்குமே.

இ-ள். சுளுக்கு நாயகப்பூண்டு சப்ததோஷம் சுரமெலிவினால் வந்த தேகச்சுளுக்கு சுபாவக்கைகால்களின் சுளுக்கு இரத்தங்கூடிய கறடுகளுக்கு மேலுண்டாகிற இரத்தத்தடிப்பு ஆகிய இவைபோம்.

## கிரந்திநாயகத்தின் குணம்—வெண்பா

சீதமறு மாவிடமுந் தீரும்விழி நோயகலும்
பூத மொடுமருளும் போகுங்காண்—மேதினியுள்
ளாயகத்துப் புண்கிரந்தி யாறுமயி லேகிரந்தி
நாயகத்தி னாலே நவில்.

இ-ள். மயில்போன்ற சாயலையுடைய பெண்ணே! கிரந்திநாயகப் பூண்டினால் சீதளம் சர்ப்பவிஷம் கண்ணோய் பைசாச முதலிய சங்கதோஷம் உள்புண் கிரந்தி இவை நீங்குமென்க. 306

## பிளவை கொல்லிப்பூண்டின் குணம்

பிளவைகொல்லிப் பூண்டிருந்தாற் புண்விரணம் பேரு
மளவையுறு மேக மடங்கு—முள்மாந்தை
யாறுப் பிளவைகட்டி யெல்லா முலர்ந்திடுமே
மாறுக் கவினணங்கே வாழ்த்து.

இ-ள். நீங்கா வழகினையுடைய பெண்ணே! பிளவைகொல்லிப் பூண்டினால் சிறு சிரங்கு கிரந்தி ஒழுக்குப்பிரமேகம் உள்மாந்தை ராஜபிளவைக்கட்டி இவை நீங்கும். 307

## (மலைதாங்கிப்பூண்டின் குணம்) இதுவே வெற்பேந்தி

வாதமெண் பதுஞ்சுரமும் வாதச் சயித்தியமுங்
காதுவலி பாரங் கரந்திடுங்காண்—போதச்
சிலைதாங்கி நின்றநுதற் செந்திருவே நீயும்
மலைதாங்கிப் பூண்டை வழுத்து.

இ-ள். வில்லனைய புருவங்களையுடைய விலக்குமியை நிகர்த்த பெண்ணே! மலைதாங்கிப் பூண்டுக்கு சமஸ்த வாதரோகங்கள் ரூட்சைவாத தொந்தம் கர்ணசூலை தேகபாரிப்பு இவைபோம். 308

## குடியோட்டிப்பூண்டின் குணம்

புண்ணொடுக ரப்பான் பொடிசிரங்கு சில்விடங்கள்
கண்ணிருமல் மேகவலி தண்மேக—மெண்ணிற்
படியோட்டு மாவிடமும் பலநோயுந் தீருங்
குடியோட்டுப் பூண்டால் குலைந்து.

இ-ள். குடியோட்டுப் பூண்டினால் பெருவிரணம் கரப்பான் சிறு சிறங்கு சில விஷங்கள் காசமேகவாயு சலப்பிரமேகஞ் சர்ப்ப விஷம் தந்தரோகம் ஆகிய இவைகள் விலகுமென்க. 309

## ஆடுதீண்டாப்பாளையின் குணம்

ஆடு தொடாப்பாளைக் கக்கிருமி வன்சிலந்தி
நீடுகருங் குஷ்டம் நிறைகருப்பான்—ஆடிடச்செய்
யெண்பது வாயுவு மிக்ககுட்ட முந்தீருந்
திண்பெறுநற் றுதுவுமாஞ் செப்பு.

இ-ள். ஆடு தீண்டாப்பாளைக்கு மலகபாரத்தாசயக் கிருமிகள் வரத்திச் சிலந்திப்பூச்சி விஷம் கருங்குஷ்டம் கரப்பான் சர்வ வாதரோகங்கள் கிடிபகுஷ்டம் இவை நீங்கும் பலமும் சுக்கிலமும் உண்டாம். 310

## குழிமீட்டான் குணம்

கணத்திலெழு மாந்தத்தைக் காணுவுட் சூட்டைக்
கணத்திலே வேரைக் களையும்—பணத்தமுலைப்
பாலைச் சுரப்பிக்கும் பாரிற் குழிமீட்டான்
காலைத் தொழுதுண்ணுங் கால்.

இ-ள். குழிமீட்டான் பூண்டு கணமாந்தத்தையும் உள் வெப்பத்தையும் போக்கும், முலைப்பாலைச் சுரக்கும்படிக்குச் செய்யுமென்க. 311

## செருப்படையின் குணம்

செருப்படைக்கு வாதமந்தஞ் சேர்வான மேக
மிருப்படிகொள் பொல்லா இசிவும்—விருப்படிக்குஞ்
சூலையொடு வாதகுன்மந் தோற்று வொருநாளும்
வேலையொத்த கண்ணாய் விளம்பு.

இ-ள். வேலைநிகர்த்த கண்களையுடைய பெண்ணே! செருப்படைக்கு வாதகோபம் மந்தாக்கினி வெள்ளைவீழல் ஆகிருஷ்ணஸ்தம்பனவாதம் சூலைகுன்மம் நீங்குமென்க. 312

## கல்தாமரையின் குணம்

வீரிய விருத்திதரு மெய்க்குப் பலங்கொடுக்குங்
கூரிய குட்டதனைக் கோபிக்கும்—காரியத்தை
நற்றும் பரமாக்கு நங்கா யடுக்கலுறைற்
கற்று மரையதனைக் காண்.

இ-ள். மலையில் முளைத்த கல்தாமரை சுக்கிலத்தையும் பலத்தையும் விருத்தியாக்கும். குஷ்டைநீக்கும் காரியத்தைச் செம்பாக்கும். 313

## கஞ்சாங்கோரையின் குணம்

மாந்தங் கழிச்சலறும் மாந்தஞ் சுரங்கணம்போஞ்
சேர்ந்தமூ லத்தின் றினவடங்கும்—பூந்தடக்கை
யன்னமே மேகமறுங் கஞ்சாங்கோ ரையினை
யுன்ன இருமலிலை யோர்.

இ-ள். மலரை நிகர்த்த விசாலமான கைகளையும் அன்னம் போன்ற நடையையுமுடைய பெண்ணே! கஞ்சாங் கோரையால் மாந்தபேதி அக்கினிமந்தம் கணச்சூடு குதாங்குர நமைச்சல் பிரமேகம் காசமிவை நீங்குமென்க. 314

## கீழ்வாய்நெல்லியின் குணம்

சீதமதி பித்தவடஞ் செவ்விழி நோய்க்கூட்டம்
பூதமொடு பேயிரத்தப் போக்குகளும்—பூதலத்துட்
டாழ்வாய்ப் பணிந்தேகுந் தப்பாது நற்புலத்துக்
கீழ்வா யெனுநெல்லிக் கே.

## இதுவுமது

கீழாநெல் லிக்குணந்தான் கேளாய் மதுமேகந்
தாழாக்கா மாலைகளைச் சண்ணுந்தா—தேனழலுந்
தொக்கி னனலுந் தொலைக்குந்தொன் மேகம்போம்
தக்கவிர ணங்கெடுக்குந் தான்.

இ-ள். கீழ்வாய் நெல்லிக்கு ஆமக்கட்டு அக்கினிகீடவிஷம் நேத்திர ரோகங்கள் பூத முதலிய சங்கைதோஷம் ரத்தாதிசாரம் மதுப்பிரமேக மூத்திரம் காமாலை சப்ததாது கதசுரம் தாதுவெப்பம் நாட்பட்ட மேகப்புண் ஆகிய இவைகள் போகும் என்க. 316

## மயிர்மாணிக்கத்தின் குணம்

மயிர்மா ணிக்கத்தால் வளர்மேகம் போகுஞ்
செயிரான மேகவெட்டை தீரும்—கயரோகம்
மாவிரணம் போக்கவிதில் வல்லிரதஞ் சேர்த்தரைத்துத்
தாயுண்பா ருண்டறிந்தோர் தாம்.

இ-ள். மயிர் மாணிக்கத்தினால் வளர்கின்ற மேகமும் வெள்ளையும் க்ஷயமும் நீங்கும். இதில் முறைப்படி சூதஞ்சேர்த்துண்ண விரணம் ஆறுமென்க. 317

## துளசியின் குணம்

ஐயம் வயிறுளைச்ச லஸ்திசுரந் தாகமும்போம்
பையசுர மாந்தம் பறக்குங்காண்—மெய்யா
வாயி னரோசகம்போம் வன்காரஞ் சூடுள்ள
தூய துளசிதனைச் சொல்.

இ-ள். கார்ப்பும் வெப்பமும் உள்ள துளசியினால் கபதோஷம் வயிறுளைதல் அஸ்திதாதுகதசுரம் அருசி இவைபோமென்க. 318

## செந்துளசியின் குணம்

செய்ய துளசிவிடந் தீர்க்குங் கபமறுக்கும்
வெய்யகடி விடத்தை விண்ணேற்றுங்—தையலரே

முத்தோடத் துண்டா முரணேட்டு மவ்வழியா
மெத்தோட மும்போக்கு மெண்.

இ-ள். சிவப்புத் துளசி விஷம் கபாதிக்கம் அக்கினிகீடவிஷம் திரிதோஷத்தால் சனிக்கின்ற பற்பல ரோகங்கள் இவைபோம்.

கருந்துளசியின் குணம்

இருமலோடு நெஞ்சி விழுப்புச் சுவாசம்
கிருமிசல தோடங் கேவல்—மருமச்
சளிருட்சை சூலைவிடஞ் சந்நியிவை போக்குந்
தளிரார் கருந்துளசி தான்.

இ-ள். கருந்துளசி காசம் தொண்டைக்குள் குறுகுறு என்னும் ஒரு சத்தம் இரைப்பு கிருமி நீர்க்கோவை இருமலால் வருங் கேவல் மார்புச்சளி சுரம் குத்தல் விஷம் சந்நிபாதம் இவைகளை ஒழிக்கு மென்க. 320

நிலத்துளசியின் குணம்

நிலத்துளசி மாதர்தரு நீண்முலைப்பால் வந்தம்
வலுத்த சுரம்பித்தங் கண்மாற்றும்—அலத்துகண்
மாந்தசுரம் பித்தசுர மாபெரிய சீதசுரஞ்
சேர்ந்தோடச் செய்யுந் தெளி.

இ-ள். நிலத்துளசி முலைப்பாலால் வருமந்தம் வாதசுரம் பல பித்த நோய்கள் கணச்சூடு மந்தம் பித்தருட்டை குளிர்ச்சுரம் இவற்றை நீக்குமென்க. 321

நாய்த்துளசியின் குணம்

கபத்தோடு குற்றிருமல் காணு தொழிக்குஞ்
சபத்தைச்செய் முத்தோடஞ் சாடும்—விபத்தழலைக்
காய்த்துடலைப் போஷிக்குந் தாரணியி லுள்ளோர்க்கு
நாய்த்துளசி யீது நவில்.

இ-ள். நாய்த்துளசியானது கோழை பொடியிருமல் திரிதோஷமாகிய இவைகளை மாற்றும். சரீரத்தைப் போஷணை செய்யும். 322

கல்துளசியின் குணம்

தாபச் சுரமுந் தனிவித் திரிகளுஞ்
சோபச் சிலவிடமுந் தோற்றுமே—கோபிச்சங்
குற்றுளசி லேட்மத்தா லூன்றுகா சம்பறக்குங்
கற்றுளசிப் பேருரைக்குங் கால்.

இ-ள். கற்றுளசியால் தீச்சுரம் வித்திரிக்கட்டி நீர்வண்டு முதலிய சிலவிஷம் கோழையைத் தள்ளுகின்ற சுபவாசம் தீரும். 323

## முள்துளசியின் குணம்

எலிவிடம்போம் வெட்டுண் டிருக்கும் விரணக்
கிலிவிடும்வி டங்கள் கிளைக்கா—நுலவிவரும்
மட்டுறச்சி வந்தமலர் மண்டபத்துள் வாழனமே
முட்டுளசி பேரை மொழி.

இ-ள். தேனையுடைய சிவந்தமலராகிய மண்டபத்துள் வாழ்கின்ற அன்னம்போல்பவளே! முள்துளசியால் எலிவிஷம் வெட்டுப்புண் அற்பவிஷமும் போமென்க. 324

## கழுதைத்தும்பையின் குணம்

அரையாப்புக் கட்டி யனில முதிரம்
பிரியாச்சீ தக்கடுப்பும் போகுந்—தரையிற்
பழுதைக்கொள் ளாச்செய்ய பங்கயப்பெண் ணேகேள்
கழுதைத்தும் பைச்செடியைக் கண்டு.

இ-ள். குற்றமற்ற சிவந்த தாமரையில் வசிக்கு மிலக்குமியனைய பெண்ணே! கழுதைத் தும்பையால் அரையாப்புக்கட்டி வாதநோய் ரத்தஞ் சீதங் கலந்து விழலால் வருங்கடுப்பு ஆகியவைபோம்.

## நெய்ச்சட்டியின் குணம் (இதுவே சகதேவிதேவசந்தம்)

நெய்ச்சட்டி யென்றால் நிறைமெய்யுட் சுக்கிலமும்
பொய்ச்சிட்ட கண்ணொளியாம் பூவையரே—வெய்ச்சிட்ட
மேகமறுந் தீபனமாம் வெட்டையழ லுந்தணியுந்
தாகமறும் பித்தமும்போந் தான்.

### இதுவுமது

தூயழகு றப்புரியுஞ் சூதகந்த மாதிகளால்
வாயழுகி நாறுபுண்ணை மாற்றிவிடுந்—தீயழலை
நீக்கிவிடு நிம்பநெய்யை நெய்யாக்கி டும்வமனம்
போக்கிவிடு நெய்ச்சட்டிப் பூண்டு.

இ-ள். நெய்ச்சட்டிப்பூண்டு வீரியவிருத்தி நேத்திர ஒளி பசி அழகு இவைகளை உண்டாக்கும். பித்தமேகம் வெள்ளை உட்சூடு தாகம் பித்தகோபம் ரசகந்தக முதலியவற்றால் பிறந்த வாய்ப்புண் அழற்சி வாந்தி இவைகளை வேப்பெண்ணெய்க்குரிய கசப்பை விலக்கும். 327

## எழுத்தாணிப்பூண்டின் குணம்

பழமலங்கள் சாறும் பருங்குடற்சி தம்போஞ்
செழுமலச்சீ தக்கடுப்பு மேகு—மொழியாக்
கரப்பான் சொறிசிரங்குங் காணு தகலு
முரப்பா மெழுத்தாணிக் கோர்.

இ-ள். எழுத்தாணிப்பூண்டுக்கு மலக்கட்டு குடலின் சீதளம் எழுகின்ற மலச்சீதக்கடுப்பு கரப்பன் புடைகிரந்தி இவைபோ மென்க. 328

## கொட்டைக்கரந்தையின் குணம்

கொட்டைக் கரந்தைதனைக் கூசாம லுண்டவர்க்கு
வெட்டை தணியுமதி மேகம்போந்—துட்டச்
சொறிசிரங்கு வன்கரப்பான் றேன்று மலப்பை
மறிமலமுந் தானிரங்கு மால்

இ-ள். கொட்டைக் கரந்தைக்கு வெள்ளை ஒழுக்குப் பிரமேகம் சொறி சிரங்கு கரப்பான் நீங்கும், மறிப்பட்ட மலமுஞ்சாரும். 329

## சிவகரந்தையின் குணம்

வாந்தி யரோசகத்தை மாற்றும் பசிகொடுக்குஞ்
சாய்ந்தவிந்து வைக்கட்டுந் தப்பாதே—ஏந்தழகைத்
தண்டா துறச்சேர்க்குஞ் சார்ந்த பரிமளத்தைத்
தண்டாச் சிவகரந்தை தான்.

## இதுவுமது—விருத்தம்

கந்தநாறு கரந்தை யதன்குணம்
மந்தவாதங் கரப்பானை மாற்றிடும்
தொந்த ரோகந் துடைக்கு மிருவல
மந்தநோயுந் தணிக்கு நம்மானையே.

இ-ள். மணமுள்ளசிவகரந்தை வாந்தி ரோகம் விந்துநஷ்டம் ட்சீணவாதம் கரப்பான் வாதாதிதொந்தம் காசம் அக்கினிமாந்தம் க்கும், சடராக்கினியையும் வனப்பையும் உண்டாக்கும். 331

## வெள்ளறுகின் குணம் வெண்பா

குன்மமொடு வாயுகுடல் வாதஞ் சூலையிடை
சென்மம்விடுத் தோடிச் சிதையுங்காண்—வன்முலையா
யுள்ளூ கிரந்திசொறி யொட்டியசி ரங்குமறும்
வெள்ளறுகு தன்ன விரும்பு.

இ-ள். சொக்கட்டான் காய்நிகர்த்த தனங்களையுடைய பெண்ணே! வெள்ளறுகினால் குன்மம் வாதப்பிணி வாதக் குடல்விருத்தி கீல்பிடிப்பு நரம்பைப்பற்றிய கிரந்தி தினவு சிறு சிரங்கு இவை போம். 332

## ஓரிலைத்தாமரையின் குணம்

ஓரிலைத் தாமரையு ளூற்றகுணத் தைக்கேளாய்
மார்பிற்பா லில்லாத மங்கையர்க்கு—மோரிற்
குடிக்கப்பா லுண்டாகுங் கோரவன் மேகம்
படிக்கு ளிருக்குமோ பார்.

இ-ள். ஓரிலைத்தாமரையை எலுமிச்சங்காயளவு அரைத்து அரை ஆழாக்கு பசுமோரில் இரண்டு வேளை 40-நாள் கொடுக்கில் தனத்திற் பாலில்லாதவர்களுக்குப் பால் சுரக்கும், வாதமேகம் போகுமென்க. 333

## ஓரிதழ்த்தாமரையின் குணம்

தாதுவை யுண்டாக்குந் தனிமேகத் தைத்தொலைக்கு
மாதரவர் மேனிக் கழகுதருஞ்—சீதம்போஞ்
சீரிதழ்த் தாமரைவாழ் செய்ய மடவனமே
ஓரிதழ்த் தாமரையை யுண்.

இ-ள். அழகுதங்கிய யிதழ்களையுடைய தாமரையில் வசிக்கும் பெண்ணே! ஓரிதழ்த்தாமரை சுக்கிலத்தையும் சவுந்தரியத்தையும் உண்டாக்கும், மேகரோகத்தையும் சீதத்தையும் நீக்குமென்க. 334

## அந்தரத்தாமரையின் குணம்-(இதுவே ஆகாயத்தாமரை)

அழுகிரந்தி குட்ட மடர்ந்த கரப்பான்
பழுவுருமக் கூடு முதற்போகும்—அழகாகு
மந்திரநீ லக்கருங்க ணேந்திழையே யெப்போழ்தும்
அந்தரத் தாமரையா லாய்.

இ-ள். அழகு பொருந்திய இந்திர நீலமணியை நிகர்த்த கரிய கண்களையுடைய பெண்ணே! அந்தரத்தாமரையில் அளித்த விரணமும் குஷ்டும் கரப்பானும் மார்புக்குள் கட்டுகின்ற கிருமிக்கூடு முதலிய சில நோய்களும் போமென்க. 335

## பற்படாகத்தின் குணம்

சீதவா தச்சுரமுந் தீராத தாகமும்போம்
போதவிரு கண்குளிரும் பொய்யலவே—பூதலத்துள்
வற்பரம பைத்தியமு மாபித்த முந்தொலையும்
பற்படா கத்தையுன்னிப் பார்.

இ-ள். பற்பாடகத்துக்கு சீதவாதசுரம பித்தகாசரோகம் உன்மாதம் பித்ததோஷம் இவை போம், விழிக்குக் குளிர்ச்சி யுண்டாம்.

### திருநீற்றுப்பச்சை, உருத்திரச்சடை இவைகளின் குணம்

திருநீற்றுப் பச்சை சிலேத்மசாந்தி தன்னை
விரிநீற்றைப் போலாக்கு மெய்யே—பெரிய
சுரத்திரத்த வாந்தி சுரமருசி நில்லா
வுருத்திரச்ச டைக்கே யுரை.

இ-ள். திருநீற்றுப்பச்சை கபவாந்தியை நீக்கும். உருத்திரச்சடை சுரத்தலாகிய உதிரவம்மை பித்தசுரம் அரோசகம் நீங்கும்.

### மாசிப்பத்திரியின் குணம்

புளிப்புந் துவர்ப்பும் பொருந்தி யிருந்தாலுந்
தளிர்த்தகா ளைக்கனலைச் சாடு—நெளித்த
தலிதனைவிட் டோட்டுமட மாதே நீகேளாய்
மலிமாசிப் பத்திரிதான் வாழ்த்து.

இ-ள். இளமை பொருந்திய பெண்ணே! நீ கேட்பாயாக; புளிப்புந் துவர்ப்புமுள்ள மாசிப்பத்திரி வாத நோயையும் உஷ்ணத்தையும் ஐவகை வலியையும் போக்கும். 338

### மருக்கொழுந்தின் குணம்

கண்ணினுறு தோடங் கபஞ்சூ டிவைபோக்கும்
ஒண்ணல்கைப் புக்காரம் உள்ள மரு—மண்ணிற்
கொழுந்த மருக்குணத்தைக் கொண்டிருந்த போழ்துந்
தழைந்தபசி வன்மைதருஞ் சாற்று.

இ-ள். கைப்பும் காரமும் உஷ்ணமும் உள்ளமரு ஆனது நேத்திர படலம் கபதோஷம் உட்சூடு இவை நீங்கும். அந்த மருவின் குணத்தைப் பெற்ற கொழுந்து மிகு பசியையும் பலத்தையுங் கொடுக்கும். 339

---

## கொடி வகை

### ஆதொண்டையின் குணம்

மண்டைக் குடைச்சலறும் வாயுவழிப் பீநசம்போந்
தொண்டைக் கபமுந் தொலையுங்காண்—மிண்டுசெய்யும்
வாதக் கடுப்பகலு மாதேஆ தொண்டைக்குப்
போதப் பலபிணியும் போம்.

இ-ள். ஆதொண்டையால் மண்டைக் குடைச்சல் வாதபீநசம் நெஞ்சிற் கபாதிக்கம் வாதக் குடைச்சல் முதலிய ரோகங்களும் போம். 340

## பெருங்கட்டுக்கொடி சிறுகட்டுக்கொடி இவைகளின் குணம்

பெரியகட் டுக்கொடிக்குப் பேசு பெரும்பாடு
மரியுமல பேதியும்போ மப்பா—வுரிய
சிறுத்தகட் டுக்கொடிதான் சீதரத்த நீங்கு
மிறுத்தபுன லைக்கட்டு மெண்.

இ-ள். பெருங்கட்டுக்கொடியால் பெரும்பாடும் மலக்கழிச்சலும் போம், சிறுகட்டுக்கொடி சீதரத்தத்தையும் மேகநீரையும் கட்டும்.

## சிறுகுறிஞ்சாக்கொடிக் குணம்

சிறுக்குறிஞ்சா வாதமொடு சீதத்தை நீக்கும்
மறுவுதிர மில்லாத மாதர்க்—குறுமுலகி
லத்தி சுரமு மகலாக் கடிவிடமுந்
தத்தியக லத்தகர்க்குந் தான்.

இதுவுமது

வாதசுரஞ் சந்நிசுர மாறுக் கபசுரமும்
பூதலம்விட் டோடப் புரியுங்காண்—மாதேகே
ளக்கரநோய் தீர்க்கு மதிசுரந் தாகம்போ
தக்க சிறுகுறிஞ்சா தான்.

இ-ள். சிறுகுறிஞ்சால் வாத விஷம் மாதாந்த உதிரச்சிக்கல் அஸ்திகதசுரம் காணாக்கடிவிஷம் வாதசுரம் சந்நிபாதசுரம் கபசுரம் பித்தஜிஹ்வாகண்டகம் சந்ததசுரம் தாகரோகம் இவை நீங்கும். 343

## இண்டின் குணம் (இதுவே புனற்றண்டு)

பீநசத்தைப் போக்கும் பெருகியதோர் நீரேற்றந்
தானசிக்கச் செய்யுமது சத்தியங்காண்—வானசைக்கும்
மண்டைக் குடைச்சலொடு வாய்ச்சந்நி யும்விலக்கும்
பண்டையுற்ற விண்டிதனைப் பார்.

இதுவுமது

கட்டுவா தங்களறுங் காரிகையே மேகம்போ
முட்டுவா தங்களெல்லா முன்பொழியுங்—கிட்டும்
புனலினறுந் தண்டுக்குப் போரிளை சூலை
யனலிலெழு புண்ணு மறும்.

இ-ள். இண்டின் கொடியினுல் பீநசம் சகல தோஷம் கபாலக் நடைச்சல் முகசன்னி வாதத் தடிப்பு பிரமேகம் சூதகவாயு சுவாசம் ில் பிடிப்பு தீச்சுட்ட விரணம் ஆகியவைகள் போமென்க. வாய் - முகம். 345

## கற்பூரவள்ளியின் குணம்

*காச விருமல் கதித்தம்மை சூரிஐயம்*
*பேசுபுற நீர்க்கோவை பேருங்காண்—வீசுசுரங்*
*கற்பாறை யொத்துநெஞ்சிற் கட்டுகபம் வாதமும்போங்*
*கற்பூர வள்ளிதனைக் கண்டு.*

இ-ள். கற்பூர வள்ளியினுல் காசம் என்கிற பொடியிருமல் மும்மைக் கொப்பளம் சிலேத்ம தோஷம் புறநீர்க்கோவை ரூட்சை ார்பிற்கட்டும் கபம் வாதக்கடுப்பு ஆகியவைகள் போமென்க. 346

## முசுமல்லிகையின் குணம்

*வீக்கமறுங் காமாலை விட்டோடுஞ் சோபைவிடு*
*நீக்கமற விம்முமுலை நேரிழையே—எய்க்கும்*
*விடபாக மேகமும்போம் வீரியமு முண்டாம்*
*படர்முசு மல்லிகைக்குப் பார்.*

இ-ள். மார்பில் இடமில்லாமல் விம்மிய தனங்களையுடைய பண்ணே! முசுமல்லிகையினுல் சோகை காமாலை ஆகந்துக வீக்கம் ஷ பாக ரோகம், பிரமேகம் ஆகியவைகள் போம், சுக்கில விருத்தி ாம். 347

## ஊசிமல்லிகையின் குணம்

*மாந்த கணம்பொருமல் வாராது மைந்தர்களுக்*
*கூர்ந்தே யிரத்தகண மோடுங்காண்—கூந்தன்முடி*
*மானே சுரந்தணியும் வாங்காத வீக்கம்போங்*
*கானூசி மல்லிகைக்குக் காண்.*

இ-ள். கூந்தலை முடிக்கின்ற மான்போலுங் கண்களையுடைய ண்ணே! காட்டிலுள்ள ஊசிமல்லிகைக்கு கணமாந்தம் வயிற் ப்பிசம் சிசுக்களுண்டாகிற உதிரசம்பவப் பிணிகள் சுரம் சோகை வை போம். 348

## மிளகரணையின் குணம்

*ஐய மகற்று மசீரணவா தம்போக்குஞ்*
*செய்யபித்த சூலைதனைத் தீர்க்குங்காண்—பையவரு*
*பீனே யிருமி ஸிரைப்புப் பிசங்தொலைக்கு*
*நாளு மிளகரணை நன்று.*

இ-ள். மிளகரணை கபவிருத்தி அசீகரண வாயு பயித்திய சூலை க்ஷயம் காசம் சுவாசம் வயிற்றுப்பிசம் ஆகியவை போமென்க. 349

## நாய்ப்பாகலின் குணம்

நாய்ப்பா கலின்குணத்தை நன்று யுரைக்கக்கேள்
வாய்ப்பான பீநசத்தை மாற்றுங்காண்—தீப்பாயி
லிங்கமதைச் சுத்திசெய்யு நேரிற்பா ஷாணத்தைப்
பங்கமறச் சுத்திசெய்யும் பார்.

இ-ள். நாய்ப்பாகல் பீநசம் நீக்கும், சாதிலிங்கத்தையும் பாஷாணத்தையும் சுத்தி செய்யுமென்க. 350

## பிரண்டையின் குணம் (இதுவே வச்சிரவல்லி)

பிரண்டையைநெய் யால்வறுத்துப் பின்பரைத்து மாதே
வெருண்டிடா தேற்று விழுங்கி—லரண்டுவரு
மூலத் தினவடங்கு மூல விரத்தமறும்
ஞாலத்தி னுள்ளே நவில்.

இதுவுமது

மாந்தம் வயிற்றுவலி வாயுவதி காரமுளை
சேர்ந்தமூ லக்கபடமுட் செம்புனற்போக்—கோய்ந்தாடை
யெல்லா மகலு மெழுப்பு மதிகபசி
மல்லார் பிரண்டையுண்டு வா.

இ-ள். பெண்ணே! பிரண்டையை நெய்விட்டு வறுத்து அரைத்துக் கொட்டைப்பாக்குப் பிரமாணம் எட்டு நாள் அந்தி சந்தி சாப்பிட ஆசனத் தினவும் ரத்தமூலமும் ஒழியும். இதைப் பற்பல ஔஷதங்களாகப் பிரயோகிக்கில் அக்கினிமந்தம் குன்மம் வாதாதிசாரம் முளைமூலம் கபதோஷம் ரத்தபேதி காலசதி இவை நிவர்த்தியாம். ஜடராக்கினி வளரும். 352

## களிப்பிரண்டையின் குணம்

ஐயமறும் பித்த மணுகாம லோடிவிடுந்
தையலர் போகமிகச் சாருங்காண்—பையக்
கரப்பான் விலகுங் கடிசிலந்தி யும்போ
முரப்பாங் களிப்பிரண்டை யுண்.

இ-ள். களிப் பிரண்டையினால் கபவிரணம் பித்த தோஷம் கரப்பான் காணுக்கடி சிலந்தி விஷம் நீங்கும். வீரிய விருத்தியுமுண்டாம். 353

### தீம்பிரண்டை, புளிப்பிரண்டை இவைகளின் குணம்

தீம்பிரண்டை தன்னாற் செரியாமந் தம்சூமந்
தேம்பிரைப்பு விக்கலையந் திண்வாதம்—போம்பலரும்
பார்க்கும் புளிப்பிரண்டை பாண்டுநோய் குன்மகயம்
போக்குமது சூடாம் புகல்.

இ-ள். தித்திப்புப் பிரண்டையால் செரியாமந்தம் சீதபேதி அதிகொட்டாவி சுவாசவிக்கல் சிலேஷ்மாதிக்கம் வாதகோபம் ஆகியவை போம். உஷ்ண குணமுள்ள புளிப்புப் பிரண்டை சரீர வெளுப்பு மார்பு நோய் வயிறுவலி க்ஷயம் இவைகளை விலக்குமென்க. 354

### நறுந்தாளியின் குணம்

நாவு களார்மார்பு நாபிமூ லங்களிலுட்
டாவி வருமிரணஞ் சாத்தியமாங்—கூவலிடு
மெய்யழலு மோதணியு மேகமறும் வீரியமா
முய்யவெனி னற்றாளி யுண்.

இ-ள். நறுந்தாளியினால் தொண்டை மார்பு உந்தி மூலம் இவற்றின் புண்கள் தேக வெப்பம் பிரமேகம் இவை போம். சுக்கில முண்டாம். 355

### பேய்பாற்சொரியின் குணம்

பேய்ப்பாற் சொரியினாற் பேதிமுதல் வெப்பகலும்
வாய்ப்பார் கடுப்புதிர மாறுங்காண்—போய்ப்பாய்ந்
துருவாம லுள்ளலக்கு மோங்கயற்கண் மாதே
பொருவார் பயித்தியமும் போம்.

இ-ள். கயல்போன்ற கண்களையுடைய பெண்ணே! பேய்ப் பாற் சொரியால் அதிசாரவுட்சூடு ரத்தாக்கிரணி பித்த தோஷம் ஆகியவைகள் போகுமென்க. 356

### குதிரைவாலியின் குணம் (இதுவே மிரியார்கூந்தல்)

கடுப்புக் கழிச்சல் கனன்ற சுரதாக
மிடுப்பு வலிவாத மிவற்றோ—டடுப்ப
விதிரைவா வென்றழைக்கு மேகமிரு மலும்போங்
குதிரை வாலிக்குக் குலைந்து.

இதுவுமது

காசம் பருப்படுவன் கண்மயக்க மீளையொடு
வாசங் கமழ்குழலால் மாந்தமும்போம்—பேசத்

நரியாது வாதகபந் தானே சொறிபோம்
மிரியார்கூந் தற்கு விரைந்து.

இ-ள். வாசம் பரிமளிக்கும் கூந்தலையுடைய பெண்ணே! குதிரைவாலியால் மூலக்கடுப்பு அதிசாரம் சுரவேகத்தால் வந்த நாவறட்சி சகஜவிருத வாதம் பிரமேகம் இருமல் கட்டி படுவன் நேத்திர மங்கல் கோழை அக்கினிமந்தம் வாதகப தொந்தம் தினவு ஆகியவைகள் நீங்குமென்க. 358

## பவளக்குன்றிக் கொடியின் குணம்

பவளக்குன் றிக்கொடிக்குப் பற்றிநின்ற மேகங்
கவிழிரத்த பித்த கயமும்—நவமாஞ்
சொறிகரப்பான் புண்கிரந்தி தேலோர் கடுவன்
மதுகரப்பான் போமே மலைந்து.

இ-ள். செங்குன்றிக்கு வெள்ளை ரத்தபித்த க்ஷயம் நமைக் கரப்பான் விரணம் சிரங்கு சருமக்கடுவன் அழுக்குக் கரப்பான் இவை போம். 359

## முசுட்டையின் குணம்

மாதே முசுட்டையது வாதமோ டையத்தைத்
தீதே புரிநீரைத் தீர்க்குங்காண்—வேதனைசெய்
வன்மலத்தைத் தள்ளும் வறட்சி சொறிசிரங்கைச்
சன்மமறப் போக்குநிசந் தான்.

இ-ள். பெண்ணே! முசுட்டையானது வாத கோபம் கப தோஷம் பிரமேகநீர் தினவு படை சிறு சிரங்கு இவைகளை நீக்கும். மலத்தை யிறக்கும். 360

## பொன்முசுட்டையின் குணம்

வாதமொடு பித்தத்தை மாற்றுமே மாநிலத்தில்
சீத மகற்றுந் தினவடங்கு—மாதேகே
ளுண்டிக்கும் வாசனையா மோங்கி வளரனலைக்
கண்டிக்கும் பொன்முசுட்டை காண்.

இ-ள். மாதே கேள்! பொன்முசுட்டை வாதவலி மயக்கம் சீதம் நமைச்சல் உட்சூடு இவைகளை நீக்கும். உண்ண மணமா யிருக்கும். 361

## நஞ்சறுப்பான்பூண்டின் குணம் (நஞ்சுமுறிந்தாள்)

தொடுநஞ்சு நாவாரத் துய்க்குநஞ்சு மற்றூ
றிடுநஞ்சுந் தாவரநஞ் சேறிப்—படுநஞ்சுங்
கூண்டுடனே காதோ குயின்மொழியாய் நஞ்சறுப்பான்
பூண்டுதனை நீயெடுக்கும் போது.

இ-ள். குயில்போலினிய மொழியாளே! நஞ்சறுப்பான் பூண்டினல் கீடசர்ப்பம் தீண்டுதலாலும் தானே நுகரலாலும் இடுமருந்தாலும் பாஷாணங்களாலும் வியாபித்த விஷம் தீரும். 362

## நீர்மேல் நெருப்பின் குணம்

வாதமகா ரோகம் வரினுங் கறையல்கி
மீதடா வன்றிமிரே மேவுகினு—மோதரிய
சீர்மே னிலம்பரவு தெய்வ மடமயிலே
நீர்மே னெருப்பே நினை.

இ-ள். தெய்வத்தன்மை பொருந்திய மயில்போன்ற சாயலையுடைய பெண்ணே! நீர்மேல் நெருப்பினல் மகாவாத ரோகமும் ஏற்றக்குறைவினல் பிறக்கின்ற திமிர்வாத நோயும் விலகுமென்க.

## முடக்கற்றான் குணம்

சூலைப் பிடிப்பு சொறிசிரங்கு வன்கரப்பான்
காலைத் தொடுவளியுங் கன்மலமுஞ்—சாலக்
கடக்கத்தா ளேடி விடுங் காசினியை விட்டு
முடக்கத்தான் றன்னை மொழி.

இ-ள். முடக்கற்றான் மூலிகையால் கீல் பிடிப்பு சினைப்பு கிரந்தி கரப்பான் பாதநாக வாதம் மலக்கட்டு ஆகியவை போமென்க. 364

## கொல்லங்கோவையின் குணம்

சூலைபாண்டு திரிதோஷ மக்கிவைப்புக் கண்ட
மாலை குடலின்வலி மாகுட்ட—மாலவிட
முட்கரப்பான் மெய்யுரிப்பு முண்டோகொல் லங்கோவை
கைக்கு ளிருக்கவின் னுங் காண்.

இ-ள். கொல்லங்கோவையால் சூலைவலி சரீரம் வெளிறல் பாண்டு திரிதோஷம் அக்கிப்புண் உட்சூடு கண்டமாலை ஆந்திர பித்தவாதம் மாகுஷ்டம் மகாவிஷம் கரப்பான் நமைச்சல் ஆகியவை போம். 365

## கற்கோவை வரிக்கோவை அப்பைக்கோவை செங்கோவை அருங்கோவை இவைகளின் குணம்

வீக்க மகற்றுநஞ்சை வீட்டுநீர்ப் பேதிதரும்
போக்கு மதுவையழற் புண்ணொழிக்கும்—தேக்குறுகற்
கோவைவரிக் கோவையப்பைக் கோவைசெங் கோவைகருங்
கோவைமுறை யேயுணர்கு ணம்.

இ-ள். இனிப்புள்ள கற்கோவை சோபையையும், வரிக்கோவை விஷத்தையும், அப்பைக்கோவை மேக விரணத்தையும் நீக்கும். தேக்கு - இனிப்பு. 366

### நரிப்பயற்றங்கொடியின் குணம்

நரிப்பயற் றங்கொடிக்கு நாடாது பித்தந்
தரிப்புற்ற ஐயமெல்லாந் தாழு—முருப்பொழிக்கு
மேகவெட்டை பித்தவெட்டை மீளாக் கரப்பனிவை
யாகம்விடுத் தோடு மறி.

இ-ள். நரிப்பயற்றங்கொடிக்குப் பித்த கோபம் கப ரோகங்கள் பிரமேக வெள்ளை அரித்திராமேகம் கரப்பான் ஆகியவைகள் போமென்க. 367

### மூக்குறட்டையின் குணம்

சீத மகற்றுந் தினவடங்குங் காந்திதரும்
வாத வினையை மடிக்குங்காண்—பேதி
கொடுக்குமதை யுண்டக்காற் கோமளமே பித்த
மடுக்குமே மூக்குறட்டை யால்.

இ-ள். அழகிய பெண்ணே! மூக்குறட்டை ஆமம் நமைச்சல் வாதநோய் இவைகளை நீக்கும். அழகையும் விரோசனத்தையும் பித்தப் பிணியையும் உண்டாக்கும். 368

### வெள்ளைச்சாறடையின் குணம்

வித்திரிதி மூலம் விழிப்படல மார்புநோய்
தத்து சுவாசந் தனிக்கருப்பை—யுற்ற
கருச்சிதறச் செய்சூசி காவாத மும்போம்
விருச்சிகத்தின் பேரை விரி.

இ-ள். விருச்சிகம் என்கிற வெண்சாறடையால் வித்திரிக்கட்டி மூலவாயு கண்படலரோகம் நெஞ்சுநோவு சுவாசரோகம் கருப்பத்தைச் சின்னம்படுத்துகின்ற சூசிகாவாதம் ஆகிய இவைபோம். 369

### பொன்னாங்காணியின் குணம்

காசம் புகைச்சல் கருவிழிநோய் வாதமனற்
கூசும் பிலீகங்கு தாங்குரநோய்—பேசிவையா
வென்னாங்கா ணிப்படிவ மேமாஞ் செப்பலென்னை
பொன்னாங்கா ணிக்கொடியைப் போற்று.

இ-ள். பொன்னாங்கண்ணியினால் விழியைப்பற்றிய வாதகாசம் தும்பிரரோகம் கிருஷ்ணமண்டலரோகம் வாததோஷம் தேகச்சூடு பீலிகம் மூலரோக மிவைபோம்; சரீரத்தில் பொன்னிறமுண்டாம்.

### புனற்றண்டின் குணம்

கபவமன நாடிக் கமலங் கரப்பா
ணிபமறு களத்தொலியு நீங்காச்—சுபமா
ரனற்றண்டைக் காட்டா வறற்சுர மேகும்
புனற்றண்டைச் சிந்திக்கும் போழ்து.

### இதுவுமது

கட்டுவா தங்கொடிய கான்மேகங் கீல்கடோறு
முட்டுவா தஞ்சூலை மூடிரணம்—விட்டுவிடுஞ்
சொல்லவொண்ணா வின்ப சுகமளிக்கு மாரமிர்தே
நல்ல புனற்றண்டி னால்.

இ-ள். சொல்லவொண்ணா வின்பமளிக்கும் அமுதனையாளே! புனற்றண்டுக்குச் சிலேத்மவாந்தி நாசியில் வீழ்கின்ற சலம் கரப்பன் காரணமின்றி அடைபட்ட கண்டத்தொனி நானா நன்கைவிளைவிக்கின்ற பசியின் வரம்பைக்காட்டாத சீதசுரம் கட்டுவாதம் வாதப்பிரமேகம் சந்திகவாதம் சூலை கிரந்தி இவைபோம் நாடி-நாசி. கமலம்-சலம். 372

### அம்மான்பச்சரிசியின் குணம்

காந்தல் விரணமலக் கட்டுமே கத்தடிப்புச்
சேர்ந்த தினவிவைகள் தேசம்விட்டுப்—போர்தொன்று
யோடுமம்மான் பச்சரிசிக் குண்மை யினத்துடனே
கூடுமம்மா னேத்தகண்ணாய் கூறு.

இ-ள். இனத்துடன் சஞ்சரிக்கு மான் விழிகளை நிகர்த்த கண்களையுடைய பெண்ணே! அம்மான் பச்சரிசிக்கு எரிபுண் மலபந்தம் பிரமேகக்கசிவு சரீரத்தடிப்பு நமைச்சல் போகுமென்க. 373

### சிவப்பு அம்மான்பச்சரிசியின் குணம்

அரத்தவம் மான்பச் சரிசியெனு மூலிக்
குரத்தவன் மேக மொழியுங்—காத்ததொரு
விந்துவு முண்டாகும் வெள்ளி பொடியாகு
மிந்துவினும் வான்முகத்தா யெண்.

இ-ள். சந்திரன்போன்ற ஒளிபொருந்திய முகத்தையுடைய பெண்ணே! சிவப்பு அம்மான் பச்சரிசிக்கு வாதப்பிரமேகம்போகும், சுக்கிலதாது விருத்தியாகும்; இதனால் வெள்ளி பற்பமாகுமென்க.

## சிறு அம்மான் பச்சரிசியின் குணம்

பாதுபுகல் வேனமுதா லங்கி கருமெமழுகாந்
தீதுபுரி மேகவெப்பந் தீருமினு—மோதுங்காற்
றேரம்மான் சீரமொக்குந் தின்னுதையஞ் செம்மைநிறச்
சீரம்மான் பச்சரிசிச் சீர்.

இ-ள். பாலுள்ள சிறு அம்மான் பச்சரிசியால் அங்கிகரு என்கிற சாதிலிங்கம் மெழுகாகும்; மேகவுஷ்ணம் நீங்கும்; நல்ல பசும்பாலுக்கொக்கும் இதனை உதயகாலந்தோறும் உண்பாயாக என்க.

## பொடுதலையின் குணம்

பொடுதலையின் பேருரைத்தாற் போராமப் போக்கு
மடுதலைச்செய் கார மடங்குங்—கடுகிவரு
பேதியொடு சூலைநோய் பேசரிய வெண்மேகம்
வாதமும்போ மெய்புரக்கும் வாழ்த்து.

இ-ள். பொடுதலையால் சீதபேதி இருமல் அதிசாரம் சூலைநோய் சிலேஷ்மப்பிரமேகம் வாதநோய் இவைபோம். தேகம் பலக்கும். 376

## கொத்தான் குணம்

சித்த ரறிவார் செறிகுழலாய் நீகேளாய்
கொத்தான் மிகக்குளிர்ச்சி கொண்டக்காற்—சுத்தப்
பிறமேக முட்கிரிச்சம் பித்த மிளைப்பு
மறுமே தவறா தறி.

இ-ள். நெருங்கிய கூந்தலையுடைய மாதே! அதிகுளிர்ச்சியுள்ள கொத்தானுக்கு ஒழுக்குப் பிரமேகம் மூத்திரக்கிரிச்சரம் பித்தநோய் அயர்ச்சி ஆகியவை நீங்குமென்க. 377

## நல்லநெருஞ்சிலின் குணம்

நல்ல நெருஞ்சிலது நாளுங் கிரிச்சரத்தை
வல்ல சிரமனலை மாற்றுங்காண்—மெல்லியலே
மாநிலத்திற் கல்லடைப்பும் வாங்காத நீர்கட்டுங்
கூனுறுமெய் வாதமும்போக் கும்.

இதுவுமது

மேகவெட்டை நீர்ச்சுருக்கு வீறுதிரி தோடம்புண்
வேகசுர தாகவெப்பை விட்டோட்டும்—போகந்
தருஞ்சின் மதலைமொழித் தையலே நல்ல
நெருஞ்சி லதனை நினை.

இ-ள். இன்பத்தைத்தருங் குதலைமொழியாளே! நல்ல நெருஞ்சில் சொட்டு மூத்திரம் சுரவெப்பம் அஸ்மரிரோகம் நீரடைப்பு முடவாதம் பிரமேகவெள்ளை மூத்திரகிரிச்சரம் திரிதோஷகோபிரணம் சுரதாகம் உஷ்ணம் இவைகளை நீக்கும். 379

யானைநெருஞ்சிலின் குணம்

மேகத்தைப் போக்கிவிடும் வெண்குட்டந் தாழிக்குந்
தேகத்திற் கல்லடைப்பைத் தீர்க்குங்காண்—மேவிதனில்
தேனையரும் பாகைத் திருத்துங் கிளிமொழியே
யானை நெருஞ்சி லது.

இதுவுமது

யானை நெருஞ்சி லதுசீ தளமாகும்
மானே யெலும்புருக்கி மாற்றுங்காண்—மேனிதனி
லுள்ள வெரிச்ச லழலையுட் டாகமொடு
தள்ளுபித் தமும்போகுந் தான்.

இ-ள். தேனையும் பாகையும் திருத்துமொழியாளே! குளிர்ச்சியையுடைய யானைநெருஞ்சில் வெள்ளைவீழல் வெண்குஷ்டரோகம் அஸ்மரி அஸ்திசிராவரோகம் தேக எரிவு அழலைத்தாகம் பித்த மயக்கம் ஆகியவைகளைப் போக்குமென்க. 381

செப்புநெருஞ்சில் குணம்

செப்பு நெருஞ்சில் திரிதோடம் போக்கிவிடும்
வெப்பு முதலனைத்தும் வீட்டுங்காண்—செப்பரிய
சுக்கிலமே கம்போக்குந் தொல்லை யனல்மாற்று
மிக்கு மருந்தாம் விரி.

இ-ள். செப்பு நெருஞ்சில் திரிதோஷம் சுர முதலிய நோய்கள் சுக்கிலமேகம் நீடித்த உட்சூடு ஆகியவை நீங்கும். நல்ல மருந்தாம்.

பேய்ப்புடலின் குணம்

பித்தசுரஞ் சீதசுரம் பீரிக்குங் காமாலை
யுற்ற மசூரி யழற்றுக—நித்தியமுங்

காய்புடலை யுண்ணக் கவிழ்க்கின்ற பித்தமும்போம்
பேய்ப்புடலை யுண்பாரைப் பேணு.

இ-ள். பேய்ப்புடலால் பித்தகபசுரங்கள் காமாலை மசூரிகை தாகம் தேங்காய்ப்பேறும்படி தள்ளுகின்ற மயக்கம் இவைகள் போம். 383

## வல்லாரையின் குணம்

அக்கர நோய்மாறு மகனும் வயற்றிழிவு
தக்கவிரத் தக்கடுப்புத் தானேகும்—பக்கத்தி
வெல்லா ரையும்மருந்தென் றேயுரைத்து நன்மனையுள்
வல்லாரையை வளர்த்து வை.

இ-ள். வல்லாரையினால் பித்தஜிக்வண்டகரோகமும் மலக்கழிச்சலும் ரத்தகிராணியால் பிறக்கின்ற கடுப்பும் நீங்குமென்க. 384

## பிரமியவழுக்கையின் குணம்

கீலின் பசையாற் கிளைத்த வலிவீக்கங்
காலின் பிடிப்பொடுகை காலெரிவு—மேலிலெழு
வாதத்தா னேவு மலக்கட்டுஞ் சோபையும்போஞ்
சீதத்தாஞ் சப்தலைக்குத் தேர்.

இ-ள். சப்தலை என்கிற பிரமியவழுக்கை கீல்களின் கபம் விருத்தியடைவதாற் பிறந்தவலி வீக்கம் கால்பிடிப்பு கைகால் எரிவு வாதக்கடுப்பு மலபந்தம் சோபை ஆகியவைகள் போகுமென்க. 385

## கையாந்தகரையின் குணம்
## (இதுவே கரசனங்கண்ணி, கரியசாலை)

குரற்கம்மற் காமாலை குட்டமொடு சோபை
யுரற்பாண்டு பன்னோ யொழியு—நிரற்சொன்ன
மெய்யாந் தகரையொத்த மீளியண்ணு நற்பலத்துக்
கையாந் தகரையொத்தக் கால்.

இ-ள். கையாந்தகரையால் சுரசாந்தரோகம் காமிலம் புண்டக குஷ்டம் வீக்கம் பாண்டு தந்தரோகம் இவைபோம், தேகத்திற் பொற்சாயலும் யாளிக்குச் சமதையான பலமும் உண்டாமென்க.

## பொற்றலைக் கையாந்தகரையின் குணம்

பொற்றலைக்கை யாந்தகரை பொன்னிறமாக் குமுடலைச்
சுந்தமுறக் கட்குச் சுகங்கொடுக்குஞ் சிற்றிடையாய்
சிந்தூரங் கட்காகுஞ் சிந்தை தனைத்துலக்கு
முந்திவளர் குன்மமொழிக் கும்.

இ-ள். பொற்றலைக் கையாந்தகரை தேகத்திற் பொற்சாயலை யும் விழிக்குள் ஒளியையும் புத்திக்குத் தெளிவையும் உண்டாக் கும், குன்மக்கட்டியைப் போக்கும்; இது பலவித சிந்தூரஞ் செய்ய ஆகும். 387

விஷ்ணுகிராந்தியின் குணம்

செய்ய மாலின்கிராந்தி தீராத வல்லசுரத்
தைய மறுக்கு மனற்றணிக்கும்—பையவரு
காச மிருமலையுங் கட்டறுக்கும் வாதந்தா
னூசலா டும்பிணிபோக் கும்.

இ-ள். விஷ்ணுகிராந்தி சுத்தசுரத்தாற் பிறந்த கபம் உட்சூடு கோழை இருமல் வாதப்பிணி இவைகளை நீக்கும். மால்-விஷ்ணு.

தொட்டாற்சுருங்கியின் குணம்

மேகநீ ரைத்தடுக்கு மேதினியிற் பெண்வசிய
மாகவுன்னி நல்கு மதுவுமன்றித்—தேகமிடைக்
கட்டாகக் காட்டுகின்ற காலைத் தூரத்திவிடுந்
தொட்டாற் சுருங்கியது சொல்.

இ-ள். தொட்டாற்சுருங்கி மேகமூத்திரத்தை நீக்கும், பெண் வசியஞ்செய்யும், உடலில் ஒடிக் கட்டுகின்ற வாதத் தடிப்பைக் கரைக் கும். 389

கொட்டைப்பாசியின் குணம்

மேகமறுந் தீபனமாம் வெஞ்சுரமு மேகிவிடுந்
தேகமதிற் றேமலினஞ் சேருமோ—பாகுமொழி
மின்னே வெகுகுணஞ்செய் மென்கொட்டைப் பாசியினாற்
றுன்னுகரப் பானும்போஞ் சொல்.

இதுவுமது

மிக்குகக்கு வானகலும் வெய்ய கிரந்தியறுந்
தக்கஐய தாபந் தணியுங்காண்—மிக்ககிலின்
மட்டைப்பாய்ச் சுங்கூந்தல் மாதே யுலகத்திற்
கொட்டைப்பா சிப்பெயரைக் கூறு.

இ-ள் அகிலின் வாசனையை வீசும் கூந்தலையுடைய பெண்ணே! கொட்டைப்பாசியால் பிரமேகம் பித்தசுரம் தேமல் கரப்பான் கக் கிருமல் கிரந்தி கபவாதமிவைபோம், பசியுண்டாம். 391

காணும்வாழையின் குணம்

காணும் வாழைக்குமூலைக் கண்குழிப்புண் ணறிவிடு
மாணுலும் போக மதிகரிக்கு—மானேகேள்

ஐயம் விளையு மனற்றணியு நீங்காத
பையுதிர மாறுமுன்னிப் பார்.

இ-ள். காளும்வாழைக்கு ஸ்தனவித்திரிதி சுரம் ரத்தபேதி இவைநீங்கும், சுக்கிலவிருத்தி, கபப்பெருக்கும் உண்டாகும். 392

### சிறுப்புள்ளடியின் குணம்

மாந்தகணம் போராமல் வன்மந்த நீக்கிவிடு
மேய்ந்தமுலைப் பாலு மொழுகுங்காண்—மோந்தே
சிறுபுள் ளடிதுதையாத் தேமலர்ப்பூங் கோதாய்
சிறுபுள் ளடியைநிதஞ் சேர்.

இ-ள். வாசனை பொருந்திய மலர்மாலையைத்தரித்த கூந்தலையுடைய பெண்ணே! சிறுபுள்ளடியால் எண்வகைமாந்தம் சீதக்கட்டு வாதசலம் ஆகியவை நீங்கும், வற்றியமுலைப்பாலும் பெருகும். 393

### உப்பிலாங்கொடியின் குணம்

பிள்ளை மந்தமேதி பேராத ரூட்சையும்போம்
வெள்ளைசெய்யங் தங்கத்தை மென்மலராற்—றெள்ளைபுரி
வேளுநடுங்குவடி வேலேநிகர் கூர்விழியாய்
நாளுமுப்பி லாங்கொடியி னால்.

இ-ள். மலர்ப்பாணத்தால் போர்புரியுங் காமனும் அஞ்சும்படியான கூரியவேல் போன்ற கண்ணுளே! உப்பிலாங்கொடியினுல் குழந்தைகள் மாந்தமும் க்ஷீரதிசாரமும் நீங்காதசுரமும் நீங்கும், இது தங்கத்தைப் பற்பமாக்கும். 394

### பம்பந்தாராவின் குணம்

பாவிராக் கொங்கைகளிற் பாலாங் கருப்பைப்பை
மூலி யிறையழுக்கு முன்பிழியும்—மேலெழுத்
தப்பமெனத் தங்குஞ் சலன மரோசகம்போம்
பம்பந்த ராயருந்திப் பார்.

இ-ள். பம்பந்தராவினுல் பிரசவ அழுக்கும் எலும்புஸ்தம்பம் போற் றடிக்கின்ற வாதத்தடிப்பும் அருசியும்போம், பால்வற்றிய ஸ்திரீகளுக்குப் பால் விருத்தியாகும். சலனம்-வாயு. 395

---

## புல்வகை



### சதுரக்கள்ளியின் குணம்

கரப்பான் சொறியுங் கடியுங் கபமு
முரப்பாங் குன்மத்தையு மொழிக்கும்—நிரைப்பான்
பேதிதருஞ் சீதமென்ற பேச்சகற்றும் பூவுலகிற்
சாதுசது ரக்கள்ளி தான்.

இ-ள். சதுரக்கள்ளி கரப்பான் நமைச்சல் கழுக்கடி கபநோய் வாதகுன்மம் இவை நீங்கும். விரோசனத்தைத் தரும். 396

## நாகதாளிக் கள்ளியின் குணம்

செந்து விடங்கள் செடிவிடங்க ளைத்தொலைக்குந்
தொந்திடச்செய் வாதத்தை தூறுங்காண்—முந்தவெகு
வேகமா விக்கும்வடி வேல்விழிமா தேபணை நல்
நாகதாளிக் குணத்தை நாடு.

இ-ள். வேல்போலுங் கண்களையுடைய மாதே! நாகதாளிக் கள்ளி சங்கம்விஷம் தாவரவிஷம் மகாவாதரோகம் இவைகளைப் போக்கும். 397

## பேய்க்கற்றாழை செங்கற்றாழை இவைகளின் குணம்

பேய்க்கற்றா ழைக்குப் பெருமேக மும்மெரிவு
மேய்க்கக்கூ டாவழலு மேகுங்காண்—தாய்க்குநிக
ராஞ்சிவந்த கற்றாழை யங்கங் குளிர்விக்கும்
பாஞ்சயத்தைப் பொன்னுக்கும் பார்.

இ-ள். பேய்க்கற்றாழைக்கு அதிநீரும் சரீர எரிவும் சுரமும் போம், செங்கற்றாழை உட்சூடகற்றும், இரும்பைத் தங்கமாக்கும்.

## கற்றாழையின் குணம்

பொல்லாமே கங்கபம்பு ழுச்சூலை குட்டரச
மல்லார்மத் தம்பகந்த ரங்குன்ம—மெல்லாம்விட்
டேகு மரிக்கு மெரிச்சற் கிரிச்சரமு
மாகு மரிக்கு மருண்டு.

இ-ள். நறுங் கற்றாழைக்கு வாதமேகம் கபமேகம் கிரிமிக் குற்றம் பெருவியாதி மூலம் உன்மாதம் பகந்தரம் வயிற்றுநோய் தினவுள்ள பித்தகிரிச்சரம் இவைகள்போம். குமரி-கற்றாழை. 399

## கள்ளிமுளையான் குணம்

வாய்க்குப் புளித்திருக்கும் வன்பசியை யுண்டாக்கு
மேய்க்குமுடல் வாதத்தை யேறுபித்தஞ்—சாய்க்குந்
தெள்ளிய வின்பமொழித் தெய்வ மடவனமே
கள்ளிமுளை யானருந்திக் காண்.

இ-ள். தெள்ளிய இன்பமொழியையும் அன்ன நடையையுமுடைய பெண்ணே! புளிச்சுவையுள்ள கள்ளிமுளையான் தீபனத்தை யுண்டாக்கும் வாதபித்த தோஷத்தையும் மாற்றும். 400

## மேகநாதப்பூண்டின் குணம்

இரத்தபித்த ரோக மெரிசருவ காள
முரத்தவுன் மாதமிவை யோட்டு—மிரத்தனப்புண்
வாசணிவான் கொங்கை மடவார் தொழுந்திருவே
தாரணிவாழ் மேகநா தம்.

இ-ள். இரத்தினுபரணத்தை யணிந்த கச்சினுலிறுக்கிய தனங்களையுடைய மாதர்கள்தொழுந் தருந்திருவே! மேகநாதப்பூண்டு இரத்த பித்தத்தையும் தாவரசங்கமம் முதலிய விஷங்களையும் உன் மாதரோகத்தையும் போக்குமென்க. 401

## அறுகம்புல்லின் குணம்

அறுகம்புல் வாதபித்த ஐயமோ டீளை
சிறுக வறுக்குமின்னஞ் செப்பி—லறிவுதருங்
கண்ணோ யொடுதலைநோய் கண்புகையி ரத்தபித்த
முண்ணோ யொழிக்கு முரை.

இ-ள். அறுகம்புல் திரிதோஷம் கோழை கண்ணோய் சிரஸ்தாபம் தும்பிரமநோய் ரத்தபித்தம் மருந்துச்சூடு இவைபோகும் அறிவுதரும். 402

## சோதிப்புல்லின் குணம்

காசப் படலங் கருவித்தோ டம்பில்லம்
பூசாந்திரஞ் சதையொண் பூசுக்கிரன்—கூசலென
வோதியவிங் நோய்முழுது மொண்விழியை விட்டகலுஞ்
சோதியெனும் புல்லுக்குச் சொல்.

இ-ள். சோதிப்புல்லுக்கு விழிக்காசபடலம் கருவிழிநோய் நீர்ப்பில்லம் பூசாந்திரம் ஊன்பலம் பூவெண்புள்ளி கூசுதல் இவை போம். 403

## தருப்பைப்புல்லின் குணம்

தோடஞ் சிறியவிடஞ் சேராதிக் கப்பெருக்கஞ்
சாடுஞ் சகலசுரம் தாகமிவை—யோடு
மரிப்பு மகலு மடல்வேள்வி கட்காந்
தருப்பையெனும் புல்லுக்குத் தான்.

இ-ள். தருப்பைக்கு சப்ததோஷம் அற்பவீரியம் விஷம் கபாதிக்கம் சர்வசுரம் தாகம் நமைச்சல் போம் யாகங்கட்காம். 404

### மாந்தப்புல், காவட்டம்புல் இவைகளின் குணம்

மாந்தப்புற் பேதிகட்டு மந்த மசீரணத்தைச்
சாந்திசெய்யும் வந்தசுரத் தைப்போக்கு—மேந்திழையே
காவட்டம் புற்குக் கணமாந்தம் பேதியறு
நாவொட்டிக் காய்ச்சலும்போ நாடு.

இ-ள். மாந்தப்புல் மலபேதி, அக்கினிமந்தம், அசீரணம், சிலேத்ம சுரம் ஆகியவைகளைப் போக்கும்; காவட்டம் புல்லுக்குச் கணமாந்தம் அதிசாரம் நாவொட்டிக் காய்ச்சல் ஆகியவைகள் விலகு மென்க. 405

### பீநசப்புல்லின் குணம்

பீநசப்புல் லுண்டாயிற் பேர்ந்துவிடு மாந்தமெலாம்
பீநசமுந் தீரு பெருமூலந்—நாளுமொழியும்
மைய விளைசிதையு மக்கரநோ யுந்தீரு
மெய்யா யிதனை விளம்பு.

இ-ள். பீநசப்புல்லினால் எண்வித மாந்தம் நாசிரோகம் மூலம் சிலேத்ம தோஷம் பித்த சிஹ்வாகண்டகம் ஆகியவைகள் போகும்.

### வாசனைப்புல்லின் குணம்

வாசனைப்புல் வாதபித்த மாற்றுவது மன்றிமிகு
சூசனையாய் வந்த சுரம்போக்கும்—பேசரிய
ஐய மறுக்கு மரோசகத்தை விண்ணேற்றுந்
துய்யபசி யைக்கொடுக்குஞ் சொல்.

இ-ள். வாசனைப்புல் வாதபித்த ரோகம் சுரம் கோழை அருசி இவைகளை நீக்கும். பசி தீபனத்தை யுண்டாக்கும். 407

### பேய்ப்புல்லின் குணம்

இறுத்து ரோகம்போ மெலிவிடம் போமெய்யி
லுறுத்து கின்றசூலை யொழியுங்—கறுத்தவளி
யேய்ப்புற்ற கண்ணு யெழில்வாரை வாயுண்டாம்
பேய்ப்புல்லைக் கண்டறிந்த பேர்க்கு.

இ-ள். கறுத்த வண்டை நிகர்க்குங் கண்களையுடையாளே! மலை யில் முளைக்கின்ற பேய்ப்புல்லுக்கு மார்புநோய் எலிவிஷம் வாயுவின் குத்தல் ஆகியவைகள் போமென்க. 408

### பருங்காளான் குணம்

சயங்கிராந்தி தாகங் கரக்குமண் டப்விக்கல்
மயங்குவிக்கும் பித்த மடல்வாதம்—பயங்கரத்தைச்

செய்யவரு பேதி திட்டிமந்த நோய்களுண்டாம்
வெய்யபரு மாம்பியால் விள்.

இ-ள். பருங்காளானால் க்ஷயமும் விரணமும் தாகமும் நீங்கும். குடல் விருத்தி விக்கல் ரோகம் பித்தகோபம் மகாவாதம் அதிசாரம் கண்புகைச்சல் இவைகளுண்டாம். ஆம்பி - காளான். 409

### புற்றுக்காளான், வளைக்காளான், பொறிக்காளான் வரிக்காளான் இவைகளின் குணம்

புற்றுக்கா ளான்வலையைப் போலும் பொறிவரியை
யுற்றெழுகா ளானென் றுரைக்குமவை—முற்றும்
பழுதின்று நற்குணமும் பண்ணுவன மாந்தர்
தொழுதின்று முண்பரெனச் சொல்.

இ-ள். புற்றின் றன்மையாயும் வலைக்கண்ணுருவமாயும் பல நிறமாயும் வரிநிறைந்த குறியுள்ளதாயும் இராநின்ற நான்குவகைக் காளான்களைப் புசிக்கிற் குற்றமில்லை. நற்குணத்தைச் செய்யினுஞ் செய்யும். 410

---

## மரத்தின் சமூலவகை

### அரசமரத்தின் சமூல குணம்

அரசம்வேர் மேல்விரண மாற்றுமவ் வித்து
வெருவவருஞ் சுக்கிலநோய் வீட்டுங்—குரல்வறளுந்
தாகமொழிக் குங்கொழுந்து தாதுதரும் வெப்பகற்றும்
வேகமுத்தோ டம்போக்கு மெய்.

இ-ள். அரசம் வேர்ப்பட்டை சருமவிரணத்தையும், விதை சுக்கிலக் கெடுதியையும், கொழுந்து தொண்டையை வறட்டுகின்ற தாகத்தையும், மகரந்தம் தேக உஷ்ணத்தையும் திரிதோஷத்தையும் நீக்கும். 411

### ஆலமரத்தின் சமூல குணம்

சொல்லுகின்ற மேகத்தைத் துஷ்டவகக் கடுப்பைக்
கொல்லுகின்ற நீரிழிவைக் கொல்லுங்கா—ணல்லாவின்
பாலும் விழுதும் பழமும்விதை யும்பூவு
மேலு மிலையுமெனு விள்.

இ-ள். ஆலமரத்தின் பால் விழுது பழம் விதை பூ பட்டை இலை இவைகள் மேக வயிற்றுக்கடுப்பு மேகநீர் இவைகளை நீக்கும்.

இதுவுமது

வடமரவீழ் பல்லிறுக்கு மாமேகம் போக்கு
மடர்கொழுந் திரத்தப்போக் காற்றும்—படரதிலாம்
புல்லுருவி யென்றெய்திற் பொல்லா விடபாக
வல்லுருவி லுண்மை மதி.

இ-ள். ஆலமரத்தின் விழுது தந்தங்களை இறுகச்செய்யும். பிரமேகத்தை நீக்கும், கொழுந்து ரக்தாதிசாரத்தை விலக்கும், இந்த மரத்தில் முளைத்த புல்லுருவியால் விஷபாக ரோகம் நீங்கும். 413

வில்வமரத்தின் சமூல குணம்

பல்லவம்பூ பிஞ்சின் பழமியா வும்முறையே
வல்லவம் மேகம்மந்த மாகுன்மஞ்—செல்லுகின்ற
நோக்கமருள் விந்துநட்ட நூறு மடுத்தவர்கட்
காக்கமருள் வில்லுவத்தி லாம்.

இ-ள். வில்வமரத்தின் தளிர் சலமேகத்தையும், பூ மந்தத்தையும், பிஞ்சு குன்மத்தையும், பழம் கண்ணிருளையும், பிசின் விந்து நஷ்டத்தையும் நீக்கும். 414

பூவரசமரத்தின் சமூல குணம்

நூறுண்டு சென்றதொரு நுண்பூ வரசம்வேர்
தூறுண்ட குட்டைத் தொலைக்குங்காண்—வீறிப்
பழுத்த விலைவிதைமேற் பட்டை யிவைகண்டாற்
புழுத்தபுண்வி ரோசனமும் போம்.

இதுவுமது

குட்டங் கடிசூலை கொல்லும் விடபாகந்
துட்ட மகோதரமுஞ் சோபையொடு—கிட்டிமெய்யிற்
றுவுகரப் பான்கிரந்தி தண்மேகம் போக்கிவிடும்
பூவரசங் காய்ப்பட்டைப் பூ.

இ-ள். நூறுவருடத்திய பூவரசம்வேர் நாட்பட்ட குஷ்டத்தை நீக்கும், பழுப்பிலை விதை பூ பட்டை காய் இவைகள் கிருமி விரணம் பேதி பெருவியாதி காணுக்கடி குத்தல் விடபாகம் பெருவயிறு வீக்கம் கரப்பான் சிரங்கு சலப்பிரமேகம் இவைகளைப் போக்கும். 416

இலந்தைமரத்தின் சமூல குணம்

வேருக் காயாசம் விலகும் பசியுண்டாஞ்
சீரொத் திடுமிலைக்குச் சீழ்மூலஞ்—சோரிவிழல்

மேவெரிச் சலுங்கடுப்பு மேகபித்த மும்போகுந்
தாவும்விழி யாயிலந் தை.

இ-ள். காதுகளைத் தாவுஞ் சேல் கண்ணுளே! இலந்தைமர வேருக்கு அயர்ச்சி நீங்கும், ஜடராக்கினி யுண்டாக்கும், இலைக்குக் கீழ் மூலமும் ரத்தாதிசாரம் தேக எரிச்சல் வயிற்றுக் கடுப்பு பித்த மேகம் நீங்கும். 417

## காட்டிலந்தைமரத்தின் சமூல குணம்

விறகுணுமெண் ணெய்க்கனலா மெய்யெரிவு நீக்குஞ்
சிறியவிலைக் குக்கடுப்புத் தீரும்—முறிக்கி
அழைத்திடுபித் தும்போ மதன்கனிய டைக்குத்
தழைத்திடுமிக் காட்டிலந் தை.

இ-ள். காட்டிலந்தை மரம் நித்தியங் குடிக்கின்ற குளிர்ச்சி எண்ணெய் காய்ச்சுதற்கு விறகாகும், இலைக்குத் தேக எரிவும் கொழுந்துக்கு வயிற்றுக் கடுப்பும் பழத்தின் அடைக்குப் பித்தமும் நீங்கும்.

## நறுவிலிமரத்தின் சமூல குணம்

நறுவிலியி லைக்கிரந்த நாசமவ் வேர்க்கு
மறுவி லெலும்புருக்கி மாறு—நறுவிலியின்
றன்பழமி ரத்தபித்தஞ் சார்மேக முந்தீர்க்கு
மின்புறயா வர்க்கு மிசை.

இ-ள். நறுவிலியிலைக்கு மூலரத்தமும், வேருக்கு அஸ்திசிராவமும், பழம் ரத்த பித்தத்தையும் பிரமேகத்தையும் நீக்கும். 419

## நுணாமரத்தின் சமூல குணம்

பட்டை கரப்பனொடு பாரச் சிலேத்மசுர
மொட்டிநின்ற புண்கிரந்தி யோட்டுங்காண்—மட்டலரை
யேந்து நுணாவி னிலைமாந்தம் தீர்த்துநல்ல
காந்திதரு மேகமடுங் காண்.

இ-ள். நுணாப்பட்டை கரப்பான் கபச்சுரம் புண் கிரந்தி இவைகளையும், இலை மந்தம் மேகம் இதுகளையும் விலக்கும். ஒளியை தரும். 420

## முருங்கைமரத்தின் சமூல குணம்

பிஞ்சாற் றிரிதோஷம் பெரும்பூவாற் போக
மிஞ்சுவிழிக்குக் குளிர்ச்சியுஞ் சேரும்—பிஞ்சிலைவெப்
பாற்றுந்தோ னஞ்சறுக்கு மவ்வேர்வா தச்சினத்தை
மாற்று முருங்கை மரம்.

இ-ள். முருங்கையின் சிறிய பிஞ்சால் திரிதோஷம் நீங்கும், பூவினுல் புணர்ச்சியில் வன்மையும் கண்ணுக்குக் குளிர்ச்சியும் உண்டாம், இலை சுரத்தையும் பட்டை விஷத்தையும் வேர் வாதகோபத்தையும் நீக்கும். 421

### காட்டு முருங்கைமரத்தின் சமூல குணம்

தின்ருற் கசப்பாகுந் தீயாங்கொடு விடத்தைக்
கொன்றுவிடுங் கட்குங் குளிர்ச்சிதரு—மென்றுமைய
மோட்டும் வேர்பூவிலைகா யுற்றபிசி னும்பிஞ்சுங்
காட்டுகைப் புளமுருங்கை காண்.

இ-ள். கைப்புள்ள காட்டுமுருங்கைவேர் மகாவிஷத்தை நீக்கும் பூ கண்ணுக்குக் குளிர்ச்சிதரும் இலை காய் பிசின் பிஞ்சி என்னுமிவைகள் சிலேஷ்மரோகங்களை நீக்குமென்க. 422

### பசுமுன்னைமரத்தின் சமூல குணம்

முன்னைவேர் வாத முதிரேப்பந் தான்போக்கு
மன்ன மிறக்கு மதனிலைதான்—சொன்ன
வியல்வாத மெண்பதையு மில்லையெனச் செய்யுங்
கயல்பொருவும் கண்ணுய் கருது.

இ-ள். மச்சத்தைப் பொருங் கண்களையுடைய பெண்ணே! பசு முன்னைவேர் வாத இத்மாரோகத்தை நீக்கும்; இலை உணவைச் செலுத்துவதுந் தவிர (80) வாதரோகத்தையும் விலக்கும். 423

### மாதுளைமரத்தின் சமூல குணம்

மாதுளைவேர் பிஞ்சிவைக்கு வாந்தியதி சாரம்போந்
தாதுவுமா மக்கனிக்குத் தாகம்போஞ்—சூதைநிகர்
வன்னமுலை யாயிலைகாய் மாமலர்க ளுக்குமுனஞ்
சொன்னவை யெலாம்போகுஞ் சொல்.

இ-ள். வன்னமுலைகளுடைய மாதே! மாதுளைவேர் பிஞ்சு இவைகட்கு வமனமும் அதிசாரமும் நீங்கும்; அதன்கனி உண்டால் தாகம்போம் வீரிய விர்த்தியுமுண்டாக்கும்; இலை காய் மலர் இவைகளுக்கு முற்கூறிய ரோகங்களெல்லாம் தீருமென்க. 424

### உசிலமரத்தின் சமூல குணம் (இதைச் சீக்கிரான் என்பர்)

அள்ளுமந்த மெய்ச்சிக் கழன்மேக நீங்குநிதங்
கொள்ளுதயி லக்கறைக்குக் கொள்விறகாம்—விள்ளுமதி
லோதியடை வாளினமென் ருேன்றுகுழ லேகவிகை
யாதி யடைபிசின்கட் டை.

இ-ள். உசிலமரத்தின் வேர்பட்டை அள்ளுமாந்தத்தையும், இலையின்றாள் எண்ணெய்ச்சிக்கையும், பிசின் பித்தமேகத்தையும் நீக்கும். கட்டை பிரதிதினமும் குடிக்கின்ற எண்ணெய் காய்ச்சுதற்கு விறகாகும். கலிகை-உசிலமரம். 425

## தாளிப்பனையின் சமூலகுணம் (இதுவே கூந்தற்பனை)

எழுத்திற் கிடமா யிருக்கு நெடுங்காலம்
வழுத்தில்தன் மாழை மடலாற்—கழுத்திலுறுஞ்
சோறு மலமிறுக்குந் தூறுபா ளைப்பிழியா
மூறும்உட லுற்கிந்தாளிக் கோர்.

இ-ள். தாளிப்பனையின் மடலாகிய ஓலை யெழுத்திற் கிடமாக நீடித்திருக்கும், இதன்சோறு மலங்கட்டும்; பிழி என்கிற கள்ளு மாமிசத்தை வளர்ப்பிக்கு மென்க. 426

## தாழைமரத்தின் சமூலகுணம்

மடிச்சோற்றுன் மங்கையர்க்கு மாதாந்தப் பூப்பாம்
வெடிச்சபூ நற்பசிவி ளைக்குந்—தடிச்சமூலை
சுக்கிலத்தை நெய்யைத் துலக்குவிக்குஞ் சோபையெனு
மக்குலத்தை நீக்கு மறி.

இ-ள். தாழைச் சோற்றினுல் மாதர்க்குச் சோணிதம் விகுண மின்றியுண்டாம். பூ தீபாக்கினியைத்தரும். விழுது விந்துவையும் ரத்தத்தையும் பிரகாசப்படுத்தும், சோபா ரோகக்கூட்டங்களை நீக்கும். மடி - தாழை. 427

## வாழைமரத்தின் சமூலகுணம்

நற்கதலிக் கந்தமன ளூரார்தண் டோகுடலிற்
சிக்குமயிர் தோனஞ்சுந் தீர்த்திடுங்காண்—தொக்குறுபூ
மேகமொழிக் கும்பிஞ்சால் வெங்கடுப்போ குங்காயாற்
றேக முழுதுங்காலாந் தேர்.

இ-ள். கிழங்கிற் சூடுள்ள நறும் வாழைத்தண்டு குடலிற் சிக்கியரோமம் தோல்விஷம் இவைகளை விடுவிக்கும், பூபிரமேகம் நீக்கும் பிஞ்சினுல் மூலக்கடுப்புத்தீரும்; காயினுல் உடல்முழுதும் வாயுவாம்.

## நாட்டுவாழை, கருவாழை இவைகளின் சமூலகுணம்

நாட்டுக் கதலியது நாளுந் துவர்ப்பதனுற்
றீட்டுபித்த மையஞ் சேருங்காண்—நீட்டுகரு
வாழை திரிதோட மாற்று மதன்கிழங்கா
லாழுஞ் சுரம்விருத்தி யாம்.

இ-ள். துவர்ப்புள்ள நாட்டு வாழையினால் பயித்தியகபதோஷங்
ஞ் அதிகரிக்கும். கருவாழைவாதாதி மூன்று தோஷங்களையும்
க்கும். இதன் கிழங்கினால் அடங்கிய சுரமும் விருத்தியாகுமென்க.

## செடியின் சமூலவகை

### ஆவாரைப் பஞ்சாங்கத்தின் குணம்

மேகத்தி னாலே விளைந்தசலம் வெட்டையன
லாகத்தின் புண்ணோ யருங்கிராணி—போகத்தால்
ஆவாரைப் பஞ்சகங்கொ ளத்திசுரந் தாகமும்போ
மைவாரைக் கண்மடமா தே.

இ-ள். ஐயரிபடர்ந்த கண்களையுடைய பெண்ணே! ஆவாரைச்
செடியின்வேர் தண்டு இலை பூ காயென்னும் ஐவகை அங்கங்களால்
ரமேக மூத்திரம் வெள்ளை உட்குறுவிரணம் வாதகிராணி அஸ்தி
ாதுகதசுரம் தாகம் இவை போகுமென்க. 430

### சங்கஞ்செடியின் சமூல குணம்

வீக்கங் கரப்பான் விதாகக் கிரந்திகுன்ம
மூக்குமிகு சூலைவாய் வோடுபித்தந்—தாக்குவிடம்
வீறுமோ கண்டுலங்கும் வீசுபசி ரத்தமுண்டாங்
கூறுசங்கு வேரிலைகட் கு.

இ-ள். முட்சங்கின் வேருக்கும் இலைக்கும் சோகை கரப்பான்
தாகம் விரணம் குன்மம் கீல்வீக்கம் வாதகோபம் பித்தநோய் பல
ஞ்சு இவை விலகும், கண்ணுலக்கமும் மிகுபசியும் ரத்தவிருத்தியும்
ம். 431

### கருப்புப்பூலாஞ்செடியின் சமூல குணம்

காட்டமதில் வீரியமாங் காணவிலை மூலரத்த
வோட்ட மறிக்கு முதிருமுனைக்—கூட்டமெழச்
சித்தம்வைக்கி லவ்வண்ணஞ் செய்யுங் கருங்கனிதா
தைத்தமுற்ற பூலாவி லாம்.

இ-ள். காட்டிலுள்ள கறுப்புப்பூலாங் குச்சியினாற் பற்றுலக்
ல் வீரிய விருத்தியுண்டாம், இலைமூலரத்தப் பெருக்கைத்தடுக்கும்,
ழையரோமங்களை யுதிரவொட்டாமற் செய்யும். அத்தம்-காடு.

### கண்டங்கத்திரியின் குணம்

வேரிலைபூ காய்பழமவ் வித்துமேற் பட்டையுமிவ்
வூரி விருக்க வுடற்கைப்பும்—நீராய்
வரும்பீ னசகயஞ்சு வாசமுந்தங் காவே
யருங்கண்டங் கத்திரியுள் ஆய்.

இ-ள். கண்டங்கத்திரியின் வேர் இலை பூ காய் பழம் விதை பட்டை இவைகளால் நீரேற்றம் சலப்பீநசம் ஈளைசுவாசம் இவை போம். 433

## மணத்தக்காளியின் சமூல குணம்

காய்க்குக் கபந்தீருங் காரிகையே யவ்விலைக்கு
வாய்க்கிரந்தி வேக்காடு மாறுங்காண்—தீய்க்கு
ஞணக்கடு வற்ற லுறுபிணி யோர்க் காகும்
மணத்தக்கா ளிக்குள்ள வாறு.

இ-ள். மணத்தக்காளிக் காய்க்குச் சிலேஷ்மரோகமும் இலைக்கு நாட்புண்ணும் வேக்காடும் நீங்கும். வற்றல் நோயாளிகளுக்காகும்.

## நாயுருவியின் சமூலகுணம் (இதுவே அபமார்க்கி)

விருத்தம்

மலிகாரங் கைப்புள்ள அபமார்க்கி யின்வேரால் வசியமுண்டா
மிலைமூல வுதிரமந்தம் பேதிகபம் வியர்வுதந்தி யிறங்குமேகம்
மலையேறும் பம்டிபுரியு முள்ளரிய பசிமாற்று மதன்சமூலம்
பலமாதர்க் குள்ளமுக்கை நீக்கும்வங்கச் சிந்தூரம் பண்ணுமாதோ.

இ-ள். கார்ப்புங் கைப்புமுள்ள நாயுருவியின் வேரால் முகம் வசீகரமாம், இலை ரத்தமூலம் அதிசாரம் கபநோய் வியர்வை தந்திப் பிரமேகம் இவைகளை விலக்கும், அரிசி என்கிறவிதை பசியை நீக்கும், சமூலசாம்பல் பிரசவித்த மாதர்க்கு உதிரச்சிக்கலை ஒழிக்கு மென்க. 435

## செந்நாயுருவியின் குணம்

வெண்பா

ஓதமுறு சோபை யுயர்பாண்டு வைப்போக்குந்
தீதுறுகா மாலைநோய் தீர்க்குமினூர்—சூதகநீர்
பொய்ப்புறுகா லத்ததனைப் பொங்குவிக்குங் காரமொடு
கைப்புறு செந்நாயுருவி காண்.

இ-ள். கார்ப்புங் கைப்புமுள்ள செந்நாயுருவின் சமூலம் ஏறு வீக்கம் பாண்டு காமாலை இவைகளை நீக்கும், மாதர்களின் ருதுகால சோணிதத்தை வழக்கப்படி யுண்டாக்கும். 436

---

# கொடியின் சமூலவகை

## தூதுளையின் சமூல குணம்

விருத்தம்

தூதுபத்திரி யூண்சுவையாக்கும்பூ
காதுவைத்தழைம் பித்திடுங்காயது

வாதபித்தக பத்தையுமாற்றும்வே
ரோதும்வல்லிபன் னேயுமொழிக்குமே.

இ-ள். தூதுவளையிலை உண்டிக்குச் சுவையைத்தரும், பூ சுக்கில தாதுவை விருத்திசெய்யும் காய் திரிதோஷங்களை நீக்கும், வேருங் கொடியும் சுவாசமுதலிய சிலேஷ்மரோகங்களைப் போக்கும். 437

சுரையின் சமூலகுணம்

வெண்பா

சுரையிலையோ சோபையொடு தோன்றுநீர் சட்டைத்
தரையிலையோ வைக்காமற் சண்ணுஞ்—சுரையினது
தண்டோபித் தத்தைத் தரிக்கவொட் டாதடிக்குங்
கண்டோ ருரைப்பரிதைக் காண்.

இ-ள். சுரையிலையானது வீக்கத்தையும் மூத்திரச் சிக்கலையும் விலக்கும், கொடிய பயித்திய ரோகங்களைப் போக்குமென்க. 438

நாளையிலையின் சமூலகுணம்

நாளையிலை தன்குணங்கே ளரியர் வயிற்றி
லூளிரத்தக் குன்ம மொழிக்கும்—நாளைக்
கிழங்குக்கு மேகமொடு கீழ்கரப்பான் சகல
புழுங்குபுண் மூலமிவை போம்.

இ-ள். நாளையிலை மாதர்கள் ரத்தக் குன்மக்கட்டியைப் போக்கும் கிழங்குக்குப் பிரமேகம் கரப்பான் அளிவிரணம் மூலம்போம்.

வெண்குன்றியின் சமூலகுணம்

வீரியத்தை யுண்டாக்கும் வெண்குன்றி வித்ததன்வேர்
பாரியதா கத்தைப் பறக்கடிக்குஞ்—சீரியவோர்
சிற்றிலையி னுற்சுளுக்குத் தீருங் கொடிக்காயாற்
சுற்றிலைபேய்க் கூட்டமெனச் சொல்.

இ-ள். வெண்குன்றிவிதை சுக்கிலத்தை விருத்திக்கும், வேர் தாகத்தையும் இலைசுளுக்கையும் காய் கொடி பைசாசங்களை நீக்கும்.

---

# மரத்தின் கிழங்குவகை

---

## பனங்கிழங்கு ஒடிகிழங்கு இவைகளின் குணம்

பனங்கிழங்கா லத்திவெப்பும் பன்மேக மும்போ
மினுங்குளிர்ச்சி யோடழகு மெய்துங்—தினநமையும்
புண்ணுங் கரப்பானும் பூரிக்கு மெய்யெலா
நண்ணும் ஒடிகிழங்கி னுல்.

இ-ள். பனங்கிழங்கால் அஸ்திச்சூடு பித்தமேக முதலியவை போம், குளிர்ச்சியும் வனப்பும் உண்டாம். ஒடிகிழங்குகளுக்கு நமைச்சலும் விரணமும் கரப்பானும் வன்மையும் உண்டாம். 441

### நிலப்பனைக்கிழங்கின் குணம்

மேக வனற்றணியும் வெண்குட்டங் தான்விலகும்
போக மிகவுமுறும் பொற்கொடியே—போகாத
சூலைமே கங்களொடு துன்னுகரும் புள்ளியும்போஞ்
சால நிலப்பனைக்குத் தான்.

இ-ள். நிலப்பனைக் கிழங்கினுல் மேகம், மூத்திரவெப்பம், வெள்ளைக்குஷ்டம், விலாக்குத்தலும், ஒழுக்குப்பிரமேகம், நீலாஞ்சன ரோகம்போம், புணர்ச்சியில் இச்சை உண்டாம். 442

### மரவள்ளிக்கிழங்கின் குணம்

பித்தங் கலந்த பெருவாயு வைக்கூவு
மெத்தவனல் மந்தத்தை மேலெழுப்புஞ்—சுத்த
இரவள்ளிக் கொண்டகுழ லேந்திழையே யிந்த
மரவள்ளிக் கந்தமென வை.

இ-ள். இருண்ட கூந்தலையுடையாளே ! மரவள்ளிக்கிழங்கு பயித்திய வாததொந்தத்தையும் அக்கினி மாந்தத்தையும் உண்டாக்கும். 443

---

## செடியின் கிழங்குவகை

### மெருகன்கிழங்கின் குணம்

மெருகன் கிழங்கதுதான் மேகத்தைப் போக்குந்
துருவுகுன்ம மூலந் துடைக்கும்—பெருமீளை
அத்திசுரம் ஐயறுக்கு மங்கன் குளிர்விக்கு|
மத்திமுலை மாதே யறி.

இ-ள். மெருகன்கிழங்கு கட்டிப்பிரமேகம் வயிற்றுநோய் கபரோகம் அஸ்திதாதுகதசுரம் சிலேஷ்மாதிக்கம் ஆகியவைகளைப் போக்கும், உடலுக்குக் குளிர்ச்சியை யுண்டாக்குமென்க. 444

### அமுக்கிராக்கிழங்கின் குணம் (இதுவே அசுவகெந்தி)

கொஞ்சசங் துவர்ப்பாங் கொடியகபஞ் சூலையரி
மிஞ்சுகரப் பான்பாண்டு வெப்பதப்பு—விஞ்சி

முசிவுரு தோடமும்போ மோகமன லுண்டா
மசுவகந் திக்கென் றறி.

இ-ள். கொஞ்சந் துவர்ப்புள்ள அமுக்கிராக் கிழங்கினால் க்ஷயம் வாதசூலை வாதகரப்பான் பாண்டு சுரம் வீக்கம் சலதோஷம் இவைகள்போகும், மாதர்மேலிச்சையும் பசியும் உண்டாகும். 445

## பேதக்கிழங்கின் குணம்-(இதுவே ரேவல்சின்னி)

பேதிதனை யுண்டாக்கும் பித்தந் தனையெழுப்புந்
தோதக் குடல்தன்னைச் சுத்திசெய்பு—மோதியக்கால்
பேதிக்குந் தாதுவைப் பெருக்கிவிடு மெப்போதும்
பேதிக் கிழங்கதனைப் பேசு.

இ-ள். பேதிக்கிழங்கு விரேசனம் பித்தாதிக்கம் குடற்சுத்தி ரியவிர்த்தி இவைகளை யுண்டாக்கும். வாதகோபத்தை யடை க்கும். 446

## சேவகனார்கிழங்கின் குணம்

கபரோகந் தன்னைக் கடலில் விழச்செய்பு
மபமிருத்து வாம்விடத்தை மாற்று—மிபமுலவும்
காவக நாடாக் கருங்குயிலே கண்டுரைத்த
சேவக னார்கிழங்க தோர்.

இ-ள். சோலையிற் சஞ்சரிக்காத குயிலனையாய்! சேவகனார் ழங்கு சிலேஷ்ம தோஷத்தையும் காலமில்லாமற் கொல்லுகின்ற ஷத்தையும் போக்கும் என்க. 447

## பூமிச்சருக்கரைக்கிழங்கின் குணம்

மேகமுறு முள்ளுருக்கு வெட்டை யனற்றணியும்
போகுமே மூலம் புகலக்கேள்—பாகுமொழிப்
பொன்னனையாய் பூமிச் சருக்கரைக்கி ழங்குக்கு
வன்ன வுடல்பருக்கும் வாழ்த்து.

இ-ள். பாகொத்த மொழியையும் திருமாதனைய அழகையு டைய பெண்ணே! பூமிச்சருக்கரைக் கிழங்குக்குப் பிரமேகம் அதி ஷ்கம் வெள்ளைவீழல் சுரம் மூலம் போம் தேகம் பூரிக்கும் என்க.

## முள்ளங்கிக்கிழங்கின் குணம்

வாதங் கரப்பான் வயிற்றெரிவு சூலைகுடல்
வாதங் காசம்ஐயம் வன்றலைநோய்—மோதுநீர்க்
கோவைபன்னோய் பல்சிலந்தி குன்மமிரைப் புக்கடுப்புஞ்
சாவுமுள் ளங்கிக்கந்தத் தால்.

இ-ள். முள்ளங்கிக் கிழங்கால் வாதப்பிணி கரப்பான் வயிற்றெரிச்சல் குத்தல் குடல்விருத்திநோய் இருமல் கபம் தலைவலி நீரேற்றம் பல்நோய் பல்சிலந்தி குன்மம் சுவாசம் மூலக்கடுப்புகள் போகும். 449

## மஞ்சளின் குணம்

பொன்னிற மாகு மேனிபுலா னாற்றமும்போகும்
மன்னு புருடன் வசியமாம்—பின்னியெழும்
வாந்திபித்த தோடமையம் வாதம்போந் தீபனமாங்
கூர்ந்தநறு மஞ்ச டனக்கு.

## இதுவுமது

தலைவலிநீ ரேற்றஞ் சளையாத மேக
முளைவுதரு பீநசத்தி னூடே—வலிசுரப்பு
விஞ்சு கடிவிடமும் வீறுவிர ணங்களும்போ
மஞ்சட் கிழங்குக்கு மால்.

இ-ள். உடலைப் பொற்சாயலாக்கிப் புலால்நாற்றத்தை நீக்குகின்ற மஞ்சளினால் புருஷவசியமும் பசியுமுண்டாம். அம்மை பித்த கபவாத கோபங்கள் தலைவலி சலதோஷம் பிரமேகம் நாசிகாரோகம் ஐவகைவலி வீக்கம் வண்டுகடி விஷம் பெருவிரணம் இவைபோம் என்க. 451

## மரமஞ்சளின் குணம்

அழன்றகண மூல மருசி யுடனே
யுழன்ற கணச்சுரமு மோடுஞ்—சுழன்றுள்ளே
வீறுசுர முந்தணியும் வீசுமர மஞ்சளுக்குத்
தேறு மொழியனமே செப்பு.

இ-ள். தெள்ளிய வசனத்தையுடைய பெண்ணே! மரமஞ்சளுக்கு முக்குகணம் மூலநோய் அரோசிகம் கணச்சுரம் உட்சுரம் ஆகியவைகள் விலகும் என்க. 452

## கஸ்தூரிமஞ்சளின் குணம்

புண்ணுங் கரப்பானும் போகாக் கிருமிகளும்
நண்ணுமங் தாக்கினியு நாசமாம்—வண்மலர்த்த
கொத்த ளகமின்னே சுக்கிலமும் புந்தியுமாங்
கத்தூரி மஞ்சளுக்குக் காண்.

இ-ள். பூங்கொத்தை யணிந்த மின்போல்பவளே! கஸ்தூரி மஞ்சளுக்குப் பெருவிரணம் கரப்பான் கிருமிரோகம் அக்கினிமந்தம் இவைபோம், வீரியமும் அறிவும் விருத்தியாம். 453

### இஞ்சியின் குணம்

இஞ்சி யதனுக் கிருமலையை மோக்காளம்
வஞ்சிக்குஞ் சந்நிசுரம் வன்பேதி—விஞ்சுகின்ற
சூலையறும் வாதம்போந் துண்டாந் தீபனமாம்
வேலையுறுங் கண்ணாய் விளம்பு.

இ-ள். கடலை நிகர்த்த கண்களையுடைய மாதே! இஞ்சிக்குக் காசம் கபம் வெள்ளோக்காளம் சந்நிபாத சுரம் அதிசாரம் வாத சூலை வாதகோபம் இவை போம். பசியுண்டாம். 454

### காறு கருணைக்கிழங்கின் குணம்

கரப்பான் சிரங்குசொறி காணுக் கிரந்தி
யுரப்பாக்கு மூலநோ யோட்டும்—நிரைப்பான
மந்தமொடு கோழைதரு மாறாந் தினவளிக்கு
மந்தமிகுங் காறுகருணை.

இ-ள். காறுகின்ற கருணைக்கிழங்கு கரப்பான் பொடிச்சிரங்கு சொறி உட்கிரந்தி மந்தாக்கினி கபக்கோழை நமைச்சல் ஆகியவைகளை உண்டாக்கும். மூல ரோகத்தை நீக்கும். 455

### காறாக் கருணைக்கிழங்கின் குணம்

ஞால மதிற்கபநோய் நாடாது வாதமறு
மூல முளையிரத்த முன்பொழியு—மோலமிட்டு
மாறாக் கனல்மந்த மாறுமதி தீபனமாங்
காறாக் கருணை தனைக் கண்டு.

இ-ள். காறாக் கருணைக்கிழங்கினால் சிலேத்ம ரோகம் வாத நோய் ரத்த மூலமுளை அக்கினி மந்தம் இவை நீங்கும். பசியுண்டாம். 456

### காட்டுக் கருணைக்கிழங்கின் குணம்

மேக மணுகாது வெகுதீ பனமாகுந்
தேகமதில் மூலமுளை சேராவே—போகாச்
சுரதோஷம் போங்கரப்பான் மூன்றும் வனத்திற்
பரவு கருணைக்கிழங்காற் பார்.

இ-ள். காட்டுக் கருணைக் கிழங்குக்கு வாதம் பிரமேகம் முளை மூலமும் சுரதோஷம் போம். மிகு பசியும் கரப்பானு முண்டாகும்.

### சேம்புக்கிழங்கின் குணம்

வாத கபத்தையுள்ளே வைத்திருக்குந் தின்றக்காற்
கோதிலாத் தொண்டை தனிற்கோழை—மாதரசே

யுண்மருந்தி னற்குணம தோடுஞ்சேம் புக்கிழங்கைத்
தண்மேக சாந்தியென்பர் தாம்.

இ-ள். மாதர்கள் நாயகமே! வாதகப தோஷத்தை யுடைய சேம்புக்கிழங்கைத் தின்றால் தொண்டையில் கோழை கட்டும். நன் மருந்தின் குணமுங் கெடும். இது சுபத்திரவிய மாகையால் மேக சாந்தி என்பர். 458

## பிரப்பங்கிழங்கின் குணம்

தந்தரோ கத்தைத் தணியாத வாதத்தை
யுந்துசூ லைப்பிடிப்பை யோட்டுங்காண்—வந்து
கரப்புந் திறப்புமெனக் காட்டுநகை மாதே
பிரப்பங் கிழங்கதனைப் பேண்.

இ-ள். கரப்புந் திறப்புமெனக் காண்பிக்கும் பற்களையுடைய மாதே! பிரப்பங்கிழங்கு தந்த மூலரோகம் வாதகோபம் சூல் பிடிப்பு சிலேத்ம தோஷம் ஆகியவைகளை நீக்கும். 459

## சாறடைக்கிழங்கின் குணம்

சீதஞ் சலதோடந் தேமல் தழும்புகுன்மம்
வாதஞ் சிறுசிரங்கு வன்மேக—மோதரிய
காசமுத ஞேயெல்லாங் கான்சா றடைக்கிழங்கால்
நாசமுறு மென்றே நவில்.

இ-ள். காட்டுச் சாறடைக் கிழங்கால் சீதளம், நீரேற்றம், தேமல், தடிப்பு, குன்மம், வாதவலி, சிறுசிரங்கு, பிரமேகம், இருமல் ஆகியவைகள் தீரும். 460

## கோவைக்கிழங்கின் குணம்

முத்தோடஞ் சூலைபித்த முடுகுட்டஞ் சிக்குவைநோ
யெத்து சுவாசங் கபமினிப்பு—யித்தனையும்
கூட்டோ டகற்றுங் குளிர்ச்சியொடு காரத்தைக்
காட்டியகோ வைக்கிழங்கு காண்.

இ-ள். சீதளமும் வாதமும் உடைய கோவைக்கிழங்கு திரிதோஷம் சந்துகளின் குத்தல் பித்தகோபம் சருமதல குஷ்டம் ஜிஹ்வா ரோகம் இரைப்பு கோழை மதுப்பிரமேகம் இவைகளை நீக்கும். 461

## கொல்லன் கோவைக்கிழங்கின் குணம்

துட்டவிடம் பாண்டுவெப்பச் சூலைவா தங்கிரந்தி
குட்ட மரிப்பக் கொண்டகுநோய்—கெட்டகண்ட
மாலைபோங் கொல்லன்கோ வைக்கிழங்கால் முத்தோட
வேலைபோம் பாரில் விளம்பு.

இ-ள். கொல்லன்கோவைக்கிழங்கால் மகாவிஷம் தேகவெளுப்பு சுரம் வாதசூலை சிரங்கு பெருவியாதி நமைச்சல் வக்கிரநேத்திரம் குடல்வலி கண்டமாலை திரிதோஷம் ஆகியவைகள் நீங்கும். 462

## சீந்திற்கிழங்கின் குணம்

சீந்திற் கிழங்கருந்தத் தீபனமா மேகவகை
போந்த வுதிரபித்தம் பொங்குசுர மாந்த
மதிசாரம் வெய்யகண மாம்பலரோ யோடே
கதிவிடமுங் கெட்டுவிடுங் காண்.

இ-ள். சீந்திற் கிழங்கினால் சர்வமேகம் இரத்த பித்த ரோகம் சூட்சை மாந்தசுரம் பேதி பித்த கணம் ஆமில பித்த ரோகம் சர்ப்ப விஷம் ஆகியவைகள் போகும். ஜடராக்கினி யுண்டாகும். 463

## பொற்சீந்திற்கிழங்கின் குணம்

பொற்சீந்தி லின்கிழங்கு பொங்கு மதுமேக
மெச்சுகய ரோக மிளைப்புவிடம்—பச்சையா
யோடிரத்த பித்த முயர்சுரந்த னைக்களையுந்
தேடரிய மேனிதருஞ் சேர்.

இ-ள். பொற்சீந்திற் கிழங்கானது மதுநீர் க்ஷயம் அதிசுஷ்கம் சர்ப்பவிஷம் ரத்தபித்தம் இவைகளை நீக்கும். காயசித்தி பண்ணும்.

## கருடன்கிழங்கின் குணம்

அரையாப்பு வெள்ளை யகலாக் கொறுக்கை
கரையாத கட்டியிவை காட்டின்—வறையிற்
றிருடரெனச் சொல்லும்விடஞ் சேர்பாம்பு மஞ்சுங்
கருடன் கிழங்கதனைக் கண்டு.

இ-ள். கருடன் கிழங்குக்கு அரையாப்புக்கட்டி, வெள்ளை, கொறுக்கு, மாந்தை, அற்புதரணம் ஆகியவை நீங்கும். சர்ப்பங்கள் நடுங்கும். 465

## கூகைக்கிழங்கின் குணம்

மேனியிடும் வாய்க்கு மிருதுவா மாக்கியுண்ணத்
தானிருமல் வெப்பதிக தாகமிவை—யேனிருக்கு
மம்பே றிளங்கிழங்கி தியாவர்க்கு மாணப்பூங்
கொம்பேகூ கைக்கிழங்கைக் கூறு.

இ-ள். வாசனை பொருந்திய பூங்கொம்பனையாளே! நீர் நிறைந் துள்ள இளங் கூகைக்கிழங்கைச் சமைத்துண்ணில் தேகபுஷ்டி யுண் டாகும். இருமலும் சுரமும் தாகமும் நீங்கும். 466

### புளிநரளைக்கிழங்கின் குணம்

புளிநரளை யின்கிழங்கோ பொன்போலச் செம்பைத்
தெளிவாகச் சுத்தியது செய்யும்—வெளியான
மூல முளையறுக்கு முந்துசுவைக் கேதுவுமாங்
கோல மடமயிலே கூறு.

இ-ள். அழகிய மயில்போலுஞ் சாயலையுடையாளே! புளிநரளைக்கிழங்கு செம்பைத் தங்கம்போற் புனிதமாக்கும். வெளி முளை மூலத்தைப் போக்கும். உணவிற் சுவையைத் தரும். 467

### மாகாளிகிழங்கின் குணம்
### (இதனையே மாவலி பருநன்னாரி என்பர்)

அனலையதி பித்தத்தை யாற்றும் பசியா
மனலை யெழுப்புங் கபமறுக்கு—மானிலத்தார்
வேகாளத் தைத்தணிக்கு மென்கொடியே காட்டிலுறை
மாகாளிக் கந்தமிது வாம்.

இ-ள். வஞ்சிக்கொடி போன்ற இடையாளே! மாகாளிக்கிழங்கு உட்சூடு பித்தகோபம் சிலேத்துமநோய் வாததோஷம் : இவைகளை நீக்கும். ஜடராக்கினியை வளர்ப்பிக்கும். 468

### தண்ணீர்விட்டான் கிழங்கின் குணம்

நீரிழிவைப் போக்கு நெடுநாட் சுரத்தையெலா
மூரைவிடுத் தோட வுறுக்குங்காண்—நாரியரே
வெண்ணீர்பெய் சோமனோய் வெட்டை யனற்றணிக்குந்
தண்ணீர்விட் டான்கிழங்கு தான்.

இ-ள். மாதே! தண்ணீர்விட்டான்கிழங்கு வெகு மூத்திரம் புராதன சுரம் சோமரோகம் வெள்ளை உட்சூடு ஆகியவைகளை நீக்கும். 469

### தாமரைக்கிழங்கின் குணம்

கண்ணுக் கொளிகொடுக்குங் காசபித் தம்போக்கு
மெண்ணுங் குளிர்ச்சிதரு மேந்திழையே—மண்ணுலகிற்
றாமரைப்புண் ணும்போக்குந் தொந்திக் கடுப்பகற்றுந்
தாமரைக் கந்தமது தான்.

இ-ள். ஏந்திழையாளே! தாமரைக்கிழங்கு நேத்திர ஒளியும் குளிர்ச்சியையுந் தரும். பித்தகாசம் மாமிச தாதுவைப்பற்றிய தவளைச்சொறி வயிறு கடுப்பு ஆகியவைகளை நீக்கும். தா - தசை. மரை - தவளை. 470

### செவ்வல்லிக் கிழங்கின் குணம்

செம்பைக் களிம்பகற்றிச் சிந்தூர மாக்கிவிடும்
வெம்புபித்த மேகம் விலக்குங்கா—ணம்புவிழி
லல்லிற் கறுத்தகுழ லாரணங்கே நற்சிவப்பா
மல்லிக் கிழங்கென் பது.

இ-ள். இருளினுங்கரிய அளகபாரத்தையுடைய ஆரணங்கே! சிவந்த அல்லிக்கிழங்கு செம்பின்களிம்பை நீக்குவதுந்தவிர அதைச் சிந்தூரமாக்கும்; பித்தப்பிரமேகத்தை விலக்கும் என்க. 471

### நெய்தற்கிழங்கின் குணம்

கண்ணுங் குளிருமக்கி காணாது காந்துபித்த
மெண்ணுந் தோடம்மேக மேகுங்காண்—பெண்ணே
வயிற்றுக் கடுப்பிரத்த மாறுநெய்த லுக்குப்
பயித்தியம்போம் விந்தூறும் பார்.

இ-ள். மாதே! நெய்தற்கிழங்குக்கு அக்கினிப்புண் பித்த எரிச்சல் திரிதோஷம் பிரமேகம் இரத்தகிராணி பித்தநோய் ஆகிய இவைபோம், விழிக்குளிர்ச்சியும் சுக்கில விருத்தியும் உண்டாகும்.

### செங்கழுநீர்க் கிழங்கின் குணம்

கண்ணுங் குளிர்ந்திருக்குங் காசம்போம் பித்தமறு
மெண்ணரிய மேக மிடையுங்காண்—பெண்ணேகேள்
பொங்கமொடு மாதைப் புணர்ந்தவழ லுந்தணியுஞ்
செங்கழு நீர்க்கிழங்காற் றேர்.

இ-ள். மாதே நீ கேட்பாயாக! செங்கழுநீர்க் கிழங்கால் இருமல் பித்தநோய் சர்வமேகம் புணர்ச்சியின் வெப்பம் இவை நீங்கும், விழிக்குக் குளிர்ச்சியாம். 473

### கொட்டிக்கிழங்கின் குணம்

கொட்டிக் கிழங்கு குளிர்ச்சியென்பார் தேமலுடன்
ஒட்டிநிறை மேக மொழிக்குங்காண்—வட்டமுலை
மானே யகக்கடுப்பும் வந்தவழ லுந்தணிக்குந்
தானேயிதை யறிந்து சாற்று.

இ-ள். வட்டமாயடிபரந்த தனங்களையுடைய பெண்ணே! கொட்டிக்கிழங்கு தேமல் பிரமேகம் தேகக்கடுப்பு உடல்சூடு ஆகிய இவைகளை நீக்கும், இதனைக் குளிர்ச்சி என்பார். 474

## நிலப்பூசினிக்கிழங்கின் குணம்

மெய்யிறுகுந் தாதுகளும் வீறுமதி தேசசுமரம்
நொய்யவுட லம்பருக்கு நுண்ணறிவாம்—பைய
மலப்பூச லேகு மலர்த்திருவே நல்ல
நிலப்பூசி னிக்கிழங்கு நீ.

இ-ள். மலரில் வசிக்குந் திருவனையாளே! நிலப்பூசினிக் கிழங்கினால் தளர்ந்ததேகம் இறுகப்படுவதுமன்றி இளைத்த சப்த தாதுக்களுக்குச் செழுமையுஞ் சரும தாதுவிற்கு ஒளியும் நுட்ப அறிவும் உண்டாகும். மலபந்தம் நீக்கும் என்க. 475

## பருங்கிழங்கின் குணம்

பருங்கிழங்கொன் றெய்திற் பறையறவும் வாத
மருங்கணையா தெவ்விடமு மாறுங்—கருங்கலென
வீக்குமடல் வீக்கமொடு மேகப் பிணியுமறு
மாங்குயிலே நாளும் வழுத்து.

இ-ள். மாங்குயிலனையமாதே! பருங்கிழங்கினால் வயிற்றில் இரைச்சலைச் செய்கின்ற வாதரோகம் சர்வவிஷம் கபச்சோபை பிரமேகம் இவை நீங்கும் என்க. 476

## சன்னிக்கிழங்கின் குணம்

சன்னிக் கிழங்கு சிறுசிரங்கு புண்வளர்க்கு
முன்னிலது வூன்பன்றிக் கொவ்வுங்கா—ணன்னமே
மூல மறுக்குமினு மோதிரத்தஞ் சீழ்மாற்றுந்
தால மறியுணிசந் தான்.

இ-ள். அன்னம் போல்பவளே! ஊர்ப்பன்றி மாமிசத்துக்கு ஒப்பாகிய சின்னிக்கிழங்கு பொடிக்கிரந்தியும் புண்ணையும் விளைக்கும் மூலரோகத்தையும் ரத்தகிரகணியையும் நிவர்த்தி செய்க. 477

## பெருவள்ளிக்கிழங்கின் குணம்-(இதுவே ஆள்வல்லி)

வாதகபம் பித்தமொடு மாமூலம் வாதகுன்ம
மோதுபல நோய்மந்த முண்டாகும்—போதின்
மருவள்ளிக் கொண்டழகின் மாதே யுலகிற்
பெருவள்ளி யின்கிழங்காற் பேசு.

இ-ள். வாசனையையுடைய அனகபாரத்தாளே! பெருவள்ளிக் கிழங்கால் திரிதோஷதொந்தம் வாதமூலம் வாதகுன்மம் முதலிய சில நோய்கள் அக்கினிமந்தம் இவை உண்டாம். 478

### சிறுவள்ளிக்கிழங்கின் குணம்

மந்தமிருந் தீபனம்போ மாருக் கரப்பானுஞ்
சிந்த மிகுகபமுஞ் சேருங்காண்—தொந்தமா
மூல முளைவரு முட்டைச் சிறுகிழங்கா
லேலவ ளகமின்னே யெண்.

இ-ள். மயிர்ச்சாந்தணிந்த குழலாளே! சிறுவள்ளிக் கிழங்கால் மந்தம் கரப்பான் சிலேஷ்மவிருத்தி முளைமூலம் ஆகியவை யுண்டாம் உதராக்கினி கெடும் என்க. 479

### காய்வள்ளிக்கிழங்கின் குணம் (இதுவே வெற்றிலைவள்ளி)

அக்கினி வெப்பை யடக்குமென்பார் வாதமொடு
தொக்கிலதி புண்சிரங்கைத் தூண்டிவிடும்—மிக்குபசும்
வேயையுடைத் தோளணங்கே வெற்றிலையாம் வள்ளியெனுங்
காயையுடை வள்ளியது காண்.

இ-ள். பசிய மூங்கிலனைய தோள்களையுடையாளே! காய்வள்ளிக்கிழங்கு வாதரோகத்தையும் சருமத்தின்மீது பெரிய சிறிய விரணங்களையும் விளைவிக்கும், உஷ்ணசாந்தி என்பர். 480

### சருக்கரைக்கிழங்கின் குணம்

உள்ளிற்கோ ணன்மருந்தை யும்முறிக்குஞ் சர்க்கரையாம்
வள்ளிக் கிழங்கதிக மந்தங்கா—னுள்ளின்முளை
மூலம் விளையுநித மோடிரைச்ச லுண்டாகுங்
கோலவயி றுங்கடுக்குங் கூறு.

இ-ள். அதிமந்தமுள்ள சருக்கரை வள்ளிக்கிழங்கு திவ்விய ஔஷதகுணத்தைக் கெடுப்பதுமன்றி மூலமுளையையும் குடலிரைச்சலையும் கிரகணியையும் விளைவிக்கும். 481

---

# புல்லின் கிழங்குவகை

### அறுகங்கிழங்கின் குணம்

ஆறு வழலெல்லா மாறுமுத் தோடமது
வீறு திருக்குநல்ல மேனிதரும்—மாருக்
கடியமா லங்கலணி காரளக மின்னே
கொடியறுகம் புற்கிழங்கைக் கூறு.

இ-ள். வாசனை பொருந்திய மலரையணிந்த கரிய கூந்தலாளே! அறுகின் கிழங்கால் தணியாத பற்பல வெப்பமும், திரிதோஷ ரோகங்களும் நீங்கும், சரீர வனப்புண்டாகு மென்க. 482

## கோரைக்கிழங்கின் குணம்

சீதசுரந் தீர்க்குஞ் செம்புனற்பித் தம்போக்கும்
வாத சுரந்தணிக்கும் வையகத்தில்—வேதைசெய்ய
வந்த பிணியையெல்லாம் வாட்டும் முத்தக்காசு
கொந்துலவும் வார்குழலே கூறு.

## இதுவுமது

அதிசாரம் பித்த மென்றுருக மையங்
குதிவாதஞ் சோபக் கொடிய—முதிர்வாந்தி
யாரைத் தொடர்ந்தாலு மவ்வவர்க்கெ லாங்குளத்துக்
கோரைக் கிழங்கைக் கொடு.

இ-ள். வாசனை வீசும் நீண்ட கூந்தலாளே! முத்தக்காசு என்கிற கோரைக்கிழங்கு சுளிர்சுரம் ரத்தபித்தம் வாதசுரம் பேதி பயித்தியதோஷம் பித்ததாகம் கபரோகம் குதிகாலைப்பற்றிய வாயு மூர்ச்சை திரிதோஷவாந்தி ஆகியவைகளையும், துன்பத்தைத் தருகின்ற சிற்சில ரோகங்களையும் போக்கும். 484

## மருட்கிழங்கின் குணம்

தொண்டைக்கட் டையுந் தொலையு மகோதரமும்
பண்டைப்பல் வீக்கம் பறக்குங்காண்—கெண்டைவிழி
மானே மருட்கிழங்கால் மாறுமூ லங்களெல்லாந்
தானே பசியெழும்புந் தான்.

இ-ள். மகர நோக்கியே! மருட்கிழங்கால் நெஞ்சைப் பற்றிய கபக்கட்டு பெருவயிறு பலவிதசோகை மூலமிவைபோம், தீபாக்கினி உண்டாகும். 485

## வெங்காயத்தின் குணம்

வெப்பமூ லங்கிரந்தி வீறிரத்த பித்தமுடன்
செப்புநா அக்கரந்தீ ராத்தாகம்—வெப்புக்
கடுப்பறு மந்தஞ்சந்நி காசம்வயிற் றுப்பல்
தடிப்பேறும் வெங்காயத் தால்.

இ-ள். வெங்காயத்தால் தேக உஷ்ணம் மூலம் சிரங்கு இரத்த நோய் பித்தம் மண்டகம் தாகம் உஷ்ணபேதி இவை நீங்கும். அக்கினிமாந்தம் சன்னிபாதம் இருமல் வயிற்றுப்பிசம் இவை விருத்தியாம். 486

நரிவெங்காயத்தின் குணம் (இதுவே காட்டுருள்ளி)

நஞ்சோடு சீதகபம் நாடா திரைப்புமறும்
பஞ்சாக மூலபகந்தரம் போம்—பஞ்சணைசேர்
வீட்டுள் ளிருக்கும் விநோத மடமயிலே
காட்டுள்ளி யின்கிழங்கைக் கண்டு.

இ-ள். பஞ்சணை பொருந்திய வீட்டிற் சஞ்சரிக்கும் விநோத மயில்போல்பவளே! நரிவெங்காயத்தால் சர்ப்ப விஷம் சீதளத்தா லுண்டாகிய கோழை சுவாசம் மூலகப ரோகம் ஆகியவை போம்.

கிட்டிக்கிழங்கின் குணம்

கிட்டிக் கிழங்கால் கிளர்தீ பனமுண்டா
மெட்டிக் கிழமேக மேகுங்காண்—துட்டஞ்செய்
பித்த சமனமுமாம் பேசில்கப நாசமுமாம்
நிர்த்த மயிலே நினை.

இ-ள். நடனமாடு மயிலனையாளே! கிட்டிக்கிழங்கால் நாட்பட்ட பிரமேகமும் சிலேத்ம நோயும் போகும். மிகுபசியும் பித்த சாந்தியும் உண்டாகும் என்க. 488

கிழங்குகளின் பொதுக் குணம்

கிழங்குவகை யின்பேரைக் கேண்மூலத் தூண்மை
முழங்கும்வா தத்தின் முரசம்—வழங்குகின்ற
சூரணக்கி ழங்குகளைத் துய்த்தார் பெயர்சொல்லிற்
சீரணக்கு டும்பமங்கே சொல்.

இ-ள். கிழங்கு வகைகளால் மூலவாயு விருத்தியாம். கருணைக் கிழங்குகளால் மூல ரோகங்கள் நீங்கும். 489

---

# மரத்தின் வேர்வகை

## வில்வமரத்தின் வேர்க் குணம்

வில்லுவத்தின் வேருக்கு வீறுகுன்ம வாயுகபம்
சொல்லவொண்ணாப் பித்தந் தொடர்சோபை—வல்லகப
தாகசுர நீரேற்றஞ் சன்னியொடு மெய்வலியும்
வேகமொடு நீங்குமே விள்.

இதுவுமது

அக்கினி மாந்தம் மரோசியதி சாரம்விக்கல்
நிற்கரிய பித்தசுரம் நீள்சாந்தி—சுட்கரோ

யாதிபன்ஞே யேகு மழகோடு புஷ்டியுண்டாங்
கோதில்வில்வ வேரதனைக் கொள்.

இ-ள். வில்வ வேரினுல் வாத குன்மம் கபாதிக்கம் பித்த சோகைக் கபத்தால் வந்த தாகம் சலக்கோவை சந்நிபாதம் தேகக் கடுப்பு மந்தாக்கினி அருசி உஷ்ணபேதி விக்கல் பித்தரூட்சை வமனம் அதிசுட்கம் முதலிய ரோகங்கள் நீங்கும், அழகும் தேக புஷ்டியுமுண்டாம் என்க. 491

## பாதிரிமரத்தின் வேர்க் குணம்

பாதிரியின் வேரினுற் பாரமது மேகம்போ
மோதுகரப் பானுழலை யோடிவிடும்—மாதேகேள்
கண்ணெரிவு காதெரிவு கையெரிவு காலெரிவு
நிண்ணயமாய்ப் போகு நிசம்.

## இதுவுமது

மேகத்தால் வந்த மிகுபிளவை மாவிரணம்
போகத்தால் வந்து பொருமூல—மாகத்தில்
வந்தசொறி யோடுகப வாதமந்த மும்போகும்
கொந்தடரும் பாடலத்தாற் கூறு.

இ-ள். மாதரசே! பாதிரி வேருக்கு மதுமூத்திர கரப்பான் உழலை கண் காது கை கால் இவைகளைப்பற்றிய எரிச்சல் மேகப் பிடகம் பெருவிரணம் ஆக்கந்து மூலரோகம் புடை சிலேத்ம வாத தொந்தம் அக்கினி மாந்தம் போகும். பாடலம் என்பது பாதிரி என்க. 493

## சண்பகமரத்தின் வேர்க் குணம்

தீராத வுட்டினத்தைத் தீர்க்குஞ் சுரம்போக்கும்
நேரே பசியெழுப்பு நிச்சயமே—யோருங்கால்
பண்புறுகண் டோடத்தைப் பற்றறுக்கும் வாசமுள்ள
சண்பகம ரத்தின்வேர் தான்.

இ-ள். சண்பக வேரானது உஷ்ணம் சுரம் நேத்திர தோஷம் ஆகியவைகளை நீக்கிப் பசியை யுண்டாக்கும் என்க. 494

## மாமரத்தின் வேர்க் குணம்

சீதரத் தப்போக்கைச் சிக்கெனவே தான்பிடிக்கும்
போதவயிற் றுக்கடுப்பைப் போக்குங்கா—ணேதுகின்ற
வாந்தியையுந் தீர்க்கும்வெளி மாமரத்தின் வேர்பட்டை
பூந்துகிலின் மாதே புகல்.

இ-ள். அழகிய மேகலாபரணத்தை யணிபவளே! மாமரத்தின் வேர்ப் பட்டையானது சீதாத்த பேதி வயிற்றுக்கடுப்பு வாந்தி என்னும் இவைகளைப் போக்கு மென்க. 495

## இலுப்பைமரத்தின் வேர்க் குணம்

புண்ணும் புரையுமறும் போதத் துவர்ப்பாகு
மெண்ணு மகக்கடுப்பி றுக்குமே—பெண்ணேகேள்
நீரிழிவு மேகும் நெடுமோமை மூலத்தாற்
பேராக் கடுப்பிரத்தம் போம்.

இதுவுமது

மந்த மரோசி மகாசூலை சர்வசுரம்
விந்துநட்டந் தாகமொடு மெய்யுளைப்பும்—முந்த
அலுப்பைப்பெற் றேகு மளகத்திற் காகா
விலுப்பைக்குச் சூடதிக மெண்.

இ-ள். பெண்ணே! நீ கேட்பாயாக: துவர்ப்பாகிய இலுப்பை வேரினால் விரணம் புரை வயிற்றுக் கடுப்பு அதிமூத்திரம் இரத்தக் கிராணி அக்கினிமாந்தம் அருசி வாதசூலை சகல சுரம் சீண சுக்கிலம் தாகம் சரீர அயர்வு ஆகியவை நீங்கும். தலை ரோமங்களுக்கு ஆகாது. உஷ்ணகாரி என்க. ஓமை - இலுப்பை. 497

## மருதோன்றிமரத்தின் வேர்க் குணம்

சோணித தோடமெலாஞ் சொல்லாம லேகிவிடும்
பேணுவார்க்கி ரத்தமொடு பித்தம்போம்—காணு
ஒருதோன்ற லென்னுமத னேத்துமெழின் மாதே
மருதோன்றி வேரால் மறைந்து.

இ-ள். ஒப்பற்ற புருஷனாகிய மன்மதன் புகழும் அழகுடையாளே! மருதோன்றி வேரால் மாதர்கள் ருதுகால சோணித தோஷங்கள் அசிர்க்காரோகம் பித்த நோய் ஆகியவைகள் நீங்கும். 498

## வெண்காலிமரத்தின் வேர்க் குணம்

விம்மு மகோதரமு மேனேக்கும் பித்தமொடு
சிம்மகிருஷ்ண தோஷமுமுட் சேருமே—கம்மூகின்ற
கள்ளைப் பெருநீருங் காணாது கைப்பையுறும்
வெள்ளைக் கருங்காலி வேர்க்கு.

இ-ள். கசப்புமுள்ள வெள்ளைக் கருங்காலி வேருக்குப் பெருவயிறு ஏறுபித்தம் கிருஷ்ண சிம்மக தோஷம் சுறுமேகம் இவை நீங்கும். 499

கருங்காலிமரத்தின் வேர்க் குணம்

கைப்புற் றிருக்குங் கருங்காலி வேருக்கு
மைப்புழுவும் பாகம் மதுநீரு—மெய்க்குளெழு
குட்டமுதி ரப்போக்குங் கூவி யழுதகலும்
மட்டுதுபூங் கோதாய் வழுத்து.

இ-ள். தேன் பொருந்திய பூங்கோத்துகளை யணிந்த கூந்தலாளே! கைப்புள்ள கருங்காலி வேருக்கு மாசயக்கருங்கிருமி பாகுபடு மதுநீர் ருசிய சிம்மக் குஷ்டம் இரத்தபேதி ஆகிய இவை விலகும். 500

எட்டிமரத்தின் வேர்க் குணம்

ஆலவிட மொக்கு மருந்தக் கடிதீரு
ஞாலமதிற் பித்தகுண நாசமா—மாலைக்கோ
லட்டிய பாகுமொழி யானவிட முட்டியெனு
மெட்டி மரவே ரிது.

இ-ள். ஆலையிலாடும் பாகனைய மொழியாளே! விஷமுஷ்டி என்கிற எட்டிமரம் ஆலவிஷம் போன்றது. இதன் வேரால் மகாசர்ப்ப விஷங்களும் பயித்திய குணங்களும் நீங்கும். 501

புங்கமரத்தின் வேர்க் குணம்

வாதக் கடுப்பு மகாமூர்ச்சை தாபசுரம்
வாதகுன்மம் ரத்தத்தால் வந்திடுநோ—யோதுகின்ற
புண்புரையும் வல்விடமும் போகுந் திரண்டுருண்டே
பண்புறுபுங் கம்வேர்க்குப் பார்.

இ-ள். புங்கமர வேரினால் வாதக் குடைச்சல் திரிதோஷ மூர்ச்சை தாபசுரம் வாயு குன்மம் இரத்த தாதுவினாற் பிறக்கின்ற ரோகங்கள் விரணம் புரையோடல் சர்ப்ப விஷம் ஆகியவைகள் போம். 502

நாவல்மரத்தின் வேர்க் குணம்

வாத மறுங்கரப்பான் மாறும் விரணமோ
டோதமுறு நீரிழிவு முந்தூரத்த—சீதமுங்காய்
மாவன் சுரமும் வளர்மேக மும்போகும்
நாவன் மரவேரி னால்.

இ-ள். நாவல்மர வேரால் வாத விகாரம் கரப்பான் புண் வெகுமூத்திரம் இரத்த சீதபேதி வாதசுரம் மச்சாமேகம் இவை விலகும். 503

## கருவேலமரத்தின் குணம்

கருவேலின் வேர்க்குக் கடுப்பிரத்தம் மாந்தம்
பருவாத மூறுகரப் பானும்—பெருகும்
பெரும்பேதி யும்போக்கும் பேச வினிக்குங்
கரும்பே யிதனைக் கருது.

இ-ள். பேசவினிக்குங் கரும்பனையாளே! கருவேல வேரினல் இரத்தக்கடுப்பு அக்கினிமந்தம் மகாவாதம் கரப்பான் அதிசாரம் ஆகியவைகள் போகுமென்க. 504

## உருதிவ்ராக்கின் வேர்க்குணம்.(இது ஒதி எனமருவியது)

புண்புரை கிராணிரத்தப் போக்கதிசா ரக்கடுப்புந்
திண்பெறுதா கஞ்சோபஞ் சீதளமும்—நண்பி
லதிவிரைவாய்த் தாண்டு மணங்கே பருத்த
வுதிமரத்தின் றாரினு லோர்.

இ-ள். தெய்வமகளிரனைய பெண்ணே! உருதி மரவேரினல் விரணம் புரைசிரகணி ரத்தபேதி சீதக்கடுப்பு தாகம் மூர்ச்சை பித்தசீதளம் இவை விலகும் என்க. தார்-வேர். 505

## அத்திமரத்தின் குணம்

நல்லகத்தி வேரதனை நாடுங்கால் மேகமெனுஞ்
சொல்லகலுந் தாகமறுஞ் சொல்லவெனின்—மெல்லமெல்ல
மெய்யெரிவு கையெரிவு மேகத்தி னுள்ளெரிவு
மையெரிவும் போமென் றறி.

இ-ள். நல்ல அகத்திவேரால் வெள்ளை விதாகம் உடல் உள்ளங்கை ஆண்குறி நாளம் பஞ்சேந்திரியமென்னும் விடங்களில் எரிச்சலிவை நீங்கும். 506

## நெல்லிமரத்தின் குணம்

வமன மரோசியறும் வாதமுதன் மூன்றுஞ்
சமன முறுமலமுஞ் சாரும்—மமனசுரம்
புல்லிவரு தோடசந்நிப் பொல்லாச் செயலும்போய்
நெல்லிமர வேரை நினை.

இ-ள். நெல்லிவேரால் வாந்தி அருசி திரிதோஷகோபம் தருணசுரத்தில் அபத்தியத்தாற் பிறந்த பீதஜிம்மகதோஷம் அதிற்கிளைத்த சந்நி இவைதீரும், திரிதோஷமவனமும் மலப்போக்கும் உண்டாமென்க. 507

## கருவேலமரத்தின் குணம்

கருவேலின் வேர்க்குக் கடுப்பிரத்தம் மாந்தம்
பருவாத மூறுகரப் பானும்—பெருகும்
பெரும்பேதி யும்போக்கும் பேச வினிக்குங்
கரும்பே யிதனைக் கருது.

இ-ள். பேசவினிக்குங் கரும்பனையாளே! கருவேல வேரினால் இரத்தக்கடுப்பு அக்கினிமந்தம் மகாவாதம் கரப்பான் அதிசாரம் ஆகியவைகள் போகுமென்க. 504

## உருதிவ்ராக்கின் வேர்க்குணம்.(இது ஒதி எனமருவியது)

புண்புரை கிராணிரத்தப் போக்கதிசா ரக்கடுப்புந்
திண்பெறுதா கஞ்சோபஞ் சீதளமும்—நண்பி
லதிவிரைவாய்த் தாண்டு மணங்கே பருத்த
வுதிமரத்தின் றாரினு லோர்.

இ-ள். தெய்வமகளிரனைய பெண்ணே! உருதி மரவேரினால் விரணம் புரைசிரகணி ரத்தபேதி சீதக்கடுப்பு தாகம் மூர்ச்சை பித்தசீதளம் இவை விலகும் என்க. தார்-வேர். 505

## அத்திமரத்தின் குணம்

நல்லகத்தி வேரதனை நாடுங்கால் மேகமெனுஞ்
சொல்லகலுந் தாகமறுஞ் சொல்லவெனின்—மெல்லமெல்ல
மெய்யெரிவு கையெரிவு மேகத்தி னுள்ளெரிவு
மையெரிவும் போமென் றறி.

இ-ள். நல்ல அகத்திவேரால் வெள்ளை விதாகம் உடல் உள்ளங்கை ஆண்குறி நாளம் பஞ்சேந்திரியமென்னும் விடங்களில் எரிச்சலிவை நீங்கும். 506

## நெல்லிமரத்தின் குணம்

வமன மரோசியறும் வாதமுதன் மூன்றுஞ்
சமன முறுமலமுஞ் சாரும்—மமனசுரம்
புல்லிவரு தோடசந்நிப் பொல்லாச் செயலும்போய்
நெல்லிமர வேரை நினை.

இ-ள். நெல்லிவேரால் வாந்தி அருசி திரிதோஷகோபம் தருணசுரத்தில் அபத்தியத்தாற் பிறந்த பீதஜிம்மகதோஷம் அதிற்கிளைத்த சந்நி இவைதீரும், திரிதோஷமவனமும் மலப்போக்கும் உண்டாமென்க. 507

## கருங்காலிமரத்தின் வேர்க் குணம்

கைப்புற் றிருக்குங் கருங்காலி வேருக்கு
மைப்புழுவும் பாகம் மதுநீரு—மெய்க்குளெழு
குட்டமுதி ரப்போக்குங் கூவி யழுதகலும்
மட்டுதுபூங் கோதாய் வழுத்து.

இ-ள். தேன் பொருந்திய பூங்கொத்துகளை யணிந்த கூந்தலாளே! கைப்புள்ள கருங்காலி வேருக்கு மாசயக்கருங்கிருமி பாகுபடு மதுநீர் ருசிய சிம்மக் குஷ்டம் இரத்தபேதி ஆகிய இவை விலகும். 500

## எட்டிமரத்தின் வேர்க் குணம்

ஆலவிட மொக்கு மருந்தக் கடிதீரு
ஞாலமதிற் பித்தகுண நாசமா—மாலைக்கோ
லட்டிய பாகுமொழி யானவிட முட்டியெனு
மெட்டி மரவே ரிது.

இ-ள். ஆலையிலாடும் பாகனைய மொழியாளே! விஷமுஷ்டி என்கிற எட்டிமரம் ஆலவிஷம் போன்றது. இதன் வேரால் மகாசர்ப்ப விஷங்களும் பயித்திய குணங்களும் நீங்கும். 501

## புங்கமரத்தின் வேர்க் குணம்

வாதக் கடுப்பு மகாமூர்ச்சை தாபசுரம்
வாதகுன்மம் ரத்தத்தால் வந்திடுநோ—யோதுகின்ற
புண்புரையும் வல்விடமும் போகுந் திரண்டுருண்டே
பண்புறுபுங் கம்வேர்க்குப் பார்.

இ-ள். புங்கமர வேரினால் வாதக் குடைச்சல் திரிதோஷ மூர்ச்சை தாபசுரம் வாயு குன்மம் இரத்த தாதுவினாற் பிறக்கின்ற ரோகங்கள் விரணம் புரையோடல் சர்ப்ப விஷம் ஆகியவைகள் போம். 502

## நாவல்மரத்தின் வேர்க் குணம்

வாத மறுங்கரப்பான் மாறும் விரணமோ
டோதமுறு நீரிழிவு முந்துரத்த—சீதமுங்காய்
மாவன் சுரமும் வளர்மேக மும்போகும்
நாவன் மரவேரி னால்.

இ-ள். நாவல்மர வேரால் வாத விகாரம் கரப்பான் புண் வெகுமூத்திரம் இரத்த சீதபேதி வாதசுரம் மச்சாமேகம் இவை விலகும். 503

### அருநெல்லி மரத்தின்வேர்க் குணம்

சுத்த சுரமருசி தோலாப் பெருவாந்தி
பித்தசந்நி பாதமிவை பேருங்காண்—மெத்தமன
நாறுமலர் கூந்தன்மின்னே நாவுக் கினிமையெனக்
கூறுமரு நெல்லியின்வேர்க் கு

இ-ள். மிகுபரிமளம் பொருந்திய மலர்க்கூந்தலை யுடையாளே! அருநெல்லி மரவேரால் தனிச்சுரம் அரோசிகம் திரிதோஷவாந்தி இரத்தபுஷ்டி சந்நிபாதம் ஆகியவைகள் போகுமென்க. 508

---

## செடியின் வேர்வகை

### ஆடாதோடையின்வேர்க் குணம்

காசமொடு மந்தங் கதித்தபித் தங்கொடுஞ்சு
வாசங் கழுத்து வலிமுதனோய்—கூசி
யோடா திராதிங் கொருநாளு மொண்டொடியே
யாடாதோ டைத்துருக்கஞ் சி.

இ-ள். ஆடாதோடை வேரினால் இருமல் அக்கினிமாந்தம் சுவேதபித்தம் மகசுவாசம் களரோக முதலிய நோய்கள்போம். 509

### சங்கம்வேர்க் குணம்

சங்கம்வேர்ப் பட்டை சளியிரு மலைச்சுரத்தை
யங்கவா தக்கடுப்பை யாடத்தைப்—பங்கசர்ப்பி
செய்யுங் கிரந்தியையுட் டீகாமங் கிருமியையிவ்
வையந் தனிலொழிக்கு மால்.

இ-ள். சங்கம் வேர்ப்பட்டை கோழை காசம் கபச்சுரம் வாதக் கடுப்பு சிலேத்மசோகை பங்கவிசர்ப்பி உட்சுரம் தணியாதகோபம் கிருமிரோகம் ஆகியவைகளைப் போக்குமென்க. 510

### பேராமுட்டிவேர் குணம்

வாதசுரந் தாகம் மதலைக் கணமாந்தஞ்
சீதசுரம் பித்தமெனச் செப்பணங்கு—மோதுநம்மாற்
சேராமுட் டிக்கேகுஞ் செய்ய மடமயிலே
பேராமுட் டித்தூரைப் பேசு.

இ-ள். அழகு பொருந்திய மயில்போலுஞ் சாயலையுடையாளே! பேராமுட்டி வேரினால் வாதசுரம் தாகரோகம் மாந்தகணம் குளிர்ச்சுரம் பித்தரோகம் ஆகிய இவைகள் போகுமென்க. 511

### சித்தாமுட்டி வேர்க்குணம் (இதுவே குறுந்தொட்டி)

அத்தி சுரமுதல வநந்தசுரம் பித்தமும்போ
மெத்த் விழிக்கொளியாம் வீறுதயி—லத்திற்காம்
நற்று மரைதருவு நாடு மெழிற்றிருவே
சித்தாமுட் டித்தூரைச் செப்பு.

இ-ள். நல்ல தாமரையில் வசிக்கு மிலக்குமியையொத்த அழகுடையாளே ! சித்தாமுட்டிவேரினால் அஸ்திசுர முதலிய சுரங்களும் பித்தநோயும் நீங்கும் கண்ணுக்கொளியாம் தயிலத்துக்குதவும்.

### செந்தொட்டி வேர்க்குணம்

சந்துவலி வாதந் தாகஞ் சுரங்கரப்பா
னுந்துசுவா சந்தப மோடுங்கா—ணந்தமிகு
மிந்தொட் டியவதன வின்ப மடமயிலே
செந்தொட்டி வேரூற் றெளி.

இ-ள். சந்திரன்போன்ற முகத்தினையுடைய இன்பந்தரு மடமயிலே! செந்தொட்டிவேரினால் சகன விருதவாதரோகம் விதாகம் ரூட்சை கடுவன் இரைப்பு கோழை ஆகியவைபோம். 513

### முட்காவேளை வேர்க்குணம்
### (இதுவே முக்காவேளையென மருவியது)

தாகாதி மந்த மதிசார நாவறட்சி
போகாச் சுரந்தாபம் போக்கமருந்—தோகையிற்
சிக்காவே ளைப்பதத்தைத் தின்னச்செய் விக்கவென்றுன்
முக்காவே ளைப்பதத்தை முன்.

இ-ள். முக்காவேளை வேரினால் வாததாகம் மந்தாக்கினி அதிசாரம் நாவறட்சி சந்தசுரம் வெப்பம் அன்னத்துவேஷம் போம்.

### செங்கத்தாரி வேர்க்குணம்

செங்கத்தா ரிச்சடைக்குத் தீராத வன்மேகம்
பொங்கி வருகிரந்திப் புண்புரைகள்—தங்குகின்ற
சத்திக சிலேட்டமந் தனித்த மகாவாத
முத்திகைவிட் டோடும் மொழி.

இ-ள். செங்கத்தாரிவேருக்கு பிரமேகநீர் ஓட்டுப்புண் புரைகள் கீல்களை வீங்கச்செய்கிற கபம் மகாவாத மிவைபோம். சடை-வேர்.

### மரக்காரை வேர்க்குணம்

சீதங் கடுப்புத் திரிதோட மாந்தபித்த
வாதங் கரணைய மாந்தகண்—மியாதிங்

கிரிக்கான நன்மருந் தென்பா ருலகில்
மரக்காரை வேரால் மதி.

இ-ள். மரக்காரைவேரால் சீதக்கடுப்பு திரிதோஷம் உதிர பித்தவாதநோய் கரப்பான்கபம் கணமாந்தமிவைபோம் இது வாந்தி மருந்து. 516

## குத்துக்காற் சம்மட்டிவேர்க் குணம்

சாரமுறு குத்துக்காற் சம்மட்டி வேரெனச்சொற்
கோரமுள்ள மாவாதக் கூட்டமெங்கே-வீரமுறு
மேகத் தொகுப்பெங்கே வீறுதிமிர் வாதமெங்கே
சோகத் தளர்ச்சியெங்கே சொல்.

இ-ள். பச்சையுள்ள குத்துக்காற் சம்மட்டி வேரினால் மகா வாதம் சர்வ மேகக்கட்டி திமிர்வாத மூர்ச்சைபோம். 517

## அவுரிவேர்க் குணம் (இதுவே நீலி)

எல்லா விடங்களுக்கு மேற்ற முறிப்பாகும்
பொல்லாச் சுரமூர்ச்சை பொங்குவட்டை—நில்லாப்
பவுரிதருங் குன்மமுதற் பன்னோ யொழியு
மவுரிதரு வேருக் கறி.

இ-ள். அவுரி வேரினால் சர்வவிஷம் ரூட்சை மூர்ச்சை வெள்ளை வயிற்றுநோய் முதலிய பலநோய் ஆகியவை போம். 518

## களாவேர்க் குணம் (இது கிளா என மருவியது)

விடத்துறுநோய் பித்தமைய வேர்வை யதிதாகந்
திடத்தவுதி ரத்தினது சிக்கற்—கடத்துளெழு
மக்கினி மாந்தமிவை யண்டா தொருநாளுஞ்
சிக்கெனக் களாவேரைச் சேர்.

இ-ள். களாவேரினால் விஷசம்பவரோகம் பயித்தியம் சுபாதிக்கம் கபவியர்வை விதாகம் பிரசவ அழுக்கு மந்தாக்கினி நீங்கும்.

## வெட்டிவேர்க் குணம் (இதுவே குருவேர்)

கட்டளைக்கலித்துறை

பித்த விதாகஞ் சசிகா மிலங்கறைப் பித்தமனம்
தத்திடு குட்டஞ் சிரநோய் களமடி தாதுநட்ட
மத்த மனற்புண் டடைப்புண்வன் மூர்ச்சை வரிவிழிநோய்
வித்திர மேகத்தின் கட்டியும் போம்வெட்டி வேரினுக்கே.

இ-ள். வெட்டிவேருக்குப் பித்தத்தால் அகாலத்தில் உண்டாகிற தாகம் சோமரோக காமாலை சத்தபித்தம் சுரம் விரவுகின்ற குஷ்டம் தலைநோய் கழுத்துநோய் சுக்கிலநஷ்டம் உன்மத்தம் தீப்புண் மூலைச்சிலந்தி திரிதோஷ மூர்ச்சை நேத்திரரோகம் வித்திருக்கட்டி இவை நீங்கும். 520

# கொடியின் வேர்வகை

## நாகமல்லிகை நாகமுட்டிவேர்க் குணம்

வெண்பா

சீராரு நாகல்வகைச் சிற்சிவையைக் கண்டக்காற்
றீரா நமைச்சற் செறிபுடைக்க—ணீராருஞ்
சன்னப் புழுச்சங்கந் தாங்காவாஞ் சாம்புனத
வன்னக் குயிலனையாய் வாழ்த்து.

இ-ள். வன்னக்குயிலனைய மாதே! நாகமல்லிகை வேரால் ஒழி யாத்தினவும் நெருங்கிய புடைகளும் ரசதாதுவைப்பற்றிய கிரு மிக் கூட்டமும் நீங்கும் என்க. சிவை-வேர். 521

## காட்டுமல்லிகைவேர்க் குணம்

சுரங்களொடு நாவறட்சி தொந்திமந் தம்பேதி
யுரங்கதித்த தாகமிவை யோட்டும்—வருஞ்சேரார்
தாகமல்லி லோடுந் தாகமைபோ லோடிவிடுங்
காமல்லி கைவேரரற் கண்.

இ-ள். காட்டுமல்லிகை வேரினுல் சாவசுரம் நாவறளல் அக் கினிமந்தம் அதிசாரம் விதாகம் ஆகியவைகள் போகும். 522

## சிறுகுறிஞ்சாவேர்க் குணம்

சிறுகுறிஞ்சா வேர்விடத்தைத் தீர்க்கு மகிலத்
துறுசுரங் கள்வாத மொழிக்குந்—தெறிபாணக்
கண்ணு யிருமன்முதற் காசந் தணிக்கும்
விண்ணு டருக்குமிதை விள்.

இ-ள். ஏவுகின்ற பாணமனைய கண்களை யுடையாளே! சிறு குறிஞ்சா வேரானது அற்ப செந்துக்களின் நஞ்சு வாதசுரம் வாத தோடம் காசம் சுவாசகாசம் இவைகளைப் போக்குமென்க. 523

## பேய்ச்சுரைவேரின் குணம்

கடுவேறு பேய்ச்சுரைவேர் கண்டா லரவின்
கடுவேறு துண்மைமுக் காலுங்—கொடுவிடமு
மீளை யிருமல்விட் டேகுமுண்டால் வாந்தியுண்டாம்
வாளையுறுங் கண்ணேய் வழுத்து.

இ-ள். வாள்போலுங் கண்ணையுடைய மாதே! கசப்புள்ள பேய்ச்சுரை வேரினுல் சர்ப்ப சப்தவேகம் மகாவிஷம் கோழை காசம் இவை நீங்கும். இதில் வமனம் உண்டாம் என்க. 524

## முசுமுசுக்கைவேர்க் குணம்

கந்தம் பரவு களிச்சளியும் புண்விடமு
மந்தம் பெறுவிடமும் வாந்திகளும்—மந்தம்
பெருகுரங்குக் கிச்சூரும் பித்தமு மிருக்கா
திருகுரங்குக் கைவேருக் கே.

இ-ள். முசுமுசுக்கை வேரினால் துர்க்கந்தத்துடன் இறுகிய கோழை அற்பவீரிய விஷம் விஷாலசகரோகம் வமனம் மார்புநோய் குன்மம் பித்தாதிக்கம்போம். குரங்குக்கு முசு என்றொரு பெயர்.

## வெண்காக்கட்டான்வேர்க் குணம்

மாதரால் வந்தவெட்டை வன்மேகஞ் சென்னிவலி
யோது சுரம்விழிநோ யோடுங்காண்—பேதியொடு
மாக்காட்டாஞ் சீதமறு மாமூலி யாம்வெள்ளைக்
காக்கட்டான் வேரைக் கருது.

இ-ள். மாமூலி யென்னும் காக்கட்டான் வேருக்கு வெள்ளை பிரமேகம் தலைநோய் சுரம் கண்ணோய் ஆமம் இவை நீங்கும். 526

## கருங்காக்கட்டான்வேர்க் குணம்

மாந்தங் கிருமியடல் வாதங் கபமினமுஞ்
சேர்ந்தமலக் கட்டுஞ் சிதையுங்காண்—சூழ்ந்த
அருங்காக் குவடுகளி லண்டா மயிலே
கருங்காக் கட்டான்வேரைக் கண்டு.

இ-ள். தருக்களையுடைய மலைகளிலே சஞ்சரிக்காத மயிலே! கருங்காக்கட்டான் வேருக்கு மாந்தம் மலக்கிருமி வாதாதிக்கம் சிலேட்மரோகம் மலக்கட்டு ஆகியவை நீங்கும் என்க. 527

## கொடிவேலின் வேர்க்குணம்-(இதுவே சித்திரமூலம்)

கட்டிவிர ணங்கிரந்தி கால்க ளரையாப்புக்
கட்டிசூ லைவீக்கங் காழ்மூல—முட்டிரத்தக்
கட்டு நீரேற்றங் கனைத்த பெறுவயிறு
கட்டுங் கொடிவேலி யாம்.

இ-ள். கொடிவேலி வேரானது வித்திரிதி புண் சொறிசிரங்கு வாதரோகம் குதஸ்தானவித்திரி குத்தல் சோபை மூலரோகம் உதிரக்கட்டு ஜலஸ்வாரம் மகோதரம் இவைகளைக் கெடுக்கும்.

### பெருமருந்தின் வேர்க்குணம்

பெருமருந்தின் வேர்ப்பித்தம் பீறியைப்புக் காசம்
வருதிரமு டம்புவலி வாத—முருவுவிட
மொன்றிய மாகடிக ளோட்டு மூலகிலிது
வன்றியது கோச்சிகிச்சைக் காம்.

இ-ள். பெருமருந்துவேர் பித்தகோபம் சுவாசம் இருமல் சுர ரோகம் சரீரக்குத்தல் வாததோஷம் அற்ப விஷக்கடிகள் ஆகியவைகளை நீக்குவதுமன்றிக் கோச்சிகிச்சைக்கும் உதவும் என்க. 529

### பெருங்காஞ்சொறி வேர்க்குணம்

காசஞ் சுவாசங் கபச்சுரங்க ளோடுவன
வாசஞ்செய் யும்மூர்க்குள் வாராமல்—வாசம்
பெருக்கு முலையாய் பெருங்காஞ் சொறிவே
ரிருக்கு மெனமனத்து ளெண்ணி.

இ-ள். வாசமிகு தனங்களையுடைய பெண்ணே! பெருங்காஞ் சொறி வேரினால் இருமல் இரைப்பு சீதசுரம் போம். 530

### சிறுகாஞ்சொறி வேர்க்குணம்

சிறுகாஞ் சொறிவேர் சிலேட்மவா சத்தைக்
குறியாத முச்சுரக்கு மூத்தைச்—சொறியுங்
கரப்பான் சிறுசிரங்கைக் காலேத் தாகத்தை
யுரப்பாகச் சாடுமென வோது.

இ-ள். சிறுகாஞ்சொறி வேரானது தமக்கவாசம் திரிதோஷ சுரங்கள் கரப்பான் புண் வாதப்பெருக்கம் தாகரோகம் இவைகளை நீக்கும். 531

### கருங்காஞ்சொறி வேர்க்குணம்

குற்றிருமல் நீரேற்றங் கோரகப ருட்டை
நித்தியவ ரோசகமு நீக்குங்காண்—ரத்ன
அருங்காஞ்சி வாய்ந்தவிடை யன்னமே சுத்தக்
கருங்காஞ் சொறிவேரைக் கண்டு.

இ-ள். அருங்காஞ்சி வாய்ந்த இடையையுடைய அன்னம் போல்பவளே! கருங்காஞ்சொறி வேருக்குப் பொடியிருமல் ஜலஸ்ராவம் சிலேஷ்மருட்சை அன்னரோசகம் ஆகியவை நீங்கும். 532

### பச்சைத்திப்பிலி வேர்க்குணம்

தாகமுடன் சோபந் தணிக்குங்கா ணெவ்வகையின்
மேகமுடன் பித்தம் விலக்குமே—போகமிகும்
நவ்விய ரன்ன நயங்கொடுக்கும் பச்சையாஞ்
செவ்வியம் மூலச் செயல்.

இ-ள். சிவந்த நீர்ப்பச்சையுள்ள திப்பிலிவேர் விதாகம் ஆயாச பலமேகம் பித்தாதிக்கம் இவை நீங்கும். சுக்கிலத்தையும் அழகையும் விருத்திக்கும். 533

### இன்புரு வேர்க்குணம்

இன்புரு வேரை யிதமா யருந்தினர்க்கும்
பின்புரு தையமொடு பித்தமுமே—துன்பா
மிருமல் சுவாச மெரிசுரம் வயிற்றுப்
பொருமலுப்பி சம்பறந்து போம்.

இ-ள். இன்புருவேருக்குக் கபாதிக்கம் பித்தகோபம் காசம் சுவாசம் பித்தசுரம் வயிற்றிரைதல் விக்குதல் இவைகள் நீங்கும் என்க. 534

### நன்னாரி வேர்க்குணம் (இதுவே நீருண்டி)

நன்னாரி வேரை நருக்கி யரைத்துமதன்
வின்னாரி யூறல் வெதுப்பியே—தின்னவெறி
தோணாது கற்றாழைச் சோற்றில் கலந்துண்ணக்
காணாது வண்டு கடி.

### இதுவுமது

சலதோட பித்த மதிதாக வழலை
சலமேது சீதமின்னார் தஞ்சு—டுலகமதிற்
சொன்மதுமே கம்புண் சுரமிவையெ லாமொழிக்கு
மென்மதுர நன்னாரி வேர்.

இ-ள். நன்னாரிவேரை யரைத்துத் தேனிற் பாகஞ்செய்து உண்ணில் அதிபித்தந்தீரும்; அதைக் கற்றாழைச் சோற்றோடுண்ண வண்டு கடிபோம். இன்னுங் கிரமப்படி உபயோகிக்க நீரேற்றம் பித்தநோய் தாகம் வாய்நீர்ச்சுரப்பு புணர்ச்சியின் சூடும் மதுநீர்க் கிராந்தி சுரவேகம் போம். 536

---

# புல்லின் வேர்வகை



## பச்சைவிலாமிச்சை வேர்க் குணம் (இதுவே வெட்டிவேர்)

திரிதோடந் தாகஞ் செறிகுட்ட மீளை
பெரிதான சூலைமந்தம் பேராச்—சுரவெப்ப
மச்சையுண் ணுங் கீடமுதன் மாறுமெய்க்கு காந்தியுண்டாம்
பச்சைவிலா மிச்சுக்குப் பார்.

இ-ள். பச்சை விலாமிச்சு வேருக்கு வாதபித்த கபாதிக்கம் தாகரோகம் பெருவியாதி சுவாசம் சரீரக்கடுப்பு அக்கினிமந்தம் உஷ்ணசுரம் மச்சை தாதுக்கிருமி இவைகள் நீங்கும். அழகுண் டாகும். 537

## பஞ்சமூலத்தின் குணம்

செவ்வியம் பேரரத்தை சித்திரமூ லஞ்சுக்கோ
டொவ்விய கண்டுபரங் கியோரைந்தும்—வெவ்வினையைச்
சண்ணு பஞ்சமூலமெனத் தாரணி யெலாமறிய
வண்ண மயிலே வழுத்து.

இ-ள். வண்ண மயிலனைய மங்கையரே! திப்பிலிமூலம் பேரரத் தைக் கொடிவேலி வேர் சுக்கு கண்டுபரங்கி இவ்வைந்தும் பஞ்ச மூலமாம். இது கொடிய ரோகங்களை நீக்கும் என்க. 538

## சிறுபஞ்சமூலத்தின் குணம்

சிறிய வழுதுணைவேர் சின்னெரிஞ் சின்மூலஞ்
சிறுமலி கண்டங் கத்திரிவேர்—நறிய
பெருமல்லி யோரைந்தும் பேசுபன் னோய்தீர்க்கு
மரியசிறு பஞ்சமூ லம்.

இ-ள். சிறுவழுதுணம் சிறுநெருஞ்சில் சிறுமல்லிகை கண்டங் கத்திரி பெருமல்லிகை ஆகிய இவைகளின் வேர்கள் ஐந்தும் சிறு பஞ்சமூலமாம். இது பற்பல ரோகங்களைப் போக்கும். 539

## பெரும்பஞ்சமூலத்தின் குணம்

பாதிரிவேர் வாகை பெருங்குமி ழும்மரலூர்
மாதைதழு தாழையிவ் வேரைந்தும்—போதிலம
ருஞ்சிலை நுதற்றிருவே யுன்னுபெரும் பஞ்சமூ
லஞ்சில நோயேகுமிதி லாய்.

இ-ள். மலராசனத்தில் வசிக்கும் சிலைநுதற் றிருவனைய பண்ணே! பாதிரி வகை பெருங்குமிழம் வில்வம் தழுதாழை இந்த வகை வேரும் பெரும்பஞ்சமூலமாம். இதனாற் சில நோய்கள் பாகும். 540

### அஷ்டமூலத்தின் குணம்

கோரை யரிகரந்தை கூலங்க ளூசிகஞ்சாங்
கோரையா டாதோடை கோத்துளசி—வீரியபற்
பாடகமிவ் வெட்டும் பலவிடக்கு மாமிரியச்
சாடுமட்ட மூலமென்ப தாம்.

இ-ள். முத்தக்காசு விஷ்ணுகரந்தை பேய்ப்புடல் வேர் சீந்தில் வேர் கஞ்சாங்கோரை ஆடாதோடை வேர் கருந்துளசி பற்பாடகம் இவ்வெட்டும் அஷ்டமூலமாம். இது பற்பல விஷங்களைத் தீர்க்கும். கூலம் - பேய்ப்புடல். 541

### தசமூலத்தின் குணம்

வில்வம் பெருகுமிழ் மேனெரிஞ்சல் முன்னையிரு
மல்லிகை சின்ன வழுதுணைவேர்—நல்லகண்டங்
கத்திரிபுன் காலிபெரு வாகையிவை வன்னோயைக்
குத்துந் தசமூலங் கூறு.

இ-ள். வில்வம் பெருங்குமிழ் யானை நெருஞ்சில் முன்னை சிறு மல்லிகை சிறுவழுதுணம் கத்திரி பாதிரி பெருவாகை இப்பத்தும் தசமூலமாம். இது கடினமான ரோகங்களைத் தீர்க்கும் என்க. 542

---

## மரத்தின் பட்டைவகை

### அத்திமரப்பட்டையின் குணம்

வீறு கடுப்பிரத்தம் வெண்சீத ரத்தமொடு
நாறுவிர ணங்களெலா நாடாவாங்—கூறுங்கா
லத்திதரு மேகம்போ மாயிழையே யெஞ்ஞான்று
மத்திப்பாற் பட்டைக் கறி.

இ-ள். ஆயிழையே! அத்திமரப் பட்டைக்கு ஆசனக்கடுப்பு உதிரப் போக்கு சீதரத்த பேதி புண் தத்துப்பிரமேகம் ஆகியவை போகும். 543

### நாவல்மரப்பட்டையின் குணம்

ஆசிநோய் காச மசிர்க்கரஞ்சு வாசவினை
கேசமுறு பாச கிரகநோய்—பேசரிய
மாவலிங்க லாஞ்சனமிவ் வன்பிணியெ லாமேகு
நாவலறு பட்டையத னால்.

இ-ள். நாவல்மரப் பட்டையினால் வாயிற்பிறக்கும் நோய்கள் இருமல் பெரும்பாடு ஈளை பிள்ளைகளின் கிரகதோஷங்கள் வியங்கம் லாஞ்சனம் என்னும் மச்சுபேதங்கள் ஆகியவைகள் தீரும். 544

## முருங்கைமரப்பட்டையின் குணம்

முருங்கைவேர்ப் பட்டைக்கு மூடு கபத்தோ
டொருங்குறுச் சந்நிசுர மோடு—மருங்கனக
வட்டைப் பொருமுலையாய் வாய்வொடுவி டங்களுமேற்
பட்டைக்குப் போமே பறந்து.

இ-ள். சூதாடு கருவியை நிகர்த்த முலைகளையுடைய மாதே! முருங்கை வேர்ப்பட்டைக்குக் கபதோஷம் சந்நிபாத சுரமும், மரப் பட்டைக்கு வாத தோஷமும் சில விஷங்களும் நீங்கும். 545

## புளியமரப்பட்டையின் குணம்

புளிய மரத்தின் புரணிதனைக் கண்டா
லுளமாந்தை குன்மவலி யோடும்—வளியார்ந்த
பேதிகட் டுஞ்சுரம்போம் பித்தமுறுந் தீபனமா
மோத வசீரணமே தான்.

இ-ள். புளியமரப் பட்டையால் உளமாந்தை குன்மநோய் வாதாதிசாரம் சுரம் அசீர்ணம் இவை நீங்கும். பித்தமும் பசியு முண்டாம். 546

## பெருமரப்பட்டையின் குணம்

பெருமரப் பட்டையது பேதி கிராணி
மருவிரத்த நோயினத்தை மாற்றுந்—திருவே
நடலைபுரி வாதத்தை நாடா தகற்று
முடலையிரட் சிக்குமென வோர்.

இ-ள். இலக்குமியனையாளே! பெருமரப் பட்டையானது அதி சாரம் கிராணி உதிரநோய் வாதாதிக்கம் இவைகளை நீக்கும். சரீரத் தைப் போஷிக்கும். 547

## கருவேலமரப்பட்டையின் குணம்

தந்த மிறுகுந் தனிச்சூதப் புண்ணூறு
மந்தசுரம் பித்தம் மடியுங்காண்—பந்த
மருவே சகலா மலரளக மாதே
கருவேலம் பட்டைக்குக் காண்.

இ-ள். வாசனை நீங்காத புட்பங்களைச் சூடிய அளகபாரத்தை புடையாளே! கருவேலம் பட்டைக்கு ரசவேகத்தின் வேக்காடு முதலிய விரணங்களும் சுரமும் பித்த நோயும் ஒழியும். பல் இறுகும். 548

### கருங்காலிமரப்பட்டையின் குணம்

மேகநீ ரைக்கெடுக்கு மீறுதந்த மூலத்து
ளாகிய வேதனையை யார்த்துங்காண்—சோகந்
தருங்காச மீளையிவை சாரா தகற்றுங்
கருங்காலிப் பட்டையது காண்.

இ-ள். கருங்காலிமரப் பட்டையானது பிரமேக மூத்திரம் தந்தமூல ரோகம் இருமல் சுவாசம் ஆகியவைகளை நீக்கும். 549

### மாவிலிங்கு-எருக்கு-கருவேல்-இவைகளின் பட்டைக் குணம்

மாவிலிங்கப் பட்டையினால் வாதமொடு சந்திகளும்
பாவுகின்ற கல்லடைப்பும் பாறுமே—மாவெருக்கஞ்
சட்டைசந்நி வாதம் பலவிடம்போக் குங்கருவேற்
பட்டைநா நோய்தீர்க்கும் பார்.

இ-ள். மாவிலிங்கப் பட்டையால் வாதநோயும் சந்நிகளும் அஷ்மரி ரோகமும் நீங்கும். எருக்கம்பட்டை சந்நிபாதம் வாதநோய் பல விஷம் இவைகளைப் போக்கும். கருவேல்பட்டை நாப்புண்ணை நீக்கும். 550

### கள்ளி, நொச்சில் இவைகளின் பட்டைக் குணம்

நரம்புச் சிலந்தி நளிர்வாத சந்நி
யுரம்பெரிய வாதமிவை யோடும்—பெரும்புவியிற்
கள்ளிமரப் பட்டையினால் காரநொச்சிற் பட்டையது
துள்ளு சந்நிவாத மகற்றும்.

இ-ள். கள்ளிமரப் பட்டையினால் நரம்புச் சிலந்தியும் கப வாத தொந்த சந்நிபாதமும் வாதப் பிரமேகமும் நீங்கும். நொச்சில் மரப் பட்டையானது சந்நிபாதத்தாற்பிறந்த வாதத்தைப்போக்கும்.

### கிளியூறற் பட்டையின் குணம்

மணவருக்க மாகும் வருசுரத்தைப் போக்குந்
தணலாய வெப்பைத் தணிக்குங்—குணமாதர்
கிளியூரற் பட்டையது கீதம் பயிலு
மளியூருங் கூந்தன்மின்னே யாய்.

இ-ள். கீதம்பயிலும் வண்டுகள் பொருந்திய கூந்தல் மின்னே! பரிமளச் சேர்க்கையி லோங்கிய கிளியூறற் பட்டையானது சுர ரோகத்தையும் தேகக் கொதிப்பையும் தணிக்கும். 552

### அக்காரப்பட்டையின் குணம்

அக்காரப் பட்டைக் கறணு வறட்சிகளு
மெக்குசந்நி பாதசுர மென்பவையும்—பக்கச்

சகலதலை நோய்வாய்வுந் தாழ்ந்தே யொழியும்
புகலிரத்த கந்தமது போம்.

இ-ள். அக்காரப்பட்டை சலாதிக்கம் நாவறட்சி சன்னிபாதம் சுரம் பற்பல தலைநோய் வாதகோபம் உதிரநாற்றம் இவை நீக்கும்.

## கோங்குமரப்பட்டையின் குணம்

கோங்கினறும் பட்டையாற் கூறறிய மேகம்போந்
தாங்கிய பற்பிணியுஞ் சாந்தமாம்—வாங்குவெண்மைக்
கன்னு ரதுவெள்ளிக் காசெனவே பஸ்மிக்கும்
மின்னார் சிகாமணியே விள்.

இ-ள் மின்னார் சிகாமணியே! கோங்கின்பட்டையால் பிரமேக மூத்திரமும் தாளக்கூடாத தந்தரோகமும் நீங்கும். கல்நார் பஸ்பமாகும். 554

## கொஞ்சிப்பட்டையின் குணம்

மாந்த மகற்றும் வயிற்றுப்பி சந்தவிர்க்கு
மாந்த கணச்சுரத்தை மாற்றிவிடும்—சேர்ந்தசிறு
வாதநோ யோட்டும் வகைகொஞ்சிப் பட்டையது
மாதரசே நீயுமுணர் வாய்.

இ-ள். மாதரசே! காட்டுக் கொஞ்சிப்பட்டை பாலர் மாந்தம் வயிற்றுப்பொருமல் கணச்சூடு ஆவிருத வாதரோகம் இவைகளைப் போக்கும். 555

## பஞ்சவர்க்கத்தின் குணம்

ஆலரசு சம்புடனே யத்திகுரு வேலற்றின்
தோலைந்தும் பஞ்சவர்க்கந் தொல்லுலகி—லேலுமதாற்
காசஞ் சுவாசங் கபங்கொங்கை வித்திரிதி
நாசமுறு மென்றே நவில்.

இ-ள். ஆல் அரசு நாவல் அத்தி இத்தி என்னும் ஐவகை மரங்களின் பட்டைகளே பஞ்சவர்க்கமாம். இதனுல் இருமல் இரைப்பு சிலேஷ்மதோஷம் ஸ்தனவித்திரிக்கட்டி ஆகியவைகள் போமென்க.

---

# மரத்தின் பிசின்வகை



## மாம்பிசின் குணம்

பெரும்பா டெங்கேயிரத்த பேதியெங்கே மூக்க
றரும்பாழும் வெள்ளையெங்கே சாற்றாய்—கரும்பாம்பின்
நாதகிரி யாசஞ்செய் நங்காய் வனத்திலுறை
சூதகிரி யாசமெனச் சொல்.

இ-ள். கரும்பாம்பின் சீதத்தையும் ஏளனஞ்செய் நங்கையரே! மாம்பிசினால் பெரும்பாடு என்கிற அசிர்க்கரநோயும் ரத்தாதிசாரமும் வாதப் பிரமேக வெள்ளையும் நீங்கும். நிரியாசம்-பிசின். 557

### பிரமதருவின்பிசின் குணம் (இதுவே பலாசு முருக்கு)

சந்திகட்கு நாடிகட்குந் தங்குசுக்கி லந்தனக்கும்
புந்திபுரங் கட்குரமும் பூட்டுங்கா—ணுந்து
சரமதனுக் காகமநூல் சாற்றுமலர் மாதே
பிரமதரு விற்சம் பிசின்.

இ-ள். உந்துசரமதனுக் காகமநூலைப் புகட்டும் மலர்மாதனையாளே! பிரமதருவின் பிசினானது கீல்கள் நரம்புகள் சுக்கிலம் அறிவு மார்பு ஆகிய இவைகளுக்குப் பலத்தை உண்டாக்கும். சம்-பிறப்பு.

### மலைவேப்பின்பிசின் குணம்

மலைவேம்பு தன்பிசின்றான் வாதக் கரப்பன்
மலுமேகக் கட்டியிவை மாற்று—நிலமீது
தாதுவுமுண் டாக்கும் சலப்பேதி யைக்கட்டு
மாதே யிதனை வழுத்து.

இ-ள். மாதே! மலை வேப்பம்பிசின் கருங்கரப்பன் மேகக்கட்டி சலமந்தம் பேதி ஆகிய இவைகளை நீக்கும், சுக்கிலம் விருத்தியாகும்.

### கருங்காலிப்பிசின் குணம்

கருங்காலி யின்பிசின்றான் காரார் கரப்பன்
வருமேக நீரிழிவை மாற்றும்—விரைவாய்ப்
பெரும்பாட்டை நீக்கும் பெருந்தாது விர்த்தி
யரும்பு மெனக்கண் டறி.

இ-ள். கருங்காலிப்பிசின் கருங்கரப்பன் மேகமூத்திரம் அசிர்க்கரம் ஆகிய இவைகளை நீக்கும், விந்துவை வளர்ப்பிக்கும். 560

### வாகைப்பிசின் குணம்

வாகைப் பிசின்மேகம் வன்கிரந்தி கட்டியையு
மேகத் துரத்து மிதுநிசமே—மாகனக
மேனி கொடுக்கு மிகுத்தபல முண்டாக்குந்
தேனினிய மென்மொழியே தேர்.

இ-ள். தேனினுமினிய மொழியையுடைய பெண்ணே! வாகைப் பிசின் பிரமேகம் வாதகிரந்தி மேகக்கட்டி ஆகிய இவைகளை விலக்கும், அழகையும் வன்மையையும் உண்டாக்கும். 561

இலவம்பிசின் குணம்

மேகவெட்டை நீர்ச்சுருக்கு மெய்யனற்கி ருச்சரத்தின்
வேகமதி காரமென விள்ளுநோ—யேகவென்றால்
வாரணியுங் கும்பமுலை மாதே மறைப்பின்றிப்
பூரணிர சத்தைப் புகல்.

இ-ள். வாரணியுங் கும்பஸ்தனங்களை யுடையாளே! இலவம் பிசினியினால் பிரமேக வெள்ளை மூத்திரக்கடுப்பு உட்சுரம் கிரிச்சுர வேகம் பேதி ஆகிய இவைகள் நீங்கும். பூரணி-இலவம், ரசம்-பிசின்.

விளாம்பிசின் குணம்

நல்ல விளாம்பிசினை நற்பதஞ் செய்தருந்தத்
தொல்லை யதிசாரந் தொலைதன்றோ—மெல்லியரால்
வந்தவெள்ளை தன்னுடனே மாதர் பெரும்பாடு
முந்துநீர்ப் போக்கும்போ முன்.

இ-ள். சுத்திசெய்த விளாம்பிசினைச் சூரணம் மாத்திரை முதலிய அவுஷதமாகச்செய்து உண்டால் நீடித்த அதிசாரம் புணர்ச்சியால் வந்தவெள்ளை அசிர்க்குரோகம் வெகுமூத்திரம் ஆகியவை நீங்கும். 563

முருங்கைப்பிசின் குணம்

முந்துநீ ரைத்தடுக்கு மோரைப்போ லேயொழுகும்
விந்துவைத்த டிப்பித்து மேனிதருந்—தொந்தக்
கரியநிற வாயுதனைக் காதிவிடு நாளும்
பெரிய முருங்கைப் பிசின்.

இ-ள். முருங்கைப்பிசின் அதிமூத்திரம் குஷ்டம் தொந்த வாதம் இவைகளை நீக்கும். சுக்கிலத்தை இறுக்கி அழகை யுண்டாக்கும். 564

விடத்தேரின் பிசின் குணம்

விடத்தேரின் றன்பிசின்றான் வெண்மேகம் போக்கு
மடுத்தபிர மேகத்தை யாற்றுமே—தொடுத்
மேகக் கரப்பானை விட்டோட்டு மென்றுலகி
னாகரிக மாதே நவில்.

இ-ள். நாகரிக மாதே! விடத்தேரின்பிசின் வெண்மேகம் கீழ்ப் பிரமேகம் மேகவெப்பத்தால் வந்தகரப்பான் இவைகளை விலக்கும்.

அடப்பமரத்தின் பிசின்-(இதுவே வாதுமையாம்)

நெஞ்ச முராக்கு நிகழ்விந்தை யுங்கட்டும்
நஞ்சு மருந்துகளு நல்லமிர்தாம்—விஞ்சுகயக்
கோழை யடக்குங் குலவா துமையெனவே
வாழையுடம் பின்சளிக்கு மால்.

இ-ள். அடப்ப மரத்தின்பிசினால் சுக்கிலத்திற்குத் தடிப்புண்டாவதுமன்றி விஷமான மருந்துகளும் அமிர்தமாம். சயத்தினால் அதிகரித்தகபக்கோழையானது தன்னிலையைவிட்டு பெயர்ந்தடங்கும்.

கருவேலப்பிசின் குணம்

நீத்தொழுகும் விந்துவை நிலைக்கப் புரியுமெரி
மூத்தொழுகும் வெள்ளைதனைப் போக்குமிம்—மாத்திரமோ
தேசுதரு மும்முரமுஞ் செய்யும் பெரியோரார்
பேசுகரு வேலம் பிசின்.

இ-ள். கருவேலம் பிசினானது நீத்துப்போன சுக்கிலத்தை இறுகச் செய்வதுமன்றி எரிச்சலோடு விழுகின்ற கீழ்ப்பிரமேகத்தையும் நீக்கும், அழகையும் உண்டாக்கும் என்க. 567

ஆவாரைப்பிசின் குணம்

பெருநீர் மறிக்கும் பிரமேகம் போக்கும்
வருநீர்ச் சுறுக்குதனை மாற்றுந்—தருநீர்மை
பூணுமே ணிக்கமலப் பொன்னே பிடகரெலாம்
பேணுமே காரிம் பிசின்.

இ—ள். அழகு பொருந்திய கமலமின்னனைய காரிகையே! ஆவாரைச் செடியின் பிசினானது வெகு மூத்திரத்தையும் பிரமேக ரோகத்தையும் வாதகிரிச்சரத்தையும் போக்கும் என்க. மேகாரி-ஆவாரை. 568

புற்பிசின் குணம்

நெஞ்சிற் குரஞ்சலம்போ நீத்தவிந்து விற்கூறுதி
வஞ்சியர்தம் போகத்தில் வன்மையா—நஞ்சைத்
தடவியகூர் வாளென்னச் சாற்றும் விழியா
யடவிவரு புற்பிசினென் றூல்.

இ-ள், நஞ்சைத்தடவிய கூர்வாளனைய விழியாளே! காட்டிலுள்ள புற்பிசினால் மார்புக்கும் நீரான சுக்கிலத்துக்கும் சையோகத்திற்கும் அதிகபல முண்டாகும். 569

# மரத்தின் இலைவகை

## மரியங்கொழுந்தின் குணம்

வாயருசி நீர்ச்சுரப்பு வாந்தி கடிதேகும்
பேயிரத்த சீதமென்ற பேதியறும்—பாயு
மாரியங்க மொத்தவிடை யாரா வமிர்தே
மரியங் கொழுந்தை வழுத்து.

இ-ள். அரியங்கமொத்த இடையையும் அமிர்தத்தை நிகர்த்த மொழியையுமுடைய பெண்ணே! மரியங்கொழுந்தினால் அரோசகம் வாயில் சலமூறல் வமனம் ரத்தாதிசாரம் சீதபேதி இவை நீங்கும்.

## கருவேற்கொழுந்தின் குணம்

கண்டாலு வின்றளிரைக் கல்லிலரைத் துத்தயிரி
லுண்டாற்பா டாணவெப்ப மோடுங்காண்—கண்டாவி
வந்தசிவப் பேகுமதை மாதர்பா லாலரைத்து
வெந்தவடை கண்ணிலொத்த வே.

இ-ள். கருவேலங்கொழுந்தைத் தயிரிலரைத்துக் குடிக்கப் பாஷாணவேகம் நீங்கும். முலைப்பாலி லரைத்து அடைதட்டிக் காய்ந்த சட்டியிலிட்டு வெதுப்பி அற்பச்சூடாக ஒற்றடமிடில் கண் சிவப்பு மாறும். கண்டாலு-கருவேல். 571

## புளியிலையின் குணம்

அழுபுண்ணை நீக்கு மடற்சோபை மாற்று
மெழுபாண்டு வைப்போக்கு மிப்பான்—முழுது
மளியச் சிவந்தகண்ணோ யாற்றுங் கனலாம்
புளியிலையை நன்றாய்ப் புகல்.

இ-ள். வெப்பமுள்ள புளியிலை அளிந்தவிரணம் சோபரோகம் பாண்டுரோகம் சிவந்த கண்ணோய் இவை நீங்கும் என்க. 572

## வேப்பிலையின் குணம்-(இதுவே நிம்பம்)

கிருமிகுட்ட மாந்தங் கெடுவிடஞ்சு ரங்கள்
பெருமியவ சூரிகையின் புண்க—ளொருமிக்க
நிம்பத் திலையிருக்க நீடுலகி னீங்காமற்
கம்பத் திலையிருக்கக் காண்.

இ-ள். வேப்பிலையால் புழுக்கள் பெருவியாதி மாந்தம் மகா விஷ சுரரோகங்கள் அம்மைக்கொப்புள விரணம் இவைபொழியும்.

### முருங்கையிலையின் குணம்

செறிமந்தம் வெப்பந் தெறிவுக்குந் தலைநோய்
வெறிமூர்ச்சை கண்ணோய் விலக்கு—மறமே
நெருங்கவிலை யொத்தவிழி நேரிழையே நல்ல
முருங்கை யிலையை மொழி.

இ-ள். வேலையொத்த கண்களை யுடையாளே! முருங்கையிலையால் அக்கினிமந்தம் உட்சூடு சிரஸ்தாபரோகம் பித்தமூர்ச்சை கண்ணோய் ஆகியவை நீங்குமென்க. 574

### அகத்தியிலையின் குணம்

மருந்திடுதல் போகுங்காண் வண்கிரந்தி வாய்வாந்
திருந்த வசனஞ் செறிக்கும்—வருந்தச்
சகத்திலெழு பித்தமது சாந்தியாம் நாளு
மகத்தியிலை தின்னு மவர்க்கு.

இ-ள். அகத்தியிலை சாப்பிடில் இடுமருந்து பயித்தியதோடம் நீங்கும், கடுவானும் வாய்வுமுண்டாம், போஜன சீரணமுமாம். 575

### செவ்வகத்தியிலையின் குணம்

செவ்வகத்திப் பன்னஞ் சிலேத்மமதை யுண்டாக்கும்
வவ்வுபல சிந்தூரம் வைப்பதற்காங்—கவ்வு
நவநீத பஸ்மமதை நாளுமுடிப் பிக்குஞ்
சிவமாக்குந் தாளகத்தைத் தேர்.

இ-ள். செவ்வகத்தியிலை கபதோடமுண்டாக்கும், பற்பல சிந்தூரம் நவநீதபஸ்பம் தாளகசுத்தி இவைகளைச் செய்வதற்குதவும்.

### பசுமுன்னை இலையின் குணம்-(இதுவே நறுமுன்னை)

வாயருசு சோபையைய மாறுக் கரப்பனெழும்
வாயுமந் தாக்கினிம யக்கமென்க—நோய்க
ளறுமுன்னை யுண்ணுவர்கட் காழி யுலகி
னறுமுன்னை தன்னிலையை நாடு.

இ-ள். பசுமுன்னை யிலையால் அரோசகம் வீக்கம் கபம் கரப்பான் இவையுண்டாம், வாததோடமும் அக்கினி மந்தமும் மயக்கமும்போம். 577

### கருவேப்பிலையின் குணம்

வாயி னருசி வயிற்றுளைச்ச லீடுசுரம்
பாயுகின்ற பித்தமுமென் பண்ணுந்தான்—தூய
மருவேறு காந்தட்கை மாதே யுலகிற்
கருவேப் பிலையருந்திற் காண்.

## முருங்கையிலையின் குணம்

செறிமந்தம் வெப்பந் தெறிவுக்குந் தலைநோய்
வெறிமூர்ச்சை கண்ணோய் விலக்கு—மறமே
நெருங்கவிலை யொத்தவிழி நேரிழையே நல்ல
முருங்கை யிலையை மொழி.

இ-ள். வேலையொத்த கண்களை யுடையாளே! முருங்கையிலையால் அக்கினிமந்தம் உட்சூடு சிரஸ்தாபரோகம் பித்தமூர்ச்சை கண்ணோய் ஆகியவை நீங்குமென்க. 574

## அகத்தியிலையின் குணம்

மருந்திடுதல் போகுங்காண் வண்கிரந்தி வாய்வாந்
திருந்த வசனஞ் செறிக்கும்—வருந்தச்
சகத்திலெழு பித்தமது சாந்தியாம் நாளு
மகத்தியிலை தின்னு மவர்க்கு.

இ-ள். அகத்தியிலை சாப்பிடில் இடுமருந்து பயித்தியதோடம் நீங்கும், கடுவானும் வாய்வுமுண்டாம், போஜன சீரணமுமாம். 575

## செவ்வகத்தியிலையின் குணம்

செவ்வகத்திப் பன்னஞ் சிலேத்மமதை யுண்டாக்கும்
வவ்வுபல சிந்தூரம் வைப்பதற்காங்—கவ்வு
நவநீத பஸ்மமதை நாளுமுடிப் பிக்குஞ்
சிவமாக்குந் தாளகத்தைத் தேர்.

இ-ள். செவ்வகத்தியிலை கபதோடமுண்டாக்கும், பற்பல சிந்தூரம் நவநீதபஸ்பம் தாளகசுத்தி இவைகளைச் செய்வதற்குதவும்.

## பசுமுன்னை இலையின் குணம்-(இதுவே நறுமுன்னை)

வாயருசு சோபையைய மாறுக் கரப்பனெழும்
வாயுமந் தாக்கினிம யக்கமென்க—நோய்க
ளறுமுன்னை யுண்ணுவர்கட் காழி யுலகி
னறுமுன்னை தன்னிலையை நாடு.

இ-ள். பசுமுன்னை யிலையால் அரோசகம் வீக்கம் கபம் கரப்பான் இவையுண்டாம், வாததோடமும் அக்கினி மந்தமும் மயக்கமும்போம். 577

## கருவேப்பிலையின் குணம்

வாயி னருசி வயிற்றுளைச்ச னீடுசுரம்
பாயுகின்ற பித்தமுமென் பண்ணுந்தான்—தூய
மருவேறு காந்தட்கை மாதே யுலகிற்
கருவேப் பிலையருந்திற் காண்.

# செடியின் இலைவகை

### ஆடாதோடையிலையின் குணம்

ஆடாதோடைப் பன்ன மையறுக்கும் வாதமுதற்
கோடாகோ டிச்சுரத்தின் கோதொழிக்கு—நாடின்
மிகுத்தெழுந்த சந்நிபதின் மூன்றும் விலக்கு
மகத்துநோய் போக்கு மறி.

இ-ள். ஆடாதோடையிலை கபாதிக்கம் வாததோஷம் பற்பல சுரம் சந்நிபாதம் 13-வயிற்றுநோய் ஆகியவைகளை நீக்கும். 583

### வெண்நொச்சில் இலையின் குணம்

நாசந் தருவாத நாசிப் பிணியழல்சு
வாசந் தசனவுரு வன்றேடங்—காசமற
வுச்சி யடையை யுறைநோயு மென்படுமோ
நொச்சி யடையை நுவல்.

இ-ள். வெண்நொச்சிலிலையால் மகாவாதம் பீநசம் சுரம் இரைப்பு தந்தவலி திரிதோஷம் இருமல் நீரேற்றம் கபசிரஸ்தாபம் இவைகளை விலக்கும். 584

### கருநொச்சில் இலையின் குணம்

வாதக் கடுப்பகலு மாறாத பீநசம்போ
மோதப்பே யோடி யொளிக்குங்காண்—வேதைசெய்யு
மண்டைக் குடைச்சலறும் மாசில்கரு நொச்சிலுக்கும்
பண்டைத் தலைவலிபோம் பார்.

இ-ள். கருநொச்சில் இலையால் வாதவலி நாசிரோகம் கபம் மண்டைக்குடைச்சல் சிரஸ்தாபரோகம் இவைகள் நீங்கும். 585

### வெள்ளாமணக்கிலையின் குணம்

மந்தங் கதித்தெழுந்த வாத மருவலி
பந்தமல மியாவும் பறக்குங்காண்—சந்ததமும்
பூமணக்கு நெய்த்த புரிகுழன்மா தேவெள்ளை
யாமணக்குப் பத்திரியா லாய்.

இ-ள். புட்பங்கள் பரிமளிக்கும் நெய்த்த புரிகுழன்மாதே! வெள்ளாமணக்கு இலையால் அக்கினிமந்தம் வாதவலி மார்புநோய் மலக்கட்டு ஆகியவைகள் போமென்க. 586

## செவ்வாமணக்கிலையின் குணம்

குன்மமொடு மந்தங் கொடுவாத மெய்வலியுஞ்
சன்மமட்டு வாராமற் றுண்டுங்கா—ணன்மைதரு
மெய்வா மணக்குகட்கு மேற்றமென்பார் காந்தியுள்ள
செவ்வா மணக்கிலையைச் சேர்.

இ-ள். செவ்வாமணக்கு இலையால் வயிற்றுநோவு செரியா மந்தம் வாதகோபம் தேகக்கடுப்பு இவைகள் விலகும். 587

## செம்பையிலையின் குணம்

கட்டியொடு வீக்கமுங் காயத்து ணீரேற்ற
மொட்டிவரு வாதகப மோட்டுவது—தொட்டுவிடு
மம்பயிலை வேலைவென்ற வங்கண் மடமாதே
செம்பையிலை வேலையெனத் தேர்.

இ-ள். அம்பயிலை வேலைவென்ற அழகிய கண்களையுடையாளே! செம்பையிலையால் வாயுவின் கட்டிகள் சோபை சரீர நீரேற்றம் வாத சிலேத்ம தொந்தம் ஆகிய இவைகள் ஒழியும் என்க. 588

## கருஞ்செம்பையிலையின் குணம்

விப்புருதிப் புண்ணுறும் வீறுகரப் பானும்போந்
தப்பாமன் மேகந் தணியுங்காண்—வெப்பார்
கபரோக மேகுங் கருஞ்செம்பை யொன்றுக்
கிபமா முலைமாதே யெண்.

இ-ள். யானை மத்தகம்போன்ற தனத்தாளே! கருஞ்செம்பை இலையால் விப்புருதிக்கட்டி கரப்பான் பிரமேகம் பித்த சிலேத்ம தொந்தம் ஆகிய இவைகள் போகும் என்க. 589

## வறட்பூலாவிலையின் குணம்

சீதரத்தஞ் சேர்ந்தேனுஞ் சேர்க்கையின்றி யேனும்வரு
பேதிகள்வ யிற்றின் பிடுங்கலினு—பாதிகளும்
பூதலத்தி ராகல்வறட் பூலா விலையரைத்து
மேதித் தயிரிலுண்ண வே.

இ-ள். வறட்பூலா இலையை யரைத்து எருமைத் தயிரிற் கரைத்துக் குடிக்கில் சீதரத்தமும், கலந்தாவது தனித்தாவது காணுகின்ற பேதிகளா லுண்டாகிற வயிற்றுநோயும் ஆயாசமும் விலகும். 590

## பாவட்டையிலையின் குணம்

தீதவா தங்களறுந் தீபனமோ வுண்டாகும்
வாதங் கபமொழியும் வார்குழலே—போதவே
ஆவட்டைத் தாச்சுர மற்றுவிடுந் தோடம்போம்
பாவட்டைப் பத்திரிக்குப் பார்.

இ-ள். நீண்ட குழலாளே! பாவட்டை இலையால் சிலேத்ம வாதம் வாதகபதோஷம் ஆயாசம் தாபசுரம் திரிதோஷம் ஆகிய இவை போம். பசி யுண்டாகும். 591

## பெருஞ்சின்னியிலையின் குணம்

காணுக் கடியுமெதிர் கண்ட விடக்கடியு
நாணு திருந்திடவு ஞாயமுண்டோ—தோணு
வருஞ்சின் மதலைமொழி மாதரசே கேளாய்
பெருஞ்சின்னி மூலியுண்ட பேர்க்கு.

இ-ள். மதலை மொழி மாதரசே! பெருஞ்சின்னி இலைக்குக் காணுக் கடிவிஷமும் பார்க்கும்படிக்குக் கடித்த பற்பல செந்துக் களின் விஷங்களும் நீங்குமென்க. 592

## சிறுசின்னியிலையின் குணம்

கடிவிடமும் காணுக் கடிவிடமு மாத
ரிடுவிடமு மோடு மிதுவன்றி—நெடியவிழிக்
கன்னிகையே மேகங் கணக்காய்ச்சல் மாந்தமும்போஞ்
சின்னி யிலைக்குத் தெறித்து.

இ-ள். காதளவோடி நீண்ட கண்ணுளே! சிறுசின்னியிலைக்கு வண்டு முதலிய கடி விஷங்கள், இன்னதெனத் தெரியக்கூடாத செந்துக்களின் விஷங்கள், இடுமருந்து பிரமேகம் கணச்சுரம் அக் கினி மந்தம் ஆகிய இவைகள் போமென்க. 593

## தழுதாழையிலையின் குணம்

வாதம் பிடிப்பென்ற வற்கா லியைப்புலிபோற்
போதப் புவிக்கும் புகல்வற்றே—காத
அழிதாழைப் பீநசத்தை யண்டா தகற்றுந்
தழுதாழைப் பன்னமது தான்.

### இதுவுமது

சேர்ந்த சொறிசிரங்கைத் திண்வாதக் கூட்டத்தை
யாய்ந்தொழிக்கும்பித்தை யழைக்குமந்த—மோய்ந்திடா
ஐயின் சரந்தணிக்கு மானதழு தாழையது
மெய்யின் கடுப்பகற்றும் விள்.

இ-ள். தழுதாழையிலை பக்கவாதம் முதலிய 80-வாதரோகங்கள், சிலேத்மபீநசம் புடைகிரந்தி ஆவிருத வாதங்கள் மந்தகபசுரம் தேகக் குடைச்சல் இவைகளை நீக்கும். பித்தத்தை யுண்டாக்கும். 595

## விராலியிலையின் குணம்

ஊன்ற துரிசிநீ ரூகமனத் தூன்னினவே
ரூன்ற வருகட்டி யோடதைப்பு—தோன்றிற்
சுராலிக் குதளையிளந் தோகாய் விரைவாய்
விராலிக் குழையோடு விள்.

இ-ள். குதலைச் சொற்களை யுடைய மயிலனையாளே! விராலியிலை பெருமை தங்கிய துரிசை வெளுப்பாக்குவதுந் தவிர, அடிகனத்த கட்டிகளையும் வீக்கத்தையும் போக்கும். குழை-தளிர். 596

## எருக்கிலையின் குணம்

எலிவிடங் குட்டமைய மேறு கிருமி
எறிசூலை வாயு விடமந்தம்—மலபந்த
மெல்லா மகலு மெருக்கிலையைக் கண்டக்கால்
வில்லாரு நன்னுதலே விள்.

இ-ள். வில் போன்ற நன்னுதலாளே! எருக்கிலையினால் எலிவிஷம் பெருவியாதி சிலேத்மநோய் கிருமிரோகம் ஐவகை வலிசூல் வீக்கம் தனிவாத கோபம் சர்ப்பவிஷம் அக்கினிமந்தம் மலக்கட்டு ஆகிய இவைகளை நீக்கும் என்க. 597

## காட்டாமணக்கிலையின் குணம்

கட்டி விரணங் கரப்பான் பிலீகமதி
கொட்டியுறு குன்மங் கிளைத்தசிரங்—கொட்டுமோ
கூட்டோ டொழியுங் குவடனைய கொங்கைமின்னே
காட்டா மணக்கிலையைக் கண்டு.

### இதுவுமது

காட்டா மணக்காற் கபவாத சூலையுடன்
வீட்டு தலைநோய் விரிகிரந்தி—வாட்டுகின்ற
உண்மூலம் போகு முடம்புலர்தல் வெட்டையறும்
திண்மூல தாதுவுமாஞ் செப்பு.

இ-ள். மலைகளை நிகர்த்த கொங்கை யுடையாளே! காட்டாமணக்கு இலையினால் மேகக்கட்டி புண் கரப்பான் பீலிகம் குன்மக்

கட்டி ஜனிக்கின்ற விரணங்கள் சிலேத்ம வாதக் குத்தல் சிரஸ்தாப ரோகம் பெருவிரணம் வருத்தாநின்ற உள்மூலம் உள்ளுருக்கு வெள்ளை இவைகளைப் போக்கும். சுக்கில விருத்தி யுண்டாம். 599

## தவசுமுருங்கிலையின் குணம்

தவசு முருங்கைத் தழையதற்குக் கேளா
யவசியம் பீநசமுண் ணுக்கு—மூவசர்க்கி
யையஞ் சுவாசகப மண்டாது குத்திருமல்
வையம்விடுத் தேகும் வழுத்து.

இ-ள். தவசு முருங்கையிலைக்கு வாதபீநசம் உப ஜிஹ்வாத ரோகம் தொந்தநோய் கபம் சுவாசம் பொடியிருமல் இவைகள் நீங்கும். உவசர்க்கி - தொந்த நோய். 600

## வெதுப்படக்கிலையின் குணம்

வெள்ளெடுப்பு சீதம் வெதும்பல் சுரத்துடனே
யள்ளெடுக்கு மாந்த மதிவாதத்—தெள்ளுமொழி
மாதே வெதுப்படக்கி வன்றழையுட் காய்ச்சலொடு
கோதே றிரத்தமும்போக் கும்.

இ-ள். தெள்ளு மொழி மாதே! வெதுப்படக்கியின் இலை யானது வெளுப்பான பேதி சிலேத்மக் கிராணி தாபம் ரூட்சை அள்ளு மாந்தம் வாதாதிக்கம் உட்சுரம் இரத்த தாதுவிலுண்டா கின்ற மலினம் ஆகியவைகளைப் போக்கும். 601

## பெரியாநங்கையின் குணம்

பெரியாநங் கைத்தழைக்குப் பித்தமென்ப தெல்லாந்
தெரியநம லோடுமிது திண்ணம்—பிரியா
மலமறுச்கும் பஸ்பவகை வைப்பதற்கு மாகுஞ்
சிலைநுதலே நன்றாய்த் தெரி.

இ-ள். சிலை நுதலாளே! பெரியாநங்கையிலைக்கு பித்த ரோகங் களும் மலபந்தமும் நீங்கும். இது பலவித பஸ்பங்கள் செய்வதற்கு முதவு மென்க. 602

## சிறியாநங்கையின் குணம்

சிறியாநங் கைத்தழையைச் சேவித்த பேரைப்
பிரியா மடந்தையர்கள் பின்னு—மறியதிலி
டங்கணமும் நீறுந் தனியழகு முண்டாகுந்
திங்கண்முக மாதே தெளி.

இ-ள். திங்கண்முகமாதே! சிறியாநங்கை என்னுமூலி ஸ்திரீ வசியத்தைச் செய்யும் வெங்காரத்தைப் பஸ்பமாக்கும் தேகத்தில் வனப்பை உண்டாக்கும், டங்கம்-வெண்காரம். 603

## பருத்தியிலையின் குணம்

பருத்தியிலை மொட்டிரண்டைப் பாலிலரைத் துண்ண
வருத்துகின்ற மேகமெல்லா மாறும்—பருத்த
விரத்தபித்தத் தோடு விரணவிக் கம்போ
மரத்த விதழ்மாதே யறை.

இ-ள். சிவந்த அதரத்தாளே! பருத்தியினது இலையையாவது மொக்கையாவது பலம் அரைத்து அரை ஆழாக்குப் பசும்பாலில் கரைத் துண்ணில் சிழ்மேக முதலிய மேகங்களும் ரத்தபித்தரோகமும் விரணசோபையும் நீங்கும். 604

## கூத்தங்குதம்பையிலையின் குணம்

குத்துகின்ற நோய்போக்குங் கோரபித்த முண்டாக்கு
மத்திசெய்யுஞ் சந்நி யகற்றுங்காண்—சத்திக்கு
மாத்தங்கு வாய்மொழிக்கு மண்டூரத் திற்குதவுங்
கூத்தங் குதம்பைக் குரை.

இ-ள். கூத்தங்குதம்பையிலை சூலரோகம் சந்நிபாதம் மகாவாதரோகம் ஆகியவைகளை ஒழிக்கும், பித்தகோபத்தை விருத்தி செய்யும் மண்டூரத்தைச் செந்தூரஞ் செய்வதற்கும் உதவும். 605

## அரிவாள்மூக்குப் பச்சிலையின் குணம்

வெட்டுக்கா யத்தை விரைவி லுலர்த்திவிடுந்
துட்டக் கடுவோட்டுந் தோன்றிமிகக்—கெட்ட
பிரிவாற் றலையைப் பிளக்கு வளிநீக்கு
மரிவாள்மூக் குப்பச் சிலை.

இ-ள். அரிவாள் மூக்குப்பச்சிலை ஆயுதங்களாலுண்டாகிற காயத்தை சீக்கிரத்தில் ஆற்றுவதுந்தவிர மகாவிஷத்தையும் உதிரக் கெடுதியாற் பிறந்த சிரஸ்தாபரோகத்தையும் விலக்கும். தோன்றி-உதிரம் 606

## துத்தியிலையின் குணம்

மூலநோய் கட்டி முளைபுழுப் புண்ணும்போஞ்
சாலவதக் கிக்கட்டத் தையலே—மேலுமதை
எப்படியே னும்புசிக்கி லெப்பிணியுஞ் சாந்தமுறு
மிப்படியிற் றுத்தியிலை யை.

இ-ள். மாதே! துத்தியிலையை ஆமணக்கு நெய்யால் வதக்கிக் கட்ட மூலரோகம் கட்டிவிரணமுளைகள் கிருமி விரணம்போம், அதை எவ்விதமாவது பாகஞ்செய்துண்ணில் சகல ரோகங்கள் போம். 607

### விழுதியிலையின் குணம்

விழுதித் தழைகரப்பான் வெண்மேக நீக்கும்
பழுபடுவன் சூலை பறிக்கு—மெழுபேதி
யாக்கு மதிமந்த மகக்கிருமி துன்மலமும்
போக்கு மதுவே மகல்.

இ-ள். விழுதியிலை கரப்பான் சுவேதப்பிரமேகம் வித்திரிதிக் கட்டி சரீரக்குத்தல் அக்கினிமந்தம் மலாசயக்கிருமி விரோதமலம் ஆகியவைகளைப் போக்கும். விரோசனத்தை உண்டாக்கும். 608

### கணப்பூண்டினது இலையின் குணம்

கணப்பூண் டிலைமேகக் கட்டி கரைக்கு
மணக்குமிக வாய்க்கு மதுரஞ்—சிணுக்கான
வாதகணம் பித்தகண மாற்றுங் கபச்சுரத்தின்
பேதமறப் போக்குமெனப் பேசு.

இ-ள். பரிமளமும் வாய்க்கு மதுரமுமுள்ள கணப்பூண்டின் இலையானது மேகநீராற் பிறந்த கட்டிகளைக்கரைக்கும், தேரைக் கணம் ஆமக்கணம் சிலேஷ்மசுரங்கள் ஆகியவைகளை விலக்கும். 609

### காரை, சேம்பு இலைகளின் குணம்

காரைத் தழைக்குக் கடுப்பிரத்தம் போம்புளியைச்
சோரப்பெய் தாக்கிச் சமைத்தறிநீ—பாரிலுள்ள
சேம்பிலைக்கு நற்புளியைச் சேர்த்துச் சமைத்துண்டாற்
கூம்பிட்ட மூலமறுங் கூறு.

இ-ள். புளியிட்டுக்கடைந்த காரையிலைக்கு ரத்தக்கடுப்பு விலகும். அவ்வாறு சமைத்த ஊர்ச்சேம்பிலைக்குச் சுஷ்கமூலம் நீங்கும்.

### பிடங்குநாரி இலையின் குணம்

பிடங்குநாரிப் பன்னப் பேச்சை யெடுக்கி
லடங்கு மலசமிஃ தன்றிக்—தொடங்குகின்ற
நீர்ச்சுரப்பும் வாங்கிவிடு நீடுசட ராக்கினியாந்
தேர்ச்சியுறும் புத்திக்குத் தேர்.

இ-ள். பிடங்குநாரியிலையால் செறியாமந்தம் ஆரம்ப சலக் கோவை போகும், சடராக்கினி புத்திக்குத் தெளிவு உண்டாம். 611

### அவுரியிலையின் குணம்

உரியவவு ரித்தழைதா னோது பதினெண்
ணரியநஞ்சைத் தின்றவர்க்கு மாகும்—தெரிவரிய
வாதவெப்பு காமாலை மைந்தர்க் குறுமாந்தந்
தேக மகற்றுந் தெரி.

### இதுவுமது

சந்நிபதின் மூன்றுஞ் சந்தொடுத்த வாதமுத
லுன்னு விடக்கடியு மோடுங்காண்—மின்னுங்
கவுரிநிற முண்டாகுங் காசினி யுளோநல்
லவுரி யிலையா லறி.

இ-ள். அவுரியிலை தாவரக் கந்தமூலவிஷங்கள் 18-ம், வாதசுரம் காமியம் மாந்தம் சீதளம் சந்நிபாதங்கள் கீல்வாதம் சர்ப்பவிஷம் இவைகளையும் நீக்கும், உடற்குப் பொன்னிறந்தரும். 613

### குப்பைமேனியின் குணம்

தந்தமூலப் பிணிதீத் தந்திடுபுண் சர்வவிட
முந்துகுன்மம் வாத முதிரமூ—லந்தினவு
சூலஞ் சுவாசா தொடர்பீ நசங்கபம்போம்
ஞாலங்கொண் மேனியத னால்.

இ-ள். குப்பைமேனியிலையால் தந்தமூலநோய் தீச்சுட்டபுண் தாவர சங்கமவிஷங்கள் வயிற்றுவலி வாதரோகம் ரத்தமூலம் நமைச்சல் குத்தல் இரைப்பு பீநசம் கபாதிக்கம் ஆகியவை நீங்கும். 614

### மிளகுத்தக்காளியின் குணம்

மந்தாக்கினி சோபை வாந்திகழல் வாயுவெப்ப
மிந்துநோய் பாண்டோ டெதிர்விக்கன்—முந்த
வளருமுத் தோடநோய் மாற்றுங்கைப் பான
மிளகுத் தக்காளியிலை மெய்.

### இதுவுமது

மிளகுத்தக் காளியிலை வெண்ணுகங் கட்டு
மிளகுபற் சிந்தூரத் திற்கேகும்—கொளுவுகின்ற
மேகச் சொறியகற்றும் வெட்டை யனற்றணிக்கு
மாகச் சணிமுலையாய் வாழ்த்து.

இ-ள். கச்சணிந்த முலைகளையுடையாளே! கசப்புள்ள மிளகுத்தக்காளியிலை அக்கினிமந்தம் வீக்கம் சர்த்தி பாதாக்ஷேபகவாதம்

சுரம் சோமரோகம் பாண்டு விக்கல் திரிதோஷ நோய்கள் மேகச் சொறி வெள்ளை உட்சூடு இவைகளை நீக்கும், வெள்ளீயத்தைக் கட்டும் பலவித சிந்தூரங்களுக்குதவும். 616

## தும்பையிலையின் குணம்

சீறுகின்ற பாம்போடு சில்விடங்கால் சென்னிவலி
யேறுகப மாந்த மிருக்குமோ—நாறுமலர்க்
கொம்பனைய மாதே குளிர்சீத சந்நிவிடுந்
தும்பையிலை யென்றொருகாற் சொல்.

### இதுவுமது

தும்பையிலை யையுண்ணுஞ் சோற்றுக் கெலாங்கறியா
யம்புவியோர் மிக்க வருந்துங்கால்—வெம்பிவரு
மேகமொடு கண்புகைச்சல் வீறுகை காலசதி
தாகமதி சோம்பலுறுந் தான்.

இ-ள். மலர்க்கொம்பனைய மாதே! தும்பையிலையால் சர்ப்பகீட விஷங்கள் வாதநோய் தலைவலி கபதோஷம் அக்கினிமந்தம் சிலேஷ்ம சந்நி இவை நீங்கும். இதை புளியிட்டுக்கடைந்து உணவோடருந்தில் பிரமேகம் நேத்திரப்புகை கால்களின் அசதி தாகம் சோம்பல் இவை உண்டாம். 618

## முள்ளங்கியிலையின் குணம்

வாயு மிகும்பித்தம் வளருங் கிருமியுமா
மோய்வரு நெஞ்செரிவு முண்டாங்காண்—மேயுநிற
முள்ளாங் கியிலையை முற்றுமுண்டாற் குன்மவலி
யுள்ளாங் கிளம்பா துரை.

இ-ள். முள்ளாங்கியிலையால் வாதகோபம் பித்தநோய் கிருமரோகம் மார்பெரிச்சல் ஆகிய இவையுண்டாகும். வயிற்றுநோய் அடங்கும். 619

## சுவற்று முள்ளங்கியிலையின் குணம்

நீரை யிறக்கிவிடு நெஞ்சுவலி யைத்தொலைக்குங்
கோர வதைப்பைக் குடிகெடுக்கு—நேரே
தவத்தி லுயர்ந் தோர்மயங்குஞ் சாயக்கண் மாதே
சுவற்றுமுள் ளாங்கியது சொல்.

இ-ள். தவத்திலுயர்ந்தோர் மயங்குகின்ற சாயகத்தை நிகர்த்த கண்களையுடைய மாதே! சுவற்று முள்ளாங்கி யிலையானது நீர்க்கட்டையும் மார்நோயையும் வாதசோப ரோகத்தையும் போக்கும். 620

### கறுப்பு வழுதுணையிலை, பருவழுதுணைவேர், சிறுவழுதுணைவேர் இவைகளின் குணம்

வழுதுணையின் பேரும் வழுத்தின்மிகு நோய்க்காம்
வழுதுணைக டம்மை நவில்வாமை—வழுதுணைப்பன்
னஞ்சலம்போக் குங்கா லடக்கும் பருதுசன்னம்
பஞ்சமூ லத்திலொன்றும் பார்.

இ-ள். வழுதுணை செடிவகைகளைக்கூறில் மிகவும் பெருகும், இவற்றுள் பிணிக்குதவுகின்றவைகளை மாத்திரம்சொல்வாம். கறுப்பு வழுதுணை இலை நீர்க்கட்டையும் பருவழுதுணைவேர் வாதநோயையும் நீக்கும். சிறுவழுதுணைவேர் பஞ்சமூலத்தில் ஒன்றாயிருந்து பல பிணியையும் விலக்கும். மை-கருப்பு. 621

### புகையிலையின் குணம்

மருந்தை முறித்துவிடும் வாய்வளரச் செய்யுந்
திருந்து பலவீனஞ் சேர்க்கும்—பொருந்துபித்த
முண்டாக்கும் விந்தழிக்கு மோது புகையிலையைக்
கண்டார்க்கு மாகாது காண்.

இ-ள். புகையிலை வாய்வறட்சி தூர்ப்பலம் பித்தாதிக்கம் சுக்கில க்ஷீணம் இவைகளை விளைவிக்கும், நல்ல மருந்தை முறிக்கும். 622

---

## கொடியின் இலைவகை

### தூதுளையின் குணம்

காதுமந்தங் காதெழுச்சி காசந் தினவுமத
மோதுமந்த முத்தோட முட்சூலை—தாதுநட்ட
மீதுளைப் பத்திரியை மேவச்செய் வாராய்தோர்
தூதுளைப் பத்திரியைத் துய்த்து.

இ-ள். தூதுளையிலையால் காதுமந்தம் காதெழுச்சி காசம் நமைச்சல் மதரோகம் அக்கினிமந்தம் திரிதோஷம் உட்குத்தல் விந்து நஷ்டம் மேலிளைப்பு ஆகிய இவைகள் விலகும். 623

### பறங்கி இலையின் குணம் (இதுவே பூசினி)

பித்தமொடு வாதம் பெருந்தாக மும்பெருகும்
சத்தமொடு பேதி தலைப்படுங்காண்—சுற்றுங்
கறங்காகு மேனியுள்ளே கவ்வுபுழுச் சேரும்
பறங்கி யிலைக்குப் பகர்.

இ-ள். பறங்கியிலைக்குப் பித்தகோபம் வாதாதிக்கம் அதிதாகம் இரைகின்றபேதி சரீர படபடப்பு கிருமி இவையுண்டாம். 624

### சுரையிலையின் குணம்

நீரிழிவும் வீக்கமும்போ நேரே மலமிறங்கும்
பாரமுறு சோபை பறக்குங்காண்—தீராத்
திரிதோடம் போகுஞ் செறிந்த சுரையி
னுரிய கொழுந்திலையை யுண்.

இ-ள். நீரையிறக்காநின்ற சுரையிலையால் சோபரோகம் தேக வீக்கம் முத்தோஷங்கள் இவைபோம், மலமிளகி இறங்கும். 625

### பேய்ச்சுரையிலையின் குணம்

மூலரோ கத்தின் முளையைக் களைந்துவிடு
மால விஷத்தையு மகற்றுங்காண்—ஞாலமதி
லாய்ச்சிவிடங் கிட்டுவது மாவருத்தம் வெற்பிறுதி
பேய்ச்சுரையின் பத்திரத்தைப் பேண்.

இ-ள். மலையில் முளைத்த பேய்ச்சுரை இலையானது முளை மூல ரோகத்தையும் கொடிய சர்ப்ப விஷத்தையும் கெடுக்கும். 626

### பாகல் இலையின் குணம்

பிரியாக் கிருமியறும் பேதியுண்டாந் தோட
முறியு மிரத முறியுங்—குறியாத
மாகற் புடைய மடமயிலே யெப்போதும்
பாகற் றழைக்குப் பயந்து.

இ-ள். மாகற்பிணையுடைய மாதே! பாகல் இலைக்குக் கிருமி ரோகமும் திரிதோஷகோபமும் நீங்கும், விரோசன முண்டாகும். இதனால் பாதரசவேகம் முறியும். 627

### அவரை இலையின் குணம்

அவரையிலைக் குத்தலைநோ யாழ்ந்த கிராணி
யுவரும் விடமுத லேகுந்—தவறுமற்
கொண்டவர்க்குத் தீபனமாங் கோதாய் விரணமறுங்
கண்டவர்க்குத் தோற்றமிது காண்.

இ-ள். மாலைசூடிய கூந்தலாளே! அவரை இலைக்குச் சிரஸ்தாப நோய் கிராணி, விஷம் சிரரோகம் சிரங்கு ஆகியவை விலகும், உதி ராக்கினியுண்டாகும் என்க. 628

## காராமணி இலையின் குணம்

காரா மணியிலையைக் காய்ச்சியுண்டா லுவரிசை
வாராத வாயுமிக வந்துறுங்கா—ணேரேகேண்
மூலம் விளையு முசியாக் கழிச்சலுண்டா
ஞால மதிலதனைத் தள்.

இ-ள். உரிசையுள்ள காராமணியிலையைப் பாகஞ்செய்துண்டால் வாதநோய் வாதமூலம் நீங்காபேதியுமுண்டாகும், பூமியிலி தனைத்தள்ளு. 629

## கொடிக்குறிஞ்சா இலையின் குணம்

கரப்பான் கிரந்தி கடியவிரும் புண்காச
முரப்பாம் விடபாக மோட்டு—நிரைப்பான
அக்கரத்தை மாற்றிவிடு மாயிழையே பித்தமுமாந்
தக்குறிஞ் சாவினிலை தான்.

இ-ள். ஆயிழையே! பித்தகுணமுள்ள கொடிகுறிஞ்சாயிலை அரைக்கடுவன் சிரங்கு காசம் வலியவிஷம் நாப்புண் இவை நீங்கும்.

## கறிப்பாலை இலையின் குணம்

மேகமனல் வெட்டைசுரம் வீறுபித்த முந்தொலையும்
போகமுறு மெய்ம்மருந்தும் பொய்ம்மருந்தாம்—பாகுமொழி
மானே கறிப்பாலை மன்னுமிலை யைத்தினமுந்
தானே யருந்துவர்க்குத் தான்.

இ-ள். பாகனைய சொல்லையுடைய பெண்ணே! கறிப்பாலை யிலையைத் தின்பவர்க்குப் பிரமேகவெப்பம் சீழ்மேகசுரம் பித்தகோபமிவை நீங்கும், சுக்கிலவிருத்தியும் ஔஷதக்கெடுதியு முண்டாம்.631

## ஊசிப்பாலை இலையின் குணம்

மேக மகலும் விழிகுளிரு நாளத்தின்
வேகமகலுமங்க மேனியிடும்—மோகமண
வாசிப்பா லைப்பருவ மாந்தரைவீக் குங்கொடியே
ஊசிப்பா லைப்பன்ன முண்.

இ-ள். மோகமண வாசிப்பால் பருவமாந்தரைக்கட்டும் கொடி போல்பவளே! ஊசிப்பாலையிலையால் பிரமேகம் ஆண் குறியினது துவாரவெப்பம், தீரும் கண்குளிர்ச்சி தேகபுஷ்டி உண்டாம். 632

## கோவையிலையின் குணம்

கண்ணுங் குளிர்ச்சிபெருங் காசமொடு வாயுவுறும்
புண்ணுஞ் சிரங்கும் புரண்டேகும்—நண்ணுமுடல்

மீதிலார் வெப்பகலும் வீழாநீர்க் கட்டேகும்
கோதிலாக் கோவை யிலைக்கு.

இ-ள். கோவையிலைக்கு இருமல் வாதகோபம் பெருவிரணம் சிறுசிரங்கு தேகச்சூடு நீரடைப்பு இவைபோம், கண்குளிர்ச்சி யுண்டாம். 633

## முசுமுசுக்கை இலையின் குணம்

இருமலுட னீளை யிரைப்புப் புகைச்சன்
மருவுகின்ற நீர்த்தோட மாறுந்—திருவுடைய
மானே முசுமுசுக்கை மாமூலி யவ்விலையைத்
தானே யருந்துவர்க்குத் தான்.

இ-ள். அழகையுடைய பெண்ணே! மாமூலியாகிய முசுமுசுக்கையிலைக்குக் காசம் கோழை சுவாசம் நெஞ்சிற் புகைக்கம்மல் சலதோடம் ஆகிய இவை நீங்கும். 634

## கோழியவரை இலையின் குணம்

ஆழிசுற்றும் வையத் தடர்ந் தபே ராமையொரு
நாழியினிற் கெட்டு நசியுங்காண்—தோழிகேள்
கோழியவ ரைத்தழைக்குங் குன்மங் குடல்வாத
மூழிவரைக் கும்வாரா தோர்.

இ-ள். தோழியே! கடல்சூழ்ந்த வுலகில் கோழியவரையிலைக்கு வயிற்றிற் காணுகின்ற பருத்த ஆமக்கட்டியும் வயிற்றுநோயும் ஆந்திர பித்தவாதமும் போக்கும். 635

## முயற்காதிலையின் குணம்

பீசத் தெழுந்த பெருவீக்கங் கைகாலில்
வீசிப் புடைத்த வெறுவீக்கம்—பேசாம
லேகுமுயற் காதிலை யிருக்குமூ ரைவிட்டுப்
பாகுமொழி மாதே பகர்.

இ-ள், பாகுமொழிமாதே! முசற்காதிலையால் குடலண்டவீக்கமும் கைகால்களின் கீல்களைப்பற்றி வீங்கிய வீக்கமும் விலகும். 636

## கழற்சியிலையின் குணம்-(இதுவே வச்சிரம்)

விரைவாதஞ் சூலையறும் வெட்டையன லேகு
நிரைசேர்ந்த குன்ம நிலையா—துரைசே
ரழற்சி விலகு மருந்திற் கசப்பாங்
கழற்சியிலை யென்றுரைக்குங் கால்.

இ-ள். கசப்புள்ள கழற்சியிலையால் பீஜவாதம் சூலைக்கட்டு பிரமேகம் சுரம் பலவிதகுன்மம் உள்ளழலை ஆகியவை ஒழியும். 637

## வெண்கழற்சி இலையின் குணம்

*ஏறண்டத் தோடே யிறங்கண்ட மெத்தவுமே*
*வீறண்ட மெல்லாம் விலகுங்காண்—தூரண்ட*
*வள்ளைக் குழையடிபோல் வாள்விழிமா தேநல்ல*
*வெள்ளைக் கழற்சியிலை விள்.*

இ-ள். வள்ளைக்குழையடிபோல் வாள்விழிமாதே! வெள்ளைக் கழற்சியிலை ஏறண்டரோகத்தையும் இறங்கண்ட நோயையும் தசையண்டப்பிணியையும் கெடுக்கும் என்க. 638

## வரிக்குமட்டி இலையின் குணம்

*பற்றுதிரப் பூச்சிகளைப் பற்பலவா மந்தத்தைச்*
*சுற்றுதிரப் பித்தத்தைத் தூவிடத்தை—முற்று*
*மரிக்குமட்டி யாயிலைமா தங்கருரை யன்றே*
*வரிக்குமட்டி யாயிலை மாதே.*

இ-ள். பெண்ணே! வரிக்குமட்டியிலை ரத்தக்கிருமிகள் பலவித மந்தம் ரத்தபித்தம் தசையைப்பற்றிய சர்ப்பவிஷம் இவைகளை விரைவிற் கெடுக்கும் என்க. 639

## சிறுபூனைக்காலி இலையின் குணம்

*சிறுபூனைக் காலியிலை சில்விடத்தைப் போக்கு*
*முறுகாந்தத் தைச்சிந்தூ ரிக்குஞ்—சிறுமாந்த*
*மையங் கபந்தீர்க்கு மாந்தகப நோய்விலக்கும்*
*வையந் தனிலிதனை வாழ்த்து.*

இ-ள். சிறுபூனைக்காலி இலையானது வண்டுகடி முதலிய சில்விஷம் அற்றமந்தம் சிலேஷ்மகோபம் கோழைக்கட்டு க்ஷயரோகம் ஆகியவைகளை ஒழிக்கும், காந்தத்தைச் சிந்தூரஞ்செய்யும். 640

## வேலிப்பருத்தி இலையின் குணம்
## (இதுவே உத்தாமணி)

*ஆலித் தெழுந்தகோ யத்தனையுந் தீருமே*
*வேலிப் பருத்தியதன் மெல்லிலையால்—வேலொத்துக்*
*கண்டிக்கும் வாத முடன்சன்னி தோடமும்போ*
*முண்டிக்கும் வாசனையா மோது.*

### இதுவுமது

*உத்தா மணியிலையா லுள்வயிற்றுக் குன்மமொடு*
*குத்தாம் வலியுங் குளிரும்போம்—பற்றி*

இசுக்கும் வலிபிரைப்பு மெய்த்தடிப்பு மேகும்
பசிக்குமதி மாந்தமும்போம் பார்.

இ-ள். உணவில் மணத்தைத் தருகின்ற உத்தாமணியிலையால் பல்நோய்கள், வாதநோய் விஷம் சன்னி திரிதோஷம் வாதகுன்மம் சரீரக்குடைச்சல் குத்தல் நடுக்கல் தநுர்வாதம் சுவாசம் பலவிதத் தடிப்புகள் அக்கினிமந்தம் இவை நீங்கும், தீபனமுண்டாம். 642

தாரா இலையின் குணம் (இது தூரா என மருவியது)

புண்கிரந்தி கட்டி பொருசன்னி கீடமும்போங்
கண்புகைச்சல் காசங் கதிக்குமென்பார்—பெண்களுக்குப்
பாலும் பெருகுமுள்ளே பற்றுதிரச் சிக்கல்விடு
மேலுந்தா ராவினிலைக் கே.

இ-ள். தாராஇலைக்கு விரணம் கிரந்தி விப்புரிதிக்கட்டி சந்நிபாதம் ஒரிகிருமி நேத்திரப்புகை கணகாசம் முலைப்பால் விருத்தி ஆகிய இவைகள் உண்டாகும், மாதாந்த உதிரச்சிக்கல்விடும். 643

செந்தாரா இலையின் குணம்

அனில மூலையு மரோசகமு நீங்குந்
தனியான தோடமது தாழுங்—கனிமொழியே
வெந்தாரைச் சூடும் விடாயும்போந் தீபனமாஞ்
செந்தாரா வின்றழைக்குச் செப்பு.

இ-ள். கனிமொழியாளே! செந்தாரா இலைக்கு வாத மூலை மூலம் அருசி வாதமுதலிய தனித்தோஷங்கள் நீர்த்தாரைச்சூடு ஆயாசம் இவை நீங்கும், தீபனமுண்டாம். 644

விஷமூங்கில் இலையின் குணம்

பிளவை யுகிர்ச்சுற்றுப் பெரும்படுவன் வீக்க
மளவினோய் காதெழுச்சி யாற்று—மளவையுரு
தோங்கி வளர்ந்தமுலை யோவியமே நீண்டவிட
மூங்கிலிலை நன்மூலி முன்.

இ-ள். அளவையுரு தோங்கிவளர்ந்த முலைகளையுடைய ஓவியம் போல்பவளே! விஷமூங்கிலிலை இராசப்பிளவை நகச்சுற்று பெரும்படுவன் சோபை சிலேஷ்ம கர்ணசூலை முதலிய நோய்களைப் போக்கும். 645

சதாப இலையின் குணம்

கணமாந்த சூட்சை கணக்கழிச்சல் வாந்தி
குணமாம் பசியுங் குலவும்—வணமயிலே

கூடு நிறைகருப்பக் கோதையர்க்காம் வேதகனு
நாடு சதாபலையி னால்.

இ-ள். வண்ண மயில்போலுஞ் சாயலையுடையாளே! சதாபலை யிலையினால் பால்மந்த முதலியவற்றா லுண்டாகின்ற சுரம் கணப் பேதி கபவமனம் பிரசவமாதர்கள் வேதனை இவை நீங்கும், தீபன முண்டாம். 646

# கீரை வகை

## கருணைக்கிழங்குத்தண்டின் குணம்-(இதுவே சூரணம்)

சித்த குதாகுரத்தைத் துட்டகப மேதையதி
கத்தை விலக்குங் கறியமைக்கிற்—பத்தியமாஞ்
சீரணத்தை யும்மிகுத்த தீபனத்தை யுங்கொடுக்குஞ்
சூரணத்தின் றண்டெனவே சொல்.

இ-ள். சூரணத்தண்டென்னும் பத்தியத்திற்கான கருணைத் தண்டால் மூலரோகமும் கபகோபமும் மேதோதாது விருத்தியும் நீங்கும், சீரணமும் பசியுமாம். 647

## கீரைத்தண்டின் குணம்

தண்டுமெத்த வாயு தணியாத சீதளமாம்
விண்டுரைக்கிற் சின்னோய்போம் விள்ளவோ—கொண்டாக்க
ணீர்க்கடுப்பு வெட்டையு நில்லாது நேரிழையே
போர்க்கடுப்பி ரத்தமும் போம்.

இ-ள். நேரிழையாளே! அதிவாத சீதளமுள்ள கீரைத்தண் டால் பித்தகிரிச் சரம் பிரமேகச்சூடு வயிற்றுக்கடுப்பு ரத்தபேதி முதலிய நோய்களும் போம். 648

## வெண்கீரைத்தண்டின் குணம்

வெண்கீரைத் தண்டு வியாதியற்ற நற்கறியாங்
கண்காணு தோடிவிடுங் காங்கையெல்லாங்—கண்காணு
மூலமதற் கேற்கு முசியா வெரியகற்றுந்
தாலமதி லக்குணத்தைச் சாற்று.

இ-ள். நோயற்ற நல்ல பதார்த்தமாகிய வெண்கீரைத் தண்டி னால் வெப்பம் வெளிமூலரோகம் பித்த எரிச்சல் நீங்கும். 649

## புதியன்மூலிக்குணம்-(இதுவே புதினு)

அருசியொடு வாந்தி யக்கினியா மந்தங்
குருதி யழுக்குமலக் கொட்ட—லிரியுங்

கூடு நிறைகருப்பக் கோதையர்க்காம் வேதகனு
நாடு சதாபலையி னால்.

இ-ள். வண்ண மயில்போலுஞ் சாயலையுடையாளே! சதாபலை யிலையினால் பால்மந்த முதலியவற்றா லுண்டாகின்ற சுரம் கணப் பேதி கபவமனம் பிரசவமாதர்கள் வேதனை இவை நீங்கும், தீபன முண்டாம். 646

# கீரை வகை

## கருணைக்கிழங்குத்தண்டின் குணம்-(இதுவே சூரணம்)

சித்த குதாகுரத்தைத் துட்டகப மேதையதி
கத்தை விலக்குங் கறியமைக்கிற்—பத்தியமாஞ்
சீரணத்தை யும்மிகுத்த தீபனத்தை யுங்கொடுக்குஞ்
சூரணத்தின் றண்டெனவே சொல்.

இ-ள். சூரணத்தண்டென்னும் பத்தியத்திற்கான கருணைத் தண்டால் மூலரோகமும் கபகோபமும் மேதோதாது விருத்தியும் நீங்கும், சீரணமும் பசியுமாம். 647

## கீரைத்தண்டின் குணம்

தண்டுமெத்த வாயு தணியாத சீதளமாம்
விண்டுரைக்கிற் சின்னோய்போம் விள்ளவோ—கொண்டாக்க
ணீர்க்கடுப்பு வெட்டையு நில்லாது நேரிழையே
போர்க்கடுப்பி ரத்தமும் போம்.

இ-ள். நேரிழையாளே! அதிவாத சீதளமுள்ள கீரைத்தண் டால் பித்தகிரிச் சரம் பிரமேகச்சூடு வயிற்றுக்கடுப்பு ரத்தபேதி முதலிய நோய்களும் போம். 648

## வெண்கீரைத்தண்டின் குணம்

வெண்கீரைத் தண்டு வியாதியற்ற நற்கறியாங்
கண்காணு தோடிவிடுங் காங்கையெலாங்—கண்காணு
மூலமதற் கேற்கு முசியா வெரியகற்றுந்
தாலமதி லக்குணத்தைச் சாற்று.

இ-ள். நோயற்ற நல்ல பதார்த்தமாகிய வெண்கீரைத் தண்டி னல் வெப்பம் வெளிமூலரோகம் பித்த எரிச்சல் நீங்கும். 649

## புதியன்மூலிக்குணம்-(இதுவே புதினா)

அருசியொடு வாந்தி யக்கினியா மந்தங்
குருதி யழுக்குமலக் கொட்ட—லிரியுங்

கூடு நிறைகருப்பக் கோதையர்க்காம் வேதகனு
நாடு சதாபலையி னால்.

இ-ள். வண்ண மயில்போலுஞ் சாயலையுடையாளே! சதாபலை யிலையினால் பால்மந்த முதலியவற்றா லுண்டாகின்ற சுரம் கணப் பேதி கபவமனம் பிரசவமாதர்கள் வேதனை இவை நீங்கும், தீபன முண்டாம். 646

# கீரை வகை

## கருணைக்கிழங்குத்தண்டின் குணம்-(இதுவே சூரணம்)

சித்த குதாகுரத்தைத் துட்டகப மேதையதி
கத்தை விலக்குங் கறியமைக்கிற்—பத்தியமாஞ்
சீரணத்தை யும்மிகுத்த தீபனத்தை யுங்கொடுக்குஞ்
சூரணத்தின் றண்டெனவே சொல்,

இ-ள். சூரணத்தண்டென்னும் பத்தியத்திற்கான கருணைத் தண்டால் மூலரோகமும் கபகோபமும் மேதோதாது விருத்தியும் நீங்கும், சீரணமும் பசியுமாம். 647

## கீரைத்தண்டின் குணம்

தண்டுமெத்த வாயு தணியாத சீதளமாம்
விண்டுரைக்கிற் சின்னோய்போம் விள்ளவோ—கொண்டாக்க
ணீர்க்கடுப்பு வெட்டையு நில்லாது நேரிழையே
போர்க்கடுப்பி ரத்தமும் போம்.

இ-ள். நேரிழையாளே! அதிவாத சீதளமுள்ள கீரைத்தண் டால் பித்தகிரிச் சரம் பிரமேகச்சூடு வயிற்றுக்கடுப்பு ரத்தபேதி முதலிய நோய்களும் போம். 648

## வெண்கீரைத்தண்டின் குணம்

வெண்கீரைத் தண்டு வியாதியற்ற நற்கறியாங்
கண்காணு தோடிவிடுங் காங்கமெல்லாங்—கண்காணு
மூலமதற் கேற்கு முசியா வெரியகற்றுங்
காலமதி லக்குணத்தைச் சாற்று.

இ-ள். நோயற்ற நல்ல பதார்த்தமாகிய வெண்கீரைத் தண்டி னால் வெப்பம் வெளிமூலரோகம் பித்த எரிச்சல் நீங்கும். 649

## புதியன்மூலிக்குணம்-(இதுவே புதினா)

அருசியொடு வாந்தி யக்கினியா மந்தங்
குருதி யழுக்குமலக் கொட்ட—லிரியுங்

துதியதன்று சோறிரங்குந் தொல்லுலகி னோரும்
புதியன்மூலி கையைப் புகல்.

இ-ள். புதியன் மூலியால் அருசி சர்த்தி மந்தாக்கினி ரத்த தாதுவி னழுக்கு மலப்போக்கு இவைநீங்கும். போஜனமுஞ் செல்லும் என்க. 650

## வள்ளைக்கீரை, பருப்புக்கீரை, இவைகளின் குணம்

வள்ளைக்கீ ரைதனில் மாரும்பா லுண்டாகும்
பிள்ளைப் பருப்பிலைக்கும் பித்தமறுங்—கொள்ளத்
தெரியுங் கடல்சூழித் தேசத்தோ ருக்குக்
கரிய குழலணங்கே காண்.

இ-ள். கறுத்த குழலாளே! வள்ளைக்கீரைக்கு வாதகோபம் நீங்கும் முலைப்பால் பெருகும், இளம்பருப்புக்கீரைக்குப் பித்தாதிக் கம்போம். 651

## வங்கார வள்ளைக்கீரையின் குணம்

மாரிக்கா லத்தாய வங்கார வள்ளையினாற்
பூரித்த வாதம் பொருமலொடு—காரித்
திறங்கா மலசல மிறங்குமின் புண்டா
முறங்கா விழியணங்கே யுள்.

இ-ள். மதர்த்த விழிகளை யுடையமாதே! மழைக்காலத்து வங்கார வள்ளைக்கீரையினால் வாதநோயும் வயிற்றுப்பிசமும் நீங்கும், கறுத்துச் சிக்கியமலமும் மூத்திரமும் சரியாயிறக்கும். குடலுக்குச் சுகமுண்டாம் என்க. 652

## கொடிபசலைக்கீரையின் குணம்-(இது வசலை பசலை என மருவியது)

நீர்க்கடுப்பு நீரடைப்பு நீங்காத மேகமுமிவ்
வூர்க்கடுத்து வாராம லோடுங்காண்—பார்க்கவொண்ணா
வற்பவிடை மாதே யாரோசிசர்த்தி யுந்தொலையு
நற்பசலைக் கீரையத னால்.

இ-ள். நுட்பமான யிடையை யுடையாளே! நல்ல வசலைக் கீரையால் மூத்திரக்கடுப்பு மூத்திரக் கிரிச்சரம் ஒழுக்குவெள்ளை அருசிவாந்தி ஆகியவைகள்போகும். 653

## சிறுபசலைக்கீரையின் குணம்-(இதுவே பசறை)

போக மிகக்கொடுக்கும் போர்செய்க பத்தைப்பெருக்கு
மாகமதிற் றாகமன லத்தணிக்கு—மாகுடரின்

மன்னு மலமிளக்கு மாறு வுரிசைதரும்
தின்னுஞ் சிறுபசலைத் தேர்.

இ-ள். அதிசுவையுள்ள சிறுபசலை புணர்ச்சியி லிச்சையையும் சுபத்தையும் பெருக்கும். தாகத்தையும் சூட்டையும் தணிக்கும். மலத்தை யிளக்கும். 654

## பாற்சொரிக்கீரையின் குணம்

வயிற்றுக் கடுப்பு மலஞ்சீதம் பேதி
நியத்தரத்தம் போக்கிவை நிறுத்தும்—குயத்தையொரு
பாற்சரியக் காட்டும் பருவ வணங்கரசே
பாற்சொரியக் கீரையது பார்.

இ-ள். மங்கைப் பருவமுள்ள பெண்கள் நாயகமே! பாற்சொரிக் கீரையானது வயிற்றுக்கடுப்பு மலம் சீதம் இரத்தம் இவ்வகைப் பேதிகளையும் நீக்கும் என்க. 655

## சாணக்கீரையின் குணம்

கோழையொடு மாந்தங் குழந்தைச் சுழிக்கணமும்
பேழையெனச் சொல்லும் பெருவயிறும்—கீழொருவர்
காணக் கிருமிகளைத் கக்கு மளிபுண்ணுஞ்
சாணக்கீ ரையிற்போந் தான்.

இ-ள். சாணக்கீரையால் கபம் அக்கினிமாந்தம் சுழிக்கணம் மகோதரம் புழு நெளிகின்ற விரணம் ஆகியவை போம். 656

## துயிலிக்கீரையின் குணம்

சீதம் விளையுஞ் சிறுசிரங்கு புண்ணுமாம்
காது பழமலமுங் கட்டறுங்காண்—கீதக்
குயிலனையாய் வெட்டையெனக் கூறுநோ யில்லைத்
துயிலயி லைக்கறிக்குஞ் சொல்.

இ-ள். கீதக் குயிலனைய பெண்ணே! துயிலிக்கீரைக்கு ஆமமும் நமிட்டுச் சிரங்கும் விரணமும் உண்டாகும். பழ மலக்கட்டும் பிரமேக வெள்ளையும் நீங்கும். 657

## பண்ணைக்கீரையின் குணம்

பண்ணையிளங் கீரையது பற்று மலமிளக்கு
மெண்ணுங் குடருக் கிதங்கொடுக்கும்—பெண்ணேகேள்
சீதங் கரப்பான் சிரங்குபுண் மாற்றுவிக்கும்
கோதச் சிலையதனைக் கொள்.

இ-ள். பெண்ணே! குடலுக்கு நன்மைத் தாராநின்ற பண்ணைக்கீரை ஆமங் கரப்பன் கிரந்தி விரணம் இவைகளை நீக்கும், மலத்தை யிளக்கும் என்க. 658

பரட்டைக்கீரையின் குணம்

பாரட்டைநறுங் கீரையது பத்தியத்திற் காகும்
வெருட்டுகின்ற பித்தக வீறு—புரட்டுங்
கபமுடனே வாதங் கரப்பானு மேகுஞ்
சுபவசன மாதே துதி.

இ-ள். சுபவசன மாதே! பத்திய வியஞ்சனமாகிய பரட்டைக் கீரையால் சிலேத்ம நோய் வாதப்பிணி கரப்பான் பித்தம் போம் என்க. 659

செங்கீரைத்தண்டின் குணம்

செங்கீரைத் தண்டதுதான் தீராத பித்தத்தைத்
தாங்காம லோட்டிவிடுந் தையலர்க்குப்—பொங்கும்
பெரும்பாட்டை நீக்கும் பெரிய கறியாந்
தரும்பாட்டு வெப்பகற்றுந் தான்.

இ-ள். பெருங் கறியாகிய செங்கீரைத் தண்டு தீராத பித்த நோயையும், பெண்களுக்குப் பெரும்பாட்டையும் பிரலாப சன்னி பாத சுரத்தையும் நீக்கும் என்க. 660

முளைக்கீரையின் குணம்

தளர்ந்தவர்க்கும் பாலர்க்குந் தக்கவய தோர்க்கும்
இளங்கீரை நாவுக் கிதமாங்—கிளம்பு
சுரகாசம் போக்குந் தொடர்பசி யுண்டாக்கும்
பிரகாசமா யெடுத்துப் பேசு.

இ-ள். விருத்த பால யெளவன பருவத்தவர்க்கும் நாவுக் கிதவு வைத்திராநின்ற முளைக்கீரை காச சுரத்தை நீக்கும், பக்தியைத் தரும். 661

முள்ளிக்கீரையின் குணம் (இதுவே குப்பைக்கீரை)

நீரைப் பெருக்கிவிடு நீடனலைத் தாமெழுப்பும்
பாரநறுந் தங்கத்தைப் பஸ்மிக்கு—நேரே
விடவிருக்கும் பொற்றட்டை மேவுமல்குன் மாதே
யடவிநிற்கு முள்ளிக் கீரை.

இ-ள். விடவிருக்கும் பொற்றட்டை யொத்த அல்குலையுடைய மாதே! காட்டு முள்ளிக்கீரை நீர்ப்பேதியையும் ஜடராக்கினி விருத்தியையும் கொடுக்கும். தங்கத்தைப் பஸ்பமாக்கும் என்க. 662

அறுகீரையின் குணம் (இது அரைக்கீரை என மருவியது)

காய்ச்சல்குளிர் சந்நி கபநோய் பலபிணிக்கும்
வாய்ச்ச கறியாய் வழங்குங்காண்—வீச்சாய்க்
கறுவுமோ வாயுவினங் காமமிக வுண்டா
மறுகீரை யைத்தின் றறி.

இ-ள். பல பிணிக்கும் நற்கறியான அறுகீரையினால் சுரம் நடுக்கல் சந்நிபாதம் கபரோகம் வாதநோய் இவை போம். தாது விருத்தியாம். 663

புளிச்சிறுகீரையின் குணம்

தேகசித்தி யாகுஞ் சிறுகாச மந்தமறும்
போதமுறு விந்துவுநற் புஷ்டியுண்டாம்—வாகாம்
வெளிச்சிறுமா னேக்கும்விழி மென்கொடியே நாளும்
புளிச்சிறு கீரையுண்ணும் போது.

இ-ள். வெளிச்சிறு மானேக்கும் விழி மென்கொடியே! புளிச் சிறுகீரையினால் சிணுக்கிருமலும் மந்தமும் நீங்கும். காயசித்தியும் புணர்ச்சியில் விருப்பமும் வீரிய விருத்தியும் உண்டாம். 664

சிறுகீரையின் குணம்

கண்புகைச்ச னேத்திரநோய் காசம் படலம்ரசப்
புண்கிரிச்சு ரஞ்சோபை பொங்குபித்த—மண்பரவு
தாவரவி டங்களும்போந் தாழாத் திருவுமுண்டாங்
கூறுசிறு கீரைதனைக் கொள்.

இ-ள். சிறுகீரையால் தூம்பிர நோய் காசம் கண்படலம் பாதரதவேகம் விரணம் மூத்திரகிரிச்சரம் வீக்கம் பித்தநோய் நாவி பாஷாணம் முதலிய விஷங்கள் ஆகிய இவைகள் போம். அழகு உண்டாம். 665

கலவைக்கீரையின் குணம்

வாதபித்த வையகத்தை மாற்று மலமறுக்கு
மோதுகுடல் வாதமதை யோட்டுங்காண்—போதின்
பலகலவைக் கோதாய்நற் பத்தியத்திற் கொவ்வும்
பலகலவைக் கீரையுண்டு பார்.

இ-ள். மயிற் சாந்தணிந்த கூந்தலாளே! பல வகையுங் கலந்த கீரை வாத பித்த கப தோஷங்களையும் மலச் சிக்கலையும் ஆந்திர பித்த வாதத்தையும் போக்கும். பத்தியத்திற்காம் என்க. 666

### மணலிக்கீரையின் குணம்

வாதமறு நெஞ்செரிவு வாத கபம்விலகுஞ்
சீதமுட ணேய்பலவுந் தீருங்காண்—போதவுள்ளே
வீறு கிருமியொடு மேவாப் பயித்தியம்போங்
கூறு மணலிக்கீ ரைக்கு.

இ-ள். மணலிக்கீரைக்கு வாத கபம் மார்பு சளி சிலேத்ம முதலிய நோய்க் கிருமி ரோகம் பயித்திய தோஷம் ஆகிய இவைகள் நீங்கும். 667

### நீர்ஆரைக்கீரையின் குணம் (இதுவே ஆரைக்கீரை)

தின்றூ லுரிசைதருந் தீராப் பயித்தியத்தைப்
பொன்றூத நீரிழிவைப் புண்ணுரை—யென்றுமிந்த
வீராரைச் சாராம லோட்டிவிடு நாவிதழால்
நீராரைக் கீரையது நீ.

இ-ள். நல்ல சுவையும் நாவிதழுமுள்ள நீராரைக்கீரை பித்த நோயையும், அதிமூத்திரத்தையும், இரத்தப் பிரமேகத்தையும் நீக்குமென்க. 668

### புளியாரைக்கீரையின் குணம்

பித்த மயக்கமறும் பேருலகின் மானிடர்க்கு
நித்மருள் வாதகப நேருமே—மெத்தெனவே
மூலக் கிராணிவிடு மூல வுதிரமறுங்
கோலப் புளியாரைக் கு.

இ-ள். புளியாரைக் கீரைக்குப் பித்த மயக்கம் தீமையை விளைவிக்கின்ற வாத கப மீசிரம் மூலவாயு கிராணி இரத்தமூலம் ஆகிய இவைகள் போம். 669

### கோழிக்கீரையின் குணம்

சொறியுங் கரப்பானுந் தோற்று மென்மேலும்
படையுங் கிருமிமிகச் சேரு—மெறிகின்ற
வாழிக்கீ டானவிழி யாரணங்கே வையகத்திற்
கோழிக்கீ ரைக்குணத்தைக் கூறு.

இ-ள். சமுத்திரத்தை நிகர்த்த கண்களையுடையாளே! கோழிக் கீரையால் படையும் கரப்பனும் கிருமியும் உண்டாம். 670

### புளிப்புக்கீரையின் குணம்

வாதமறும் பித்தமுறு மாறூ வரோசிவிடுஞ்
சீதமுட னேயகலுஞ் சேயிழையே—போதப்
புளித்த விலைக்கறிக்குப் போமிரத்த பித்தங்
களித்த கரப்பனொடு காண்.

இ-ள். சேயிழையாளே! புளிப்புக்கீரைக்கு வாதகோபம் அருசி சீதளம் ரத்தபித்தரோகம் கரப்பான் ஆகிய இவை நீங்கும், பித்தங் கதிக்கும் என்க. 671

## பிண்ணாக்குக்கீரையின் குணம்

மலமிறங்கும் வாதமுடன் வன்கரப்பா னுண்டாஞ்
சலமிறங்கு மேகந் தணியு—மலர்விழியா
யுண்ணாக்குக் கின்பமா மோடுமனல் வெட்டையெலாம்
புண்ணாக்குக் கீரையுண்ட பேர்க்கு.

இ-ள். மலர்போன்ற விழியாளே! உரிசையுள்ள பிண்ணாக்குக் கீரையால் மலமும் மூத்திரமும் சரியாயிறங்குவதுந் தவிர வாத தோடமும் கரப்பானும் உண்டாகும். பிரமேகவெள்ளையும் அரித் திராமேகமும் போகும் என்க. 672

## முக்குளிக்கீரையின் குணம்

ஐய மிகக்கொடுக்கு மாந்தர்போ கந்தருங்காண்
மெய்யெரிவை யெல்லாம் விலக்குமே—தையலே
பேதி யளிக்கும் பெருமுக் குளிக்கீரை
சீதம் விளைக்குமெனத் தேர்.

இ-ள். தையலே! முக்குளிக்கீரை கபதோடம் புணர்ச்சியி ...ிச்சை அதிசாரம் ஆமம் இவைகள் உண்டாக்கும், வெப்பத்தை ...ீக்கும். 673

## வெந்தயக்கீரையின் குணம்

பொருமந்தம் வாயுகபம் போராடு கின்ற
விருமல் ருசியிவை யேகுந்—தரையினிற்
றீதி லுயர்நமனைச் சீறும் விழியணங்கே
கோதில்வெந்த யக்கீரை கொள்.

இ-ள். தீதிலுயர்ந்த காலனைச் சினக்கும் விழிகளையுடைய ...மாதே! வெந்தயக்கீரையால் வயிற்றுப்பிசம் அக்கினிமந்தம் வாத ...கோபம் சிலேட்டுமதோடம் காசம் அரோசகம் ஆகியவை நீங்கும்.

## கொத்துமல்லிக்கீரையின் குணம்

கொத்துமல்லிக் கீரையுண்ணிற் கோர வரோசகம்போம்
பித்தமெல்லாம் வேருடனே பேருங்காண்—சத்துவமாம்
வெச்செனவே போகம் விளையுஞ் சுரந்தீருங்
கச்சுமுலை மாதேநீ காண்.

இ-ள். கச்சுமுலை மாதே! கொத்துமல்லிக் கீரையால் வாத ...அரோசகம் பித்தசுரம்போம், வன்மையும் சுக்கிலமும் விருத்தி ...ஆம். 675

## கொடிக்காசரைக்கீரை, செடிக்காசரைக்கீரை விதை இவைகளின் குணம்

கொடிக்கா சரையிலையாற் கூறுபித்த மேகுஞ்
செடிக்கா சரைக்குச் சிலேட்மந்—தடிக்காவா
மிவ்விதைக ளாற்கருப்ப மின்றெனவே பொய்த்துவிடுஞ்
செவ்விய மெல்லிதழாய் தேர்.

இ-ள். செவ்விய மெல்லிதழையுடைய பெண்ணே! கொடிக் காசரைக்கீரையால் பயித்தியம்போம். செடிக்காசரைக் கீரையால் கபம் நீங்கும். இவ்வித்துக்களால் கருப்பங் கரையும். 676

## காசினிக்கீரையின் குணம்

அத்திவெப்பம் நீக்கு மடர்சோபை யைத்தொலைக்கு
மெத்தவுதி ரத்தழுக் கைவிலக்கு—மத்தரத்தின்
மாசினியி லைங்காத வார்த்தையெனப் பேசுவிக்குங்
காசினி யிலைக்குணத்தைக் காண்.

இ-ள். காசினிக்கீரை அஸ்திதாது சுரத்தையும் வீக்கத்தை யும் உதிரத்தழுக்கையும் நீக்கும், ரத்தவிருத்தியைச் செய்யும். 677

## போகம் விளைக்கும் கீரைகள்

தாளி முருங்கைத் தழைதூ துணம்பசலை
லாளிலறு கீரையுநெய் வார்த்துண்ணி—லாளியென
விஞ்சுவார் போகத்தில் வீம்புரைத்த பெண்களெலாங்
கெஞ்சுவார் பின்வாங்கிக் கேள்.

இ-ள். நறுந்தாளி நன்முருங்கை தூதுணம் பசலை அறுகீரை இவற்றுள் யாதேனும் ஒன்றைப் புளிநீக்கிப் பாகஞ்செய்து அன் னத்துடன் நெய்சேர்த்துக் காலையில் மாத்திரம் ஒரு மண்டல அள வையாக உண்ணில் புணர்ச்சியில் நிர்வாகம் உண்டாம் என்க. 678

---

# மரத்தின் புட்பவகை

## பச்சைக் குங்குமப்பூவின் குணம்

### விருத்தம்

சங்கையின் மதுரதோடஞ் சலதோடம் பீநசங்கட்
செங்கையற் கண்ணின்றோடஞ் செவித்தோடம் பித்ததோடங்
கெங்கையாங் கபதோடங்கள் கெஞ்சிடும் பச்சையான
குங்குமப் பூவினாலே கோதையே யிதனைக்கொள்ளே.

இ-ள். கோதையே! பச்சைக் குங்குரப்பூவுக்கு இன்சுவையால் பிறந்த தூர்க்குணங்கள் நீரேற்றம் நாசிநேத்திரம் செவி இவைகளைப் பற்றியரோகம் பயித்தியம் சிலேஷ்மதோஷம் இவை விலகும் என்க.

## கொன்றைப்பூவின் குணம் (இதுவே சரக்கொன்றை)

வெண்பா

மலக்கிருமி யோடு மதுநீர்க் குடலாந்
தலத்துநோ யுங்குலைந்து சாயு—நிலத்திற்கு
ளொன்றைக்கும் வாடாத வின்பமலர்க் கொம்பே
கொன்றைப் பசுமலரைக் கொள்.

இ-ள். இன்பமலர்க் கொம்பனையாளே! கொன்றைப்பூவால் மலாசயக்கிருமி மதுமேகம் குடலைப்பற்றிய ரோகங்கள்போம். 680

## மைக்கொன்றைப்பூவின் குணம் (இதுவே மயிர்க்கொன்றை)

மைக்கண் விழியனமே வையகத்தி லெப்போது
மைக்கொன்றைப் பூமேக மாற்றுங்காண்—மிக்கதனைக்
கொண்டாற் சலமேகங் கூகூவென் றேபதறி
யண்டாதீ துண்மை யறி.

இ-ள். மையணிந்த கண்களையுடைய அன்னமே! மைக்கொன் றைப்பூவால் பிரமேகமும் சலமேகமும் நீங்கும் என்க. 681

## காட்டாத்திப்பூவின் குணம்

உதிரக் கடுப்போ டுதிரக் கழிச்சல்
விதிரக் கடும்பேதி மேக—மெதிர்நிற்க
மாட்டா தகலும்வனச மலர்த் திருவே
காட்டாத்திப் பூவுக்குக் காண்.

இ-ள். தாமரையில் வசிக்கு மிலக்குமிபோல்வாளே! காட்டாத் திப்பூவுக்கு மதத்தகடுப்பு ரத்தாதிசாரம் வெளுத்த மலக்கழிச்சல் பிரமேகம் ஆகிய இவைகள்போகும். 682

## சண்பகப்பூவின் குணம்

வாதபித்த மத்திசுர மாமேகஞ் சுத்தசுரந்
தாதுநட்டங் கண்ணழற்சி தங்காவே—மாதேகேள்
திண்புழும னக்களிப்பாந் திவ்யமண முட்டனஞ்சேர்
சண்பகப் பூவுக்குத் தான்.

இ-ள். பெண்ணே! நீ கேட்பாயாக: நல்ல மணமுஞ்சூடும் உள்ள சண்பகப்பூவிற்கு வாத பித்த மிஸ்ரம் அஸ்திசுரம் பிரமேகம் தனித்

தோஷசுரம் சுக்கில நஷ்டம் நேத்திர அழற்சி ஆகிய இவை போம். மனக் களிப்புண்டாம். 683

## பாதிரிப்பூவின் குணம்

பித்த சுரந்தணியும் பெண்வசிய முண்டாகும்
முற்றியதோர் வெட்டை முடியுங்காண்—மெத்தவுமே
மாதுரிய நீங்கா வசன மடவனமே
பாதிரியின் பூவையுண்டு பார்.

இ-ள். மாதுரிய வசனியே! பாதிரிப்பூவினால் தீச்சுரமும் மேகமும் நீங்கும், ஸ்திரீ வசியமாம். 684

## மந்தாரப்பூவின் குணம்

மந்தாரப்பூ குளிர்ச்சி மன்னர் வசியமுமாஞ்
செந்தா மரைத்திருவே செப்பக்கேள்—சந்ததமுங்
கண்ணுக்கு மாகுளிர்ச்சி காணுங் கொதிப்பகற்று
மண்ணினின்றும் பூவெனவே வை.

இ-ள். செந்தாமரையில் வசிக்கு மிலக்குமியனைய பெண்ணே! குளிர்ச்சியுள்ள நல்ல மந்தாரப்பூ ராஜவசியத்தையும் விழிக்குக் குளிர்ச்சியையும் கொடுக்கும். சரீர வெப்பத்தை நீக்கும். 685

## புன்னைப்பூவின் குணம்

புன்னைப்பூ பித்தமென்பார் போராடு வன்மேகம்
வின்னப் படாசித்த விப்பிரமம்—பின்னுங்
கரப்பான் சொறிசிரங்குங் காணு தகற்று
முரப்பாக வேமயக்கு முன்.

இ-ள். புன்னைப்பூ நீங்காமேகம் சித்தவிப்பிரமம் சங்கிகரப்பன் புடை விரணம் இவை நீங்கும், மயக்கமுண்டாக்கும், பித்தமென்பர்.

## மகிழம்பூவின் குணம்

வெகு வனலமாகு விரகமிக வுண்டா
முகர வரோசக முறியு—மிகவு
மகிழச் சுரத வகைகாட்டு மாதே
மகிழத் தூறு மலர்க்கு.

இ-ள். மகிழப்புணர்ச்சி விளையாட்டைக் காட்டுமாதே! மகிழம் பூவுக்கு தேகவெப்பமும் புணர்ச்சியிலிச்சையும் உண்டாக்கும். இதனை முகர அரோசகரோகம் நீங்கும். 687

## பன்னீர்மரப்பூவின் குணம்

சர்த்தி யரோசகமுட் டாதுநட்ட மேல்வறட்சி
யொத்த வழலு மொதுங்குங்கா—ணுத்தரத்துந்
தன்னீர்மை குன்றாத் தளிர்வண்ண மாதரசே
பன்னீர்ப்பூ மரத்தைப் பார்.

இ-ள். தன்னீர்மை குன்றாத வனிர்வண்ண மாதரசே! பன்னீர் மரப்பூவினால் வாந்தி அருசி சுக்கிலக்ஷீணம் நாவறட்சி பித்த கோப மிவைகள் போம். 688

## குருக்கத்திப்பூவின் குணம் (இதுவே மாதவி)

சிரரோகந் தாகஞ் சிலேட்டம விரணம்
பொருபித்தம் பலவிடமும் போக்கும்—வரிசேர்
கருக்கொத்த வாள்விழியாய் கைப்புமது கஞ்சார்
குருக்கத்திப் பூவின் குணம்.

இ-ள். வாள்விழியாளே! கைப்பினையுள்ள குருக்கத்திப் பூ சிரஸ்தாபம் அதிதாகம் சிலேத்ம துஷ்டவிரணம் பித்தகோபம் பல விஷம் இவைகளை நீக்கும். 689

## செந்தாழம்பூவின் குணம்

தலைநோய் சலதோடஞ் சண்ணு கபங்காச
முளைவாத மெல்லா மொடுக்கு—நிலைசேர்
திருந்துடற்குக் காந்திதருஞ் செம்மணப்பில் வெம்மை
பொருந்துகின்ற செந்தாழம் பூ.

இ-ள். உட்டினமணம் பொருந்திய செந்தாழம்பூ சிரஸ்தாப ரோகம் நீரேற்றம் நெஞ்சிற் கபாதிக்கம் இருமல் சலிக்கின்ற வாத கோபம் இவைகளைப் போக்கும். சரீரத்தில் வனப்பைத்தரும். 690

## முருங்கைப்பூவின் குணம்

விழிகுளிரும் பித்தம்போம் வீறருசி யேகு
மழிவிந்து வும்புஷ்டி யாகு—மெழிலா
ரொருங்கை யகலாக் கற்புடை வாணகையே
முருங்கையின் பூவை மொழி.

இ-ள். கற்பினையுடைய ஒளிபொருந்திய நகையாளே! முருங் கைப்பூவினால் பித்ததோஷம் அரோசகமும் நீங்கும், கண் குளிர்ச்சி யும், சுக்கில விருத்தியும் உண்டாகும். 691

### அகத்திப்பூவின் குணம்

புகைப்பித்த மும்மழலாற் பூரிக்கு மந்த
வகைப்பித்த மும்மனலு மாறும்—பகுத்துச்
சகத்தி லருந்தாத் தனியமிர்தே நாளு
மகத்தி மலருக் கறி.

இ-ள். சகத்திலருந்தா ஒப்பற்ற அமுதனைய பெண்ணே! அகத்திப்பூவுக்குச் சுருட்டு முதலிய புகையும் வெய்யிலாதி உஷ்ண திரவியங்களால் பிறந்த பித்தமும் தேக அழலும் நீங்கும். 692

### செவ்வகத்திப்பூவின் குணம்

நாடிற் பனிப்பிணி நாசிக்கறைக் கதழ்வை
யோடித் துடைத்துள் ளொளியாற்றும்—பாடெத்
தவாகத்தி னுந்துணங்கைத் தண்டா மயிலே
துவாகத்தி பூண்காண் டுதி.

இ-ள். மடமயிலனைய மங்கையே! செவ்வகத்திப்பூ பார்க்கிற் பயங்கரத்தைக் கொடுக்கின்ற நாசிவிழுகிற ரத்தப்பெருக்கை விரைவில் நிறுத்துவதுந் தவிர உள்வெப்பத்தை நீக்கும். 693

### வேப்பம்பூவின் குணம்

பித்தத் தெழுந்த பெருமூர்ச்சை நாத்தோடஞ்
சத்தத் தெழுதமனந் தங்கருசி—முற்றியகா
லேப்ப மலகிருமி விவையேகு நாட்சென்ற
வேப்ப மலருக்கு வெகுண்டு.

இ-ள். நாட்சென்ற வேப்பம்பூவுக்கு சந்நி மூர்ச்சை ஜிம்மக தோஷம் வாந்தி அரோசகம் நீடித்த வாதம் ஏப்பம் மலக்கிருமி இவைபோம். 694

### மாதுளம்பூவின் குணம்

வாந்திபித்த தோடமொடு மாறுக் கடும்பனலஞ்
சேர்ந்துநின்ற மூலரத்தந் தீர்க்குங்காண்—மாந்தளிர்க்கை
மாதே கறைப்புஷ்டி வல்லபல னுண்டாகும்
பூதலத்துண் மாதுளையின் பூ.

இ-ள். மாந்தளிரனைய கைகளையுடைய மாதே! மாதுளம்பூ பித்தவாந்தி வயிறுளைதல் ஏப்பம் ரத்தமூலம் இவைகளைப் போக்கும், ரத்த புஷ்டியையும் பலத்தையுந் தரும். கறை-உதிரம். 695

வின்னம்பா லிக்கும் விடபாகம் போகவென்றுற்
றென்னம்பா ளைப்பூவைத் தின்.

இ-ள். தெங்கினிளம்பாளைப் பூவால் பிரமேகம் உட்காய்ச்சல் ரத்தபித்தம் அசிர்க்கரம் ஒழுக்கு பிரமியம் விஷநோய் இவை நீங்கும். 700

### பனம்பூவின் குணம்

பனையிலுறு பூவதுதான் பங்கமுறுக் குன்ம
வினையகற்று நீர்க்கட்டை மீட்கும்—முனையான
பன்னோ யொழிக்கும் பழச்சுரத்தைப் போக்கிவிடு
மின்னே யிதனை விளம்பு.

இ-ள். மின்னலனையாளே! பனம்பூவானது வாதகுன்மம் மூத்திரவடைப்பு தந்தரோகம் புராணசுரம் இவைகளைப்போக்கும். 701

### வாழைப்பூவின் குணம்

வாழைப்பூ மூலரத்த மாபிரமி வெட்டைபித்தங்
கோழைவயிற் றுக்கடுப்புக் கொல்காச—வாழியன
லென்னவெரி கைகா லெரிவந் தொலைத்துடலின்
மன்னவளர்க் குந்தாது வை.

இ-ள். வாழைப்பூ ரத்தமூலம் பிரமேகம் வெள்ளை பயித்தியம் கபாதிக்கம் உதிரக்கடுப்பு இருமல் கைகால் எரிச்சல் இவைகளை நீக்கும் சுக்கில விருத்தியைத்தரும் 702

---

## செடியின் புட்பவகை

### ஆவாரம்பூவின் குணம்

தங்க மெனவே சடத்திற்குக் காந்திதரு
மங்காத நீரை வறட்சிகளை—பங்கத்தா
மாவைக்கற் றுழை மணத்தை யகற்றிவிடும்
பூவைச் சேராவாரம் பூ.

இ-ள். ஆவாரம்பூ பிரமேகநீர் வறட்சி உடம்பிற்குத்த உப்புமா கற்றுழை நாற்றம் இவைநீக்கும். மெய்க்குப் பொற்சாயலைத்தரும்.

### கருஞ்செம்பைப் பூவின் குணம்

தலைக் குத்த லையஞ் சலதோடம் வாத
முலைப்பீ நசமிகுந்த வூர்க்குண்—ணிலைக்கா
தருஞ்சண் பகநாசி யாயிழையே சுத்தக்
கருஞ்செம்பைப் பூவிருக்குங் கால்.

இ-ள். அரிய செண்பக மலரை நிகர்த்த நாசியை யுடைய பெண்ணே! கருஞ்செம்பைப் பூவால் கபாலச்சூலை சிலேத்ம கோபம் நீரேற்றம் வாத தோஷம் பீநசம் இவை நீங்கும் என்க. 704

## செம்பரத்தம்பூவின் குணம்

செம்பரத்தை மேகவெட்டை தீராப் பிரமியொடு
வம்பிரத்த வெள்ளை வழுவழுப்பும்—வெம்பும்
பெரும்பா டிரத்தபித்த பேதமுமகற்றுங்
கரும்பா மொருமயிலே காண்.

இ-ள். கன்னலை யொத்த மொழியும் மயில்போலுஞ் சாயலையு முடைய பெண்ணே! செம்பரத்தம்பூ மேகவெள்ளை பிரமிய மேகம் இரத்தப் பிரமேகம் பெரும்பாடு அசிர்க்காவருக்கம் ஆகிய இவை நீக்கும் என்க. 705

## அலரிப்பூவின் குணம்

வெப்பருசி குட்டம் விதாகஞ் சொறிசிரங்கு
செப்பிரத்தப் புண்பித்தஞ் சென்னியெரி—விப்படியிற்
றங்குமோ கும்பத் தனத்தணங்கே வாசஞ்சேர்
கொங்கலரிப் பூப்பெயரைக் கூறு.

இ-ள். கும்பத்தனத்தணங்கே! வாசமுள்ள கொத்து அலரிப் பூவால் சுரம் அரோசகம் குஷ்டம் விதாகம் புடை கிரந்தி இரத்தக் கட்டி பித்த நோய் தலை எரிவு ஆகிய இவைகள் போம் என்க. 706

## செம்பருத்திப்பூவின் குணம்

செம்பருத்திப் பூவழலைத் தீயரத்த பித்தத்தை
வெம்புவயிற் றுக்கடுப்பை விந்துவைநீத்—தம்பெனச்செய்
மேகத்தை வெட்டை விழுசிமுதற் பேதியையுட்
டாகத்தை யோட்டிவிடுந் தான்.

இ-ள். செம்பருத்திப்பூ தேக அழற்சி இரத்தப்பித்த ரோகம் உதரக் கடுப்பு சலமேகம் வெள்ளை விழுசி முதலிய பேதிகள் தாகம் இவைகளை நீக்கும். 707

## நந்தியாவட்டப்பூவின் குணம்

காசம் படலங் கரும்பாவைத் தோடமெனப்
பேசுவிழி நோய்கடமைப் பேர்ப்பதன்றி—யோசைதரு
தந்திபோ லேதெறித்துச் சாருமண்டை நோயகற்று
நந்தியா வட்டப்பூ நன்று.

இ-ள். நந்தியாவட்டப் பூவானது நேத்திரகாசப் படலம் லிங்கநாத தோஷங்கள் சிரஸ்தாபரோகம் ஆகியவைகளை விலக்கும். 708

### துத்திப்பூவின் குணம்

துத்தி மலரைநிதந் துய்க்கின்ற பேர்களுக்கு
மெத்தவிந்து வும்பெருகு மெய்குளிருஞ்—சத்தியமே
வாயால் விழுமிரத்த மாறு மிருமலறுந்
தேயா மதிமுகத்தாய் செப்பு.

இ-ள். கலை குறையாத சந்திரனையை முகத்தை யுடைய பெண்ணே! துத்திப்பூவால் இரத்த வாந்தியும் காச ரோகமும் நீங்கும், சுக்கில விருத்தியும் தேகக் குளிர்ச்சியும் உண்டாம். 709

### செவ்வந்திப்பூவின் குணம்

அலைமயக்கஞ் சுற்றலறு மட்சிக் கொளியாந்
தலைமயிருண் டாமனலஞ் சாரும்—நிலைமணமா
மொவ்வந்தி வான்பிறையை யொத்த நுதற்றிருவே
செவ்வந்திப் பூவதனைச் செப்பு.

இ-ள். அந்திவான் பிறையை யொத்த நுதல்களை யுடைய பெண்ணே! வாசனையுள்ள செவ்வந்திப்பூவால், மூர்ச்சை தலைச் சுற்றல் நீங்கும், கண்ணுக்கொளியும் ரோமச் செழிப்பும் உண்டாம். 710

### தும்பைப்பூவின் குணம்

தாகங் கடிந்தொழியுஞ் சந்நிபா தங்களறு
மாகந் தனில் வருநோ யண்டுமோ—மாகந்த
வம்பைப் பீறுங்குயத்து மாதேநின் செங்கரத்தாற்
றும்பைப்பூத் தன்னைத் தொடு.

இ-ள். கச்சைப்பீறுந் தனங்களையுடைய பெண்ணே! தும்பைப் பூவினால் தாக ரோகம் சந்நிபாத சுரங்களும் நேத்திரத்தைப்பற்றிய தோஷங்களும் நீங்கும் என்க. 711

### வெள்ளைப்பூவின் குணம்

கணமாந்தம் வாதங் கபக்கோவை கோழை
யணுமாந்த வெப்பு மகலு—மணமாறும்
பாளைக் குழலே பசிமெத்த வுண்டாகும்
வேளைப்பூ வென்றுருக்கால் விள்.

இ-ள். மணமார்ந்த கூந்தலாளே! வேளைப்பூவினால் மாந்த கணம் வாதகோபம் சலதோஷம் மார்புச்சளி மாந்தசுரம் இவை நீங்கும். தீபன முண்டாகும். 712

### சிற்றாமரைப்பூவின் குணம் (இதுவே பன்னீர்ப்பூ)

சிற்றா மரைப்பூவாற் சேர்ந்தமலக் கட்டுவிடு
முற்றவெப்புத் தாகமதி யோக்காளஞ்—சற்றும்விடா
மூல வெரிவிரத்த மூத்திரம்வ யிற்றிசிவு
ஞாலம்விடுத் தேகு நவில்.

இ-ள். சிற்றாமரைப் பூவால், மலபந்தம், சுரம், தாகம், ஒக்காளம், ஆசன எரிச்சல், இரத்தப் பிரமேகம், வயிற்றெரிவு ஆகிய இவைகள் போம். 713

### களாப்பூவின் குணம்

கண்ணிற் படருங் கரும்படலம் வெண்படலம்
வண்ணவுதி ரப்படலம் வன்சதைக—ளெண்ணாற்
களவிநோய் போக்கு மணங்கே சிறிய
களவினது பூவென் றுங் காண்.

இ-ள். தேவ மகளிரனைய பெண்ணே! களாப்பூ நேத்திரத்தில் உண்டான கரும்படலம் ஸ்வேத படலம் இரத்தப்படலம் சதைப்படலம் முதலிய நோய்களை விலக்கும். 714

---

## கொடியின் புட்பவகை

### தாமரைப்பூவின் குணம்

பருத்தநற் றாமரைப்பூ பலவாந்தி நோயைத்
துரத்திவிடு மின்னுஞ் சொலவோ—கரத்தி
லெடுத்தணைக்கக் கண்குளிரு மேகுஞ் சுரமு
மெடுத்த விதாகமும்போ மெண்.

இ-ள். தாமரைப்பூ பலவிதமான ரோகம் வெப்பத்தாற் பிறந்த விழியெரிச்சல் சுரம் விதாபம் ஆகியவைகளைப் போக்கும். 715

### வெள்ளைத் தாமரைப்பூவின் குணம்

ஈரலைப் பற்றிமிக வேறுகின்ற வெப்பமும்போங்
கோர மருந்தின் கொடுமையறும்—பாருலகிற்
றண்டா மணத்தையுள்ள தார்குழலே கால்கள்விடும்
வெண்டா மரைப்பூவால் விள்.

இ-ள். நீங்காத வாசனையுள்ள கூந்தலாளே! வெள்ளைத் தாமரைப்பூவால் ஈரலிலதிகரிக்கின்ற உஷ்ணமும் வெப்பமுள்ள ஔஷத வேகம் எட்டும் நீங்கும் என்க. 716

## அல்லிப்பூவின் குணம்

மேகமறும் புண்ணுறும் விட்டேகு நீரிழிவு
தாகந் தணியுந் தழலகலும்—வாகான
மெல்லியலே யாயுண்மறை வேதியரெலா முரைக்கு
மல்லி மலரா லறி.

இ-ள். மெல்லியலாளே! ஆயுண் மறை வேதியரா லுரைக்கும் அல்லிப்பூவால் இரத்தப் பிரமேகம் ஆண்குறித் துவளர் விரணம் வெகுமூத்திரம் தாகம் உட்சூடு ஆகியவை நீங்கும் என்க. 717

## செவ்வல்லிப்பூவின் குணம்

செவ்வல்லிப் பூவுக்குச் சேர்ந்திறங்கு நீர்ப்பிணியோ
டொவ்வுமே கப்பிணியு மோய்வதன்றி—யிவ்வுலகிற்
கண்ணிணோய் தீருங் கனத்தபித்த ரத்தமொடு
விண்ணிணோய் பன்னோவும் போம்.

இ-ள். செவ்வல்லிப் பூவுக்கு மூத்திரரோக சங்கவாதம் மேக மூத்திரம் வெய்யிலாதியாற் பிறந்த நேத்திர ரோகங்கள் இரத்தப் பித்தம் விரணம் தாது நஷ்டம் முதலிய பலநோய்கள் ஆகியவை நீங்குமென்க. 718

## கழுநீர்ப்பூவின் குணம்

உடற்குக் குளிர்ச்சியதா முள்ளுழலை மாற்று
மடற்கபவ ரோசகத்தை யாற்றுங்—கடற்கு
ளெழுநீர்க் குமிழி யிகழு முலையாய்
கழுநீர் மலரெனவே காண்.

இ-ள். கடற்குள் எழும் நீர்க் குமிழியனைய கொங்கைகளை யுடையாளே! கழுநீர்ப்பூவானது தாக ரோகத்தையும் சிலேத்ம அரோசக ரோகத்தையும் நீக்கும். சரீரத்திற்குக் குளிர்ச்சியைத் தரும் என்க. 719

## கருநெய்தற்பூவின் குணம் (இதுவே நீலோற்பலம்)

பிரசவித்தா ரைத்தேற்றும் பேரசிர்க்கை மாற்றும்
வருசிலேத் மப்பிணியை மாட்டுந்—துருசாம்
விடபாக ரோகம் விலக்கும் புவியிற்
றடபாக்கு நெய்தலுற் றூன்.

இ-ள். கரு நெய்தல் பிரசவித்த மாதர்களைத் தேற்றுவது மன்றி பெரும்பாட்டையும் கப நோயையும் விஷ பாகத்தையும் போக்கும். 720

### சாதிப்பூவின் குணம்-(இதுவே பிச்சிப்பூ)

முத்தோடஞ் சென்னிவலி மூடுஞ் சரீரவெப்ப
மொத்த விழியினோ யோடுங்கா—ணித்தம்
விலகாத காந்தியுண்டா மேனிதனில் வாசங்
குலவுசா திப்பூவுக் கு.

இ-ள். சாதிப்பூவுக்குத் திரிதோஷம் தலைநோய் தேக உஷ்ணம் கண்படலம் இவை நீங்கும், நீங்காத ஒளியும் மணமும் உண்டாம்.

### மல்லிகைப்பூவின் குணம்

போகமிக வுண்டாகும் பொங்குகபங் கட்பிரமை
யாகவனற் சூனியமு மண்டுமோ—பாகனையாய்
மன்னு திருவசியம் வாய்க்குஞ்சூ டென்றெவரும்
பன்னு மல்லிகைப்பூவாற் பார்.

இ-ள். பாகனைய மொழியாளே! புணர்ச்சியி லதிவிருப்பமுண்டாக்குகின்ற மல்லிகைப்பூவால் கோழை கண்மயக்கம் தேக உஷ்ணம் சூனியம் ஆகியவைகள் நீங்கும், லட்சுமி கடாட்சமுண்டாகும். இதனை உஷ்ணமென்பர். 722

### முல்லைப்பூவின் குணம்

முல்லையெனு மூசிமல்லி மொய்த்த மலரெவர்க்கு
மொல்லைமன நோயை யொழிக்குங்காண்—மெல்ல
வழலைத் தணிக்கு மரோசகத்தைப் போக்கு
மழலைமொழி யாயறிந்து வை.

இ-ள். மழலைச்சொல்லாளே! முல்லை என்ற ஊசிமல்லிகைப்பூ மனோ வியாதியையும் உள் வெப்பத்தையும் அரோசகத்தையும் நீக்கும். 723

### வெட்சிப்பூவின் குணம்

வெட்சிப்பூ மேகமழல் விட்டோடும் வாசனையா
மட்சிவழி யாயுயிர்கொள் ளாரணங்கே—யெட்சுஞ்
சுரமுடனே தாகந் தொலைக்கு முலகில்
விரைவா யிளைப்பகற்றும் விள்.

இ-ள். கண்களின்வழியா லுயிர்பறிக்கும் பெண்ணாளே! பரிமளத்தையுடைய வெட்சிப்பூ மேகச்சூடு சுரரோகம் தாகம் சரீர ஆயாசம் ஆகிய இவைகளைக் கெடுக்கும் என்க. 724

### தாதுளம்பூவின் குணம்

புட்டியுண்டாந் தாதுவுமாம் பொங்கழகோ டாற்றன்மிகு
முட்ட நரைத்து முதிர்ந்தமனைக்—கட்டழகு
மாதுளத்தி னீங்காது வைத்திடவு மெண்ணமுற்றாற்
றாதுளத்தின்பூ வுண்ணச் சொல்.

இ-ள். தாதுளம்பூவால் தேகபுஷ்டி சுக்கில தாதுவிருத்தி வனப்பு சரீரபலம் ஸ்திரீ வசியம் இவைகளுண்டாம். 725

### வெங்காயப்பூவின் குணம்

வயிற்றுச் சிறுநோயை வாத வலியை
யுயித்தியஞ் செய்யாம லோட்டுங்—குயிற்றுத
சிங்காரக் கொங்கைச் செழுந்திருவே நாட்டினுரை
வெங்காயப் பூவெனவே விள்.

இ-ள். சிங்காரக் கொங்கைகளையுடைய பெண்ணே! நாட்டு வெங்காயப் பூவானது சாமானிய வாத முதலிய மூன்று குன்ம ரோகங்களையும் குடலைப்பற்றிய வாதநோயையும் போக்கும். 726

---

## மரத்தின் பிஞ்சுவகை



### வாழைப்பிஞ்சின் குணம்

உதிரம் விழுங்கப்போ டுண்மூல ரத்த
மெதிரில்விழு நீரிவுமேகு—மதிநுதலே
பேழை வயிற்றுப்புண் பேருந் துவரார்ந்த
வாழைக்கச் சற்கு மருண்டு.

இ-ள். பிறையனைய நுதலாளே! துவர்க்கின்ற வாழைப்பிஞ்சுக்கு ரத்தக்கடுப்பு உள்வலயரத்தமூலம் அதிமூத்திரம் வயிற்று விரண மிவைபோம். 727

### பலாப்பிஞ்சின் குணம்

தாகம்போம் வாதபித்தஞ் சாந்தமா மாடவர்க்குப்
போக மிகப்பொழியும் பொய்யன்றே—மூக
வலஜவர்தங் குன்மமிவை யண்டிவருஞ் சொன்னேங்
கலசப் பலாப்பிஞ்சாற் காண்.

இ-ள். பாலுள்ள பலாப்பிஞ்சால் தாகமும் பித்தநோயும் நீங்கும், சுக்கிலவிருத்தி அடங்கியசலம் மந்தாக்கினி குன்மம் இவையுண்டாம். கலசம்-பால். 728

## அத்திப்பிஞ்சின் குணம்

மூலக் கிராணியறு மூலவிரத் தந்தீரும்
சாலக் கடுப்புந் தரிக்குமே—மாலரவத்
துத்திப் படவல்குற் றோகாய் துவர்ப்பையுறு
மத்திச் சிறுபிஞ் சருந்து.

இ-ள். புள்ளிகளையுடைய பாம்பின் படம்போன்ற வல்குலாளே! துவர்ப்புச்சுவையையுடைய அத்திப்பிஞ்சால் மூலவாயு கிரகணியும் ரத்தமூலமும் வயிற்றுக்கடுப்பும் விலகுமென்க. 729

## முருங்கைப்பிஞ்சின் குணம்

சிக்குருக்குப் பிஞ்சத்திச் சுரத்திற் குஞ்சங்கு
மக்குருக் குருப்ப மரோசிகட்குஞ்—சுக்கிலத்தின்
கொச்சை யுறவருந்திக் கூறுவற்கு மாமதனைப்
பச்சை யுறவருந்திப் பார்.

இ-ள். முருங்கையினது பூப்பிஞ்சைப் பாகஞ்செய்து தோலுடன் உண்ணில் அஸ்திசுரம் எலும்பை யுருக்குகிற வெப்பம் அரோசகம் விந்து நஷ்டம் இவைகள் நீங்கும். சிக்குரு-முருங்கை. 730

## மாம்பிஞ்சின் குணம் (இதுவே சூதப்பிஞ்சு)

கவை வாதபித்த கபமருசி வாந்தி
கவைவறுத்த மந்தமெ னுந்தோட—மிவையெல்லாங்
காதத்துக் கப்புறம்போங் கான மடமயிலே
சூதத்தின் புன்வடுவைத் துய்.

இ-ள். காட்டிற் சஞ்சரிக்கு மயிலனையாளே! மாம்பிஞ்சை நீ தின்னக்கடவை, தின்றால் கிளைத்த வாதாதி முத்தோஷங்கள் அரோசகம் சர்த்தி அக்கினிமந்தம் இவைபோம். 731

## நாரத்தங்கச்சிலின் குணம் (இதுவே போஜன கஸ்தூரி)

அன்னமி டுஞ்சீத மருசியுப் பிசங்கிருமி
மன்னுமோ விந்துவுடன் வன்பசியாம்—வன்னமலர்
வாசனையே றுங்குழலீர் மாநோய் தனிலுண்ணும்
போசன கஸ்தூரிப் பூ.

இ-ள். வன்னமலர் வாசனையேறுங் கூந்தலாளே! உலகில் சுரரோகிகளும் உண்ணுகின்ற நாரத்தங் கச்சலால் சீதளம் அரோசகம் வயிற்றுப்பொருமல் எரிகிருமி இவை நிலைக்காவாம். சுக்கில தாதுவும் தீபாக்கினியும் உண்டாம். உணவை மிகுதியாக உட் செலுத்தும். 732

### மாதுளம்பிஞ்சின் குணம்

மலக்கழிச்சல் சீதத்தால் வந்த கழிச்சல்
சலக்கழிச்சல் சோரியாற் சாரு—பலக்கழிச்சல்
மாளும் புளிப்பான மாதுளம்பிஞ் சாலவிலை
யாளுல் கண்மாசீத யறி.

இ-ள். வேல்போலுங் கண்ணுளே! புதுமாதுளம் பிஞ்சால் மலம் சீதம் ஜலம் ரத்தம் இவைகளினிறமாக ஆகின்ற பற்பல அதிசார ரோமங்கள் தீருமென்க. 733

### முகிழ்விரியாக் கத்திரிப்பிஞ்சின் குணம்

அனலுடனே பித்த மகலு மலம்போந்
தொனியுண்டா மையந் தொலையுஞ்—சனியாக
முத்திருக்கும் வெண்ணகையீர் மூடு முகிழ்விரியாக்
கத்திரிப்பிஞ் சுண்பவர்க்குக் காண்.

இ-ள். முத்தனைய வெண்டந்தங்களை யுடையாளே! முகிழ்விரியாத கத்தரிப்பிஞ்சுக்குச் சுரமும் பித்த தோஷமும் கபமும் நீங்கும் மலம் இளகியிறங்கும், குரற்றொனி பலக்கும். 734

### அவரைப்பிஞ்சின் குணம்

கங்கு லுணவிற்குங் கறிக்கு முறைகளுக்கும்
பொங்குதிரி தோடத்தோர் புண் சுரத்தோர்—தங்களுக்குங்
கண்முதிரைப் பில்லைநோய்க் காரருக்குங் காழிறையா
வென் முதிரைப்பிஞ்சாம் விதி.

இ-ள். விதைமுதிராத வெள்ளையவரைப்பிஞ்சு இராஜப்போஜனத்திற்கும் மருந்துண்பவர்க்கும் வாதாதி முத்தோஷம் விரணம் சுரம் விழிக்குள் முதிர்ந்த சிலேத்ம பில்லம் முதலிய ரோகிகட்கும் ஆகும். உறை-மருந்து, காழ்-விதை, முதிரை-அவரை. 735

---

## மரத்தின் காய்வகை

### வாழைக்காயின் குணம்

வாந்திபித் தம்பேத வாய்நீர் வயிறுளைத்
தார்ந்தவன லங்காத மாண்டாவாஞ்-சூழ்ந்தேறு
செம்புனந் தென்புமுண்டாந் திண்டி மிகப்பெருகு
மம்புவியுள் வாழைக்கா யால்.

இ-ள். வாழைக்காயினால் பித்தவாந்தி பயித்தியம் பித்தாதிசாரம் உமிழ் நீர்ச்சுரப்பு, வயிறுளைதல், உஷ்ணம், இருமல் இவை போம். ரத்தவிருத்தியும் பலனும் உண்டாம் போசனம் அதிகரிக்கும். செம்புனல்-உதிரம். 736

## பலாக்காயின் குணம்

உண்ணின் மிகுமந்த முறுதியாம் வாதநோ
யண்ணி மிளைப்பிரப்பு மண்டுங்காண்—வண்ணப்
பலாக்காய்க்கு விந்துவுமாம் பாரி லுவமை
சொலாக்காம வாரிதியே சொல்.

இ-ள். பாரில் உவமைசொல்லாக் காமவாரிதி யனையாளே! பலாக்காய்க்கு அக்கினிமந்தம் வாதகோபம் ஆயாசம் சுவாசம் சுக்லவிருத்தி ஆகியவைகள் உண்டாகும் என்க. 737

## அத்திக்காயின் குணம்

அத்திக்காய் தன்னை யருந்தினா லாரணங்கே
எத்திக்கு மேக மிருக்குமோ—சத்திக்கும்
வாத மகலு மலங்கழியுஞ் சூலையொடு
மீதனலும் புண்ணும்போம் விள்.

இ-ள். பொருந்திய அமுதனையாளே அத்திக்காயால் பிரமேகம் வாதநோய் சூலை சரீரவெப்பம் விரணம் ஆகிய இவைகள்போம் மலங்கழியும் என்க. 738

## முருங்கைக்காயின் குணம்

சொல்லுநோய் கட்கெல்லாந் தோடமில்லை யையமறும்
பல்லுயிர்க்குந் தாது விந்தூறும்—வில்லார்
பெருங்கைக் காமன்றுதிக்கும் பெண்ணே நறிய
முருங்கைக்காய் தன்னை மொழி.

இ-ள். வில்லேந்திய காமன்றுதிக்கும் பெண்ணே! நிதானநூலிற் கூறும் பலபிணிக்கும் ஒவ்வியதாகவும் மத்தியக்கறியாயும் இராநின்ற முருங்கைக்காயால் கபம் நீங்கும் விந்துவூறும். 739

## அருநெல்லிக்காயின் குணம்

அருநெல்லிக் காய்குளிர்ச்சி யாம்பித்தம் போக்கு
மருவுதுவர் பாற்றுரிசை மாற்றும்—விரியுலகிற்
றுகத் துயர்நீக்குஞ் சாரிரு மலைத்தொலைக்கு
மாகக் கொதிப்பகற்று மாங்கு.

இ-ள். துவர்ப்புச் சுவையையுடைய அருநெல்லிக்காய் சீதபித்தம் தாகம் காசம் உட்சூடு ஆகியவைகளைப் போக்கும். 740

## நெல்லிக்காயின் குணம்

பித்தமனை லையம் பீநசம்வாய் நீர்வாந்தி
மத்த மலக்கட்டு மயக்கமுமி—லொத்தவுரு
வில்லிக்கா யம்மருங்கா மென்னுட் காலந்தேர்ந்தே
நெல்லிக்கா யம்மருந்து ணீ.

## இதுவுமது

நெல்லிக் காய்க்குப்பித்த நீக்குமதன் புளிப்பாற்
செல்லுமே வாதமதிற் சேர்துவப்பாற்—சொல்லுமையு
மோடுமிதைச் சித்தத்தி லுன்ன லனுடனே
கூறுபிர மேகமும்போங் கூறு.

இ-ள். கடல் அமிர்தம் ஒத்த நெல்லிக்காயைப் பகற்போதுண்ணில் பயித்தியம், கபநோய், பீநசம், வாய்நீர்ச்சுரப்பு, வாந்தி உன்மத்தம், மலபந்தம், தலைச்சுழலல், பிரமேகம் இவைபோம். காமன் அழகுண்டாகும், அதன் புளிப்பால் வாயுவும், துவரால் கபமும் நீங்கும். மருந்து-அமிர்தம். 742

## புளியங்காயின் குணம்

சோபமொடு பித்தந் தொலைக்கு முரிசைதறுங்
கோபமுற வாயுவையே கொண்டாடுந்—தாபக்
கருப்ப மடவார்க்குக் கனவிருப்ப முள்ளே
பருப்புமுதிராப் புளியங் காய்.

இ-ள். ருசியைக் கொடுக்கின்ற கொட்டைமுதிராத புளியம்பிஞ்சு சோருதலையும், பித்தகோபத்தையும் நீக்குவதுந்தவிர வாத தோஷத்தை உண்டாக்கும். இது கருப்ப ஸ்திரீகளுக்கு விருப்பாம்.

## மாங்காயின் குணம்

தாதுநட்டம் வாதந் தனிகிரந்தி யாம்பசிபோங்
காதுமுட்டப் பக்குவிடுங் காயமதி—லோதுகின்ற
பாங்காருப் புண்வளரும் பற்கூசுஞ் சொற்குளறு
மாங்கா யுண்பாரை மதி.

இ-ள். மாங்காயால் சுக்கிலநாசம், மிகுவாயு, சிரங்கு தேகம் வெடித்தலோடு ஆருவிரணம், தந்தங்கூசுதல், சொற்றவரல் இவையுண்டாம், பசிபோம். 744

மரியங்காயின் குணம் (இதுவே புளிமாங்காய்)

வாயின் கசப்பகலு மாறு வரோசகமு
மோயுஞ் சுரத்தோர்க் குவப்பாகுந்—தூயவரித்
தேனமரும் வார்கூந்தற் றெய்வப் பெடையனமே
கான மரியங்காயைக் கண்டு.

இ-ள். தேனமரும் வார்கூந்தற் றெய்வமடவனமே! காட்டிலுள்ள மரியங்காயினால் வாய்க்கசப்பும் அரோசகமும் நீங்கும், இது சுரோகிகளுக்குதவும் என்க. 745

பச்சைக்கடுக்காயின் குணம் (இதுவே பரிதிக்காய்)

பச்சைப் பரிதிக்காய் பண்ணும் வகைகேளா
யிச்சை யுறத்துவைத்துப் பிட்டழுத்தி—வைச்செடுத்துத்
தின்ன வரோசியறுந் தீபனமா முண்மலம்போ
மன்னநடை மாதே யறி.

இ-ள். அன்னநடையாளே! பச்சைக்கடுக்காயைக் கொட்டை நீக்கி யிடித்து அதற்கு 5-ல் ஒரு பங்கு உப்பிட்டு 105-நாள் சென்றபின் பிசைந்து அதை அசனத்திற் சேர்த்தாவது தனித்தாவது புசிக்கில் அரோசகந்தீரும்; பசியுண்டாம், மலங்கழியும். 746

இத்திக்காய்ப் பிஞ்சு இவைகளின் குணம்

வாயு மலக்கட்டு மலக்கழிச்சல் கால்வழியே
சாயுமசிர்ச் சிக்குள்ளே தங்குவெப்பி-னோயினங்க
ளத்திக்கா தாரமுற் றிருப்பன விராவேநல்
லித்திக்காய்ப் பிஞ்சுகளை யெண்.

இ-ள். இத்திக்காய்க்கு வாதமலபந்தம்போம், பிஞ்சுக்கு அதிசாரமும் பெரும்பாடும், உட்சூட்டினாற் பிறக்கின்ற பிணியும் நீங்கும்.

கொடியெலுமிச்சங்காயின் குணம்

வாந்தி மயக்கம் வயிற்றுக் கழிச்சலனற்
சேர்ந்த வரோசகமுந் தீருங்காண்—தீர்ந்த
தொடியமரு மங்கையிளந் தோகா யடவிக்
கொடியெலுமிச் சங்காயைக் கூறு.

இ-ள். காட்டிலுள்ள கொடியெலுமிச்சங்காய்க்கு வாந்தி, பித்த மயக்கம், மலமேகி, பித்த அருசிரோகம் ஆகியவைகள் போகும்.

### எலுமிச்சங்காயின் குணம்

தீதிலெலு மிச்சங்காய் சேர்முத்தோ டத்தையுமுள்
வாதகபஞ் சூலையையு மாகொடிய—சாதியெனுஞ்
சர்த்திகுன் மத்தையுமுட் டங்கமருந் திட்டதையும்
பித்தவெப்பை யுந்தணிக்கும் பேசு.

இ-ள். குற்றமற்ற எலுமிச்சங்காய் திரிதோடம் வாதசிலேட்மம் சூலே, சர்த்தி, குன்மம், இடுமருந்து பித்த உஷ்ணம் இவைகளைப் போக்கும். 749

### எலுமிச்சங்காயின் குணம்

தந்துவிழப் பண்ணுஞ் சலவை தனைக்கொடுக்கும்
வெந்துமிக விந்துவை விழச்செய்யு—மந்த
வெலுமிச்சங் காய்போன் றிருக்குங் கொடிய
கலுமிச்சங் காய்க்குணத்தைக் காண்.

இ-ள். எலுமிச்சங்காய்போற் றோற்றுகின்ற எலுமிச்சங்காய் பற்களை விழச்செய்வதுந் தவிரச் சீதளத்தையும், வீரிய நஷ்டத்தையும் உண்டாக்கும். 750

### நாரத்தங்காயின் குணம்

நன்றி யுறவுலகி னாரத்தங் காயருந்த
வென்றி தரும்புளிப்பான் மெய்ச்சும்—மன்றியுமோ
வாதமொடு குன்மமறும் வாற்கிருமி யும்போகுஞ்
சாதலுறு தீபனமாங் காண்.

இ-ள். நாரத்தங்காயால் வாதநோயும் வாலுள்ள மலக்கிருமியும் நீங்கும். பசியுண்டாம், இதன் புளிப்பினால் தேகஞ் சுத்தியாம்.

### கடாரநாரத்தங்காயின் குணம்

பித்தமொடு வாயிற் பெருகறல ரோசகம்போம்
பத்தியமா நோயிற் பருகலாங்—குத்துங்
கடாரி யனையவிழிக் கன்னி மடமாதே
கடார நாரத்தங்காயைக் கண்டு.

இ-ள். குத்துங் கடாரியனைய விழிகளையுடைய கன்னிகையே! கடாரநாரத்தங்காயால் பித்தநோயும் வாய்நீரூறலும் அருசியும் போம். இது பத்தியவஸ்துவாம், நோயாளர்க்கும் உதவும். 752

### கொளுஞ்சி நாரத்தங்காயின் குணம்

சொல்லுங் கொளுஞ்சிக்காய் தோன்றுகின்ற காசத்தை
வல்லவட் சீதத்தை மாருதத்தைப்—பொல்லாத

வையகத்தைத் தாகத்தை யிப்பொழுதே நீக்கிவிடும்
வையத்துட் பெண்ணரசே வாழ்த்து.

இ-ள். பெண்கள் நாயகமே! பண்டிதர் கூறுகின்ற கொளுஞ்சி நாரத்தங்காய் இருமல் ஆமதோஷம் வாத விகுணம் கபாதிக்கம் தாகம் இவைகளை நீக்கும். இதனைக் கொடி நாரத்தை, முலை யெலுமிச்சை, துரிஞ்சி எனவுஞ் சொல்வர். 753

பனை நுங்கின் குணம்

நீர்வரா வியர்க்குருவை நீக்குமன லாக்குந்தோற்
சார்வா மயஞ்சீதந் தாழ்க்குஞ்—சேர்வார்
விழிக்கரையாந் துள்ளிக்கு மென்சுரத மானே
கழிக்கரையாந் தாளியிளங் காய்.

இ-ள். மென்சுரத மாதே! நெய்தனிலப் பனையினது இளங் காயிலுள்ள நுங்கின் சலமானது வியர்க்குருவை நீக்கும், பசியைத் தரும். தோலுடனே யிருக்கும் நுங்கு சீதபேதியை விலக்கும். ஆமயம்—நுங்கு. 754

# செடியின் காய்வகை

## கத்திரிக்காயின் குணம்—விருத்தம்

பண்டு மாண்ட கிரந்தையைப் பாலிக்கு
முண்ட கைக்குந் தினவையுண் டாக்கிடு
நண்டு கட்டுங் குரங்கென நாளுமாங்
கண்டு விட்டது கத்திரிக் காயதே.

இ-ள். கத்திரிக்காய் ஆறிய கிரந்தையும் நமைச்சலையு முண் டாக்கும் என்க. 755

## கத்திரிக்காய் அதன் பிஞ்சு இவைகளின் குணம்

வெண்பா

கத்திரிக்காய் பித்தங் கனன்றகபந் தீர்த்துவிடும்
தொத்து சொறிசிரங்கைத் தூண்டிவிடு—மெத்தவுந்தான்
பிஞ்சான கத்தரிக்காய் பேசுமுத்தோ டம்போக்கு
மஞ்சார் குழலே வழுத்து.

இ-ள். மேகம்போன்ற கூந்தலாளே! கத்தரிக்காய் பித்தத்தால் வந்த கபத்தை நீக்கும். புடையையும் கிரந்தியையும் அதிகப்படுத் தும். பிஞ்சு திரிதோஷத்தை விலக்கும். 756

### கண்டங்கத்திரிக்காயின் குணம்—வெண்பா

ஐயமறுந் தீபன மாமா மலக்கட்டும்
பையவெளி யாகிவிடும் பார்மீதிற்—செய்யமலர்த்
தொத்திரிக்கும் வார்குழலே தூமணலா ருங்கண்டங்
கத்திரிக்கா யைப்புசிக்குங் கால்.

இ-ள். அழகிய மலர்மாலையணிந்த நீண்ட கூந்தலாளே! வெண் மணலில் உண்டாகின்ற கண்டங்கத்திரிக் காயால் சிலேத்ம நோய் தீரும். சீதங்கலந்த மலமும் பசியும் உண்டாமென்க. 757

### கறிமுள்ளிக்காயின் குணம்

வாதபித்த வையகத்தை மாற்றுகின்ற போக்கு
மோது சுவாசத்தை யோட்டுங்காண்—பூதலத்துட்
டுள்ளிப்பாய் கெண்டைவிழித் தோகா யறிதிகறி
முள்ளிக்காய் செய்யு முறை.

இ-ள். மகர நோக்கியே! கறிக்குதவாநின்ற முள்ளிக்காயானது வாத பித்த கப தோஷங்கள் சுரம் வாச ரோகம் ஆகியவைகளைப் போக்கும் என்க. 758

### கொத்தவரைக்காயின் குணம்

கொத்தவரைக் காய்பித்தங் கூடாது மத்தியத்தின்
மெத்தெனவு மையம் விளைக்குங்காண்—பித்தத்தால்
சீத மகற்றிவிடுந் தின்மருந்தைப் பாழாக்கும்
வாதக் குடைச்சறரு மால்.

இ-ள். அபத்தியமான கொத்தவரைக்காய் பயித்தியம் கபம் வாதக் கடுப்பு இவைகளை யுண்டாக்கும். பித்தத்தால் நளிரையும் மருந்தையும் முறிக்கும். 759

### வெண்கடுக்காயின் குணம்—(இதுவே வெண்டைக்காய்)

கண்ட கிராணி கடிய வதிசாரம்
விண்டவெண் சீதரத்த மேவுங்கா—ணெண்டொடிமே
வண்டற்காய் வெய்யகப வாதமிகும் வாய்க்குணவாம்
வெண்கடுக்கா யுண்பார்க்கு விள்.

இ-ள். வறலுக்குதவியான வெண்டைக்காய்க்குக் கிராணிபேதி சீதரத்தாதிசாரம் சிலேத்ம வாதம் நாவுக்கு ருசை உண்டாம். 760

### நறுமலர்த்தக்காளியின் குணம்

மலமிளகுந் தானே மகாசபமும் போக்கும்
பலமிகுந்த வாதம்போம் பார்க்குண்—மலைபோற்

பணைத்துப் பூரித்தமுலைப் பாவாய்கே ணல்ல
மணத்தக்கா ளியை வாழ்த்து.

இ-ள். மலைபோற் பணைத்துப் பூரித்த முலைகளையுடைய பெண்ணே! நறுமணத்தக் காயால் மலம் இளகிச் சுபாவமாக இறங்குவதுமன்றி சிலேத்ம நோயும் வாதாதிக்கமும் நீங்கும் என்க. 761

## மணத்தக்காளி வற்றலின் குணம்

நீர்ப்பேதி யாகு நிலைவமனம் போம்வாயிற்
கூர்ப்ப விலைப்புமறுங் கூறுவதோ—பார்க்கிலினு
மிக்கான நோயோர் விரும்புகின்ற நல்லமணத்
தக்காளி வற்றலுக்குத் தான்.

இ-ள். நோயுற்றோர்க்காகின்ற நல்ல மணத்தக்காளி வற்றலுக்கு நீர்ப்பேதி யுண்டாவதுந் தவிர வாந்தியும் கூர்ப்பவிலைப்பும் நீங்குமென்க. 762

## சுண்டைக்காயின் குணம்

நெஞ்சின் கபம்போ நிறைகிருமி நோயும்போம்
விஞ்சுவா தத்தின் விளைவும்போம்—வஞ்சியரே
வாயைக் கசப்பிக்கு மாமலையிலுள்ள சுண்டைக்
காயைச் சுவைப்பவர்க்குக் காண்.

இ-ள். கசப்புச் சுவையையுடைய மலைச்சுண்டைக்காயால் மார்புசளி கிருமி ரோகம் வாதாதிக்கம் ஆகியவை போம். 763

## சுண்டைக்காய் வற்றலின் குணம்

பித்தவ ரோசகம்போம் பேராப் புழுச்சாகு
முற்ற கிராணியறு முட்பசியாஞ்—சத்தியமாய்ப்
பண்டைக் குதவாமம் பற்றுமறு மாரையுந்தான்
சுண்டைக்காய் வற்றலுண்ணச் சொல்.

இ-ள். சுண்டைக்காய் வற்றலால் பித்த அரோசகம் மலக்கிருமி கிராணி ஆசனத்துக் காறச் சீதக்கட்டு இவை போம். உள்ளிற் பசியுண்டாம். 764

## விதுகங்காயின் குணம்

விதுகங்காய் பத்தியவி யஞ்சன மத்தாற்
புதுநெய்விங்கெ ழிற்பலமும் பூணு—முதுபித்த
வேக மொழியு மிகுதூர்ப் பலமகலும்
பாகனைய வின்மொழியே பார்.

இ-ள். பாகையொத்த இனிய மொழியாளே! பத்திய கறியாகிய விதுகங்காயினால் புதிய உதிரம் சுக்கிலம் அழகு பலம் இவை விருத்தியாம். நீடித்த பித்தமும் அதிதுர்ப்பலமும் நீங்கும். 765

## பாவட்டங்காயின் குணம்

வாத சுரந்தணியும் வாயருசி யேகிவிடுஞ்
சீதக் கடுப்பகலுந் தேன்மொழியே—வாதுபுரி
பித்தவதி சாரமொடு போராக் கபமுமறு
முற்றபா வட்டங்காய்க் கு.

இ-ள். தேன் போலும் வசனிப்பவளே! பாவட்டங்காய்க்கு வாதசுரம் அரோசகம் சீதக்கடுப்பு பித்தாதிசாரம் சிலேத்ம தோஷம் ஆகிய இவைகள் நீங்கும். 766

## ஊசிமிளகாயின் குணம்

சீதக் கழிச்சற் சிறுநீர்ச் சுருக்காசங்
காதக் குதநெகிழ்ச்சி காட்டுங்கா—ணாதித்தன்
வீறுகிர ணம்பருகி மேனோக்கிக் காய்த்தபங்காக்
காரமுறு மூசிமிள காய்.

இ-ள். ஆகாயமுகமாய்க் காய்த்துச் சூரியனது அக்கினி கிரணத்தைப் புசித்து மிகு கார்ப்புச் சுவையைப் பெற்ற ஊசி மிளகாய் சீதபேதி மூத்திரகிரிச்சரம் மூலம் குதநெகிழ்ச்சி ரோகம் ஆகிய இவைகளை யுண்டாக்கும். 767

## வெண்மிளகாய், கருங்குண்டு மிளகாய், பச்சை மிளகாய் இவைகளின் குணம்

வெண்டுமிள காய்க்கனில் மேவுமிடம் பார்க்குமணிக்
குண்டுமிள காய்க்கனலங் கூடுங்கா—மூண்டுபயிர்ப்
பச்சைமிள காய்க்குப் பதமிறங்குஞ் சோவைபுரிந்
திச்சையுற வுண்ணில்மறு வில்.

இ-ள். உன்னிற் போலாயிருக்கின்ற வெண்டு மிளகாய்க்கு வாத கோபம் நீங்கும். ஆகாயத்தை நோக்கிக் கருமை நிறத்துடன் காய்க்கின்ற குண்டு மிளகாய்க்கு உஷ்ணமாம். பயிரிடுகிற விதையடர்ந்த பச்சை மிளகாய்க்குச் சம்பாரஞ் சேர்த்துண்ணில் அன்னம் இறங்கும். குற்றமில்லை. 768

## களாக்காயின் குணம் (இதனைக் கிளாக்காய் என்பர்)

காதுவிடாய் தாகங் கடியபித்தம் வாந்தியும்போம்
மாதே யரோசகமு மாறுங்காண்—மேதா
மிரத்தபித்தம்போகு மினிய களாக்காய்க்
குரத்த பசியுமுண்டோ மோர்.

இ-ள். மாதேயறிவாயாக! புன்புளிப்புள்ளகளாக் காய்க்குக் காதடைப்பு தாகம் பித்ததோடம் வாந்தி அருசி ரத்தபித்தம் இவைகள்போம்; மிகுபசியுண்டாம். 769

### ஊமத்தங்காயின் குணம்

வாதமறும் பித்த மயக்கமுறு மாநிலத்திற்
றீது கரப்பான் சிரங்ககலும்—கோதாய்கேள்
மாமத்த மாகும் வறட்சியெல் லாம்போகு
மூமத்தங் காய்க்கென் றுரை.

இ-ள். பெண்ணே நீ கேட்பாயாக, ஊமத்தங்காய்க்கு வாத நோய் கரப்பான் கிரந்தி சொறி இவைநீங்கும், பித்தமயக்கமும் உன்மாத ரோகமும் உண்டாகும். 770

---

## கொடியின் காய்வகை

### கலியாணப் பூசினிக்காயின் குணம்-(இதுவே பெரும்பூசினி)

பெரும்பூசி னிக்காய்க்குப் பித்தமொடுட் காய்ச்ச
லருஞ்சார நீர்க்கட் டறுமே—மருந்திடுதற்
பித்தசுர மத்திசுரம் பேய்வறட்சி மேகமும்போ
மெத்த வனிலமுறும் விள்.

இ-ள். கலியாணப் பூசினிக்காய்க்குப் பித்தரோகம் உட்காய்ச்சல் சாரமேக மூத்திரக்கிரிச்சரம் இடுமருந்து பித்தசுரம் அஸ்திதாது கதசுரம் பேய்ச்சொறி பிரமேகம் ஆகியவைபோம் வாதாதிக்கமாம்.

### பறங்கிக்காயின் குணம்-(இதுவே பூசினிக்காய்)

அனலழலை நீக்கு மதிபித்தம் போக்குங்
கனலெனவே வெம்பசியைக் காட்டும்—புனலாகு
மிக்கவைய முண்டாக்கு மென்கொடியே யெப்போதுஞ்
சர்க்கரைப் பறங்கிக்காய் தான்.

இ-ள். மிருதுவான பூங்கொம்பனையாளே! இனிப்புள்ள பறங்கிக்காய் அனலால்வரும் அழற்சியையும் மிகுபித்தத்தையும் நீக்கும், நல்ல பசியையும் கபகோபத்தையும் விளைக்கும். 772

### குழிப்பறங்கிக்காயின் குணம்-(இதுவே கோடைப்பூசினி)

வாதக் குடைச்சலுறு மாறாத வையமுமாம்
போதவளிச் சூலையுண்டாம் பொற்கொடியே—யோதுங்
குழிப்பறங்கிக் காய்க்குக் குளிர்ச்சி நிறையும்
பழிக்கடுத்த மந்தமிகும் பார்.

இ-ள். பொற்கொம்பு போல்பவளே! குழிப்பறங்கிக் காய்க்கு வாதக்கடுப்பே விருத்தி, வாதசூலை அக்கினிமாந்தம் இவையுண்டாம். இதனைக்குளிர்ச்சி யென்பர். 773

### குமட்டிக்காயின் குணம் (இதனை முலாங்காய் என்பர்)

தந்தம் விழுந்திடுமே தாது மெலிந்திடுமே
விந்தைமிகுங் காந்தி விலகிடுமே—சந்ததமும்
வாத மிகுந்திடுமே வந்துகபஞ் சேர்ந்திடுமே
யோதுகுமட் டிக்காயா லுன்.

இ-ள். குமட்டிக்காயினால் பல்வீழல் சுக்கிலக்ஷீணம் தேகவொளிகெடல் வாதகோபம் சிலேத்மாதிக்கம் ஆகியவைகளுண்டாம்.

### சுரைக்காயின் குணம்

வாதபித்தம் வாயருசி வன்பீ லிகஞ்சீத
மோதிருத்து நோயுண்டா முள்ளனற்போ—மோதத்
திருப்பாற் கடற்றிருவே தீக்குணத்தை மேவுஞ்
சுரைக்காயைத் தின்பவர்க்குச் சொல்.

இ-ள். திருப்பாற்கடலி லுற்பவித்த இலக்குமியனையாளே! உஷ்ணமுள்ள சுரைக்காயினால் வாதபித்தம் அரோசகம் பீலிகரோகம் ஆமம் மார்புநோய் இவைகளுண்டாகும்; உட்சூடு நீங்கும். 775

### வெள்ளரிக்காயின் குணம்

உண்டருந்தத் தீயெழுப்பு முண்மருந்தைத் தான்முடுக்குங்
கண்ட கரப்பனைக் கடுக்குங்காண்—பண்டிதரே
யுள்ளரிப்பை நீர்க்கடுப்பை யூரைவிடுத் தோட்டிவிடும்
வெள்ளரிக்கா யின்குணத்தை விள்.

இ-ள். பண்டிதரே! வெள்ளரிக்காய் கரப்பன் நீர்த்துவாரத்தினவு நீர்ச்சுருக்கு இவை நீக்கும் இதைப் புசித்தபின் புண்ணப்பசியாம்; மருந்தை முறிக்கும். 776

### வெள்ளரிப்பிஞ்சு காய் பழம் விதை இவைகளின் குணம்

பிஞ்சுவெள்ள ரிக்காய்க்குப் பேசுதிரி தோடம்போம்
வஞ்சியரே முற்றியகாய் வாதமாம்—நைஞ்சகனி
யுண்டாற் சயித்தியமா முள்ளிருக்கு மவ்விதையைக்
கண்டாலு நீரிறங்குங் காண்.

இ-ள். வெள்ளரிப்பிஞ்சுக்கு முத்தோடங்களும் நீங்கும்; காயால் வாதமும், நைந்தபழத்தால் கபமும் விளையும்; வித்தால் நீர்ப்பேதியாம். 777

## கக்கரிக்காயின் குணம்-(இதுவே முள்ளெரிக்காய்)

கக்கரிக்காய் பித்தங் கடியுங் கபமுயர்த்து
மெய்க்குக் குளிர்ச்சிதரு மெல்லியலே—முக்குகின்ற
மூல வழறணிக்கு மூடிரத்த பித்தத்தைச்
சால வகற்றிவிடுஞ் சாற்று.

இ-ள். மெல்லியலே! கக்கரிக்காய் பித்ததோடம் மூலச்சூடு ரத்தபித்தம் இவைகளை நீக்கும். கோழையுங், குளிர்ச்சியுமுண் டாக்கும். 778

## ஆகாயக்கக்கரிக்காயின் குணம்

ஐயம் விளையு மழல்கரப்பான் பித்தமும்போ
மெய்யு ளதிபோகம் விளையுங்காண்—செய்ம்மருந்தின்
காந்தியும்போ மாகாயக் கக்கரிக்காய் தின்றவர்க்கு
வாந்தியும்போ மாதே வழுத்து.

இ-ள். மாதே! பந்தலில் காய்க்கின்ற ஆகாயக்கக்கரிக்காய்க்குத் தேகச்சூடு கரப்பான் பயித்தியதோடம் மருந்தின் வீரியப் பித்த வாந்திகள்போம், கபாதிக்கமும் புணர்ச்சியிலிச்சையு முண்டாம். 779

## கொட்டை அவ்வரைக்காயின் குணம்

கொட்டையவ ரைக்காயாற் கோர வரோசகநோய்
கிட்டாதென் பார்மருந்தின் கீர்த்திகெடுந்—துட்டமந்தம்
பையவுண்டாம் பேதியுண்டாம் பாரிப் பனிலமுண்டா
மையமுண்டாஞ் சூலையுமுண் டாம்.

இ-ள். வித்துமுதிர்ந்த அவரைக்காயினால் அருசியும் ஔஷத நன்மையும் நீங்கும், அக்கினிமாந்தம் அதிசாரம் சீரபளுவு வாத தோடம் சிலேத்மகோபம் குத்தல் ஆகியவைகளுண்டாம். 780

## வாள் அவரைக்காயின் குணம்

அதிபித்தம் வாந்தி யரோசகமு முண்டாங்
குதிவாதம் வாய்ச்சுரப்புங் கூடுந்—துதிசக்ர
வாளவரை யொத்த வனமுலைமா தேபசிய
வாளவரைக் காயான் மதி.

இ-ள். சக்ரவாளகிரியனைய வனமுலைமாதே! பசுமையுள்ள வாளவகைக் காயால் பித்தாதிக்கம் வாந்தி அருசி குதவாத ரோகம் வாய்நீரூறல் ஆகியவைகளுண்டாம். 781

### மொச்சைக்காயின் குணம்

அனிலபித்த வையங் களைக்கடிதுண் டாக்குந்
தொனியடுக்கும் வாதனைத்துந் தூண்டு—மனுதினமுந்
கொச்சைமலத் தைப்பெருக்குங் கோரவுட்டி னந்தணிக்கு
மொச்சைக்காய் செய்யு முறை.

இ-ள். மொச்சைக்காயானது திரிதோடங்கள் தொனிக்கத் தக்க வாதம் க்ஷீணமலம் இவைகளை விருத்தி செய்யும்; மிகு சூடு தணிக்கும். 782

### பீர்க்கங்காயின் குணம்

தின்றவுடன் பீர்க்கங்காய் சீதமுறுங் காண்பித்த
மொன்று மூன்றாக வுயருமே—மன்றலணிக்
காரளகக் கச்சமுலைக் காரிகையே வாதகப
நேரளவைத் தாண்டு நினை.

இ-ள். கறுத்த அளகத்தையும் வாரிணைவிறுக்கிய தனங்களை யுமுடையமாதே! பீர்க்கங்காயை யுண்ணில் சீதளம் பித்தம் தன்மாத் திரைக்குமேல் மூன்று பங்கதிக வாதகபங்கள் தத்தம் நிலைபிசகும்.

### புடலங்காயின் குணம்

போகம் விளையும் பொருந்தி வளருமைய
மாகமதிற் பித்த மணுகுங்காண்-மேகப்
படலங் கவியகப் பாவாய்கே ளூளும்
புடலங்காய்க் குள்ள புகழ்.

இ-ள். மேகம்போன்ற கூந்தலாளே! புடலங்காய்க்குச் சுக்கில மும் கபமும் பயித்தியமும் அதிகரிக்கும். 784

### பன்றிப்புடலங்காயின் குணம்

கரப்பான் சொறிசிரங்கு காணுச் சிலந்தி
யுரப்பாம் விடக்கடியு முண்டா—முறைத்தவகை
யன்றிச் சயித்தியமு மாம்பன்றி தன்னையொத்த
பன்றிப் புடலுக்குப் பார்.

இ-ள். பன்றி மாமிசத்தை யொத்த பன்றிப் புடலங்காய்க்குக் கரப்பான் புடை கிரந்தி சீதளம் இவையுண்டாவது மன்றிக் காணுக்கடி சிலந்தி சர்ப்பவிஷங்கள் இறங்கியதாயினும் உடனே யேறும். 785

### கொம்புப்பாகல்காயின் குணம்

மருந்துகளி னற்குணத்தை மாற்று மலைதொன்று
திருந்துவலி வாதத்தைச் சேர்க்கும்—பொருந்துபித்தங்

நீட்டுமவ பத்தியத்தைக் கொண்டிருக்கும் வன்கரப்பான்
காட்டுங்கொம் புப்பாகற் காய்.

இ-ள். அபத்திய பதார்த்தமாகிய கொம்புப்பாகற்காய் நல்ல ஔஷதங்களை முறிப்பதுமன்றி வாதபித்த கோபங்களுமுண்டாம்.

## மிதிபாகற்காயின் குணம்

பித்தமொடு வாதப் பெருக்கைமிக வுண்டாக்குந்
தத்துகரப் பானைத் தருவிக்கும்—பற்றிரத
தாரபா டாணந் தமைமுறிக்குந் தப்பாது
காரவல்லி யாம்பாகற் காய்.

இ-ள். காரவல்லியென்கிற மதிபாகற்காய் பித்தவாத கோபங்களையும் கரப்பானையும் உண்டாக்கும். பாதரசம் அரிதாரம் பாஷாணம் முதலியவைகளை முறிக்கும். இது கோளதேசத்துப் பத்தியக் கறியாம். 787

## காட்டுப்பழிப்பாகற்காயின் குணம்

போஜனமுட் செல்லும் பொருந்துபசி யுண்டாகும்
காசபித்த வாதமிவை காணுவா—நேசமுற
வாட்டுப்படாக் கொங்கை மாதே குழிஞ்சிமிலக்
காட்டுப் பழுபாகற் காய்க்கு.

இ-ள். சாயாத தனங்களையுடைய மாதே! மலையடுத்த காட்டுப் பாகற்காய்க்கு அன்னமிறங்கலும் நல்ல பசியும் உண்டாம். இருமலாற் பிறந்த பித்தவாத கோபங்கள் நீங்கும். 788

## அதளக்காயின் குணம்

அதளக்காய் வாய்க்குருசி யாயிருக்குந் தின்றூற்
கதளவொட்டா பித்தங் கதிக்கும்—பதளத்தின்
மந்தமுண்டாம் வாயுமிக வந்தடருந் தப்பாதே
கந்த மலர்க்குழலாய் காண்.

இ-ள். கந்தமலர்க்குழலாளே! வாய்க்கு உணவைத் தருகின்ற அதளக்காயை யுண்ணில் பயித்தியமும் அடிவயிற்றில் மந்தமும் வாதநோயும் உண்டாம் என்க. 789

## தூதுளங்காயின் குணம்

ஐயமுடன் பித்த மசனு மரோசகம்போந்
தையலே வாதந் தணியுங்காண்—வையமிசை
யோதுங் குடல்வாத மோடுமல மொழிந்
தூதுளங் காயுண்ணச் சொல்.

இ-ள். தூதுளங்காயால் கபரோகங்கள் பயித்தியதோஷம் அருசிரத்தாசயவாயு ஆந்திரபித்தவாதம் மலபந்தம் இவை விலகும்.

### கொடிவழுதுணைக்காயின் குணம்
### (இது வழுதலங்காயென மருவியது)

எல்லார்க்கும்நல்லித மாஞ்சிலேட்டமத்தைப் போக்கும்
புல்லார்க்கும் பத்தியம் புசிக்கலாம்—முல்லைக்
கடிகமழும் வார்குழலே காசினியிற் சொன்னேங்
கொடி வழுதுணைக்காய்க் குணம்.

இ-ள். முல்லைமலர் வாசனை பரிமளிக்காநின்ற கூந்தலாளே! கொடிவழுதுணைக்காய் வாதமுதலிய மூன்று தேகிகட்கும் பொருந்துவதுமன்றிக் கபத்தைக் கரைக்கும், பத்தியத்திற்கும் ஆகும். 791

### பயற்றங்காயின் குணம்

ஐய மகலு மரோசிகெடுந் தீபனமாம்
பையுதிர வாய்வும் பறக்குமென்பார்—செய்யு
நயத்த வவுடதமு நாசமடையும்
பயற்றங்காய் தன்னையுண்டு பார்.

இ-ள். மருந்தை முறிக்கின்ற பயிற்றங்காயினால் கபாதிக்கம் அருசிரத்தவாந்தி குன்மம் இவை விலகும், பசி விளைதலும் உண்டென்பார். 792

### கோவைக்காய் இதன்வற்றல் இவைகளின் குணம்

வாயி னரோசகம்போ மாறா வழலையறு
நோயின் கபமகலு நுண்ணிடையே—தூயவதன்
வற்றறக் கருசி மருவுகரப் பான்போகுஞ்
சுத்தக் கோவைக்காயைச் சொல்.

இ-ள். சிற்றிடைப் பெண்ணாளே! நல்ல கோவைக்காயால் அருசி நீங்காத வெப்பம் சுரகபதோஷம் இவைபோம். வற்றலால் அரோசகமும் கரப்பானும் நீங்கும். 793

### சுக்கான்காய் இதன்வற்றல் இவைகளின் குணம்

மைக்குழலே கேளாய் வாதமறும் பித்தமென்பார்
சுக்கான்காய் வற்றலது தொல்லுலகிற்—கைக்கின்ற
வாயுவை நீக்கும் வருமருசி போக்கிவிடு
நீயு மறிவாய் நிசம்.

இ-ள். கருத்த கூந்தலாளே! சுக்கான்காயினால் வாததோஷம் நீங்கும். இது பித்தம் என்பார், அதன் வற்றலால் வாதத்தையும் அரோசகத்தையும் நீக்கும். 794

### மிளகுக்காயின் குணம்

அளவையறு க்கார மடைந்திருக்கும் வாத
விளைவையெல் லாமறுக்கு மெய்யே—மிளகின்காய்
கண்டவர்க்கு மின்பமாங் காரிகையே சீழ்மூலங்
கொண்டவர்க்கு நன்மருந்தாங் கூறு.

இ-ள். காரிகையே! மிகுகார்ப்புச் சுவையுடைய மிளகுக்காய் வாதரோகங்களையும் சீழ்மூலத்தையும் நீக்கும். அதைப் பார்க்கில் விருப்பமுண்டாம் என்க. 795

### ஆற்றுத்தும்மட்டிக்காயின் குணம் (இதுவே கலிங்கம்)

கிடையெங்கே சோம்பலெங்கே கேடுறச்செய் வாதக்
கடையெங்கே யாற்றுக் கலிங்க—மடைதிறக்கி
னண்டை யடைச்சலெங்கே யாயிழையார் சூதகத்தி
னுண்டை யுடைச்சலெங்கே யோது.

இ-ள். ஆற்றுத் தும்மட்டிக்காயால் கீல்பிடிப்பால் நடையின்றிக் கிடத்தல் சோர்தல் மலாவிருத முதலிய வாதரோகங்கள் கருப்பையைப்பற்றி அடைகின்ற ஆமம் சூதகுன்மக்கட்டி அகாலருது இவைபோம். 796

### சிகைக்காயின் குணம் (இதனைச் சீக்காய் என்பர்)

மூக்கின் சிகிச்சைகட்கு முக்கியமாம் பேதியையுண்
டாக்கும்வம னத்தையு மழைப்பிக்குந்—தேய்க்கும்
வகைநெய்ச்சிக் கைப்போக்கு மாதரசே நாளுஞ்
சிகைக்கா யதனைத் தெரி.

இ-ள். பெண்கள் நாயகமே! சிகைக்காயானது நாசியுட் புரிகின்ற ஆக்கிராண நசியச் சிகிச்சைகளுக்கு முக்கிய மருந்தாயிருக்கும், அன்றியும் பேதியையும் வாந்தியையு முண்டாக்கும், பலவித நெய்ச் சிக்குகளை நீக்கும். 797

---

## மரத்தின் பழவகை

### விளாம்பழத்தின் குணம்

எப்போது மெய்க்கிதமா மீளையிரு மல்கபமும்
வெப்பாகுந் தாகமும்போ மெய்ப்பசியா—மிப்புவியி
லென்று கிலுங்கனிமே லிச்சைவைத்துத் தின்னவெண்ணித்
தின்றால் விளாங்கனியைத் தின்.

இ-ள். விளாம்பழத்தினால் சுவாசங் காசம் கபாதிக்கம் பித்த தாகம் இவை விலகும். உடலுக்குச் சுகமும் நல்லபசியும் உண்டாம்.

இலந்தைப்பழத்தின் குணம்

பித்த மயக்கருசி போராப் பெருவாந்தி
மொத்தனிவ மெல்லா முடிந்திடுங்காண்—மெத்த
உலர்ந்த வெறுவயிற்றி லுண்டா லெரிவா
மிலந்தை நறுங்கனியை யெண்.

இ-ள். இலந்தைப் பழத்தால் பித்தமூர்ச்சை அரோசிகந் திரிதோஷம் வாந்தி வலிவாதம் இவைபோம். இதைப் பசியிலுண்டால் எரிவுண்டாம் என்க. 799

வாழைப்பழத்தின் பொதுக் குணம்

சுத்தவறுச் சுனஞ்செய் சோமநோ யென்பதுவும்
பித்தநோ யென்னப் பிறந்தவையு—முத்தி
வரம்பைக் கடந்தமத மூர்ச்சை யும்போ
மரம்பைக் கனியுண் டறி.

இ-ள். வாழைப்பழத்தால் உடம்பை வெளுக்கச் செய்கிற சோமரோகம் பித்த பிணிகள் மதநோய் மூர்ச்சை ஆகிய இவை போம். 800

எண்வகை வாழைப்பழத்தின் குணம்

செவ்வாழை வெள்வாழை சேர்ந்தரச தாளிமொந்த
னெவ்வு மவையோர்க் குலத்திற்—கவ்வடுக்கு
வாழைமலை வாழைபசு வாழைகரு வாழைகளி
லாழிகரு வாழைநன்று மோர்.

இதுவுமது

ஓதலுற்ற வாழையெட்டி லுற்ற கனிகளெல்லாம்
வாதநோய்க் காகாது வையகத்தோர்—போதவுண்ண
வெண்ணமுண் டாயி னிதற்கியைந்த சத்துருவோ
டுண்ண விடரின் றுறை.

இ-ள். செவ்வாழை வெள்வாழை ரசதாளி மொந்தன் அடுக்கு வாழை மலைவாழைப் பச்சைவாழை கருவாழை என்கிற 8-வகை வாழைப்பழங்களுள் முதலிற்கூறிய 4-ம் நோயாளர்க்கு ஆகும். மற்ற 4-ம் கருவாழை நன்மையைத்தரும். இவ்வெட்டுவகைப் பழங்களும் வாதரோகிகட்குதவாது, ஆனால் அசனத்துடன் உண்ணில் குற்றமில்லை. 802

## பேயன் வாழைப்பழத்தின் குணம்

பேயன் பழமருந்திற் பித்தரோ கம்போகும்
வாயுவுண் டாகு மலங்கழியு—தீயே
தகத்தி லதிகுளிர்ச்சி யாகு மணங்கே
சகத்தி லிதையறியச் சாற்று.

இ-ள். தேவமகளிரனைய மாதே! பேயன்பழத்தினால் பயித்தியமும் உட்சூடும் நீங்கும். வாதாதிக்கமும் குளிர்ச்சியும் ஆம். ஜாரியாக மலமிறங்கலும் உண்டாகும். 803

## பொந்தன் வாழைப்பழத்தின் குணம்

மந்தமுட னேய்கலத்தல் வாதவலி சீதந்
தொந்தமுறு தாகமிவை தோன்றுங்காண்—புந்திவலி
யோட்டுபித்தங் காமாலை யுள்வறட்சி யுந்தொலையு
நாட்டுபொந் தன்பழத்தி னால்.

இ-ள். பொந்தன் பழத்தினால் அக்கினி மந்தம் உடல் வலியுடன் பாரிப்பு இசிவு சீதளம் திரிதோஷ தாகம் இவையுண்டாம். மனவுறுதியை விலக்குகிற பித்தம், காமாலை, தாதுவைப் பற்றிய வறட்சி நீங்கும். 804

## நவரை வாழைப்பழத்தின் குணம்

மாந்த மொடுநமைச்சல் வாதகப மும்பெருகும்
பாந்த லுறுகரப்பான் பரவுங்காண்—பூந்தடக்கை
யாழைப் பழித்த மொழியன்ன மேநவரை
வாழைப் பழத்தான் மதி.

இ-ள். அழகு பொருந்திய கையையும் யாழைப் பழித்த மொழியையுமுடைய அன்னமே! நவரை வாழைப்பழத்தால் மந்தாக்கினி தினவு வாத சிலேத்ம தொந்தம் கரப்பான் ஆகிய இவை அதிகரிக்கும் என்க. 805

## பலாப்பழத்தின் குணம்

தித்திக்கும் வாத சிலேத்மபித்த முண்டாக்கு
மெத்தக் கரப்பான் விளைவிக்குஞ்—சத்தியமாய்ச்
சேராப் பிணியையெலாஞ் சேர்ப்பிக்கு மோர்நொடியிற்
பாராய் பலாவின் பழம்.

இ-ள். இனிப்புள்ள பலாப்பழம் வாத பித்த தொந்தங்களையும் கரப்பானையும் முன்னில்லாத பிணிகளையும் உண்டாக்கும். 806

### மாம்பழத்தின் குணம்

தின்றூற் றினவெடுக்குந் தீபனம்போ நெஞ்செரிவா
மன்றே விழிநோ யடருங்காண்— துன்றிமிக
வாதக் கரப்பனும் வன்கிரந்தி யும்பெருகுஞ்
சூதக் கனியின் சுகம்.

இ-ள். மாம்பழத்தை யுண்ணில் நமைச்சலும் மார்பு எரிச்சலும் கண்ணோயும் கருங்கரப்பானும் கிரந்தியும் அதிகரிக்கும். பசி நீங்கும். 807

### மாம்பழம்-காய்-பிஞ்சு இவைகளின் குணம்—விருத்தம்

வேத சத்திய மாகவி ளம்புவோந்
தாது விர்த்திக்குந் தம்பன மாங்கனி
போத மர்த்தனம் புன்காயி னால்வடு
வாத பித்த கபங்களை மாற்றுமே.

இ-ள். மாம்பழம் சுக்கில பெருக்கத்துக்கும் அதைக் கட்டுவதற்கு மாகும். காயினால் அறிவு கெடும். பிஞ்சு திரிதோஷ கோபத்தை நீக்கும். 808

### தசையத்திப்பழத்தின் குணம்—வெண்பா

இரத்தமுண் டாக்கு மிளைத்தமெய்யைத் தேற்றுஞ்
சுரத்திலாம் வெப்பைத் தொலைக்கும்—கரத்த
மலத்தைக் கடிதுள்ளும் வன்னிகபத் தொந்தம்
பலத்த தசையத்திப் பழம்.

இ-ள். உஷ்ண சீதளமுள்ள தசையத்திப் பழம் இரத்த விருத்தியும் தேக போஷணையுந் தரும். சுரவெப்பும் சீரண மலமும் நீங்கு மென்க. 809

### விதையத்திப்பழத்தின் குணம்

தினமுமலக் கட்டொழிக்குந் தேகவெப்ப நீக்கும்
வனமுறு பித்தகோப மாற்று—மினமயிலுந்
துன்னு விழியையுடைச் சொன்னமே வையகத்தோர்
பன்னுவிதை யத்திப் பழம்.

இ-ள். துன்னிய கண்களையுடைய பொன்னிறம் போல்பவளே! விதையத்திப் பழமாவது நித்திய மலபந்தத்தையும் சரீர உஷ்ணத்தையும் பித்த வேகத்தையும் போக்குமென்க. 810

### புளியம்பழத்தின் குணம்—விருத்தம்

புத்தியு மந்தமாகும் பொருமியே யுடலமுழுதும்
பத்தியத் தவறுஞ்சந்நி பாதமாஞ் சுரங்கள்வீறுஞ்

சர்த்தியும் பித்துந்தீரும் தனுவெலாம் வாதமேறு
மத்திபங் தாதுபுட்டி வருந்திரை நரைபுளிக்கே.

இ-ள். அபத்தியமான புளியம் பழத்தினால் மந்தபுத்தி தேகந் தூலித்தல் சந்நிபாத சுரங்கள் அங்கசலன வாதம் சுக்கில தாது மத்திமம் திரை நரை இவையுண்டாம், வாந்தியும் பித்த ரோகமும் விலகும். 811

## பழம்புளியின் குணம்—வெண்பா

தீதிற் பழம்புளியைச் சேர்க்கத் திரிதோடம்
வாதமொடு சூலைகப மாறுங்கா—ணேதுசுரஞ்
சர்த்தியென்ற தோடமிவை சாந்தமாங் கண்ணோய்போம்
பித்தமென்ற பேரொழியும் பேசு.

இ-ள். குற்றமற்ற பழம்புளியால் திரிதோஷம் வாத நோய் சூலை சிலேத்ம கோபம் ருட்சை வாந்தி விழிநோய் பயித்தியம் இவையுண்டாம். 812

## சரக்கொன்றைப்புளியின் குணம்

வன்பணில மேக மலக்கட் டொடுகுடரின்
றுன்ப மலினம்வெப்பு தோன்றுங்கா—லின்பந்
தருதமா லப்பரிம ளத்தனத்தா யிந்தக்
கிருதமாலப் புளியைக் கேள்.

இ-ள். பரிமளமணிந்த தனத்தாளே! சரக்கொன்றைப் புளியால் வாதப்பிரமேகம் மலபந்தம் குடல்வலி அக் குடலைப்பற்றிய அழுக்கு உஷ்ணம் ஆகிய இவைகள் போம். கிருதமாலம் - சரக்கொன்றை. 813

## பனம்பழத்தின் குணம்

நாளும் பனம்பழத்தை நல்லமுதா யுண்ணுங்கா
லாளுங் கரப்பா னழுகிரந்தி—நீளுமலஞ்
சிக்கும்பித் தத்தில்வளி சேருதலா னோய்க்கணமு
தித்திக்கும் பலக்குமெனச் செப்பு.

இ-ள். தினமும் பனம்பழத்தையே உணவாக உண்டால், கரப்பான் அழுகிய சிரங்கு மலபந்தம் பித்தவாயுவாற் பிறந்த நோயினங்கள் இவைகளுண்டாம். இது யாழ்ப்பாண தேசத்து ஊணும். இதனைப் பனாட்டு என்பர். 814

## தேற்றான்பழத்தின் குணம்

தேற்றான் கனிதனக்குச் சேயிழையே வன்காசந்
தேற்று தொழியுஞ் சுவாசமும்போஞ்—சாற்றின்மிகு

வாந்தி பெருகு மலம்போமுத் தோடத்தைச்
சேர்ந்த பிணிகளும்போஞ் செப்பு.

இ-ள். ஆபரணமணிந்த பெண்ணே! தேற்றான் பழத்தால் வாத இருமல் இரைப்பு மலக்கட்டு திரிதோஷ ரோகங்கள் ஆகியவை போம். வாந்தி யுண்டாம். 815

நாவற்பழத்தின் குணம் (இதனை நாகற்பழம் என்பர்)

மாந்தம் விளையும் வலிகரப்பா னுண்டாகுஞ்
சேர்ந்தவொரு நீரிழிவுஞ் சேருமே—காந்தலொடு
வாயங் கடுப்பும் வருங்கொதிப்புந் தாகமும்போந்
தூயநா வற்பழத்தாற் சொல்.

இ-ள். நாவற்பழத்தினால் அக்கினி மந்தம் சரீர நோவு கடுவன் சீத தாகம் கடுத்தல் இவை யுண்டாம். அதிநீரும் வெப்பமும் தாகமும் நீங்கு மென்க. 816

வெள்ளை நாவற்பழத்தின் குணம்

உதிரமொடு விந்துவையு முண்டாக்கு முள்ளே
யதிரழலை தண்ணை யகற்றும்—பதியதனிற்
கண்ணு வலியார்க்குங் கதிக்கநோக் குந்திருவே
வெண்ணாவ லின்கனியை விள்.

இ-ள். மிருந்த பார்வையை யுடைய விலக்குமி போல்பவளே! வெள்ளை நாவற்பழம் இரத்த தாதுவையும், சுக்கில தாதுவையும் உண்டாக்கும். உள் வெப்பத்தை நீக்கும். 817

சம்புநாவற்பழத்தின் குணம்

அனில வழலு மரும்பித்த வெப்புந்
தனியுலவு தாகமுந் நீங்கும்—தனிவேட
னம்புநா னுங்கண் ணணியிழையே கானிலுறுஞ்
சம்புநா வற்கனிக்குத் தான்.

இ-ள். காட்டிலுள்ள சம்புநாவற் பழத்தால் வாதவுஷ்ணம் பித்தவுஷ்ணம் ஒரு தோஷத்தாற் பிறந்த தாக ரோகம் ஆகிய இவைகள் நீங்கும். 818

பாலைப்பழத்தின் குணம் (இதுவே தீம்பாலை)

வாத கரப்பனறும் வல்ல சிலேத்மமும்போம்
வேது கிரந்தியுஞ்சா மென்பசியா—மோதுமதன்
கோலைப் பழித்தவிழிக் கோதா யினிமையுள்ள
பாலைப் பழத்தினி பார்.

இ-ள். தீம்பாலைப் பழத்தால் கருங்கரப்பன் சிலேத்ம தோஷம் வெப்பத்தைச் செய்கின்ற கிரந்தி ஆகியவைகள் போம். மிகுபசியு முண்டாகும். 819

### கொட்டைமுந்திரிப்பழத்தின் குணம்

தாகந் தணியுஞ் சகிக்காக் கரப்பனு
மாகத்திற் சேர்ந்த வழலுமறும்—வேகின்ற
துட்டவன்சி ரங்கொடுபுண் டோற்றுங் கரகரப்பாங்
கொட்டைமுந்தி ரிப்பழத்தாற் கூறு.

இ-ள். கொட்டைமுந்திரிப் பழத்தால் தாகமும் சரீர வெப்பமும் நீங்கும். கரப்பான் துஷ்டவிரணம் கிரந்தி நெஞ்சிற் கரகரப்பு இவை யுண்டு. 820

### தமரத்தம்பழத்தின் குணம் (தந்தசடம்)

வாதபித்தம் வாதகபம் வாந்திகுரற் கம்மல்கண்ணோய்
தாதுநட்டம் பித்தந் தலைநோயோ—டோதுசித்தத்
துற்றபிர மையும்போ மொண்டொடியே மாபுளிப்பா
நற்றமரத் தம்பழத்தை நாடு.

இ-ள். புளிப்புள்ள தமரத்தம்பழத்தால் வாத பித்த தொந்தம் வாத சிலேத்ம தொந்தம் வாந்தி குரற்கம்மல் நேத்திர ரோகம் சுக்கில நஷ்டம் பித்த கோபம் சிரஸ்தாப ரோகம் சித்தப்பிரமை ஆகிய இவைகள் நீங்கும். 821

### கொய்யாப்பழத்தின் குணம்

திரிதோடஞ் சென்னித் திருப்ப மரோசி
பொருமாந்தம் வாந்தி பொருமல்—கரப்பானும்
மெய்யாப் பரவுமல மெத்தவிடும் போகமுண்டாங்
கொய்யாப் பழத்தினாற் கூறு.

இ-ள். கொய்யாப் பழத்தினால் முத்தோஷம் தலை மயக்கம் அரோசகம் மந்தம் வாந்தி வயிற்றுப்பல் கரப்பான் வீரியம் ஆகிய இவைகள் உண்டாம். மலங் கழியும். 822

### எலுமிச்சம்பழத்தின் குணம்

தாகம் நகநோய் தாழாச் சிலீபதநோய்
வேகங்க ளுண்மாதம் வீறுபித்தம்—மாகண்ணோய்
கன்னநோய் வாந்தியும்போங் கட்டுவா தித்தொழிலின்
மன்னெலுமிச் சங்கனியை வாழ்த்து.

இ-ள். மலபந்தமுள்ள எலுமிச்சம் பழத்தால் தாகம் நகச் சுற்று யானைக்கால் உன்மாதம் பித்தம் கண்ணோய் காதுவலி வாந்தி ஆகியவைகள் நீங்கும். 823

### நாரத்தம்பழத்தின் குணம்

பித்தவழிக் குன்றுமறும் போராத தீபனமாம்
வித்தான தாதுவும்வி ளைந்திடுங்காண்—முத்திணைத்த
வாரத்தைத் தாங்குமுலை யாயிழையே யெக்காலும்
நாரத்தை யின்கனியி னால்.

இ-ள். முத்தாரத்தைத் தாங்குந் தனங்களை யுடையாளே! நாரத்தம்பழத்தினால் பித்த குணம் ரோகம் நீங்கும். நீங்காத ஜடராக்கினியும் சுக்கில விருத்தியும் உண்டாகும் என்க. 824

### சாதிநாரத்தை, கொளஞ்சி நாரத்தைப் பழங்களின் குணம்

சாதிநாரத் தம்பழந்தான் றாகந் தனையகற்று
மோதருசி வாய்க்கசப்பை யோட்டுங்காண்—வேதா
லளிஞ்சமே கத்தேகர்க் காம்வறட்சி போக்குங்
கொளிஞ்சிநாரத் தம்பழந்தான் கூறு.

இ-ள். சாதிநாரத்தம்பழம் தாகம் அரோசகம் வாய்க்கசப்பு இவைகளை நீக்கும், கொளுஞ்சி நாரத்தம்பழம் பிரமேக தேகிகளது நாவறட்சியை விலக்கும் என்க. 825

### சீத்தாப்பழத்தின் குணம்

பித்தகப மெத்தப் பெருகுமந்த மேலோடுஞ்
சித்த மதிற்றயக்கஞ் சேருங்கா—ணத்துலவும்
பூத்தானத் தாரும் பொலன்கொடியே பூவுலகிற்
சீத்தாக் கனியாற் றெளி.

இ-ள். சீத்தாப் பழத்தால் பித்த சிலேத்ம தொந்தமும் அக்கினி மாந்தமும் சித்தப்பிரமையும் உண்டாகும் என்க. 826

### மாதுளம்பழத்தின் குணம் (இதுவே தாடிமக்கனி)

சங்கையறச் சொற்றவிர்க்குஞ் சங்கியா சஞ்சர்த்தி
யங்கையதி தாகநமைச் சாருமோ—கங்கை
யிருந்தாடி மக்கட் கிரத்தலைச்செய் நோய்போ
மிருந் தாடமக்கனிகட் கெண்.

இதுவுமது

வாய்நீரூ றல்கசப்பு வாந்திவிக்கன் மந்தமிதக்
காய்வெப்ப நெஞ்செரிவு காதடைப்பு—வோயா
மயக்கமுந் தீர்ந்துவிடு மாதுளம்ப ழத்தாற்
றயக்கமனத் தேமொழியே சாற்று.

## இதுவுமது—விருத்தம்

வெடித்துவீழ் பழத்தைவாங்கி மெல்லிய சீலைகட்டிக்
கடுக்கெனப் பிழிந்துகொண்டு கண்டதற் கிணங்கக்கூட்டிக்
குடித்திட வெப்புமாறுங் குளிர்ந்திடு மங்கமெல்லாம்
வடித்தநன் மொழியினுளே மாதுளம் பழத்தின்சாறே.

இ-ள். பெருமையாகிய மாதுளங்கனிகளுக்குச் சந்தேகம் நீங்க நினைப்பையும் பேச்சையும் ஒழிக்கின்ற சந்நியாச ரோகம் வாந்தி கபம் மிகுதாகம் பித்தநோய் இவை அங்குச் சேரமாட்டாது. புத்ர நிமித்தம் கங்கா ஸ்நானஞ் செய்து யாசிக்கச்செய்யும் மலட்டு வியாதி போகும். மேலும் அப் பழத்தைத் தின்பதனுல் வாய் நீர்ச்சுரப்பும் வாந்தியும் விக்கலும் மாந்தமும் அதிசுரமும் நெஞ்செரிவும் காது அடைப்பும் நீங்காத மயக்கமும் ஒழியும், வெடித்த அந்தப் பழத்தைச் சீக்கிரமாகப் பிழிந்து மெல்லிய சீலையால் வடிக்கட்டித் தகுந்த கற்கண்டு சேர்த்து ரசத்தைச் சாப்பிட உட்டினம் ஒழியும். சரீரம் முழுதுங் குளிர்ச்சியை யடையும். 829

## கொமட்டி மாதுளம்பழத்தின் குணம்—வெண்பா

அருசி கெடும்பித்த மகலுமை யந்தீரு
முரிசை யுறுங்கபமு மோடுஞ்—சரசமுறக்
காதளவும் பாயும்விழிக் காரிகையே நற்கொமட்டி
மாதுளையின் பொற்கனியை வாழ்த்து.

இ-ள். காதளவோடும் விழிகளையுடைய பெண்ணே! கொமட்டி மாதுளம் பழத்தினுல் அரோசகம் பித்த கோபம் சிலேத்ம தோஷம் க்ஷயரோகம் இவை நீங்கும். உரிசை யுண்டாம். 830

## பேரீச்சம்பழத்தின் குணம் (இதுவே கற்சூரம்)

பேரீந் தெனுங்கனிக்குப் பித்தமத மூர்ச்சைசுர
நீரார்ந்த வைய நெடுந்தாகம்—பேரா
விரத்தபித்த நீரிழி விலைப்பு மரோசி
யுரத்தமலக் கட்டுமறு மோர்.

இ-ள். பேரீச்சம்பழத்தால் நீரைச்சுரப்பிக்கின்ற பித்தரோகம் மதரோகம் மூர்ச்சை சுரம் சிலேத்ம நீர்க்கோவை தாகம் இரத்தபித்தம் நீரிழிவு வாயிலைப்பு அருசி மலபந்தம் இவை நீங்கும். 831

---

### நாரத்தம்பழத்தின் குணம்

பித்தவழிக் குன்றுமறும் போராத தீபனமாம்
வித்தான தாதுவும்வி ளைந்திடுங்காண்—முத்திணைத்த
வாரத்தைத் தாங்குமுலை யாயிழையே யெக்காலும்
நாரத்தை யின்கனியி னால்.

இ-ள். முத்தாரத்தைத் தாங்குந் தனங்களை யுடையாளே! நாரத்தம்பழத்தினால் பித்த குணம் ரோகம் நீங்கும். நீங்காத ஜடராக்கினியும் சுக்கில விருத்தியும் உண்டாகும் என்க. 824

### சாதிநாரத்தை, கொளஞ்சி நாரத்தைப் பழங்களின் குணம்

சாதிநாரத் தம்பழந்தான் ரூகந் தனையகற்று
மோதருசி வாய்க்கசப்பை யோட்டுங்காண்—வேதா
ளிஞ்சமே கத்தேகர்க் காம்வறட்சி போக்குங்
கொளிஞ்சிநாரத் தம்பழந்தான் கூறு.

இ-ள். சாதிநாரத்தம்பழம் தாகம் அரோசகம் வாய்க்கசப்பு இவைகளை நீக்கும், கொளுஞ்சி நாரத்தம்பழம் பிரமேக தேகிகளது நாவறட்சியை விலக்கும் என்க. 825

### சீத்தாப்பழத்தின் குணம்

பித்தகப மெத்தப் பெருகுமந்த மேலோடுஞ்
சித்த மதிற்றயக்கஞ் சேருங்கா—ணத்துலவும்
பூத்தானத் தாரும் பொலன்கொடியே பூவுலகிற்
சீத்தாக் கனியாற் றெளி.

இ-ள். சீத்தாப் பழத்தால் பித்த சிலேத்ம தொந்தமும் அக்கினி மாந்தமும் சித்தப்பிரமையும் உண்டாகும் என்க. 826

### மாதுளம்பழத்தின் குணம் (இதுவே தாடிமக்கனி)

சங்கையறச் சொற்றவிர்க்குஞ் சங்கியா சஞ்சர்த்தி
யங்கையதி தாகநமைச் சாருமோ—கங்கை
யிருந்தாடி மக்கட் கிரத்தலச்செய் நோய்போ
மிருந் தாடமக்கனிகட் கெண்.

இதுவுமது

வாய்நீரூ றல்கசப்பு வாந்திவிக்கன் மந்தமிதக்
காய்வெப்ப நெஞ்செரிவு காதடைப்பு—வோயா
மயக்கமுந் தீர்ந்துவிடு மாதுளம்ப ழத்தாற்
றயக்கமனத் தேமொழியே சாற்று.

## இதுவுமது—விருத்தம்

வெடித்துவீழ் பழத்தைவாங்கி மெல்லிய சீலைகட்டிக்
கடுக்கெனப் பிழிந்துகொண்டு கண்டதற் கிணங்கக்கூட்டிக்
குடித்திட வெப்புமாறுங் குளிர்ந்திடு மங்கமெல்லாம்
வடித்தநன் மொழியினுளே மாதுளம் பழத்தின்சாறே.

இ-ள். பெருமையாகிய மாதுளங்கனிகளுக்குச் சந்தேகம் நீங்க
ஊைப்பையும் பேச்சையும் ஒழிக்கின்ற சந்நியாச ரோகம் வாந்தி
பம் மிகுதாகம் பித்தநோய் இவை அங்குச் சேரமாட்டாது. புத்ர
மித்தம் கங்கா ஸ்நானஞ் செய்து யாசிக்கச்செய்யும் மலட்டு வியாதி
பாகும். மேலும் அப் பழத்தைத் தின்பதனுல் வாய் நீர்ச்சுரப்பும்
ாந்தியும் விக்கலும் மாந்தமும் அதிசுரமும் நெஞ்செரிவும் காது
படைப்பும் நீங்காத மயக்கமும் ஒழியும், வெடித்த அந்தப் பழத்
தைச் சீக்கிரமாகப் பிழிந்து மெல்லிய சீலையால் வடிக்கட்டித் தகுந்த
ற்கண்டு சேர்த்து ரசத்தைச் சாப்பிட உட்டினம் ஒழியும். சரீரம்
முழுதுங் குளிர்ச்சியை யடையும். 829

## கொமட்டி மாதுளம்பழத்தின் குணம்—வெண்பா

அருசி கெடும்பித்த மகலுமை யந்திரு
முரிசை யுறுங்கபமு மோடுஞ்—சரசமுறக்
காதளவும் பாயும்விழிக் காரிகையே நற்கொமட்டி
மாதுளையின் பொற்கனியை வாழ்த்து.

இ-ள். காதளவோடும் விழிகளையுடைய பெண்ணே! கொமட்டி
மாதுளம் பழத்தினுல் அரோசகம் பித்த கோபம் சிலேத்ம தோஷம்
க்ஷயரோகம் இவை நீங்கும். உரிசை யுண்டாம். 830

## பேரீச்சம்பழத்தின் குணம் (இதுவே கற்சூரம்)

பேரீந் தெனுங்கனிக்குப் பித்தமத மூர்ச்சைசுர
நீரார்ந்த வைய நெடுந்தாகம்—பேரா
விரத்தபித்த நீரிழி விலைப்பு மரோசி
யுரத்தமலக் கட்டுமறு மோர்.

இ-ள். பேரீச்சம்பழத்தால் நீரைச்சுரப்பிக்கின்ற பித்தரோகம்
மதரோகம் மூர்ச்சை சுரம் சிலேத்ம நீர்க்கோவை தாகம் இரத்தபித்
தம் நீரிழிவு வாயிலைப்பு அருசி மலபந்தம் இவை நீங்கும். 831

# செடியின் பழவகை

## சிற்றீச்சம்பழத்தின் குணம்

சிற்றீச் செனுங்கனிக்குச் சீத முழலைநோய்
உற்ற சிரங்குகளு முண்டாகுஞ்—சுற்றிச்
செறியும் பலபிணியுந் தேமொழியே நாளு
மறிவு மழுங்கு மறி.

இ-ள். தேன்போல் வசனிப்பவளே! சிற்றீச்சம் பழத்திற்குச் சீதபேதி உழலைநோய் விரணம் இவை முதலிய பற்பல ரோகங்களும் புத்திக்குக் குறைவும் உண்டாகும். 832

## பூந்தாழம்பழத்தின் குணம் (இதுவே அன்னுசிப்பழம்)

மேகவெட்டை வாந்திபித்த மீறுவா மேனியிடுந்
தாகமுமட் டாகுந் தலைவலிபோம்—பாகமுறு
பூந்தாழை யின்பழத்தைப் பூரிப் புடன்புசிக்க
வாந்தாழ்வு மில்லை யறி.

இ-ள். பூந்தாழம் பழத்தினுல் பிரமேக வெள்ளை வாந்தி பித்த நோய் தாகம் சிரஸ்தாப ரோகம் இவை போகும். அழகுண்டாகும் என்க. 833

## கத்திரிப்பழத்தின் குணம்

பித்தங் கரப்பான் பெருங்கிரந்தி குட்டமிவை
மெத்தவுமா மெய்யிலழல் வீறுங்காண்—சத்தான
தாதுநட்ட மாங்கபங்காற் சார்ந்த சுவாசமும்போ
மோதுகத்தி ரிப்பழத்தா லுன்.

இ-ள். கத்திரிப்பழத்தினுல் பித்தரோகம் கரப்பான் பெருவிரணம் குஷ்டு தேக வெப்பம் சுக்கிலக் குறைவு ஆகியவைகள் உண்டாகும். கோழையும் வாத தோஷமும் இரைப்பும் நீங்குமென்க. 834

## கண்டங்கத்திரிப்பழத்தின் குணம்

காசஞ் சுவாசங் கயஞ்சீதம் பல்லரணை
வீசு சொறிதினவை விட்டோட்டும்—பேசுடலை
யுத்தரிக்குந் தீபனத்தை யுண்டாக் கிடுங்கண்டங்
கத்திரிப்ப ழக்குணத்தைக் காண்.

இ-ள். கண்டங்கத்திரிப்பழம் இருமல் இரைப்பு க்ஷயம் கபம் பல்லரணை புடை நமை இவைகளை நீக்கும். பலத்தையும் பசியையுந்தரும் என்க. 835

### களாப்பழத்தின் குணம்

நல்ல பசியிலுண்டா னண்ணுமே சீதரத்தம்
வல்லமந் தத்திலுண்டால் மாபசியா—மெல்லப்
புரையார்கள் நோய்போம் போற்றுசிர நீர்போந்
தரையார் களாப்பழத்தைத் தான்.

இ-ள். நிலக்களாப்பழத்தை மிகுபசியில் தின்றால் சீதரத்தத்தையும் அதிமந்தத்தில் தின்றால் நற்பசியுமுண்டாம் தொண்டை வலியும் தலைக்கனப்பும் நீங்கும். 836

### காரைப்பழத்தின் குணம்

சீதக் கசப்புஞ் செறியிரத் தக்கடுப்பு
மோதுமதி சாரமும்போ முண்மையே—மோதுகட
னீரைப் பருகுமுகி னேரளக மின்கொடியே
காரைப் பழத்திற்குக் காண்.

இ-ள். கடல்நீரை யுண்டு சூல்முதிர்ந்த மேகம்போலக் கறுத்த கூந்தலாளே! காரைப்பழத்தால் சீதரத்தக்கடுப்பும் அதிசாரமும் நீங்கும். 837

### மரக்காரைப்பழத்தின் குணம்

சுரமும் பொருமலும்போந் தொன்மயக்க மில்லு
தரவூதற் போமறிவுந் தங்கும்—பருகு
மரக்காரை மெல்லிதழ்வா யஞ்சுகமே யாரு
மரக்காரை யின்கனியை வாழ்த்து.

இ-ள். சிவப்புநிறம் பொருந்திய மெல்லிய இதழையும் அழகிய வாயையுமுடையாளே! மரக்காரைப்பழத்தினால் சுரம் வயிற்றுப்பிசம் மூர்ச்சை மகோதரம் இவைகள் நீங்கும். புத்திக்குத் தெளிவு உண்டாம். 838

### சூரைப்பழத்தின் குணம்

மந்த மதிகரிக்கும் வன்சீதளஞ் சேரு
முந்து குடல்வலியு முண்டாங்காண்—முந்துநவில்
காரைப் பழத்திற் கதித்தவொரு பேதமுமாஞ்
சூரைப் பழத்திற்குச் சொல்.

இ-ள். முற்கூறிய காரைப்பழத்தில் ஒரு பிரிவாகிய சூரைப் பழத்திற்கு அதிமந்தமும் கபதோடமும் குடல்நோயும் உண்டாம்.

### மிளகாய்ப்பழத்தின் குணம்

மூல விரத்த முளைகடுப்பு முண்டாகும்
தாலமதிற் றூது வுந்தழைக்குமே—ஆலமெனு

மந்த மரோசிகுன்மம் வாய்வு பொருமலும்போ
முந்துமிள காய்ப்பழத்தா லோர்.

இ-ள். மிளகாய்ப்பழத்தினால் ரத்தமூலமுளையும் ஆசனக்கடுப்பும் வீரிய விருத்தியும் உண்டாம் விடாலசகம் அருசி வயிற்று நோய் விருணவாதம் வயிற்றுப்பிசம் இவைை நீங்கும். 840

## கொடியின் பழவகை

### சிறியகொடிமுந்திரிப்பழத்தின் குணம் (இதுவே திராக்ஷை)

வெப்பருசி தாகம் விரணஞ் சுவாசகய
மெய்ப்புடைய பித்த மிரத்தபித்தஞ்-செப்பு
மடிமந்த மேக மதமும்போஞ் சின்னக்
கொடிமுந் திரிகனிக்குக் கூறு.

இ-ள். சிறியகொடி முந்திரிப்பழத்திற்கு, சுரம் அரோசகம் தாகம் மதரோகம் ஆகிய இவைகள் போகும் என்க. 841

### பெருங்கொடி முந்திரிப்பழத்தின் குணம்

சோமநோய் தாவரத்தாற் றோன்றுவிஷ முன்மாத
நாமமுறு மூத்திரநோய் நாடுமோ-சாமசுரம்
விண்ணொழி மெய்குளிரும் வீறுகொடி முந்திரிக்குக்
கண்ணொளியுந் தாதுவுமாங் காண்.

இ-ள். பெருங்கொடி முந்திரிப்பழத்தால் சோமநோய் தாவர விஷம் உன்மாதம் மூத்திர தோஷம் ஆகிய இவை நீங்கும். உடல் குளிர்ச்சியும் கண்துலக்கமும் சுக்கிலவிருத்தியும் ஆம். 842

### தூதுளம் பழத்தின் குணம்

கபக்கட்டுக் கோழை கத்திரி தோடங்
குபுக்கென் றெழும்புநீர்க் கோவை—கபுக்கென்
றழுத்து விடமும்போ மடர்தூ துளத்திற்
பழுத்து விழும்பழத்தாற் பார்.

இ-ள். தூதுளம் பழத்தினால் இறுகிய மார்புச்சளி க்ஷயம் வாதாதிமூன்று தோடங்கள் சலதோடம் சர்ப்பவிஷம் இவைகள் நீங்கும். 843

### பாகற்பழத்தின் குணம்

சுரமேகங் காசஞ் சுவாசமொடு மூலந்
திரிதோடங் குட்டமிவை தீருங்—கிருமியது

மோகப் புணரியெனு பொய்குழலை வெம்பிவிழாப்
பாகற் பழத்தையுண்டு பார்.

இ-ள். மோகனசாகரமனைய நெருங்கிய கூந்தலாளே! வெம்பி விழாத பாகல்பழத்தினால் சுரம் பிரமேகம் இருமல் இரைப்பு மூலம் முத்தோடம் குஷ்டம் மலக்கிருமி இவை விலகும். 844

### சவரிப்பழத்தின் குணம்

தலைவலி குடைச்சல் சலப் பீநசங்கள்
குலைகுலைந்தே காட்டிற் குடிபோ—நிலையா
னவரிப் படிமாதென் றையுறு மாதே
சவரிப் பழத்தினாற் றான்.

இ-ள். தேவர்கள் இப்பூலோகமாது தானோவென் றையமுறும் அழகினையுடைய பெண்ணே! சவரிப்பழத்தால் சிரநோயும் உடற் கடுப்பும் நீர்ப்பீநசமும் விலகுமென்க. 845

---

## மரத்தின் வித்துவகை

### மாங்கொட்டையின் குணம்

பேசுமோ சீதம் பெருக்குஞ்சோ ரிக்கடுப்பும்
வீசுமோ மூலமுறி வெங்கொதிப்பு—மாசுடைய
பூங்கொட்டை யைத்தள்ளிப் போட்டுக் கனியில்வந்த
மாங்கொட்டை யைக்காணில் வாது.

இ-ள். மாம்பழக்கொட்டையால் சீதபேதி ரத்தாதிசாரம் உதிரக்கடுப்பு மூலச்சூடு ஆகியவைகள் போமென்க. 846

### பலாக்கொட்டையின் குணம்

அள்ளேறு நீள்குடரி னப்பான் மலக்கட்டுங்
கள்ளேறு நெஞ்சர்நெஞ்சாங் கல்லகட்டி—னுள்ளே
சலாக்கொட்டை யிட்டசுகந் தானுங் கருக்கும்
பலாக்கொட்டை யிட்ட பலன்.

இ-ள். கருக்கிய பலாக்கொட்டையினால் அள்ளுமாந்தம் குடல் கபத்தால் மலச்சிக்கல் கட்குடியர்க்குண்டாவதுபோல் நெஞ்சிற் புளியேப்பம் கற்போற் வயிறு கெட்டிப்படல் அதில் ஓட்டை சாணளவு யிருப்புச்சலாக்கை சொருகினதுபோ லுபத்திரவமிவை யுண்டாம். 847

### புளியங்கொட்டையின் குணம்

சுக்கில மேகநற் றுன்னுமதி சாரமொடு
மிக்கிரண நாக்கடுப்பு வெட்டையறுந்—தொக்கொடுவ
ருற்றபுளி வித்திற் குறுகுணத்தை மேன்மேலு
நற்றரையுண் மாதே நவில்.

இ-ள். மாதே! தோலில் துவர்ப்புள்ள புளியங்கொட்டைக்குச் சுக்கிலமேகம் பித்தாதிசாரம் அதிவிரணம் மூத்திரக்கடுப்பு வெள்ளை இவைகள் நீங்கும். 848

### தேற்றாங்கொட்டையின் குணம்

பிரமிவெள்ளை வெப்புபசி போராக் கடுப்போ
டெரிகிரிச் சுரம்புண்ணு மின்றும்—வருமந்தந்
தேற்றாங் கொட்டைக்கக்கதோ தீட்ட மருந்தாகுங்
கூற்றாங்கண் மாதேநீ கொள்.

இ-ள். இயமனைப்போன்ற கண்களுடைய பெண்ணே! தேற்றாங் கொட்டைக்குப் பிரமேகம் வெட்டை உட்சூடு ஜடராக்கினி வயிற்றுக்கடுப்பு உரிகின்ற மூத்திரக் கிரிச்சுரம் இரணமும் நீங்கும். மந்தமுண்டாம், அது கண்ணுக்கு மருந்தாம். 849

### எட்டிக்கொட்டையின் குணம்

கைக்கறுப்புச் சந்நி கடிவிடங் குட்டவலி
மெய்க்கவரு நாதுநட்ட மென்பவைபோ—மைக்கண்ணாய்
கட்டி காப்பான் கனமயக்குப் பித்தமுமி
லெட்டிமரக் கொட்டையினா லே.

இ-ள். மையணிந்த கண்களுடையவளே! எட்டிக்கொட்டையால் கருமேகம் சந்நி விஷக்கடி குஷ்டம் வாதவலி வீரியநஷ்டம் பிடகம் கரப்பான் மூர்ச்சை பயித்திய மிவைபோம். 850

### புரசங்கொட்டையின் குணம்

வயிற்றுக் கிருமிகணம் வாதமொடு சீத
மியத்தபடர் தாமரையு நீங்கும்—வயிற்று
வலியிரைச்சல் வன்கரப்பான் மாறும்பித் துண்டா
மலிபுரசங் கொட்டைதனை வாழ்த்து.

இ-ள். புரசங்கொட்டையினால் மலப்புழுக்குலம் வாதவலி சீதம் படர்தாமரை குன்மம் வயிற்றிரைச்சல் கரப்பான் இவைகள் நீங்கும். பித்தமாம். 851

### புன்னைக்கொட்டையின் குணம்

கன்ன விரணங் கடுஞ்சந்நி பாதமுட
னின்ன லுறுவாதை யேகுங்காண்—புன்னைக்கொட்
டைக்கமட்டோ வென்னி லார்சூ தகவாய்வு
மெய்க்கமமிட் டாழ்வாய்வு மில்.

இ-ள். புன்னைக்கொட்டைக்குச் செவிப்புண் சந்நி தனுர்வாதம் சூதகவாயு நீரேற்றி அதிலழுந்திய சீதளவாயு இவைகள் நீங்கும்.

### இலுப்பை, அழிஞ்சில் இவ்வித்துக்களின் குணம்

இலுப்பைவிதை யந்தரவாய் விற்கும்விடத் திற்கு
மலுப்பையுண் டாக்கி யகற்று—நிலத்திற்
றெழுஞ்சுகமோ கக்கரப் பில்சொல்லஞ் சனமா
மழிஞ்சில் விதையென் றறி.

இ-ள். இலுப்பைக்கொட்டை அந்தர வாயுவையும் விஷத்தையும் நீக்கும். அழிஞ்சில்விதை உலகவசியத்திற்கும் மறைப்பு மைக்குமாகும். 853

### புங்கு காட்டுப்புங்கு இவ்வித்துக்களின் குணம்

புன்கின்விதை காற்கிரந்தி புண்கரப்பான் காதெழுச்சி
யங்கசந்நி கண்ணோய்க்கு மாம்பேதி—புங்கட்டுங்
காட்டுப் புங்கின்விதைக்குக் கண்டதே மற்சொறிமெய்ப்
பூட்டுப்பங் கின்வாய்வும் போம்.

இ-ள். புங்கங்கொட்டை கழல்விரணம் கிரந்தி கரப்பான் கர்ணபரிஸ்போடகம் சந்நி கண்ணோய் இவைக்குதவும், மலத்தைக்கட்டும். காட்டுப்புங்கம் விதைக்குத் தேமலும் புடையும் கீல்களைப்பற்றிய வாய்வும்போம். 854

### மருந்தோன்றி, வேம்பு இவ்வித்துக்களின் குணம்

மருந்தோன்றி யின்விதைக்கு மாபில்லி சூனியம்
விருந்தாண்ட பேய்பூதம் வீயுங்—கருந்தூன்றி
வேம்பின் விதைக்கு விடஞ்சந்நி பாதமுதற்
றேம்பிவிழுந் தோடுமெனத் தேர்.

இ-ள். மருந்தோன்றி வித்துக்குப் பில்லி சூனியமும் பேய் பூதமும் கெடும். வேப்பம் பருப்புக்குத் தாவரசங்கம விஷங்களும் சந்நியும் நீங்கும். 855

### கடப்பம்வித்தின் குணம்

கடப்பம் விதைக்குக் கடிவிடமு மூண்டோ
தொடுப்புமண்டை நீருந் தொலையு—மிடக்கான

வாத வகையொழிவு மாந்தங்க ளேகிவிடுங்
கீத மொழிமாதே கேள்.

இ-ள். கீதம்போன்ற மொழியையுடைய பெண்ணே! கடப்பம் வித்துக்கு விஷக்கடி சிரஸ்தாபரோகம் வாதரோகங்கள் அக்கினி மாந்த பேதங்கள் ஆகியவைகள் நீங்கும் என்க. 856

## மகிழம்வித்தின் குணம்

தாதுவைநன் மெய்யழகைச் சத்தியையுண் டாக்கிவிடுஞ்
சீதளமென் பார்கவிக்கஞ் செய்ம்மருந்தாம்—வாதை
மலத்தைவிழித் தோடத்தை வல்விடத்தை வெப்பை
விலக்கு மகிழம் விதை.

இ-ள். கண்கவிக்கத்துக்கான மகிழம்வித்து மலாவிருதவாதம் நேத்திரதோஷம் சர்ப்பவிஷம் சுரம் இவைகளை நீக்கும், சுக்கிலத்தையும் தேகவனப்பையும் பல விருத்தியுமாம். இது சீதளம். 857

## தில்லம்வித்தின் குணம்

தில்லம் விதைக்குச் சிறுவிடம்போம் பின்விடமுஞ்
செல்வஞ் செருக்குந் திமிர்வாய்வும்—வெல்லங்கொள்
வாரை வருத்துகின்ற வனகபமுங் குட்டமுமிவ்
வூரைவிடுத் தேகு முறை.

இ-ள். தில்லம் விதைக்குக் கீடவிஷம் சர்ப்பவிஷம் திமிர்வாதம் இனிப்புச் சுவையாற் பிறந்த கபரோகம் குட்டநோய் இவை நீங்கும்.

## ஆளிவித்தின் குணம்

வீக்க மதிவாந்தி மேனி வலிவாய்வுந்
தூக்கு நரம்பின்குத்த றுருவழலே—யோக்காள
மீளி யருசிவிதை வாதமும் போகு
மாளிவிதை தன்னா லறி.

இ-ள். ஆளிவிதையினால் சோபை மிகுவமனம் உடற்கடுப்பு வாதவலி நரம்புச்சூலை அஸ்திச்சூடு ஒக்காளம் அருசி பீசவாயு நீங்கும். 859

## உத்திராக்ஷத்தின் குணம்

நீளுமதி தாகத்தை நீங்காமுத் தோடத்தை
யாளும்விக்கல் பித்தத்தை யாற்றுங்கா—ணுரு
மிருத்திரா மற்பகத்தை வீட்டுமே நல்ல
உருத்திராக் கத்தின்வலி யுன்.

இ-ள். உருத்திராக்ஷமானது அதிதாகம் திரிதோஷம் விக்கல் ரோகம் பித்தகோபம் சிலேஷ்மாதிக்கம் இவைகளைப்போக்கும். 860

## முருங்கைவித்து, இலை, ஈர்க்குகளின் குணம்

நீரான விந்துவுமே நீண்டபிசி னுய்த்தடிக்குஞ்
சீராக மேனி செழிக்குங்காண்—பாராய்
முருங்கை யுறுவிதையான் மெய்த்தவிலை யீர்க்கோ
ஒருங்கையுறு நீரிறக்கு முன்.

இ-ள். முருங்கை வித்தினால் சலரூபமாகக் கரைந்த விந்துவும் பிசினிபோலாகும், சரீரம் பலக்கும்; இதன் இலையும் ஈர்க்கும் நீரைப் பெருக்கும். 861

## மாதுளைவித்தின் குணம்

சுக்கிலத்தைக் கட்டுமந்தச் சுக்கிலதோ டம்போக்கு
மக்கணமே கக்கடுப்பை யாற்றுங்கா—ணெக்காலிங்
கோதுளத்தெண் ணுதமலர்க் கொம்பனையாய் தித்திக்கு
மாதுளத்தின் பீச வலி.

இ-ள். புட்ப கொம்பனைய பெண்ணே! இனிப்புள்ள மாதுளம் வித்தானது சுக்கிலத்தை இறுக்குவதுந் தவிர அதிலுள்ள குற்றத்தையும் பிரமேகச் சுருக்கையும் நீக்கும். பீசம்-வித்து. 862

## முந்திரிப்பருப்பின் குணம்

மெத்த வினிப்பாகு மென்கொடியே தின்றக்காற்
பித்த வனிலம் பிறக்குங்காண்—சத்தியமா
யிந்திரியப் புஷ்டி யிளைக்காது மாந்தமுண்டா
முந்திரியி னற்பருப்பான் முன்.

இ-ள். மிகுந்த உரிசையுள்ள முந்திரிப்பருப்பைத் தின்னில் பித்தவாததொந்தம் தாதுவிருத்தி அக்கினிமாந்தம் ஆகியவையுண்டாம்.

## வாதுமைப்பருப்பின் குணம் (இதுவே அடப்பம் விதை)

அடப்பம்விதை யாம் வாதுமைப்ப ருப்பின்
மடற்பெரிய கட்படல மாறுஞ்—சுடக்கெனவே
புண்மேற் கொழுப்பகலும் போகமு முண்டாமென்றே
மண்மேற் றுணிவாய் வழுத்து.

இ-ள். அடப்பவிதை என்கிற வாதுமைப் பருப்பினால் விழிப் படலமும் விரணக்கொழுமையும் நீங்கும், கலவியில் விருப்பமுண் டாம். 864

வாத வகையொழிபு மாந்தங்க ளேகிவிடுங்
கீத மொழிமாதே கேள்.

இ-ள். கீதம்போன்ற மொழியையுடைய பெண்ணே! கடப்பம் வித்துக்கு விஷக்கடி சிரஸ்தாபரோகம் வாதரோகங்கள் அக்கினி மாந்த பேதங்கள் ஆகியவைகள் நீங்கும் என்க. 856

## மகிழம்வித்தின் குணம்

தாதுவைநன் மெய்யழகைச் சத்தியையுண் டாக்கிவிடுஞ்
சீதளமென் பார்கலிக்கஞ் செய்ம்மருந்தாம்—வாதை
மலத்தைவிழித் தோடத்தை வல்விடத்தை வெப்பை
விலக்கு மகிழம் விதை.

இ-ள். கண்கலிக்கத்துக்கான மகிழம்வித்து மலாவிருதவாதம் நேத்திரதோஷம் சர்ப்பவிஷம் சுரம் இவைகளை நீக்கும், சுக்கிலத்தையும் தேகவனப்பையும் பல விருத்தியுமாம். இது சீதளம். 857

## தில்லம்வித்தின் குணம்

தில்லம் விதைக்குச் சிறுவிடம்போம் பின்விடமுஞ்
செல்வஞ் செருக்குந் திமிர்வாய்வும்—வெல்லங்கொள்
வாரை வருத்துகின்ற வனகபமுங் குட்டமுமிவ்
வூரைவிடுத் தேகு முரை.

இ-ள். தில்லம் விதைக்குக் கீடவிஷம் சர்ப்பவிஷம் திமிர்வாதம் இனிப்புச் சுவையாற் பிறந்த கபரோகம் குட்டநோய் இவை நீங்கும்.

## ஆளிவித்தின் குணம்

வீக்க மதிவாந்தி மேனி வலிவாய்வுந்
தூக்கு நரம்பின்குத்த றுருவழலை—யோக்காள
மீளி யருசிவிதை வாதமும் போகு
மாளிவிதை தன்னு லறி.

இ-ள். ஆளிவிதையினால் சோபை மிருவமனம் உடற்கடுப்பு வாதவலி நரம்புச்சூலை அஸ்திச்சூடு ஓக்காளம் அருசி பீசவாயு நீங்கும். 859

## உத்திராக்ஷத்தின் குணம்

நீளுமதி தாகத்தை நீங்காமுத் தோடத்தை
யாளும்விக்கல் பித்தத்தை யாற்றுங்கா—ளுளு
மிருத்திரா மற்பகத்தை வீட்டுமே நல்ல
உருத்திராக் கத்தின்வலி யுண்.

இ-ள். உருத்திராக்ஷமானது அதிதாகம் திரிதோஷம் விக்கல் ரோகம் பித்தகோபம் சிலேஷ்மாதிக்கம் இவைகளைப்போக்கும். 860

## முருங்கைவித்து, இலை, ஈர்க்குகளின் குணம்

நீரான விந்துவுமே நீண்டபிசி னாய்த்தடிக்குஞ்
சீராக மேனி செழிக்குங்காண்—பாராய்
முருங்கை யுறுவிதையான் மெய்த்தவிலை யீர்க்கோ
ஒருங்கையுறு நீரிறக்கு முன்.

இ-ள். முருங்கை வித்தினால் சலரூபமாகக் கரைந்த விந்துவும் பிசினிபோலாகும், சரீரம் பலக்கும்; இதன் இலையும் ஈர்க்கும் நீரைப் பெருக்கும். 861

## மாதுளைவித்தின் குணம்

சுக்கிலத்தைக் கட்டுமந்தச் சுக்கிலதோ டம்போக்கு
மக்கணமே சுக்கடுப்பை யாற்றுங்கா—ணைக்காவிங்
கோதுளத்தேண் ணுதமலர்க் கொம்பனையாய் தித்திக்கு
மாதுளத்தின் பீச வலி.

இ-ள். புட்ப கொம்பனைய பெண்ணே! இனிப்புள்ள மாதுளம் வித்தானது சுக்கிலத்தை இறுக்குவதுந் தவிர அதிலுள்ள குற்றத் தையும் பிரமேகச் சுறுக்கையும் நீக்கும். பீசம்-வித்து. 862

## முந்திரிப்பருப்பின் குணம்

மெத்த வினிப்பாகு மென்கொடியே தின்றக்காற்
பித்த வனிலம் பிறக்குங்காண்—சத்தியமா
யிந்திரியப் புஷ்டி யிளைக்காது மாந்தமுண்டா
முந்திரியி னற்பருப்பான் முன்.

இ-ள். மிகுந்த உரிசையுள்ள முந்திரிப்பருப்பைத் தின்னில் பித் தவாதமொந்தம் தாதுவிருத்தி அக்கினிமாந்தம் ஆகியவையுண்டாம்.

## வாதுமைப்பருப்பின் குணம் (இதுவே அடப்பம் விதை)

அடப்பம்விதை யாம் வாதுமைப்ப ருப்பின்
மடற்பெரிய கட்படல மாறுஞ்—சுடக்கெனவே
புண்மேற் கொழுப்பகலும் போகமு முண்டாமென்றே
மண்மேற் றுணிவாய் வழுத்து.

இ-ள். அடப்பவிதை என்கிற வாதுமைப் பருப்பினால் விழிப் படலமும் விரணக்கொழுமையும் நீங்கும், கலவியில் விருப்பமுண் டாம். 864

### சாரப்பருப்பு மிசரிப்பருப்பு இவைகளின் குணம்

சாரப் பருப்பாற் றனிமிசரி யின்பருப்பா
னீரப் பருப்புநீர்ச் சீதங்—தீரத்
தொலையுமிர தந்தந்தி துய்த்தார்க்கு நன்றுங்
கலையும்விந்து விற்கூக்கங் காண்.

இ-ள். சாரப்பருப்பு மிசரிப்பருப்பு இவைகளால் சிறுநீரைப் பற்றிய கடுஞ்சுருக்கும் மூத்திரகடுப்பும் சலப்பிரமேகமும் நீங்கும், நீத்தசுக்கிலம் இறுகும், ரசகந்தங்களைத் தின்றவர்க்கும் நலனைத் தரும். இரதம்-பாதரசம். தந்தி-கந்தகம். 865

---

## செடியின் வித்துவகை

### துத்திவித்தின் குணம்

கையிற்கா லிற்படர்ந்த கார்மேகம் போயொழிவு
மெய்யிலுறு குட்டம்போம் வெப்பகலுங்—துய்யதிரை
யத்திதனை யொத்தவிழி யாரணங்கே நாட்டலுறுந்
துத்தி விதையைச் சுவை.

இ-ள். கடல்போன்ற விழியையொத்த ஆரணங்கே! துத்தி விதையை நீ தின்னக்கடவை; தின்றால் கைகால்களிலுண்டாகிய கருமேகமும் குஷ்டரோகமும் உட்சூடும் நீங்கும் என்க. 866

### தகரைவித்தின் குணம்

வண்டு கடியுடனே வன்கடுவ னும்பலவாம்
பண்டு நமைபுடையும் பண்டிதர்கள்—கண்டுரையாப்
பித்த சனனும் பெருத்த தகரைவிதைக்
கித்தரையி னில்லா விசை.

இ-ள். தகரை விதைக்கு வண்டுகடி அரைக்கடுவன் நீங்காத தினவு பலவித புடை பிடகருரைத்தற்கரிய பித்தநோய் இவை போம். 867

### நீர்முள்ளிவித்தின் குணம்

விந்துவுமாந் தாதுவுமா மேகரோகந் தொலையு
முந்துமதி சார மொழியுங்காண்—வந்துடலி
லேறியநீர் வீக்க மிறங்கு மிளைப்புமறுங்
கூறியநீர் முள்ளிவிதைக் கு.

இ-ன். நீர்முள்ளி வித்துக்குப் பிரமேகம் அதிசாரம் கபசோகை ஆயாசம் இவை நீங்கும், சுக்கிலமும் சப்ததாதுக்களும் விருத்தியாம். 868

### ஊமத்தம்வித்தின் குணம்

சுரம்போம் விடம்போந் தொலையாத சந்நி
யுரம்போ மதிசார மோடு—நிரம்பவே
மாமத்த முண்டாம் வளரிளங்கொங் கைத்திருவே
யூமத்தை யின்வித்தையை யுன்.

இ-ள். இளங் கொங்கையையுடைய விலக்குமிபோல்பவளே! ஊமத்தை விதையினால் சுரம் தாவரசங்கம் விஷம் சந்நிபாததோஷம் அதிசாரம் ஆகியவைபோம் வெற்றியுண்டாம். 869

### வெங்காயம் துளசி கரிசாலை முள்ளங்கி உருத்திரச்சடை இவ்வித்துக்களின் குணம்

வெங்காய வித்துக்குன்மம் வீட்டுந் துளசிவித்துக்
கெங்கெமயங் கரிப்பா னின்பழமாற்—றங்கவே
காமாலை முள்ளங்கிக் காழால்வித் தாஞ்சடைவுத்
தோமாலை யுள்ளடக்குஞ் சொல்.

இ-ள். வெங்காயவிதை குன்மத்தையும், துளசிவிதை சீதத்தையும் கரிசாலவிதை காமாலையையும் முள்ளங்கிவிதை விந்து நஷ்டத்தையும் உருத்திரச்சடை விதை மயங்குகின்ற கபத்தையும் போக்குமென்க. 870

---

## கொடியின் வித்துவகை

### பூசினிவித்தின் குணம்

பித்தம்போ மேகம்போம் பேராவனலும் போம்
மெத்த வுடலங்குளிரு மேனியிடு—மித்தலத்து
ளாசினியொன் றில்லா வலர்ந்தவசனத் தனமே
பூசினி வித்தைத்தின்னும் போது.

இ-ள். அலர்ந்த புட்பத்திற் சஞ்சரிக்காநின்ற அன்னம்போல்பவளே பூசினிவித்தினால் பயித்தியமும் பிரமேகமும் சரீர அழலையும் நீக்கும் தேகத்திற் குளிர்ச்சியும் புஷ்டியும் உண்டாம். 871

### வெள்ளறிவித்தின் குணம்

கடுப்பொடுநீர்க் கட்டுவெறுங் கல்லடைப்பு தரை
வெடிப்பு சதையடைப்பு மேக—மெடுத்துரைக்கா
வுள்ளரிவி யென்னு முறைகிரிச் சுரம் மிவைகள்
வெள்ளரி விதைக்கேகும் விள்.

இ-ள். வெள்ளரி விதைக்கு கடுகின்ற நீரடைப்பு கல்லடைப்பு நீர்த்துவார வெடிப்பு சதையடைப்பு பிரமேகம் கிரிச்சுரம் இவை நீங்கும். 872

## கழற்காய் பேய்பீர்க்கு-இவ்வித்துவின் குணம்

கழற்காய் விதைகருக் கனவண்ட வாதந்
தழற்பக்கச் சூலகுன்மஞ் சாந்தி—கழற்காலிற்
காய்ப்பாக்குந் துஷ்டக் கடிவிஷமெலாம் போக்கும்
பேய்பீர்க்கின் றன்விதையைப் பேசு.

இ-ள். கழற்காய் விதைக்கு அண்டவாதமும் சூட்டினால் பிறந்த பக்கசூலையும் வயிற்று நோயும் நீங்கும், பேய்பீர்க்கம்வித்து காலிற் றழும்பேரும்படிக் கடித்த துஷ்ட விஷங்களை யெல்லாம் நீக்கும்.

## பூனைக்காலிவித்தின் குணம்

தழுதளை நாற்றத்தோடு சாரிரத்தப் போக்கும்
பழுதுபரி கின்றகரப் பானு—மழுதேகுந்
தாலமிசை விந்துமாஞ் சாற்றும் கரும்பூனைக்
காலி விதையினாற் காண்.

இ-ள். கருமைநிறப் பூனைக்காலிவிதையினால், கற்றாழைநாற்ற முரத்த கிராணியும் கரப்பானும் நீங்கும் தாதுபுஷ்டி யுண்டாகும்.

## உகாவித்தின் குணம்

வாதமுதன் முப்பிணியால் வந்தபிணியை யெல்லாங்
கோதிற் சமப்படுத்துங் கூறவொண்ணாச்—சீத
மகாவனச மண்டபத்தில் வாழ்ந்திருக்கு மாதே
யுகா விதையைநன்று யுரை.

இ-ள். குளிர்ந்து மேன்மைதங்கிய மண்டபத்தில் வாழ்ந்திருக் கும் மாதே! உகாவிதை திரிதோஷம் நோய்களை சாந்தமாக்கும். 875

## குன்றிவித்தின் குணம்-(இதுவே குன்றிமணி)

நேத்திரநோய் பித்த நிறமழுமாங் காமாலை
வேர்த்திடு தாபச்சோப வெப்புடனே—கோத்திட்ட
வையமும்போம் விந்துவா மாயிழையே காட்டிலுறை
செய்யகுன்றி யின்விதையைச் சேர்.

இ-ள். நூல்போன்ற விடையை யுடையவளே சிவந்த குன்றி மணிப் பருப்பினால் கண்ணோய் பித்தநோய் மாறுநிறம் காமிலா ரோகம் வியர்வையொடு வெப்பத்தை தருகின்ற மூர்ச்சைச்சுரம் சிலேஷ்மகோபம் இவை நீங்கும் சுக்கிலவிருத்தியாம். 876

## நெருஞ்சில் வித்தின் குணம்

சொல்லவொண்ணா நீர்க்கட்டு துன்பமாமிச மருகல்
கல்லடைப் பெனும்பிணிகள் கண்டாக்கல்—வல்லக்
கருஞ்சினவேற் கண்மடதே காசினியிற் றேன்று
நெருஞ்சினறும் வித்தே நினை.

இ-ள். வேல்போன்ற கண்களையுடைய மாதே! நல்ல நெருஞ்சில் வித்துக்கு மூத்திரக்கட்டு சதையடைப்பு மூத்திரகிரிச்சரம் சர்க்கரா ஸ்மரிரோகம் ஆகியவை நீங்கும். 877

## தாமரைவித்தின் குணம்

மந்தத்துவ மகற்றும் வல்லருசி நீக்கிவிடு
மந்தத் துறைதாது விற்கடலே—தந்திடும்பின்
னுன்னி லின்னுந்தோடகுண மியாவுமோட்டுஞ் சலந்
தன்னி லண்ணிக்கிரவஞ் சம்.

இ-ள். தாமரை விதை அசலத்தையும் அருசி முதலிய சர்வ தோஷங்களை நீக்கும் கடைத்தாதுவாகிய சுக்கிலத்தை விருத்தி செய்யும் என்க. 878

## வெள்ளை அல்லி, செவ்வல்லி இவ்விதைகளின் குணம்

மிதுனவல்லி வித்துக்க ளால்வித்துண் டென்றுனு
மதனமரைக்குச் செம்மைக் காரக்க—மதனமிந்தப்
பேதமின்றி யீரற் பீலிங்களுக்கு வன்மை
யேதமின்றிச் செய்யு மிரண்டும்.

இ-ள். இருவித அல்லி விதைகளினாலும் சுக்கிலவிருத்தி யுண்டென்று சில மாதாந்தரத்திற் சொல்லப்பட்டாலும் வெள்ளல்லிக்குச் சுக்கிலம் அதிகமும் செவ்வல்லிக்குச் சோணிதம் அதிகமும் ஆம் இந்தப் பேதமேயன்றி யீரலுக்கும் பீலிககண்டங்களுக்கும் இரண்டு சமபலஞ் செய்யும். 879

## வித்துக்களின் பொது குணம்

மின்கனலி மிக்குளிர் யித்துகள் விதைப்புரக்கத்
தக்கனவன் றுஞ்சமர சந்தகவா—மக்குறிகா
யாகாய மின்றிபடர்ந் துறைவித் தங்கிநெடு
மாகாய மென்றூர்வித் தாம்.

இ-ள். அதி உஷ்ணமுள்ளவும் அதிசீதளமுள்ளவும் ஆகிய இருவகை விதைகளும் வித்துவை ரக்ஷிக்கத்தக்கவை அல்ல உஷ்ண சீதளம் சமமாயுள்ள வித்துக்கள் அதை ரக்ஷிக்கத்தக்கனவாம் அவையெவை யெனில் காய்க்குள் இடைவெளியின்றி நெருங்கி

யிருக்கின்ற தூதுவளை முதலிய விதைகளெல்லாம் உஷ்ணமும் இடைவெளி மிகுந்து ஒன்றோடொன்று நெருங்காமலிருக்கின்ற பூசினி முதலிய வித்துக்கள் அதிசீதளமுமாகும் சமமானவை இடைவெளி யுள்ளனவும் ஒன்றுக்கொவ்வோர் வித்து உள்ளனவு மான முருங்கை வாதுமை வித்துக்கள் முதலியன. 880

## நெற்களின் பொதுவகை

செந்நெல் வகைக்குஞ் சிறுதானிய வகைக்கு
மிந்நிலத்தி லுண்டோ விலக்கென்ப—துன்னுங்காற்
கண்ட மட்டிலே பெயராங் கண்டவரவரவர்க
ளுண்டமட்டிகல் சுவையா மோர்.

இ-ள். இந்தவுலகில் விளைகின்ற நன்செய் புன்செய் தானிய வருக்கங்களின் பெயரையும் சுவையையும் அளவிடுதற்கரிதேயாயினு மவற்றைப் பார்த்த வகையில் எவரும் புசித்த வரையில் சுவையு மாம் என்க. 881

### கார் அரிசியின் குணம்

காரரிசி மந்தங் கனப்புடலிற் றாலிப்பும்
பாரறிய வாயுவையும் பண்ணுங்கா—ணேரே
கரப்பா னென்பார் பொருந்திற் காயமுறுமெத்த
வுரப்பாகு மென்றே யுரை.

இ-ள். மந்தகுணமுள்ள பருத்தகாரருசி சரீர புஷ்டியையும் தனிவாத விளைவையும் பலத்தையும் தரும் இதுகரப்பன் பண்டம் என்பர். 882

### மணக்கத்தை வாலான் கருங்குறவை என்னும் இவ்வரிசியின் குணம்

மணக்கத்தை வாலான் கருங்குறவை மூன்றும்
பிணக்குஷ்டைச் சிலவிஷத்தைப் போக்கு—முணக்குமுற
வாக்கியுண்டாற் கரப்பா னுருமென் பார்க்கள்சிலர்
பார்க்குளிதை யாராய்ந்து பார்.

இ-ள். மணக்கத்தை, வாலான்கருங்குறவை என்னும் மூவகை அரிசிகளும் விரணகுஷ்டத்தையும் அற்பவிஷத்தையும் நீக்கும், இவ் வகைச் சாதங்களாற் சில வயித்தியர் கரப்பானுண்டா மென்பார்.

### ஈர்க்குச் சம்பா அரிசியின் குணம்

ஈர்க்குச் சம்பாவென் றியம்பு மரிசியது
நாக்குக் கதியுரிசை நல்குங்காண்—பார்க்குமிடத்

தெல்லார்க் குங்காத வியற்றுமற்ப பித்தமுமாம்
வில்லாரும் பூசைகட்காம் விள்.

இ-ள். தேவாராதனைக்கான ஈர்க்குச்சம்பா அரிசி நாவுக்குருசியையும் பார்க்கில் இச்சையையும் தரும், இதில் கொஞ்சம் பித்தம் உண்டு. 884

## புழுகுசம்பா அரிசியின் குணம்

புழுகு சம்பாவரிசி பூதலத்தி லுண்பார்க்
கழகு மொளியுஞ் சேர்வதன்றி—யழலாம்
பசிதாகந் தீரும் பலமு மிகவுண்டா
முசிவே துடர்சுகமா முன்.

இ-ள். புழுகுச்சம்பா அரிசியை உண்பவர்களுக்கு வனப்பும் காந்தியும் அதிதீபாக்கினியும் பலமும் உண்டாம், தாகம் நீங்கும்.

## கைவகைச்சம்பா அரிசியின் குணம்

கைவரச் சம்பாவரிசி கண்டா வவரவர்த
மெய்வரைபோ லென்று மிகுபலமா—மைய
மடையா தென்பார்க ளடர்சுக் கிலமு
முடையா ததிசுகமா முன்.

இ-ள். கைவரைச்சம்பா அரிசியால் உடற்குமலைபோன்ற வன்மையும் சுக்கிலஸ்தம்பனசுகம் உண்டாம். இதில் பித்தமின்றென்பர்.

## செஞ்சம்பா அரிசியின் குணம்

செஞ்சம்பாத் தண்டுலத்தாற் றீராச் சிறுசிரங்கும்
விஞ்சுபுண் ணும் வன்சொறியு மேகுங்காண்—துஞ்சா
ததிக பசியாகு மணங்கரசே யிந்தப்
பதியதனி லீயுண்டு பார்.

இ-ள். செஞ்சம்பா அரிசியாற் கிளைக்கின்ற அற்ப கிரந்தியும் அதிவிரணமும் யானைச்சொறியும் மிகுபசியும் உண்டாகும். 887

## குண்டுசம்பா அரிசியின் குணம்

குண்டுச் சம்பாவரிசி கொண்டுண் ணும் பேர்களுக்குப்
பண்டையில்லா மந்தநோய் பார்க்கு—மண்டுபடாத்
தாகமெல்லா மொழியுந் தையலே வன்கரப்பான்
றேகமெல்லாம் பரவுஞ் செப்பு.

இ-ள். பெண்ணே! குண்டுச்சம்பா அரிசிக்கு அக்கினிமாந்தமும் பலமிகுந்த கரப்பான் ரோகமும் உண்டாம். தாகரோகந் தீரும்.

## கல்லுண்டைச்சம்பா அரிசியின் குணம்

கல்லுண்டைச் சம்பாவைக் கண்டருந்தி நின்றவர்முன்
மல்லுண்ட பேரெதிர்க்க வாய்க்குமோ—வில்லுண்டை
போலுரையா நல்ல புசபலமா மின்சுவையாம்
பாலனைய மென்மொழியே பார்.

இ-ள். பாலனைய மிருதுவாகிய பெண்ணே! கல்லுண்டைச் சம்பா அரிசியை உண்பவர்க்கு மல்யுத்தக்காரரும் எதிர்க்கக்கூடாத புசபலமும் மிகுவார்த்தையும் உண்டாம் என்க. 889

## மல்லிகைச்சம்பா அரிசியின் குணம்

மல்லிகைச் சம்பாவரிசி வாய்க்குரிசை யாயிருக்கு
நல்லது மெய்க்கு நலஞ்செய்யும்—சொல்லாக்
கரப்பானே மேகத்தைக் கண்ணழலை நீக்கு
முரப்பாம் பலங்கொடுக்கு முன்.

இ-ள். நாவிற்கு உரிசையாயிருக்கின்ற மல்லிகைச்சம்பா அரிசி சரீரத்திற்குச் சவுக்கியத்தையும் உறுதியையும் தரும், கரப்பான் பிரமேகம் நேத்திரவெப்பம் ஆகியவைகளைப் போக்கும். 890

## இலுப்பைப்பூச்சம்பா அரிசியின் குணம்

பித்தமிகப் பெருக்கும் பேருலகி லியாவர்க்கு
முற்றதலை வலிநோ யுண்டாக்குஞ்—சத்தியமாய்த்
தாக மெடுப்பிக்குந் தழலிலுப்பைப் பூச்சம்பா
வாகமதி னேய்வளர்க்கு மாய்.

இ-ள். இலுப்பைப்பூச்சம்பா அரிசி பித்தாதிக்கத்தினுல் விளைகின்ற சிற்சில ரோகம் சிரஸ்தாபம் உபசர்க்கதாகம் ;உஷ்ணம் இவைகளைச் செய்யும். 891

## மணிச்சம்பா அரிசியின் குணம்

நல்லமணிச் சம்பா நாடுகின்ற நீரிழிவைக்
கொல்லு மிகுந்தசுகங் கொண்டளிக்கு—மெல்லப்
பசியளிக்கு மூத்தோரைப் பாலர்களை நாளு
முசியாமலே வளர்க்கு முன்.

இ-ள். நல்லமணிச்சம்பா அரிசி அதிமூத்திரத்தை விலக்கும், அதிசுகத்தால் உடலையும் விருத்தர் பாலர்களையும் வளர்க்கும் என்க.

### வளைதடிச்சம்பா அரிசியின் குணம்

வளைதடிச் சம்பாவிற்கு வாதபித்த முண்டா
முளையுமடி பொருமி யுப்புங்—கொளகொளெனத்
தானே கரப்பானுந் தாங்கொணா மந்தமுமாந்
தேனே யிதனைத் தெளி.

இ-ள். தேனனைய மொழியாளே! வளைத்தடிச்சம்பா அரிசிக்கு வாதபித்ததொந்தம் வயிறு உளைதலுடன் உப்பிசம் கரப்பான் மிகு மந்தம் இவை உண்டாம். 893

### கோரைச்சம்பா அரிசியின் குணம்

கோரைச் சம்பாநற் குளிர்ச்சியென்பார் பித்தத்தைப்
போரா வழலைப் பிரித்தோட்டுந்—தீராத
மேக மொடுதினவை வீட்டுஞ் சுகங்கொடுக்கு
மேகமுறை குழலாய் விள்.

இ-ள். மேகமுறைகின்ற கூந்தலையுடையாளே! கோரைச்சம்பா அரிசி பயித்தியம் உட்சூடு பிரமேகம் நமைச்சல் இவைகளை நீக்கும் சவுக்கியந்தரும் குளிர்ச்சியென்பார். 894

### குறுஞ்சம்பா அரிசியின் குணம்

குறுஞ்சம்பா பித்தங் குடியிருக்கச் செய்யும்
வெறுங்கரப்பா னுண்டாக்கு மெய்யி—ஞொறுங்கச்செய்
வாதமருள் வாயுவினை மாற்றும்போகங் கொடுக்குஞ்
சீதவனசத் திருவே செப்பு.

இ-ள். குளிர்ந்த தாமரையொத்த வனசத்திருமாதே! குருஞ்சம்பா அரிசி பித்தம் கரப்பான் சுக்லதாது இவைகளை விருத்திசெய்யும் சரீரத்தில் குத்துகின்ற வாதநோயை நீக்கும். 895

### மிளகுச்சம்பா அரிசியின் குணம்

மிளகுச் சம்பாவரிசி மென்சுகத்தைச் செய்யு
மளவில் பலநோயை யகற்றுங்—களகளெனத்
தீபனத்தைத் தூண்டிவிடுந் தீராவலி தொலைக்குஞ்
சோபனத்தைச் செய்நகையாய் சொல்.

இ-ள். சோபனத்தை செய்கின்ற நகையாளே! மிளகுச்சம்பா அரிசி சவுக்கியத்தைக் கொடுத்துத் தீபாக்கினியை வளர்க்கும், மகா வாத முதலிய பலவித ரோகங்களைப் போக்கும். 896

## சீரகச்சம்பா அரிசியின் குணம்

சீரகச் சம்பாவரிசி தின்னச் சுவைதரும்
பேரகத்து வாதமெல்லாம் பேருங்காண்—பாருலகி
லுண்ட வுடனேபசியு முண்டாகும் பொய்யலவே
வண்டருறை பூங்குழலே வாழ்த்து.

இ-ள். வண்டுகள் மொய்க்குங் கூந்தலாளே! மதுரமுள்ள சீரகச்சம்பா அரிசியை உண்டவன் மீளவும் உண்பதற்கான தீபனமுண்டாம் அற்ப வாதரோகங்கள் நீங்கும். 897

## காளான்சம்பா அரிசியின் குணம்

காளான் சம்பாவரிசி கல்லையொத்த மாபலத்தைக்
கேளாமலே கொடுக்குங் கேளின்னும்—நீளு
மானிலத்தைப் போக்கிவிடு மாரோக்கி யத்தை
நானிலத்திற் செய்துவிடு நாடு.

இ-ள். காளான் சம்பா அரிசி சரீரத்திற்கு மலைபோன்ற உறுதியையும் சவுக்கியத்தையும் தரும், சிற்சில வாதரோகங்களை நீக்கும். 898

## மைசம்மா அரிசியின் குணம்

மைச்சம்பாத் தண்டுலத்தால் வாயருசி போயொழியும்
வெச்சென்ற வாதபித்த மெய்யைவிடு—நச்சுந்
தனிவாபு விஞ்சுரக்குஞ் சாத்தியும்போ மின்பக்
கனிமொழியே நன்றாகக் காண்.

இ-ள். இன்பந்தருங் கனிபோன்ற மொழியையுடைய பெண்ணே! மைச்சம்மா அரிசியினால் அரோசகம் வாதபித்த தொந்தம் தனிவாதகோபம் வாந்தி நோய் ஆகியவைபோம் என்க. 899

## கோடைச்சம்பா அரிசியின் குணம்

கோடைச் சம்பாவரிசி கொண்டாற் றிரிதோட
வாடைக் கதிக வலியுமுண்டோ—நீடு
முறுப்பினுள்ள நோயெல்லா மோதாம லேகுங்
கறுப்பிலுயர் வார்குழலே காண்.

இ-ள். கறுத்த கூந்தலாளே! கோடைச்சம்பா அரிசியை யுண்ணில் முத்தோஷத்தாற் பிறந்த வாதவலியும் சரீரத்திலுள்ள சிற்சில நோய்களும் விலகும் என்க. 900

## காடைச்சம்பா அரிசியின் குணம்

காடைச் சம்பாவரிசி கண்டுதரி சித்தவர்க்கு
நீடுற்ற வேகவன லிற்குமோ—சடைப்
பறவைபோ லேயும் பறக்கும் பலத்தி
னுறவை யெவர்சொல்வா ருரை.

இ-ள். காடைச்சம்பா அரிசிக்கு பிரேமக சுரமும் சில அற்ப நோய்களும் நீங்கும், சுக்கிலதாது விருத்தியும் பலமுமுண்டாம்.

## குன்றிமணிச்சம்பா அரிசியின் குணம்

குன்றிமணிச் சம்பா கொண்டா லனிலமறும்
வென்றி தருபல மிருக்குங்காண்—துன்றியநோ
யெல்லாம் பறக்குமுறை யிந்திரிய புஷ்டியுண்டாம்
நல்லா ரறிய நவில்.

இ-ள். குன்றிமணிச்சம்பா அரிசியை யுண்ணில் அற்பவாத ரோக முதலிய சில நோய்கள் நீங்கும் சரீர பலமும் சுக்கிலதாதுவு முண்டாம். 902

## அன்னமழகி அரிசியின் குணம்

அன்ன மழகியரி யாரோக்கியங் கொடுக்குந்
தின்னவெகு ருசியாஞ் செப்பக்கே—ளிங்கிலத்து
நோயனைத்துந் தூளாய் நொறுங்கத் தகர்ந்துவிடுந்
தீயனலைப் போக்குந் தெளி.

இ-ள். மிகுமதுரமுள்ள அன்னமழகியரிசி சகல சுரங்களையும் பித்தவெப்பத்தையும் போக்கித் தேகத்திற்குச் சவுக்கியத்தைக் கொடுக்கும் என்க, அரி-அரிசி, நோய்-சுரம். 903

## பச்சை அரிசியின் குணம்

சுத்த வனிலமந்தத் தோன்றுமெரி பித்தம்போம்
பத்தியத்தி லெண்ணார்கள் பண்டிதர்கண்—மெத்தவுமே
வைச்ச சுமைதாங்க வலியுண்டாந் தேகத்திற்
பச்சரிசியைப் புசித்துப் பார்.

இ-ள். பத்தியத்தில் விலக்கான பச்சரிசியினால் தணிவாத கோபமும் அலசரோகமும் மிகுந்த பலமுமுண்டாம் பித்தயெரிச் சல்போம். 904

## புழுங்கல் அரிசியின் குணம்

புழுங்க லரிசியது புத்திரர்க்கு மாகு
மழுங்குகின்ற வாயுவிற்கு மாகு—மொழுங்காய்

நிலைத்த பத்தியத்திற்கு நீட்டலா மெய்க்குப்
பலத்தைக் கொடாததனைப் பார்.

இ-ள். புழுங்கலரிசி குழந்தைகள் வருந்துகின்ற வாதரோகியர் அரும்பத்தியமுள்ளவர் இவர்களுக்குதவும் ஆனாலுடலுக்குறுதியில்லை. 905

## பழமை அரிசியின் குணம்

பழவரிசி மூத்தோர்க்கும் பாலர்கட்கு மாகு
மழன் மிகவுமாகு மருந்தி—னிழலைப்போ
லாகு முடற்குளிர்ச்சி யையமுறு நோயுற்றோர்க்
காகும் பன்னேய்போ மறி.

இ-ள். பழய அரிசி விருத்தர் பாலர் ரோகியர்களுக்குமாகும், இவ்வன்னத்தை யுண்ணில் பசியும் குளிர்ச்சியுமாம் சிற்சில நோயும் கபமும் நீங்குமென்க. 906

## சவ்வரிசியின் குணம்

மேகமத்தி மேகஞ்சீழ் மேகரத்த மேகமும்போந்
தேகத்திற் றாதுவுஞ் சிலேத்மமுண்—டாகுமெழிற்
செவ்வரி படர்ந்தவிழித் தேமொழி மாதேயுலகிற்
சவ்வரிசியின் குணத்தைச் சாற்று.

இ-ள். செவ்வரிபடர்ந்த விழியையுடைய தேனனையமொழியாளே சவ்வரிசியினால் பிரமேகம் அஸ்திசிராவரோகம் வெண்மேகமிவைபோம் சுக்கிலமும் கபமும் விளையுமென்க. 907

## மூங்கில் அரிசியின் குணம்

உதிரபித்தந் தீர்க்கு மோங்கு சுரத்திற்கு
மதிரவரு கண்ணோ யதற்கும்—புதிதாகக்
கஞ்சிசெய்ய லாகுங் கருதிற்சிற் றுண்டியுமாஞ்
செஞ்சிலம்பார் மூங்கி லரிசி.

இ-ள். பாயசம் பலகார முதலியவை செய்வதற்கான மூங்கிலரிசி ரத்தபித்த ரோகம் விபரீதசுரம் நேத்திரநோய் இவைகளை விலக்கும். 908

## திப்பிலி அரிசியின் குணம்

திப்பிலியின் றண்டுலஞ் சிலேத்மத்தைப் போக்கிவிடு
முப்பிசத்தை மேகத்தை யோட்டுங்காண்—தப்பாமல்
வாதசுரந் தணிக்கு மாகபரோகந் தொலைக்குந்
தாதுவை வளர்ப்பிக்குந் தான்.

இ-ள். திப்பிலியரிசி கபம் வயிற்றுப்பிசம் மேகம் வாதசுரம் க்ஷயரோகம் இவைகளைப்போக்கும் விந்துவைப் போஷிக்கும். 909

## கோதுமை அரிசியின் குணம்

கோதுமையி னற்குணந்தான் கோதிற் பலங்கொடுக்குந்
தாதுவிர்த்தி யாக்குந் தனிவாய்வைச்—சேதிக்கும்
பித்த மளிக்கும் பிரமேகத்தைக் கெடுக்கு
முத்தமமா மென்றே யுரை.

இ-ள். கோதுமை அரிசி நல்ல பலம் சுக்கிலம் பித்தம் இது களை விருத்தி செய்யும் தனிவாதகோபத்தையும் பிரமேகத்தையும் நீக்கும். 910

## கேழ்வரகின் குணம்

சுத்த வனிலந்தன்னைத் தோன்றுவிக்கு மல்லவெளிற்
பித்த மனிலத்தைப் பிறப்பிக்குஞ்—சித்ரமலர்த்
தாழ்குழலே நீடுபஞ்சந் தாங்கியெனச் சொல்லுகின்ற
கேழ்வரகின் செய்தியிது கேள்.

இ-ள். அழகிய மலரை யணிந்த தாழ்ந்த கூந்தலையுடைய பெண்ணே! பஞ்சந்தாங்கி யென்கிற கேழ்வரகு சுத்தவாதத்தை வருவிக்கும் அல்லது பித்தவாதத்தையாவது உண்டாக்குமென்க.

## கம்பு அரிசியின் குணம்

கம்பு குளிர்ச்சியெனக் காசினியிற் சொல்லுவார்காண்
பம்பு சொறிசிரங்கைப் பாலிக்கும்—வெம்பு
முடலின் கொதிப்பகற்று முட்பலமு முண்டாக்கு
மடலயிற்கண் மாதே யறி.

இ-ள். கொலைத்தொழிலை புரிகின்ற கூறியவேல்போலுங் கண்களையுடைய மாதே! கம்பு அரிசி நெருங்கிய நமைச்சலையும் சிரங்குகளையும் வீரியத்தையும் செய்யும் சரீரவெப்பமகற்றும் குளிர்ச்சி யென்பர். 912

## சாமை அரிசியின் குணம்

உடலிறு தாக சுரமொடு மேகம்போ
மடலுறு கால்வீக்க மகலுங்—கடலிலிறை
யாமை யனையபதத் தன்னமே மேனியிடுஞ்
சாமை யரிசிக்குத் தான்.

இ-ள். சாமை அரிசிக்கு தாகசுரம் பிரமேகம் மகத்வாதநோய் சோபாரோகம் இவை நீங்கும் தேகபுஷ்டி யுண்டாகுமென்க. 913

நிலைத்த பத்தியத்திற்கு நீட்டலா மெய்க்குப்
பலத்தைக் கொடாததனைப் பார்.

இ-ள். புழுங்கலரிசி குழந்தைகள் வருந்துகின்ற வாதரோகி யர் அரும்பத்தியமுள்ளவர் இவர்களுக்குதவும் ஆனாலுடலுக்குறுதி யில்லை. 905

## பழமை அரிசியின் குணம்

பழவரிசி மூத்தோர்க்கும் பாலர்கட்கு மாகு
மழன் மிகவுமாகு மருந்தி—னிழலைப்போ
லாகு முடற்குளிர்ச்சி யையறு நோயுற்றோர்க்
காகும் பன்னோய்போ மறி.

இ-ள். பழய அரிசி விருத்தர் பாலர் ரோகியர்களுக்குடமாகும், இவ்வன்னத்தை யுண்ணில் பசியும் குளிர்ச்சியுமாம் சிற்சில நோயும் கபமும் நீங்குமென்க. 906

## சவ்வரிசியின் குணம்

மேகமத்தி மேகஞ்சீழ் மேகரத்த மேகமும்போந்
தேகத்திற் றாதுவுஞ் சிலேத்மமுண்—டாகுமெழிற்
செவ்வரி படர்ந்தவிழித் தேமொழி மாதேயுலகிற்
சவ்வரிசியின் குணத்தைச் சாற்று.

இ-ள். செவ்வரிபடர்ந்த விழியையுடைய தேனனையமொழி யாளே சவ்வரிசியினால் பிரமேகம் அஸ்திசிராவரோகம் வெண்மேக மிவைபோம் சுக்கிலமும் கபமும் விளையுமென்க. 907

## மூங்கில் அரிசியின் குணம்

உதிரபித்தந் தீர்க்கு மோங்கு சுரத்திற்கு
மதிரவரு கண்ணோ யதற்கும்—புதிதாகக்
கஞ்சிசெய்ய லாகுங் கருதிற்சிற் றுண்டியுமாஞ்
செஞ்சிலம்பார் மூங்கி லரிசி.

இ-ள். பாயசம் பலகார முதலியவை செய்வதற்கான மூங்கி லரிசி ரத்தபித்த ரோகம் விபரீதசுரம் நேத்திரநோய் இவைகளை விலக்கும். 908

## திப்பிலி அரிசியின் குணம்

திப்பிலியின் றண்டுலஞ் சிலேத்மத்தைப் போக்கிவிடு
முப்பிசத்தை மேகத்தை யோட்டுங்காண்—தப்பாமல்
வாதசுரந் தணிக்கு மாகபரோகந் தொலைக்குந்
தாதுவை வளர்ப்பிக்குந் தான்.

இ-ள். திப்பிலியரிசி கபம் வயிற்றுப்பிசம் மேகம் வாதசுரம் க்ஷயரோகம் இவைகளைப்போக்கும் விந்துவைப் போஷிக்கும். 909

## கோதுமை அரிசியின் குணம்

கோதுமையி னற்குணந்தான் கோதிற் பலங்கொடுக்குந்
தாதுவிர்த்தி யாக்குந் தனிவாய்வைச்—சேதிக்கும்
பித்த மளிக்கும் பிரமேகத்தைக் கெடுக்கு
முத்தமமா மென்றே யுரை.

இ-ள். கோதுமை அரிசி நல்ல பலம் சுக்கிலம் பித்தம் இது களை விருத்தி செய்யும் தனிவாதகோபத்தையும் பிரமேகத்தையும் நீக்கும். 910

## கேழ்வரகின் குணம்

சுத்த வனிலந்தன்னைத் தோன்றுவிக்கு மல்லவெளிற்
பித்த மனிலத்தைப் பிறப்பிக்குஞ்—சித்ரமலத்
தாழ்குழலே நீடுபஞ்சந் தாங்கியெனச் சொல்லுகின்ற
கேழ்வரகின் செய்தியிது கேள்.

இ-ள். அழகிய மலரை யணிந்த தாழ்ந்த கூந்தலையுடைய பெண்ணே! பஞ்சந்தாங்கி யென்கிற கேழ்வரகு சுத்தவாதத்தை வருவிக்கும் அல்லது பித்தவாதத்தையாவது உண்டாக்குமென்க.

## கம்பு அரிசியின் குணம்

கம்பு குளிர்ச்சியெனக் காசினியிற் சொல்லுவார்காண்
பம்பு சொறிசிரங்கைப் பாலிக்கும்—வெம்பு
முடலின் கொதிப்பகற்று முட்பலமு முண்டாக்கு
மடலயிற்கண் மாதே யறி.

இ-ள். கொலைத்தொழிலை புரிகின்ற கூறியவேல்போலுங் கண் களையுடைய மாதே! கம்பு அரிசி நெருங்கிய நமைச்சலையும் சிரங்கு களையும் வீரியத்தையும் செய்யும் சரீரவெப்பமகற்றும் குளிர்ச்சி யென்பர். 912

## சாமை அரிசியின் குணம்

உடலிறு தாக சுரமொடு மேகம்போ
மடலுறு கால்வீக்க மகலுங்—கடலிலிறை
யாமை யனையபதத் தன்னமே மேனியிடுஞ்
சாமை யரிசிக்குத் தான்.

இ-ள். சாமை அரிசிக்கு தாகசுரம் பிரமேகம் மகத்வாதநோய் சோபாரோகம் இவை நீங்கும் தேகபுஷ்டி யுண்டாகுமென்க. 913

நிலைத்த பத்தியத்திற்கு நீட்டலா மெய்க்குப்
பலத்தைக் கொடாததனைப் பார்.

இ-ள். புழுங்கலரிசி குழந்தைகள் வருந்துகின்ற வாதரோகி யர் அரும்பத்தியமுள்ளவர் இவர்களுக்குதவும் ஆனாலுடலுக்குறுதி யில்லை. 905

## பழமை அரிசியின் குணம்

பழவரிசி மூத்தோர்க்கும் பாலர்கட்கு மாகு
மழன் மிகவுமாகு மருந்தி—னிழலைப்போ
லாகு முடற்குளிர்ச்சி யையமறு நோயுற்றோர்க்
காகும் பன்னேய்போ மறி.

இ-ள். பழய அரிசி விருத்தர் பாலர் ரோகியர்களுக்குடமாகும், இவ்வன்னத்தை யுண்ணில் பசியும் குளிர்ச்சியுமாம் சிற்சில நோயும் கபமும் நீங்குமென்க. 906

## சவ்வரிசியின் குணம்

மேகமத்தி மேகஞ்சீழ் மேகரத்த மேகமும்போந்
தேகத்திற் றாதுவுஞ் சிலேத்மமுண்—டாகுமெழிற்
செவ்வரி படர்ந்தவிழித் தேமொழி மாதேயுலகிற்
சவ்வரிசியின் குணத்தைச் சாற்று.

இ-ள். செவ்வரிபடர்ந்த விழியையுடைய தேனனையமொழி யாளே சவ்வரிசியினால் பிரமேகம் அஸ்திசிராவரோகம் வெண்மேக மிவைபோம் சுக்கிலமும் கபமும் விளையுமென்க. 907

## மூங்கில் அரிசியின் குணம்

உதிரபித்தந் தீர்க்கு மோங்கு சுரத்திற்கு
மதிரவரு கண்ணோ யதற்கும்—புதிதாகக்
கஞ்சிசெய்ய லாகுங் கருதிற்சிற் றுண்டியுமாஞ்
செஞ்சிலம்பார் மூங்கி லரிசி.

இ-ள். பாயசம் பலகார முதலியவை செய்வதற்கான மூங்கி லரிசி ரத்தபித்த ரோகம் விபரீதசுரம் நேத்திரநோய் இவைகளை விலக்கும். 908

## திப்பிலி அரிசியின் குணம்

திப்பிலியின் றண்டுலஞ் சிலேத்மத்தைப் போக்கிவிடு
முப்பிசத்தை மேகத்தை யோட்டுங்காண்—தப்பாமல்
வாதசுரந் தணிக்கு மாகபரோகந் தொலைக்குந்
தாதுவை வளர்ப்பிக்குந் தான்.

இ-ள். திப்பிலியரிசி கபம் வயிற்றுப்பிசம் மேகம் வாதசுரம் க்ஷயரோகம் இவைகளைப்போக்கும் விந்துவைப் போஷிக்கும். 909

## கோதுமை அரிசியின் குணம்

கோதுமையி னற்குணந்தான் கோதிற் பலங்கொடுக்குந்
தாதுவிர்த்தி யாக்குந் தனிவாய்வைச்—சேதிக்கும்
பித்த மளிக்கும் பிரமேகத்தைக் கெடுக்கு
முத்தமமா மென்றே யுரை.

இ-ள். கோதுமை அரிசி நல்ல பலம் சுக்கிலம் பித்தம் இதுகளை விருத்தி செய்யும் தனிவாதகோபத்தையும் பிரமேகத்தையும் நீக்கும். 910

## கேழ்வரகின் குணம்

சுத்த வனிலந்தன்னைத் தோன்றுவிக்கு மல்லவெளிற்
பித்த மனிலத்தைப் பிறப்பிக்குஞ்—சித்ரமலத்
தாழ்குழலே நீடுபஞ்சந் தாங்கியெனச் சொல்லுகின்ற
கேழ்வரகின் செய்தியிது கேள்.

இ-ள். அழகிய மலரை யணிந்த தாழ்ந்த கூந்தலையுடைய பெண்ணே! பஞ்சந்தாங்கி யென்கிற கேழ்வரகு சுத்தவாதத்தை வருவிக்கும் அல்லது பித்தவாதத்தையாவது உண்டாக்குமென்க.

## கம்பு அரிசியின் குணம்

கம்பு குளிர்ச்சியெனக் காசினியிற் சொல்லுவார்காண்
பம்பு சொறிசிரங்கைப் பாலிக்கும்—வெம்பு
முடலின் கொதிப்பகற்று முட்பலமு முண்டாக்கு
மடலயிற்கண் மாதே யறி.

இ-ள். கொலைத்தொழிலை புரிகின்ற கூறியவேல்போலுங் கண்களையுடைய மாதே! கம்பு அரிசி நெருங்கிய நமைச்சலையும் சிரங்குகளையும் விரியத்தையும் செய்யும் சரீரவெப்பமகற்றும் குளிர்ச்சி யென்பர். 912

## சாமை அரிசியின் குணம்

உடலிறு தாக சுரமொடு மேகம்போ
மடலுறு கால்வீக்க மகலுங்—கடலிலிறை
யாமை யனையபதத் தன்னமே மேனியிடுஞ்
சாமை யரிசிக்குத் தான்.

இ-ள். சாமை அரிசிக்கு தாகசுரம் பிரமேகம் மகத்வாதநோய் சோபாரோகம் இவை நீங்கும் தேகபுஷ்டி யுண்டாகுமென்க. 913

நிலைத்த பத்தியத்திற்கு நீட்டலா மெய்க்குப்
பலத்தைக் கொடாததனைப் பார்.

இ-ள். புழுங்கலரிசி குழந்தைகள் வருந்துகின்ற வாதரோகி யர் அரும்பத்தியமுள்ளவர் இவர்களுக்குதவும் ஆனாலுடலுக்குறுதி யில்லை. 905

## பழமை அரிசியின் குணம்

பழவரிசி மூத்தோர்க்கும் பாலர்கட்கு மாகு
மழன் மிகவுமாகு மருந்தி—னிழலைப்போ
லாகு முடற்குளிர்ச்சி யையமறு நோயுற்றோர்க்
காகும் பன்னேய்போ மறி.

இ-ள். பழய அரிசி விருத்தர் பாலர் ரோகியர்களுக்குமாகும், இவ்வன்னத்தை யுண்ணில் பசியும் குளிர்ச்சியுமாம் சிற்சில நோயும் கபமும் நீங்குமென்க. 906

## சவ்வரிசியின் குணம்

மேகமத்தி மேகஞ்சீழ் மேகரத்த மேகமும்போந்
தேகத்திற் றூதுவுஞ் சிலேத்மமுண்—டாகுமெழிற்
செவ்வரி படர்ந்தவிழித் தேமொழி மாதேயுலகிற்
சவ்வரிசியின் குணத்தைச் சாற்று.

இ-ள். செவ்வரிபடர்ந்த விழியையுடைய தேனனையமொழி யாளே சவ்வரிசியினால் பிரமேகம் அஸ்திசிராவரோகம் வெண்மேக மிவைபோம் சுக்கிலமும் கபமும் விளையுமென்க. 907

## மூங்கில் அரிசியின் குணம்

உதிரபித்தந் தீர்க்கு மோங்கு சுரத்திற்கு
மதிரவரு கண்ணோ யதற்கும்—புதிதாகக்
கஞ்சிசெய்ய லாகுங் கருதிற்சிற் றுண்டியுமாஞ்
செஞ்சிலம்பார் மூங்கி லரிசி.

இ-ள். பாயசம் பலகார முதலியவை செய்வதற்கான மூங்கி லரிசி ரத்தபித்த ரோகம் விபரீதசுரம் நேத்திரநோய் இவைகளை விலக்கும். 908

## திப்பிலி அரிசியின் குணம்

திப்பிலியின் றண்டுலஞ் சிலேத்மத்தைப் போக்கிவிடு
முப்பிசத்தை மேகத்தை யோட்டுங்காண்—தப்பாமல்
வாதசுரந் தணிக்கு மாகபரோகந் தொலைக்குந்
தாதுவை வளர்ப்பிக்குந் தான்.

இ-ள். திப்பிலியரிசி கபம் வயிற்றுப்பிசம் மேகம் வாதசுரம் க்ஷயரோகம் இவைகளைப்போக்கும் விந்துவைப் போஷிக்கும். 909

### கோதுமை அரிசியின் குணம்

கோதுமையி னற்குணந்தான் கோதிற் பலங்கொடுக்குந்
தாதுவிர்த்தி யாக்குந் தனிவாய்வைச்—சேதிக்கும்
பித்த மளிக்கும் பிரமேகத்தைக் கெடுக்கு
முத்தமமா மென்றே யுரை.

இ-ள். கோதுமை அரிசி நல்ல பலம் சுக்கிலம் பித்தம் இது களை விருத்தி செய்யும் தனிவாதகோபத்தையும் பிரமேகத்தையும் நீக்கும். 910

### கேழ்வரகின் குணம்

சுத்த வனிலந்தன்னைத் தோன்றுவிக்கு மல்லவெளிற்
பித்த மனிலத்தைப் பிறப்பிக்குஞ்—சித்ரமலத்
தாழ்குழலே நீடுபஞ்சந் தாங்கியெனச் சொல்லுகின்ற
கேழ்வரகின் செய்தியிது கேள்.

இ-ள். அழகிய மலரை யணிந்த தாழ்ந்த கூந்தலையுடைய பெண்ணே! பஞ்சந்தாங்கி யென்கிற கேழ்வரகு சுத்தவாதத்தை வருவிக்கும் அல்லது பித்தவாதத்தையாவது உண்டாக்குமென்க.

### கம்பு அரிசியின் குணம்

கம்பு குளிர்ச்சியெனக் காசினியிற் சொல்லுவார்காண்
பம்பு சொறிசிரங்கைப் பாலிக்கும்—வெம்பு
முடலின் கொதிப்பகற்று முட்பலமு முண்டாக்கு
மடலயிற்கண் மாதே யறி.

இ-ள். கொலைத்தொழிலை புரிகின்ற கூறியவேல்போலுங் கண் களையுடைய மாதே! கம்பு அரிசி நெருங்கிய நமைச்சலையும் சிரங்கு களையும் விரியத்தையும் செய்யும் சரீரவெப்பமகற்றும் குளிர்ச்சி யென்பர். 912

### சாமை அரிசியின் குணம்

உடலிறு தாக சுரமொடு மேகம்போ
மடலுறு கால்வீக்க மகலுங்—கடலிலிறை
யாமை யனையபதத் தன்னமே மேனியிடுஞ்
சாமை யரிசிக்குத் தான்.

இ-ள். சாமை அரிசிக்கு தாகசுரம் பிரமேகம் மகத்வாதநோய் சோபாரோகம் இவை நீங்கும் தேகபுஷ்டி யுண்டாகுமென்க. 913

### தினை அரிசியின் குணம்

சந்நி சுரமையந் தனிவாத மும்போகுந்
துன்னுபித் தத்தைமிகத் தூண்டிவிடுந்—தின்னப்
பிணையும் பசியாம் பெருவீக்க நீங்குந்
தினையரிசி யின்குணத்தை நேர்.

இ-ள். தினை அரிசி சந்நிபாதசுரம் கபரோகம் சுத்தவாதம் சோபாரோகம் இவைகளைப் போக்கும் பித்தத்தையும் பசியையு முண்டாக்கும். 914

### செஞ்சோள அரிசியின் குணம்

செஞ்சோளந் தின்றாற் சிறுசிரங்கு புண்ணுகளும்
விஞ்சு மெழிலான மேனிகெடு—நெஞ்செரிந்து
மந்தமிகுந் தீபனம்போ மாறாக் கரப்பானுங்
கந்தமலர்ப் பூங்குழலே காண்.

இ-ள். செஞ்சோள அரிசியால் அற்பகிரந்திகள் விரணங்கள் மந்தரோகம் கரப்பான் இவைகளதிகரிக்கும் அழகும் பசியும் விலகும். 915

### கருஞ்சோள அரிசியின் குணம்

சொறியைச் சிரங்கைத் தொலையாத புண்ணை
மறுவிலா மெய்யில் வளர்க்கும்—குறியா
வழகை கெடுக்கு மசதியை யுண்டாக்கும்
பழகு கருஞ்சோளமது பார்.

இ-ள். கருஞ்சோள அரிசி நமைச்சல் கிரந்தி விரணம் அயர்வு இவைகளை உண்டாக்கும் மாறுநிறமான அழகைத் தருமென்க. 916

---

## காய்த் தானியவகை

### துவரையின் குணம்

பஞ்சமுட்டிக் காகுமரும் பத்தியவி யஞ்சனமாம்
விஞ்சுசுரஞ் சந்நிகட்கு மெத்தநன்றாம்—பஞ்சின்
விழுந்துவரையாது மெலிந்தாரைத் தேற்றுங்
கொழுந்துவரை யாயினீ கொள்.

இ-ள். நறுந்துவரை லங்கனமுடிவிற் சேர்க்கிற் பஞ்சமுட்டித் தாரக பத்தியத்திற்கும் உப்பில்லாப் பத்தியத்திற்கும் சுரத்திற்கும் சந்நிக்கும் பஞ்சணையே கிடையாக எழுந்திருக்கச் சக்தியில்லாமல் மெலிந்தவர்க்குமுதவும் பஞ்சமுட்டி விவரத்தை கஞ்சிவகையிற்காண்க. 91[illegible]

## உழுந்தின் குணம் (இதனை உளுந்து என்பர்)

செய்ய வுழுந்திற்குச் சிலேத்மவனிலம் பிறக்கும்
வெய்ய பித்தம்போமந்தம் வீறுங்காண்—மெய்யதனி
லென்புருக்கி தீரு மிடுக் கதிபலமா
முன்பு விருத்தியுண்டா மூன்.

இ-ள். நல்ல உழுந்திற்கு கபவாதமிஸ்ரம் அலஜம் இடுப்புறுதி மிகுவீரிய மிவையுண்டாம் பயித்தியமும் எலும்புருக்கியும் போகும்.

## கடலையின் குணம்

கடலை வயிறூதற் கன்று றகஞ்செய்யுங்
குடலைவலிப் பித்து மலங்கொட்டுங்—திடமருந்தைச்
சேதமுறப் பண்ணுந் தியக்கமொடு வாயுவையும்
போத வழைக்கும் புகல்.

இ-ள். கடலை வயிறுப்பிசம் பித்ததாகம் குடல் நோயுடன் கூடிய கிரகணி மயக்கம் மூலவாயு இவையுண்டாம் நன்மருந்தை முறிக்கும். 919

## மொச்சைக்கொட்டையின் குணம்

அனிலபித்த வைய மனைத்தையு முண்டாக்குந்
தொனியெடுக்க வாயுவினைத் தூண்டுந்—தனிவேள்
குனிக்குஞ் சிலைப்புருவ கோதையே நாளு
மினிக்கு மொச்சைக் கொட்டையே.

இ-ள். விற்போன்ற புருவக்கோதையே! இனிப்புள்ள மொச்சக்கொட்டையானது திரிதோஷங்களையும் இறைச்சலைத் தருகின்ற ஆவிருதவாயுவை உண்டாக்குமென்க. 920

## பெரும்பயற்றின் குணம் (இதுவே பெருங்காராமணி)

பெரும்பயற்றை மேன்மேலும் பேணியுண்ணு வார்க்குப்
பெருஞ்சட ராக்கினிபோம் பின்னும்—வருமந்தம்
பேதி யதிகரிக்கும் பேராக் கபங்கதிக்கும்
வாதகுடி லம்பெருகும் வாழ்த்து.

இ-ள். பெரும்பயற்றை அதிகமாகத் தின்பவர்க்கு தீபாக்கினி கெடுவதுமன்றி அசீரணம் அதிசாரம் கபரோகம் வாதப்பிடிப்பு இவையுண்டாம். 921

## சிறுபயற்றின் குணம்

ஐயைப் பித்தத்தை யரோசகத்தைப் போக்கிவிடும்
வெய்ய வாதத்தை விளைவிக்கு—மைய

மறுவொழிந்த தூய வதிவதன மாதே
சிறுபயறு செய்யுஞ் செயல்.

இ-ள். களங்கமற்ற சந்திரனையொத்த முகத்தாளே! சிறுபயறு கபகோபத்தையும் பயித்தியத்தையும் அரோசகத்தையும் போக்கும் பித்தவாதத்தை உண்டாக்கு மென்க. 922

## பச்சைப்பயற்றின் குணம்

பச்சைப் பயறதுதான் பாரிற் பயித்தியத்தை
யச்சமற நாளு மகற்றுங்காண்—கச்சுலவு
கொங்கைமட மாதே குளிர்ச்சியென்பா ரெப்போதுந்
தங்கு வாதத்தைத் தரும்.

இ-ள். கச்சணிந்த கொங்கையையும் மடமைத் தனத்தையு முடைய மாதே! பச்சைப்பயறு பித்தத்தை நீக்கும் வாயுவைத் தரும் சீதளம் என்பர். 923

## தட்டைப்பயறு வெண்பயறு கரும்பயறுகளின் குணம்

தட்டைப் பயறுமந்தஞ் சன்னிதரும் வெண்பயறு
முட்டியே மெய்யின் முதிர்வாதக்—கட்டறுக்குங்
காணுய் கரும்பயறு கம்முநீர் வாதமுடன்
கோணு வாதத்தையும் போக்கும்.

இ-ள். தட்டைப்பயறு அக்கினி மந்தத்தையும் சந்நிபாதத்தையும் உண்டாக்கும் வெண்பயறு ஓடுவாதத்தைப் போக்கும் கரும்பயறு சிலேத்மவாதத்தையும் பங்குவாதரோகத்தையும் விலக்கும்.

## கொள்ளின் குணம்

குடல்வாதங் குன்மமுண்டாங் கொண்மருந்தே நாச
மடலேறு பித்தமிக வாகும்—கடுகடுத்த
வாதநீ ரேற்றமொடு மன்னுகுளிர் காய்ச்சலும்போஞ்
சாதிநறுங் கொள்ளுக்குத் தான்.

இ-ள். நறிய கொள்ளுக்கு பீசவாய்வும் பித்தகுன்மம் பயித்தியமுமுண்டாம் வாதவலி நீரேற்றம் ஈளிர்ச்சுரம் மருந்துரமிவை போம். 925

## எள்ளின் குணம்

எள்ளுமருந் தைக்கொடுக்கு மேறனலாந் திண்மைதரு
முள்ளிலையைச் சேர்க்கு முதிரத்தைத்—தள்ளுமிரு
கண்ணுக் கொளிகொடுக்குங் காகமுண்டாம் பித்தமுமாம்
பண்ணுக் கிடர்புரியும் பார்.

இ-ள். அபத்தியமாகிய எள்ளு உஷ்ணம் பலம் கபம் காசரோகம் பித்தநோய் இவைகளை வருவிக்கும் குரல்தொனியைக் கெடுக்கும் ஸ்திரீகளின் வயிற்றில் கட்டுப்பட்ட உதிரத்தை வெளிப்படுத்தும் விழிகட்கொளியாம். 926

---

# இறைச்சி வகை

## வெள்ளாட்டு இறைச்சியின் குணம்

வெள்ளாட்டு நோயெல்லா மோடுமுடல் பருக்குந்
தள்ளாடு வாதபித்தஞ் சாந்தமா—வெள்ளாட்டி
னற்கறியை யுண்பார்க்கு நாடுகய ரோகமும்போ
மற்குரிய வன்பலனும் வாழ்த்து.

இ-ள். வெள்ளாட்டிறைச்சியை உண்பவர்க்கு உட்சுரங்களும் வாதபயித்தியம் க்ஷயமும்போம் சரீரபுஷ்டியும் வீரியமும் விளையும்.

## கொடியாட்டு இறைச்சியின் குணம்

கொடியாடு நற்கறியாங் கொள்ளும் வகைகேளாய்
தடியாமற் பூப்போற் சமைத்து—விடிகாலே
கொண்டா லிடுப்புவலி குற்றிருமல் வெட்டையும்போங்
கண்டாலும் வாதமறுங் காண்.

இ-ள். கொடியாட்டிறைச்சியைப் பூப்போல் பாகஞ்செய்து காலையிலுண்ணில் சகஜுவிருதவாயு காயம் உஷ்ணவாயு இவைபோம்.

## வரையாட்டு இறைச்சியின் குணம்

பத்தியத்திற் கொவ்வும் பாரநோயைத் துரத்து
மெத்த மெலிந்தார் மெலிவகற்றுஞ்—சுத்தமண
மூட்டுவரை யொத்தமுலை யொண்டொடியே பன்மூலிக்
காட்டுவரை யாட்டுக் கனி.

இ-ள். மலைகளையொத்த மனம்பொருந்திய முலைகளையுடைய பெண்ணே! வனமூலிகைகளைத் தின்கிற வரையாட்டிறைச்சி கனத்தரோகங்களையு மிகுந்த துர்ப்பலத்தையும் போக்கும் பத்தியக் கறியாம். 929

## செம்மறியாட்டு இறைச்சியின் குணம்

அம்புவியிற் செங்கரப்பா னண்டுவது மாத்திரமோ
செம்மறி யாட்டுக்கறியைத் தின்றக்காற்—கொம்பி

மறுவொழிந்த தூய வதிவதன மாதே
சிறுபயறு செய்யுஞ் செயல்.

இ-ள். களங்கமற்ற சந்திரனையொத்த முகத்தாளே! சிறுபயறு கபகோபத்தையும் பயித்தியத்தையும் அரோசகத்தையும் போக்கும் பித்தவாதத்தை உண்டாக்குமென்க. 922

## பச்சைப்பயற்றின் குணம்

பச்சைப் பயறதுதான் பாரிற் பயித்தியத்தை
யச்சமற நாளு மகற்றுங்காண்—கச்சுலவு
கொங்கைமட மாதே குளிர்ச்சியென்பா ரெப்போதுந்
தங்கு வாதத்தைத் தரும்.

இ-ள். கச்சணிந்த கொங்கையையும் மடமைத் தனத்தையுமுடைய மாதே! பச்சைப்பயறு பித்தத்தை நீக்கும் வாயுவைத் தரும் சீதளம் என்பர். 923

## தட்டைப்பயறு வெண்பயறு கரும்பயறுகளின் குணம்

தட்டைப் பயறுமந்தஞ் சன்னிதரும் வெண்பயறு
முட்டியே மெய்யின் முதிர்வாதக்—கட்டருக்குங்
காணுய் கரும்பயறு கம்முநீர் வாதமுடன்
கோணு வாதத்தையும் போக்கும்.

இ-ள். தட்டைப்பயறு அக்கினி மந்தத்தையும் சந்நிபாதத்தையும் உண்டாக்கும் வெண்பயறு ஓடுவாதத்தைப் போக்கும் தரும் பயறு சிலேத்மவாதத்தையும் பங்குவாதரோகத்தையும் விலக்கும்.

## கொள்ளின் குணம்

குடல்வாதங் குன்மமுண்டாங் கொண்மருந்தே நாச
மடலேறு பித்தமிக வாகும்—கடுகடுத்த
வாதநீ ரேற்றமொடு மன்னுகுளிர் காய்ச்சலும்போஞ்
சாதிநறுங் கொள்ளுக்குத் தான்.

இ-ள். நறிய கொள்ளுக்கு பீசவாய்வும் பித்தகுன்மம் பயித்தியமுமுண்டாம் வாதவலி நீரேற்றம் களிர்ச்சுரம் மருந்துரமிவை போம். 925

## எள்ளின் குணம்

எள்ளுமருந் தைக்கொடுக்கு மேறனலாந் திண்மைதரு
முள்ளிலையைச் சேர்க்கு முதிரத்தைத்—தள்ளுமிரு
கண்ணுக் கொளிகொடுக்குங் காகமுண்டாம் பித்தமுமாம்
பண்ணுக் கிடர்புரியும் பார்.

இ-ள். அபத்தியமாகிய எள்ளு உஷ்ணம் பலம் கபம் காச ரோகம் பித்தநோய் இவைகளை வருவிக்கும் குரல்தொனியைக் கெடுக்கும் ஸ்திரீகளின் வயிற்றில் கட்டுப்பட்ட உதிரத்தை வெளிப் படுத்தும் விழிகட்கொளியாம். 926



# இறைச்சி வகை

## வெள்ளாட்டு இறைச்சியின் குணம்

வெள்ளாட்டு நோயெல்லா மோடுமுடல் பருக்குந்
தள்ளாடு வாதபித்தஞ் சாந்தமா—வேள்ளாட்டி
னற்கறியை யுண்பார்க்கு நாடுகய ரோகமும்போ
மற்குரிய வன்பலனும் வாழ்த்து.

இ-ள். வெள்ளாட்டிறைச்சியை உண்பவர்க்கு உட்சுரங்களும் வாதபயித்தியம் க்ஷயமும்போம் சரீரபுஷ்டியும் வீரியமும் விளையும்.

## கொடியாட்டு இறைச்சியின் குணம்

கொடியாடு நற்கறியாங் கொள்ளும் வகைகேளாய்
தடியாமற் பூப்போற் சமைத்து—விடிகாலே
கொண்டா லிடுப்புவலி குற்றிருமல் வெட்டையும்போங்
கண்டாலும் வாதமறுங் காண்.

இ-ள். கொடியாட்டிறைச்சியைப் பூப்போல் பாகஞ்செய்து காலையிலுண்ணில் சகனுவிருதவாயு காயம் உஷ்ணவாயு இவைபோம்.

## வரையாட்டு இறைச்சியின் குணம்

பத்தியத்திற் கொவ்வும் பாரநோயைத் தூரத்து
மெத்த மெலிந்தார் மெலிவகற்றுஞ்—சுத்தமண
மூட்டுவரை யொத்தமுலை யொண்டொடியே பன்மூலிக்
காட்டுவரை யாட்டுக் கனி.

இ-ள். மலைகளையொத்த மனம்பொருந்திய முலைகளையுடைய பெண்ணே! வனமூலிகைகளைத் தின்கிற வரையாட்டிறைச்சி கன த்தரோகங்களையு மிகுந்த தூர்ப்பலத்தையும் போக்கும் பத்தியக் கறியாம். 929

## செம்மறியாட்டு இறைச்சியின் குணம்

அம்புவியிற் செங்கரப்பா னண்டுவது மாத்திரமோ
செம்மறி யாட்டுக்கறியைத் தின்றக்காற்—கொம்பி

விருந்து மதிப்பாற்போ லெப்பிணியு முண்டா
மருந்துயர நீங்கா தறி.

இ-ள். செம்மறியாட்டிறைச்சியை உண்ணில் செங்கரப்பானும் முன்பில்லாத பலவித ரோகங்களும் சகல துன்பமுமுண்டாம். 930

## பள்ளையாட்டு இறைச்சியின் குணம்

மந்தமிகுந் தீபனம்போ மாறுவ ரோசகமாந்
தொந்தநோ யெல்லாந் தொடருங்கா—ணிந்துநுதன்
மானே கபமுயரும் வன்பள்ளை யாட்டுக்குத்
தானே மிகும்வாயு தான்.

இ-ள். மூன்றாம் பிறையையொத்த நெற்றியை யுடையவளே: பள்ளையாட்டிறைச்சிக்கு அலஜம் மந்தாக்கினி நீங்காத அருசி திரிதோஷமிஸ்ரம் கபகோபம் வாதாதிக்க மிவைகளுண்டாம். 931

## குறும்பாட்டு இறைச்சியின் குணம்

குறும்பாட் டிறைச்சிதனைக் கொண்டார்கட் கெல்லா
மெறும்பார் சொறிசிரங்கு மெய்து—மிறங்குங்
குடல்வாதஞ் சூலை கொடுமனிலக் கூட்ட
முடனே யடருமென வோர்.

இ-ள். குறும்பாட்டிறைச்சியை உண்பவர்க்கு எறும்பு மொய்க்கின்ற நமைக்கிரந்தியும் பீசவாயுவும் வாதவருக்கமு முண்டாம். 932

## மான் இறைச்சியின் குணம்

மான்கறி யுண்டார்தமக்கு மாதொத்த நோய்க்கபநோ
யூன்பகந் தரங்கழலி நூதையொடு—தான்பரவு
வாதநமையும்விட்டு வாங்குங் கண்ணிற்புகையா
மோதுபித்தம் வீறுமென வோர்.

இ-ள். மானிறைச்சிக்கு தொந்தநோய் ஈளை மாமிசபகந்தரம் கழல்வாயு வாதப்புடை இவைபோம் கண்புகைச்சலும் பித்தமாம்.

## கலைமான் இறைச்சியின் குணம்

தேகப் பிடிப்பகலு வெட்டை யனலுமறும்
போகமுறுப் பலனும் பூவையரே—தேகத்திற்
பித்த வாதங்களறும் பேரா வழலையும்போந்
தத்துகலை மான்கறிக்கு தான்.

இ-ள். பெண்ணே! கலைமானிறைச்சிக்கு மேகவாதப்பிடிப்பு வெள்ளை சுரம் பயித்தியவாதம் உள்ளழலை இவை போம். விந்துவும் சரீர பலமும் உண்டாம். 934

## கடமான் இறைச்சியின் குணம்

உடல் வலுவாகி யேங்கிப் பருக்குங்
குடலிலதி வாதங் குதிக்கும்—வடமார்
கடமா மெனுங்கொங்கைக் காரிகையே கானக்
கடமா னிறைச்சியுணுங் கால்.

இ-ள். கச்சணிந்த குடம்போன்ற தனங்களையுடைய காரிகையே! காட்டிலுள்ள கடமானின் இறைச்சியை யுண்ணில் சரீரம் வன்மையோடு செழித்துத் தூலிக்கும். குடல் விருத்தி ரோகம் உண்டாகும். 935

## ஊர்ப் பன்றியிறைச்சியின் குணம்—விருத்தம்

வாதபித் தங்கள்சேரு மருவிய புண்ணுமுண்டாந்
தாதுவும் கபமும்பொங்குந் தாங்கொணு வசதியாகும்
வாதுற வனந்தநோய்கள் வளர்ந்தெழுந் துன்பமெய்து
மோதியுண் மருந்துநாச மூர்ப்பன்றிக்கறி யுண்பார்க்கே.

இ-ள். ஊர்ப்பன்றி யிறைச்சியை யுண்பவர்க்கு வாத பித்த தொந்தம் விரணம் சுக்கிலம் சிலேஷ்ம கோபம் விலவிலப்பு முதலிய பலவித ரோகங்கள் மனோதுக்கம் ஔஷதக் கெடுதி ஆகியவைகள் உண்டாகும். 936

## காட்டுப் பன்றியிறைச்சியின் குணம்

ஏறிய வாதம்போகு மெழுப்பிடுங் காசநோய்கள்
வீறிடும் விழிநோய்சீதம் விடக்கடி கிரந்தியுண்டாங்
கூறிடு மூலங்கிலங் குதங்குடல் வாதநாசம்
மாறிடு காட்டுப்பன்றி மாங்கிசந்தனை யுண்பார்க்கே.

இ-ள். காட்டுப்பன்றி யிறைச்சியைத் தின்பவர்க்கு அதிகரித்த வாயு மூலம் சருமகிலம் குதப்பிரம்ஸ ரோகம் குடல் விருத்தி ஆகிய இவைகள் நீங்கும். இருமல் நேத்திர நோய் கபம் விஷக்கடி விரண மிவை யுண்டாகும். 937

## முள்ளம்பன்றியிறைச்சியின் குணம்

காட்டுப் பன்றிக்குணமுங் காயமெல்லா முள்ளை
நீட்டுப் பன்றிக்குணமு மேரொன்றாய்க்—காட்டகினு
மிப்பன்றிக் கங்க மிறுகுவதா லிப்பன்றிக்
கெப்பன்றியு மிகரோ வெண்.

இ-ள். காட்டுப்பன்றி முட்பன்றி இவ்விறைச்சிகள் குணத்தில் நன்றாயிருந்தாலும் முட்பன்றியால் வன்மை மிகுதலால் எந்தப் பன்றியும் நிகரல்ல. 938

## முசல் இறைச்சியின் குணம்—விருத்தம்

கடுகிய நடையுண்டர்குங் கனத்ததோர் பித்தமேகு
முடுகிய விளைகாச முதிர்ந்ததோர் சுவாசப்போகுஞ்
சடுதியில் வெருண்டேயோடுந் தனிமுசற் கறியினாலே
கொடுமயிற் கண்ணாய்வாதங் குறைந்திடு மலமிறங்கும்.

இ-ள். கொடுமை பொருந்திய அயில்போலுங் கூறிய கண்ணை யுடைய பெண்ணே! முசல் கறியால் விரைவாகிய நடைகள் உண் டாம். பயித்தியம் க்ஷயம் இருமல் மகாசுவாசம் வாயுவு மலச்சிக்கல் ஆகியவைகள் நீங்கும். 939

## உடும்பு இறைச்சியின் குணம்

தொன்மைத் துவர்ப்பினிப்பாற் றூர்ப்பலம் தடிப்புநன்மை
வன்மைக் கிராணிதலை வலியிவைக—ளின்மையுறு
மேற்றழல்புண் குட்டுகப மேகம்வெட்டை மூலமண்டங்
காற்றழல் விட்டிற்றடிக்குச் சாண்.

இ-ள். இயல்பாகத் துவர்ப்பும் இனிப்பும் உள்ள உடும்பு இறைச்சியினால் தூர்ப்பலம் வீக்கம் சொறி கிரகண தோஷம் சிரசு காதுகளில் வருத்துகின்ற பிணிகள் கனச்சூடு விரணம் குஷ்டம் க்ஷயம் பிரமேகம் வெள்ளை மூலம் குடல் வாதம் வாத பித்தம் பேதி இவைகள் விலகும். தடி - உடும்பு. 940

## புலி, கரடி, சிறுபுலி இவ்விறைச்சிகளின் குணம் விருத்தம்

வருபுலி மாங்கிஷத்தால் மாறுமுன் மாதரோகங்
கரடிமாங் கிஷத்தால்வாதங் கபங்கெடும் வலிப்புநீங்குந்
திரிசிறு புலியிறைச்சி தீர்த்திடுஞ் சிலரோகத்தை
வரிவிழி மா தயிந்த வகையறிந் தோதுவாயே.

இ-ள். செவ்வரிபரந்த கண்களையுடைய பெண்ணே! பெரும் புலியிறைச்சியினால் உன்மாத ரோகம் போம். கரடியிறைச்சியினால் வாயுவும் க்ஷயமும் வலிப்பாகிய மூர்ச்சாரோகமும் நீங்கும். சிறுபுலி யிறைச்சி சிற்சில ரோகங்களை விலக்கும் என்க. 941

## மாடு, முதலை இவைகளின் இறைச்சிக் குணம்—வெண்பா

கோமாங் கிஷத்தைக் குறித்துண்ட யேருடம்பி
லாமா வியாதிக் களவுண்டோ—வாம

மதலைக் குறுகக்கு வானனிலஞ் சீத
முதலைத் தசைக்கிருக்கு மோ.

இ-ள். மாட்டிறைச்சியை உணவாக உண்டால் சகல நோயும் உண்டாம். முதலையிறைச்சியால் சிசுக்கள் கக்கிருமல் வாயு கபம் இவைகள் விலகும். 942

## பூனை இறைச்சியின் குணம்

பூனைக் கறியைப் புசித்தா லெழிலணங்கே
மேனிக் கழகுண்டா மேல்விரணங்—தானகலுஞ்
சூடு மதிகரிக்குஞ் சோறியது மேன்மேலு
நீடுமென நாளு நினை.

இ-ள். அழகிய தெய்வப் பெண்ணைப் போன்றவளே! பூனைக் கறியை யுண்ணில் சரீர அழகும் வெப்பமும் இரத்த விருத்தியும் உண்டாம். சருமதாதுவைப்பற்றிய கிரந்தி விலகும். 943

## புனுகுப்பூனை இறைச்சியின் குணம்

இடுப்பி லூரத்தி லெழுநோ யகற்றுங்
கடுப்புறு வாதத்தைக் கடுக்குந்—தொடுப்பி
லமிழ் தாதுவுநல் லரும்பசியு நல்குங்
கமழ் புனுகுப்பூனைக் கறி.

இ-ள். மணமுள்ள புனுகுப்பூனை இறைச்சி சகனவாதம் இருத்வாதம் மூலக்கடுப்பு இவைகளை நீக்கும். தாதுவையும் பசியையும் விளைக்கும். 944

## கீரி இறைச்சியின் குணம்

கீரி யிறைச்சிக்குக் கெம்பீர முண்டாகு
நீரிழிவு மேகுமென்பார் நிச்சயமே—வீரியமாஞ்
சில்விடம் விட்டேகுஞ் சிரங்கு சொரியகலும்
பல்லரணை போகும் பறந்து.

இ-ள். கீரியிறைச்சிக்குத் தைரியமும், சுக்கில விருத்தியும் உண்டாம். வெகுமூத்திரம் அற்ப விஷம் கிரந்தி நமை பல்லரணை இவைகள் போம். 945

## மரநாய் இறைச்சியின் குணம்

மரநா யிறைச்சிக்கு வன்கிரந்தி மேக
முரமாவே யோடி யொளிக்கும்—விரைவாதஞ்
சூலைகன வாதந் தொலையுஞ் சுரம்போகு
ஞாலமிசை யிக்குணத்தை நாட்டு.

இ-ள். மரநாயிறைச்சிக்கு சிரங்கு பிரமேகம் பீசவாயு சூலை நோய் மகாவாத ரோகம் சுரம் ஆகியவைகள் ஒழியும் என்க. 946

### எலி இறைச்சியின் குணம்

எலியிறைச்சி குன்மம் பீலிக முரநோய்
நலிவித் திரப்புண் ணமைச்சன்—மெலிவோடு
மீதுமட் டிடாப்புளக மேவச்செய் யும்புரணத்
தாதுவுக்கும் புஷ்டிதருந் தான்.

இ-ள். எலியிறைச்சி குன்மம் பீலிகம் மார்புவலி பிளவை தினவு இவைகளை நீக்கும். பூரிப்பு வீரியவிருத்தி இதுகளைத் தரும். 947

### வெள்ளெலி இறைச்சியின் குணம்

சீதமையங் குன்மஞ் செரிமூலம் வித்திரிதி
பேதி தொந்தரோகம் பீலிகம்போங்—தாதுவுமாஞ்
சேரு முதிரமது தேகமெல்லாம் பரவுஞ்
சாருமென்ற வெள்ளெலிக்குத் தான்.

இ-ள். வெள்ளெலி யிறைச்சிக்குக் குளிர்ச்சி கபநோய் குன்மம் மூலநோய் வித்திரிதிக்கட்டி அதிசாரம் கிரகணி முதலிய தொந்த நோய் பிலீக ரோகம் இவைகள் போம். சுக்கில தாதும் இரத்த தாதும் விளையும். 948

### பெருச்சாளி இறைச்சியின் குணம்

வாதபித்தந் தாட்பிடிப்பு வன்பீனசங் குட்ட
மோதுதிர நோயா டுமைகீடம்—ீபதியிவை
பேர்ந்தகல வோடும் பெருச்சாளி யின்கறியாற்
றீர்ந்தவெழி லோவியமே செப்பு.

இ-ள். அழகிய சித்திரப்பதுமை போன்ற பெண்ணே! பெருச்சாளி யிறைச்சியால் வாத பித்த தொந்தம் சமவிவர்தரசிய வாதம் பீநசம் பெருவியாதி இரத்தத் தாதுவைப்பற்றிய நோய் கிருமி அதிசாரம் ஆகியவைகள் விலகும். 949

---

## பறவைக் கறிவகை

### கோழிக்கறியின் குணம்

கோழிக்கறி நெருப்பாங் கொள்ளின் மருந்துறம்வங்
கூழைக் கடுப்புமந்தங் கூறரச—மாழ்கிப்போம்
நீளூற்ற போக நிணக்கிரந்தி பித்தமுண்டாந்
தூளித்த வெய்யிளேக்குஞ் சொல்.

இ-ள். சூடுள்ள கோழிக்கறியை யுண்ணில் ஔஷத வேகம் மகாவாதம் சுவாசம் தேகக்கடுப்பு மந்தாக்கினி மூலம் இவைகள் போம். சுக்கிலம் கொழுப்புள்ள விரணம் பித்தம் இவையுண்டு. உடம்பு இளைக்கும். 950

## கருங்கோழிக்கறியின் குணம்

குட்டங் கடிகிருமி கோரவா தக் கூட்ட
மட்டிடாச் சூலையறு மாதரசே—துட்ட
கிரந்தியொடு புண்வலிபோங் கேளுட லூக்கு
மருந்து கருங்கோழியூன் வை.

இ-ள். பெண்கள் நாயகமே! மருந்தாகிய கருங்கோழிக்குக் குஷ்டம் காணுக்கடி புழு மகாவாதங்கள் சூலை சிறுசிரங்கு விரணம் வலிப்பு இவைகள் போம். உடல் வலுக்கும். 951

## கானுங்கோழிக்கறியின் குணம்

உத்தமனே நோயனைத்து மோடு மிருமலறும்
பத்தியமாங் கரப்பான் பாருமே—முத்தவொளி
தானுங் கனிமொழியே சார்ந்த மறுவகலுங்
கானுங் கோழிக்கறியைக் காண்.

இ-ள். மதுரம் பொருந்திய மொழியை யுடையவளே! கறிய கானுங்கோழிக் கறியால் வாத கப நோயினங்கள் காசம் கரப்பான் வியங்கலாஞ்சனம் இவை போம். பத்தியத்திற் குதவும். 952

## வான்கோழிக்கறியின் குணம்

போகமிகு மெய்யிற் புளகிதம்வான் கோழிதனக்
காக மதிலைய மதிகமுங்—தேகமெல்லாங்
தானே கரப்பானுகுஞ் சாற்ற வுரிசையுமாங்
தேனே யிதனைத் தெரி.

இ-ள். தேனனையாளே! உரிசையையுடைய வான்கோழிக் கறிக்கு விந்துவும் மகிழ்ச்சியும் சிலேத்ம பந்தமும் கரப்பானும் உண்டா மென்க. 953

## சம்பங்கோழிக்கறியின் குணம்

வரட்சி சொறிசிரங்கு வன்கரப்ப னென்னுங்
திரட்சியொடு மலநோய் தீரும்—பொருட்சிகரி
கும்பக் கடாக்களிற்றின் கோடெனச்சொற் பூண்முலையாய்
சம்பங் கோழிக்கறிக்குத் தான்.

இ-ள். மதயானைக் கொம்புபோன்ற ஆபரணமணிந்த முலையை யுடையவளே! சம்பங் கோழிக்கறிக்குச் சொறசொறப்பு சொறி கிரந்தி கரப்பான் முதலிய பற்பல ரோகங்களும் நீங்கும். 954

## வாத்துக்கறியின் குணம்

வாத்துக் கறியருந்த வற்றியுலர் புண்சிரங்குங்
கோத்த கபமுங் குதிக்குங்காண்—ராத்திரியிற்
போக முறுதியுமாம் பொல்லா வரோசகநோ
யாகமதி லூறு மறி.

இ-ள். வாத்துக்கறியை யுண்ணில், கசிவு வறண்டு சிவந்தாறிய விரணம் கிரந்தி கோழை அருசி இவைகள் அதிகரிக்கும். சுக்கில ஸ்தம்பனமாம். 955

## கோழிமுட்டையின் குணம்

வாதபித்தஞ் சேர்ப்பிக்கும் வன்றோடம் புண்போக்குந்
தாதுவை மெத்தத் தழைப்பிக்கு—மோது
கபத்தை யடக்குங் கரப்பனுண் டாக்குவையு
மிபத்தையுறுங் கோழிமுட்டை யெண்.

இ-ள். கோழிமுட்டை வாத தோஷம் விரணம் கபப்பிணி இவைகளை நீக்கும். வாத பயித்தியம் சுக்கில தாது கரப்பான் இவைகளுண்டாம். 956

## காடைக்கறியின் குணம்

கட்டிற் கிடப்பார்க்குக் காட்டிற் படுங்காடை
மட்டவிழுங் கோதாய் மருந்தன்றே—விட்டமுறச்
சோறுபுகுஞ் சோபையறுந் துன்றே யெலாமேகும்
மேறுமறுந் தேற்றுவதேன் விள்.

இ-ள். தேனொழுகுகின்ற மாலையணிந்த கூந்தலை யுடையவளே! படுக்கையா யிருப்பவர்களைத் தேற்றுகின்ற காடைக்கறிக்கு அசனஞ் செல்லும். வீக்கமும் மெலிவினால் கிளைத்த சகல நோய்களும் போம் என்க. 957

## கவுதாரிக்கறியின் குணம் (இதுவே சிவல்)

சிவலிறைச்சி பித்தஞ் சிலேத்ம மந்தம்வாதக்
கவலையுற வோட்டியுடல் காக்கும்—புவனமதின்
மெய்க்குப் பலஞ்செய்யும் வீரியமு முண்டாக்குஞ்
சிக்கிய மலங்கழிக்குஞ் செப்பு.

இ-ள். கவுதாரிக்கறி பயித்தியம் ஜலமந்தம் வாதவலி மலக்கட்டு இவைகளை நீக்கி வன்மை வீரியம் இதுகளை விருத்தி செய்து உடலை இரட்சிக்கும். 958

### ஊர்க்குருவிக்கறியின் குணம்—விருத்தம்

மருவிய திரிதோடம்போ மறப்புருப் புணர்ச்சியுண்டாம்
பெருகிய சுரமேகம்போம் புறங்கிடு மிளமைமெய்யிற்
கருகிய வன்னநீக்கிக் கனகம்போ லொளிவுசேரு
முருவமுந் திரமாநாளு மூர்க்குருவி யின்றசைக்கே.

இ-ள். ஊர்க்குருவிக் கறிக்கு வாதபித்தம் கபப்பிரகோபம் சுர வெட்டை கருமை நிறம் இவை நீங்கும். இடைவிடாத கோபம் வாலி பத்தன்மை சுவர்ணச்சாயல் தேகப் புஷ்டி இவை உண்டாம். 959

### வானம்பாடிக்கறியின் குணம்—வெண்பா

வெட்டை யனலொடு வீறுபல நோயகலு
மட்டிலாக் காமம் வளருங்காண்—மட்டணியுற்
கானம் பாடிக்களிக்குங் காமரசப் பைங்கிளியே
வானம் பாடிக்கறி வறு.

இ-ள். காமரசத்தைத் தருகின்ற பசுங்கிளி போலும் பெண்ணே! பொரித்த வானம்பாடிக் கறியால் ஆண்குறியால் விழுகிற சீழ் வெப்பு முதலிய ரோகங்கள் போம். வீரியவிருத்தியுமுண்டாம். 960

### விச்சுளிக்கறியின் குணம்

ஐயுடன் பித்த வரோசகத்தைத மாற்றிவிடுஞ்
சையோக போகந் தழைப்பிக்கு—மெய்யாகப்
பத்தியம தாகும் பகவிச் சுளிக்குருவி
யுத்தமத்தி லுத்தமமா மோர்.

இ-ள். பத்தியத்தில் உத்தமமாகிய விச்சுளிக்கறி கபரோகத்தையும் பித்த அருசியையும் நீக்கும். விந்துவை வளர்ப்பிக்கும். 961

### தூக்கணங்குருவிக்கறியின் குணம்

ஐய மருசி யகட்டின்மல மும்போக்குந்
துய்ய பசியைமெல்லத் தூண்டிவிடு—மெய்வன்
மினுத்த வழகுண்டா மென்பத் தியமாந்
தனித்தூக் கணங்குருவி தான்.

இ-ள். பத்தியத்திற்கான தூக்கணங்குருவிக் கறி, கபம் அரோசகம் மலக்கட்டு இவைகளை நீக்கும். பசியையும் வனப்பையும் விளக்கும். 962

### கருங்குருவிக்கறியின் குணம் (இதுவே வலியன்)

வாதகா மாலையறு மாதே கபமும்போ
மூதுகா மாலைவிழுந் தோடுங்காண்—வாதுசெய்

வந்த கரப்பானுடனே மாறாச் சொறியும்போங்
குந்து கருங்குருவி கொள்.

இ-ள். கருங்குருவிக் கறியை யுண்ணில், வாத காமாலை விஷம் சிலேத்மம் ஊது காமாலை கரப்பான் தீராச் சொறி ஆகிய இவைகள் போகும் என்க. 963

## சிட்டுக்குருவிக் கறியின் குணம்

பூவிரணம் போக்கிவிடும் பொல்லாக் கிருமிகளைப்
பாவுமலத் தோடிறங்கப் பண்ணுங்காண்—பூவணையிற்
கட்டுற்ற மாதர்களைக் கைகுவித்துக் கொஞ்சுவிக்குஞ்
சிட்டுக் குருவித் திறம்.

இ-ள். சிட்டுக்குருவிக் கறி, ஆண்குறி மலரின் புண்ணையும் மலக் கிருமிகளையும் நீக்கும். புணர்ச்சியில் நிறுவாகத்தை யுண்டாக்கும் என்க. 964

## உள்ளான் கறியின் குணம்

உத்தமாம் பத்தியத்திற் கொவ்வுமுள் ளான்கறிதான்
சத்தியங்காற் பித்தத்தைச் சாந்திசெய்யு—முத்த
நகையீர் மேகம்போக்கு நற்பசி யுண்டாக்குந்
தகைமந்தந் தீர்க்குமிது தான்.

இ-ள். முத்துப்போலும் பற்களையுடைய பெண்ணே! பத்தியத்திற்கு உத்தமமாகிய உள்ளான் கறி, வாத பித்த தொந்தம் பிரமேகம் அசீரணம் இவைகளை நீக்கும். நற்பசியைத் தரும். 965

## கொசு உள்ளான் கறியின் குணம்

கொசுவுள்ளான் றன்கறியைக் கூட்டியுண் பார்க்குப்
பசியெழும்பு மேகம் பறக்கும்—பசுபசத்து
நின்ற தினவகலு நீங்காத போகமுறி
மன்றலுறை வார்குழலே வாழ்த்து.

இ-ள். வாசனை பொருந்திய நீண்ட கூந்தலை யுடையவளே! உள்ளான் கறியால் மிகு தீபனமும் சையோக பலமும் உண்டாகும். சீழ்ப் பிரமேகமும் நமைச்சலும் விலகும் என்க. 966

## கோரை உள்ளான் கறியின் குணம்

நாட்டிலுள்ள பட்சிகளி னன்கிதுவே பத்தியமாங்
கூட்டிலுள்ள தோடங் குலையுங்காண்—தாட்டிகமா
யாரென்ன சொன்னாலு மம்புவியி னேயோர்க்குக்
கோரை யுள்ளான்கறியைக் கூட்டு.

இ-ள். பத்தியப் பறவைகளின் உத்தமமாகிய நற்கோரை உள்ளான்கறியால், சப்ததாதுகத தோஷங்கள் விலகும். இது பிணியாளார்க்குதவும். 967

## மயிற்கறியின் குணம்

சூலைப் பிடிப்புகளைச் சோரிவளி யைப்பித்தை
வேலைச் சிலேட்டுமத்தை வீட்டுங்கா—ணூலொத்த
வற்பவிடை மாதே யனலா மயிலிறைச்சி
நற்பசியுண் டாக்கு நவில்.

இ-ள். நூலிழைபோலுஞ் சிறிய இடையையுடைய பெண்ணே! உஷ்ணமுள்ள மயில்கறி கீல்களிற்குத்தல் வாதசோணிதம் கபபித்தம் அதிகபம் இவைகளை நீக்கும். தீபனத்தைத்தரும் 968

## குயிற்கறியின் குணம்

நல்லதொரு பத்தியமா நாடாது வாதபித்தஞ்
சொல்லரிது தானே சொறியேகும்—வல்ல
குயிலருந்த மேகம்போங் குன்மவலி தீருந்
துயிலிமதி போகமுறுஞ் சொல்.

இ-ள். மான்போலுங் கண்ணையுடைய பெண்ணே! பத்தியத்திற் கான குயில்கறியை யுண்ணில், வாதபயித்தியம் புடை பிரமேகம் வயிற்றுவலி இவைபோம். வீரிய விருத்தியாம். 969

## கொக்குக்கறியின் குணம்

கொக்கருந்த மேகமுண்டாங் கூடுமரோசக நோய்
மைக்குழலே புண்கரப்பான் வந்துறையு—மெய்க்கு
நியத்தமருந் துண்ணிலித னீள்கவிச் சாகாது
வயிற்றுக் கிருமிபோ மால்.

இ-ள். கறுத்த கூந்தலை யுடையவளே! கொக்குக்கறியை யுண்ணில் சீழ்மேகம் அருசி விரணம் கரப்பான் இவையுண்டாம். அதிக கவிச்சானதால் ஔஷதங்கட்கு இதன் வாடை உதவாது. 970

## கருங்கொக்குக்கறியின் குணம்

கருங்கொக்கின் றன்கறிக்குக் காணுக் கரப்பான்
மருங்கொக்கும் புண்ணும் வளரும்—பெருங்கிரந்தி
யுண்டாஞ் சிலேட்ம முலவு முடலமெல்லாம்
வண்டார் குழலே வழுத்து.

இ-ள். வண்டு மொய்க்கின்ற கூந்தலை யுடையவளே! கருங் கொக்குக்கறிக்கு முன்பு இல்லாத கரப்பானும் விரணமும் பருஞ் சிரங்கும் சரீரத்தில் நீரேற்றமும் உண்டாகும். 971

## தாராக்கறியின் குணம்

தாராக் கறியருந்தத் தாதுமிக வுண்டாகும்
பேராக் கபந்தளரும் பெண்மயிலே—தீராத
வாந்தி யரோசகமும் வன்கரப்பன் புண்ணுமிகச்
சேர்ந்துவரு மிப்பலனைச் செப்பு.

இ-ள். மயில்போலுஞ் சாயலை யுடையவளே! தாராக்கறியை யுண்ணில் சுக்கிலம் சிலேட்மம் சர்த்தி அருசி கடுவன் சிரங்கு ஆகிய வைகள் விருத்தியாகும் என்க. 972

## நாரைக்கறியின் குணம்

நாரைக் கறியருந்த நாறுகரப்பான் புண்ணு
மூறைத் தொடர்ந்துதொடர்ந் தோட்டுங்காண்—பாரித்த
மேகமொடு தாகம் விளையுமே நீரிழிவுக்
காகுமென் பார்க ளறி.

இ-ள். நாரைக்கறியைத் தின்னில் சிழ்கரப்பான் கிரந்தி கப மேகம் வாதகோபம் இவை உண்டாம். அதிமூத்திரம் போகும். 973

## ஆள்காட்டிப் பட்சிக்கறியின் குணம்

ஆள்காட்டிப் பக்ஷிக் கடன்மேகம் போயொளிக்குந்
தோட்காட்டு வாதந் தொடராவே—வாட்கண்
ணரிவையே பத்தியத்திற் காகும் புவியிற்
றெரியமறை யில்லாமற் செப்பு.

இ-ள். வாள்போலுங் கண்ணை யுடையவளே! பத்தியபதார்த்த மான ஆள்காட்டிப் பட்சிக்கறிக்கு வாதப்பிரமேகமும் அமச்சர வாதரோகமும் ஒழியும் என்க. 974

## கிருட்டிப்பட்சிக்கறியின் குணம்

மருட்டு விழியுடைய மாதே புவிக்குட்
கிருட்டிக் கறியருந்திற் கேளாய்—மருட்டுபித்தம்
வாதங் கடுப்பு வளருமிரத் தக்கழிச்சற்
காதம்போம் வாந்தியறுங் காண்.

இ-ள். கிருட்டிப்பட்சிக் கறியை யுண்ணில் பயத்தைத் தரா நின்ற பயித்தியம் வாயு கடுப்பு இவையுண்டாம். ரத்தபேதி வமனம் நீங்கும். 975

## சூரைப்பட்சிக்கறியின் குணம்

குட்டங் கிருமிகுன்மங் கோரவா தஞ்சோபை
துட்டம் பகந்தரந்து டைக்குங்கா—னிட்டமுறப்
பத்தியத்திற் காகும் பருகி லுரிசையுமாங்
கைத்திடாச் சூரைக் கறி.

இ-ள். ருசியுள்ள சூரைக்கறி குஷ்டம் புழு வயிற்றுவலி மகா வாதம் வீக்கம் ஆறுவிரணம் பகந்தரம் இவைகளை நீக்கும். பத்தி யத்திற்காகும் என்க. 976

## கிளுவைக்கறியின் குணம்

பாலிலா மாதர்கட்குப் பாலுமுண்டாம் போகமுமாந்
தாலதுசை பித்தந் தரிக்குமோ—சாலச்
சிரங்குபுண்க ளெல்லாமே சீழ்வற்றி யாறு
மருங்கிளுவை யைத்தின் றறி.

இ-ள். கிளுவைக்கறியைத் தின்னில் மாதர்க்கு முலைப்பால் விருத்தியும் அதிக வீரியமுண்டாம். பயித்தியம் கிரந்தி விரண மும் போம். 977

## மடையான்கறியின் குணம்

அன்னநடை பின்னுசடை யங்கண்மட மாதேகேள்
வன்னமடை யான்கறியை மாந்தினர்க்குத்—தின்னு
கரப்பான் சொறிசிரங்குங் காணுமையவாத
முரப்பாக நீடு முறை.

இ-ள். அன்னம்போலும் நடையையும் பின்னற் சடையு முடையவளே! மடையான் கறியை யுண்டவர்க்குக் கடுவனும் நமைக் கிரந்தியும் வலுத்த சிலேட்மம் வாதரோகங்தமும் உண்டாகும். 978

## கூழைக்கடாக்கறியின் குணம்

நெடுநாளி றாரிழிவை நேராகக் கட்டு
மடலான சூலை யகற்று—மடுவாருங்
கூழைக் கடாக்கறிதான் கோரகரப் பான்புண்ணைப்
பாழ்த்தேகத் தேயிருத்து மாய்.

இ-ள். மடுக்களிலுள்ள கூழைக்கடாக்கறி நீடித்தவெகு நீரை யும் கபச் சூலையையும் நீக்கும் வாதகரப்பானையும் விரணத்தையும் தரும். 979

## நமிட்டுப்பக்ஷிக்கறியின் குணம்

நமிடுகரப் பான்வாத நாட்சோபை மாற்று
மமிர்தகுண மாமுரிசை யாகுஞ்—சமமுரைக்கி

லெல்லாக் கறிக்குமிஃ தின்பாகு மிக்கறிக்குப்
பொல்லாக் கயரோகம் போம்.

இ-ள். சகல கறிகளைப் பார்க்கிலும் ரட்சிக்குந்தன்மையும் மிகு மதுரமுள்ள நமிட்டுகறி கரப்பான் வாயுவீக்கம் க்ஷயம் நீக்கும்.

### சிறவிப்பக்ஷிக்கறியின் குணம்

வாராய் மடமானே வாதகப முண்டாகுஞ்
சேராச் சிறவிதனைத் தின்றக்கால்—பேராத்
தினவுகரப் பான்கிரந்தி சேருமோ நாளுங்
கனவுறுதியாம் போகங் காண்.

இ-ள். சிறவிக்கறியை யுண்ணில் வாதசிலேட்மமிஸ்ரம் புணர்ச்சித்திடமும் உண்டாம், தினவும் கரப்பானும் சிரங்கும்போகும். 981

### பொன்னுந்தட்டான் கறியின் குணம்

மேக வழறணியு மிக்கவழ குண்டாகும்
போகமீ றுங்கரப்பான் போகுங்காண்—பாகான
பொன்னுந்தட் டான்கறியைப் போற்றியுண்ணி னற்சுவையா
மின்னுந் தேகம்புவியில் விள்.

இ-ள். ருசியுள்ள பொன்னுந் தட்டான்கறியால் பிரமேக வெப்பும் கரப்பானும்போம். செழிப்பும் வீரியமும் தேஜசும் உண்டாம்.

### கடல் இறஞ்சிக்கறியின் குணம்

பத்தியத்திற் கொவ்வுமிந்தப் பாரிற் கடலிறஞ்சி
யுத்தமமா நோயனைத்து மோட்டுங்காண்—மொத்தச்
சொறிகரப்பான் வன்சிரங்கு தொன்மேகம் போக்கும்
செறிநரைநீக் குஞ்சுவையாஞ் செப்பு.

இ-ள். பத்திய பதார்த்தமான கடலிறஞ்சிக்கறி நமைகரப்பான் கிரந்தி நீடித்த பிரமேகம் பலிதநோய் முதலிய நோய்களைப் போக்கும். 983

### வெண்புறுக்கறியின் குணம்

வெண்புறு வாதபித்தம் வீறுகப மேகமிவை
திண்புவியை விட்டோடச் செய்யுங்காண்—பண்பரவு
வெண்குட்ட நீள்கரப்பான் மேய்வறட்சி யும்போக்கும்
பண்புற்ற பத்தியமாம் பார்.

இ-ள். பத்தியத்திற்கான வெண்புறுக்கறிக்கு வாதபயித்தியம் ஜலமேகம் விரணவெண்குஷ்டம் கரப்பான் சொறி இவைகள் நீங்கும். 984

### பச்சைப் புறாக்கறியின் குணம்

இச்சைதரும் புன்முறுவ லேந்திழையே மாந்தர்மிகப்
பச்சைப் புறாவூன் பருகினூற்—கொச்சைதரும்
வாதபித்த மையம்போ மாபலமுந் தாதுவுமா
மோதுசீத ங்காக்கு முன்.

இ-ள். புன்னகையுடைய பெண்ணே! பச்சைப் புறாக்கறியை யுண்ணில் திரிதோஷ தொந்தமும் பேதியும் போம்; தேக புஷ்டியும் வீரிய விருத்தியும் உண்டாம். 985

### மாடப்புறாக்கறியின் குணம்

உண்டாற் பசியா முறைதாது வும்பெருகுங்
கண்டாலும் வாதங் கலங்குங்காண்—வண்டாருங்
காரின்மிகு மைக்கூந்தற் காரிகையே பத்தியமாம்
பாரின்மா டப்புறாவைப் பார்.

இ-ள். வண்டுகள் மொய்க்கப்பெற்ற கறுத்த கூந்தலையுடையவளே! மாடப்புறாக் கறியால் தீபாக்கினியும் சுக்கிலமும் பெருகும். வாதபிரமேகம் நீங்கும், இது பத்தியக்கறியாம் என்க. 986

### வரிப்புறாக்கறியின் குணம்

வரிப்புறா வின்றசையோ மாவுருசி தின்றூற்
றிரிப்புறா வாதபித்தந் தானு—மரிப்பான்
சோபமோ கங்க டொடரா வெவர்களுக்கு
நீபா ரிலையிதற்கு நேர்.

இ-ள். உரிசையுள்ள வரிப்புறாக்கறியைத் தின்னில் வாயுவோடு கூடிய பித்தமும் பலவித வீக்கங்களும் போகும். 987

### வன்னப்புறாக்கறியின் குணம்

ஈளை யிரைப்போ டிரத்தபித்தம் போக்கிவிடும்
வாளைவென்ற கண்ணாய் மலங்கழிக்கு—நாளுமோ
வன்னமூட் டும்பசியை யருசி யோட்டுநல்ல
வன்னப் புறாவைநுகர் வாய்.

இ-ள். வன்னப்புறாக்கறி கோழை சுவாசம் ரத்தபித்தம் அருசி இவைகளை நீக்கும், அசனஞ் செலுத்தும், பசியைத் தரும், மலந் தள்ளும். 988

### மணிப்புறாக்கறியின் குணம்

கணிப்புறா வின்பக் களஞ்சியமே கேளாய்
மணிப்புறாப் பத்தியமாம் வாதப்—பிணிப்பறமுட்

கொண்டாற் கயந்திருங் குன்மரோ கங்களறுங்
கண்டாலு மையம்போங் காண்.

இ-ள். பத்தியத்திற்கான மணிப்புருக்கறியைத் தின்னில் வாதபிடிப்பு க்ஷயம் வயிற்றுநோய்கள் கபாதிக்கம் இவைபோம். 989

## மனைப்புருக்கறியின் குணம்

பத்தியத்திற் காகாது பன்மனைப்பு ருக்கறிதா
னொத்த கரப்பான்சொறியை யுண்டாக்கு—மெத்தவுமே
நாவுருசி யாயிருக்கு நற்சுக்கி லம்பெருக்குந்
தாவு கயல்விழியாய் சாற்று.

இ-ள். பாய்கின்ற கெண்டைபோலுங் கண்ணையுடையவளே! நாவுக்குரிசையுள்ள மனைப்புருக்கறி மருந்தை முறிப்பதுந் தவிரக் கரப்பான் சருமச்சொறி தாதுவிருத்தி இவைகளை உண்டாக்கும்.

## தவிட்டுப் புருக்கறியின் குணம்

ஓடுகரப்பான் சோபை யுட்சொறி காமாலைபித்த
மாடு பெருமூச் சடைப்பும்போம்—நீடு
கவட்டுக் கலகவிழிக் காரிகையே நாளுந்
தவிட்டுப் புருக்கறிக்குத் தான்.

இ-ள். வஞ்ச நிறைந்த கண்களையுடைய பெண்ணே! தவிட்டுப் புருக்கறிக்குப் பரவுகின்ற கரப்பான் வீக்கம் உட்புற நமைச்சல் காமாலை பயித்தியம் சுவாசத்தடை இவைபோம். 991

## நீர்க்காக்கைக்கறியின் குணம்

பாண்டோடு சோபை பருவயிறும் போங்கரப்பான்
மீண்டு சொறியுமா மொய்த்தவரை—நீண்டமத
னூர்க்காக்கு மாதரசே யோங்குபுலா னாற்றமுறு
நீர்க்காக்கை தன்னை நினை.

இ-ள். புலால்மணம் உள்ள நீர்க்காக்கைக் கறியால் பாண்டு வீக்கம் மகோதரம் இவைபோம், கடுவனும் தினவும் உண்டாம் என்க. 992

## அண்டங்காக்கைக் கறியின் குணம்

பித்தவெட்டை சோபையறும் பேதித்தெழுந் துடலி
லொத்தபெரும் பாண்டுவகை யோடுங்கா—ணித்தியமோர்
கண்டஞ்செய் காமிலம்போங் காக்கைக்கு ளோர்பிரிவா
மண்டங்காக் கைக்கறியா லாய்.

இ-ள். காக்கையில் ஒரு பேதமுள்ள அண்டங்காக்கைக் கறியால் பித்தமேகம் வீக்கம் பாண்டுரோகங்கள் காமாலை இவை போகும். 993

## கோட்டான்கறியின் குணம்

கோட்டான் கறிக்குக் கொடும்பசியும் நோய்கடலை
காட்டா தடங்குமிது கைவல்யங்—காட்டானை
மாமதம்போற் காமமுறும் வன்மருந்திற் பத்தியமாம்
பூமியிலே யாவர்க்கும் போதி.

இ-ள். மயிலனையாளே! பத்தியத்திற்கான கோட்டான் கறிக்கு மிகுதீபனமும் சுக்கிலமும் அதிகரிக்கும், சிற்சில நோய்கள் நீங்கும். 994

---

# மீன் கறிவகை

---

## விரால்மீன்கறியின் குணம்

உடலை வளர்க்கு முறுபிணியைத் தீர்க்குங்
குடலுக் கதிகசுகங் கொடுக்குங்—கடலை
உழக்கும் விராலைவிட்டிவ் வூர்க்குளத்துச் சேற்றை
உழக்கும் விராலதனை யுண்.

இ-ள். குளத்து விரால்பிணியை நீக்கி உடலை வளர்த்துக் குடற்கு சுகந்தரும். 995

## குறவைக்கறியின் குணம்

முட்டு குடல்வலிபோ மூடிரும லேகுமலக்
கட்டுரக்கும் வாயருசி காணுங்காண்—முட்டத்
துறவைப்பெற் றோருந் துதிக்குமெழின் மாதே
குறவை மீனின்குணத்தைக் கூறு.

இ-ள். சந்நியாசிகள் புகழ்கின்ற பெண்ணே! குறவைமீனால் குடலுக்குள் ஓடிக் குத்துகின்ற நோயும் காசமும்போம், மலபந்தமும் அரோசகமும் உண்டாம். 996

## அயிரைக்கறியின் குணம்

உயிரை வளர்க்கு முடற்பிணியை நீக்கும்
மயிரை வளர்க்கும் ருசிமாற்றும்—வயிரச்
செயிரை யுறுச் சற்குணநற் றெள்ளமிர்தேநாளு
மயிரை யெனுமீ னது.

இ-ள். அமிர்தம்போன்றவளே ! அயிரைமீன் உயிருக்கு ஆதாரமாகிய சரீரத்தையும் ரோமத்தையும் வளர்க்கும் தேக சாட்டியத்தையும் அருசியையும் நீக்கும். 997

## இருல்கறியின் குணம்

வாதமொடு மந்தமுறு மாறுப் பொருமன்மிகுஞ்
சீதம் விளையுந் தினவுண்டா—மாதே
உதிர மிகப்பெருகு மோங்குமிரு லுண்டா
லெதிரிலங்க ராங்கிசமா மெண்.

இ-ள். பெண்ணே ! இருல்கறியை யுண்ணில் வாய்வு அக்கினி மாந்தம் வயிற்றுப்பிசம் சீதளம் நமை ரத்தம் மாமிசதாது இவை விருத்தியாம். 998

## கெண்டைமீன்கறியின் குணம்

அண்டையினிற் பார்களுக்கு மாரோ சிகங்காணும்
பண்டையுள நோய்முதிர்ந்து பாரிக்கும்—கெண்டையுண்டால்
வாயுமுண்டாகும் வயிற்றுவலி யுஞ்சேரு
நீயு மறிவாய் நிசம்.

இ-ள். கெண்டைமீனைத் தின்னில் மிகுந்தருசி பழமையாயடங்கியுள்ள ரோகங்கள் வாதப்பிணி குன்மம் இவைகள் அதிகரிக்கும். 999

## சன்னக்கெண்டையின் குணம்

மின்னை நிகருமிடை மெல்லியரே மேனியது
சன்னமீ னுண்டாற் றளராவா—முன்னைக்
கரப்பானும் புண்ணுங் கடியகப மும்போ
முரப்பாக நாளு முரை.

இ-ள். மெல்லியரே, சன்னக்கெண்டைமீனை யுண்ணில் தேகத்தளர்ச்சி நீங்குவதுமன்றி கரப்பானும் விரணமும் சிலேஷ்மாதிக்கமும் விலகும். 1000

## பேராரால்கறியின் குணம்

வாராய் மடமானே வந்த பிணியனைத்தும்
பேராரான் மீனுக்குப் பின்னிடையும்—பேரா
திருந்த பழமலம்போ மெய்துமா ரோக்ய
மருந்தோடே யொக்குமென வை.

இ-ள். மானனையவளே ! மருந்துக்குச் சமமான பேராரால் மீனுக்குத் தேகத்திலுள்ள பலவித ரோகங்களும் பழமலக்கட்டும் நீங்கிச் சவுக்கிய முண்டாகும். 1001

## சிற்றூரால் கறியின் குணம்

சிற்றூரான் மீனருந்தச் சிக்கு மலசலம்போ
முற்ற கபங்கரப்பா னுண்டாகுஞ்—சற்றேதான்
மந்தமுறுந் தீபனம்போம் வாயிற் சலமூறுங்
கந்தமலர்ப் பூங்குழலே காண்.

இ-ள். மலரணிந்த கூந்தலையுடையவளே! சிற்றூரால் மீனை யுண்ணில் மலசல பந்தமும் பசியும் நீங்கும். சிலேத்மம் கரப்பான் அக்கினி மந்தம் வாய்நீரூறல் இவைகள் உண்டாம். 1002

## கச்சற்கருவாட்டுக் கறியின் குணம்

வாதமறு மப்பொழுதே வன்பித்த முண்டாகுஞ்
சீத மகலுந் தினவும்போங்—கோதாய்கேள்
கண்டாற் பசியெழுப்புங் கச்சற் கருவாடு
கொண்டாற் சுரமும்விடுங் கூடு.

இ-ள். பெண்ணே! கச்சற்கருவாட்டை யுண்ணில் வாதப்பிணி கபநோய் நமைச்சல் சுரரோகம் இவைகள் போம். கபபித்தமும் தீபனமும் உண்டாகும். 1003

## உழுவைக் கறியின் குணம்

முழுதும் புசிக்கலா முள்ளுமில்லை யந்த
வுழுவைக் குடர்பிணிவிட் டோடும்—வழுவான
முன்மலமுஞ் சாறு முதிர்க்கரப்பா னுண்டாகும்
வன்முலையாய் நீயறிந்து வை.

இ-ள். வலிய கொங்கையை யுடையவளே! முள்ளில்லாப் பதார்த்தமாகிய உழுவை மீனுக்குச் சரீரத்திலுள்ள பலவித நோய்களும் பழைய மலமும் போம். கரப்பான் உண்டாகும். 1004

## வாளைக் கறியின் குணம்

ஆளை வளர்க்குமதி யாண்மைதனை யுண்டாக்கும்
வாளையென்ற கண்மாதே வாயுவாம்—வேளை
யறியாம லுண்டா லணுகுமே வாதங்
குறியார்கள் வாளைக் குணம்.

இ-ள். வாள்விழி மாதே! வாத குணமுள்ள வாளைமீன் தேகத்தைச் செழுமையாக்கித் தாதுவிருத்தியைச் செய்யும். அகாலத்திற் புசிக்கில் வாயுவாம். 1005

## சேல்கெண்டைக் கறியின் குணம்

குடல்வாத சூலை கொடுக்குஞ்சேற் கெண்டை
யுடல்வாத மேகமுண் டாக்குஞ்—சடமீது
புண்ணுஞ் சிரங்கும் பொருந்திநிற்கச் செய்துவிடு
முண்ண மிகுசுவையா மோர்.

இ-ள். அதியுரிசையுள்ள சேல்கெண்டைமீன் குடல் வாதக் குத்தல் வாதப் பிரமேகம் விரணம் கிரந்தி ஆகிய இவைகளை உண் டாக்கும் என்க. 1006

## கடல் கெளிற்றுக் கறியின் குணம்

நெய்த்திருக்கு நொய்த்திருக்கு நீங்காத சுக்கிலமா
மொய்த்திருக்கும் வன்கெளிற்றை யுண்டக்கான்—மெத்தக்
கரப்பானும் புண்ணுங் கபமும் பெருகுந்
தரைக்கு ளெவருக்குஞ் சாற்று.

இ-ள். நெய்ப்பசையும் மிருதுவுமுள்ள கெளிற்றுமீனை யுண் ணில் மாறு வீரியமும் அரைக்கடுவனும் விரணமும் சிலேத்மமும் பெருகும். 1007

## ஓலைவாளைக் கருவாட்டின் குணம்

ஆலைவாய்ப் பித்த மணுகாதா மம்புவியி
லோலைவா ளைக்கருவா டுண்டக்காற்—சாலப்
பசியாரும் பஞ்சாய்ப் பறக்குமே வாதம்
புசியார்க் கிதனைப் புகல்.

இ-ள். ஓலைவாளைக்கருவாடு உண்டால் விஷத்தை நிகர்த்தப் பயித்தியமும் வாதப் பிணியும் நீங்கும். விரைவில் தீபனமுண் டாம் என்க. 1008

## சுறாக் கறியின் குணம்

வாத கபமறுக்கு மன்னுகீ டம்போக்கு
மூது குடல்வாத மோடுங்கா—ணுதரவா
யெல்லாப் பிணிக்கு மிதமாகு நல்லசுறா
நல்லா ரறிய நவில்.

இ-ள். நல்ல சுறாமீன் கறி வாத கப தொந்தம் கிருமி நோய் குடல் விருத்தி இவைகளை நீக்கும். சகல பிணிகளையுஞ் சாந்தப் படுத்தும் என்க. 1009

## சுறாக்கருவாட்டுக் கறியின் குணம்

சூலை கிராணிகுன்மந் துட்டவதி சாரமிவை
வேலை யுலகை விடுத்தோடுஞ்—சால

வருப்பசியுண் டாகு மபத்திய மல்லாத
சுருக்கருவா டுண்பார்க்குச் சொல்.

இ-ள். பத்தியக் கறியாகிய சுருக்கருவாட்டை யுண்பவர்க்குக் குத்தல் கிரகணி வயிற்றுநோய் வாதாதிசாரம் இவை நீங்கும். மிகு தீபனமாம். 1010

## கொள்ளிக் கருவாட்டுக் கறியின் குணம்

கொள்ளிக் கருவாடு கொண்டா லுடம்பெல்லாங்
கொள்ளி கொண்டுசுட்ட குறிப்பாகும்—விள்ளக்
கரப்பானும் புண்ணுங் கனசிரங்கும் பைய
வுரப்பா மழகுகெடு முன்.

இ-ள். கொள்ளிக்கருவாடு உண்ணில் உடலிற் றீப்பட்டாறிய வடுப்போற்றழும்பு கரப்பன் விரணம் கிரந்தி இவைகள் பெருகும். அழகு நீங்கும். 1011

## சன்னக்கூனிக் கறியின் குணம்

சன்னக்கூ னிக்கறியைத் தானருந்தி லக்கணமே
தின்னப் படுமன்னஞ் சீரணமாம்—பின்னும்
பசிக்கு மதிநெருப்பாம் பாரினோ யெல்லா
நசிக்கு மெனவே நவில்.

இ-ள். மிகு சூடுள்ள சன்னக்கூனியைத் தின்னில் விரைவில் சீரணமாவதுந் தவிர உடனே பசி யுண்டாகும். வாத மந்த நோய் நீங்கு மென்க. 1012

## திருக்கைக் கறியின் குணம்

வாதமொடு தாதுவும் வளர்ந்துள்ளே சேருமென்று
மோதுபித்தஞ் சோபமிவை யோடுமென்றுங்—கீதச்
செருக்கையடை வாரைத் திருத்துமொழி மாதே
திருக்கைமீ னுண்பார்க்குச் செப்பு.

இ-ள். இனிய மொழியாளே! திருக்கை மீனைத் தின்பவர்க்கு, வாத தாதுவும் சுக்கில தாதுவும் அதிகரிக்கும். பயித்தியமும் வீக்கமும் நீங்குமென்க. 1013

## மடவைக் கறியின் குணம்

மடவைமீன் வாதமொடு மந்தமுளை மூலங்
குடல்வாதஞ் சூலை கொடிய—வடற்கரப்பா
னுண்டாக்கு மாமிசங்க ளூறு முலகத்தில்
வண்டார்க்கும் வார்குழலே வாழ்த்து.

இ-ள். நீண்ட கூந்தலை யுடையவளே! மடவை மீன் வாதப் பிணி அக்கினி மந்தம் மூலமுளை ஆந்திரப் பித்தவாதம் கடுவன் இவைகளைத் தரும். மாமிசம் விருத்தியாம். 1014

## சுரும்பக் கறியின் குணம்

சுரும்புமீன் பத்தியமாய்ச் சொல்லுவா ருள்ளி
லரும்பிணியை யெல்லா மகற்றும்—பெரும்போகந்
தீபன முண்டாக்குமது தின்னச் சுவைகொடுக்குஞ்
சோபமின் னாரசே சொல்.

இ-ள். பெண்கள் நாயகமே! உரிமையுள்ள சுரும்பு மீன் வயிற் றுப்பிணியை நீக்கும். வீரியத்தையும் பசியையும் தரும். பயித்தி யத்திற்கு உதவு மென்பர். 1015

## உல்லமீன் கறியின் குணம்

உல்லமெல்லாஞ் சன்னவெலும் போவியமே யிக்கறிதா
நல்லகறி யாயதனை நாளுமுண்டால்—மெல்லக்
கழிச்சல் பிளவையொடு காணுக் கடியும்
விழிச்சுக்கொண் டாடுமென விள்.

இ-ள். சித்திர மனையவளே! மெல்லிய முட்களுள்ள நல்ல பதார்த்தமாகிய உல்லமீனை யுண்ணில் பேதியும் விரணமும் காணுக் கடிவிஷமும் அதிகரிக்கு மென்க. 1016

## கற்றளைமீன் கறியின் குணம்

கற்றளைமீன் றன்னைக் கருதிநித முண்பாருக்
குற்ற வயிறூ வுறுமியெழுஞ்—சுற்றொழியாப்
பேதி யெடுக்கும் பிறகுகரப் பானொழியுஞ்
சாதி மடமயிலே சாற்று.

இ-ள். மயிலை யொத்தவளே! தினமுங் கற்றளைமீனை யுண் பவர்க்கு குடலிரைச்சலும் மாறாத கழிச்சலும் உண்டாகும். கரப் பான் விலகுமென்க. 1017

## வெள்ளைவவ்வால் கறியின் குணம்

வெள்ளை வவ்வாறன்னை விரும்பிநித முண்பார்க்குத்
தள்ளுகின்ற பித்தந் தரிக்குமோ—துள்ளி
வருங்கரப்பா னேகு மயிலே புவியி
லரும்பத் தியமா மறி.

இ-ள். மயிலையொத்தவளே! வெள்ளைவவ்வால் மீனைத் தினமும் விரும்பித் தின்பவர்க்குப் பித்தமயக்கமும் கடுவானும் போம், இது பயித்தியம் ஆகும் என்க. 1018

## கருவவ்வாற்கறியின் குணம்

செங்கரப்பான் மேகஞ் சிறுசிரங்கு முண்டாகும்
வெங்கொடிய நீரிழிவும் விர்த்தியாங்—கொங்கைகளிற்
பாலூறுமெத்தப் பருகிற் கருவவ்வான்
மேலூறும் போகம் விதி.

இ-ள். கருவவ்வால் மீனைத்தின்னில், செங்கரப்பான் பிரமேகம் சிறுகிரந்தி வெகுமூத்திரம் வீரியவிருத்தி முலைப்பால் இவையுண்டாம். 1019

## நெய்த்தோலிக்கறியின் குணம்

மந்தமுறுந் தீபனம்போம் வாயிலைப்பு முண்டாகுந்
தொந்தமுறு வாதபித்தந் தோன்றும்பின்—ஞேங்தே
வயிறுப் பொருமும் வலியநெய்த் தோலிக்குத்
துயர மிகுமிதனைச் சொல்.

இ-ள். நெய்த்தோலின் மீன்கறிக்கு அக்கினிமந்தம் அரோசகம் வாதபயித்தியம் வயிற்றுப்பிச முதலிய துன்பம் உண்டாம்; பசிகெடும். 1020

## மயறிமீன்கறியின் குணம்

மயறி கரப்பானும் வாதபித் தத்தோ
டுயருகின்ற சோப மொழிக்கு—நியமா
யுதரத்தி னுள்ளு முறைவாதம் போக்கும்
பதியி லிதனைப் பகர்.

இ-ள். மயறிமீன்கறி கரப்பான் கபம் வாதபயித்தியம் மூர்ச்சை வயிற்றில் தங்கிய விகுணவாதம் இவைகளைப் போக்கும். 1021

## விலாங்குமீன் கறியின் குணம்

விலாங்குமீன் றன்னை விரும்பிமிக வுண்டாற்
குலாங்கிடமா யையங் குலாவு—மிலங்கருசி
போக மொடுசொறியும் புண்கரப்பா னுங்குதிக்குங்
கோகனக மாதே குறி.

இ-ள். இலட்சுமி யொத்தவளே விலாங்குமீனை அதிகமாகத் தின்றால் கபாதிக்கமும் அரோசகம் தாதுவிருத்தி தவளைச்சொறி விரணம் கடுவன் இவை உண்டாம். 1022

## கிழங்கான்மீன்கறியின் குணம்

பத்தியத்திற் கேற்ற பருங்கிழங்கான் மீனருந்த
வுற்ற பிணியனைத்து மோடுங்காண்—மெத்தப்
பசியெழும்புஞ் சேர்ந்த பருமலமுஞ் சாடு
முசியா துடல்வளரு முன்.

இ-ள். பத்தியத்திற்கான கிழங்கான் மீனைத்தின்னில் சகல பிணியும் பழய மலச்சியும்போம், தீபாக்கினியும் தேகசெழுமையும் ஆம். 1023

## ஆற்றுமீன் கிணற்றுமீன் கறியின் குணம்

ஆற்றுமீன் தாதுவை யுண்டாக்கு மையவெப்பை
யூற்று மருசியைவிட் டோட்டுங்காண்—சாற்றுங்
கிணற்றுமீன் வாதகுன்மங் கீறுபித்தங் குட்டம்
பணைத்த பிலிகமுறும் பார்.

இ-ள். ஆற்றுமீன் வீரிய விருத்தியைச் செய்யும், சீதசுரத்தையும் நாவில் சுரக்கின்ற அரோசக நீரையும் போக்கும். கிணற்றுமீன் வாயுகுன்மம் பயித்தியம் குறைநோய் பீலிகரோகம் இவையுண்டாக்கும். 1024

## மடு குளம் ஏரி இவைகளிலுள்ள மீன்கறியின் குணம்

ஓடுமடு மீனு லுலவைபித் தங்களறுந்
தாதுமே கங்கபமந் தங்களுண்டா—மோதுகுள
மாருமீன் றன்னு லழற்பிணிமந்தந் தீரு
மேரிமீன் மேகமடு மெண்.

இ-ள். மடுமீனால் வாயுவும் பயித்தியமும் போம், சுக்கிலம் பிரமேகமும் சிலேட்டமமும் அக்கினிமந்தமும் உண்டாம். குளத்துமீனால் சுரமும் அலஜரோகமும் விலகும். ஏரிமீனால் பிரமேகம் நீங்கும். 1025

## கடல் நண்டுக்கறியின் குணம்

குன்மவலி வாதங் கொடுங்கரப்பா னுண்டாக்குங்
கன்மச் சொறியைத் தருவிக்கும்—பின்னு
முதிரக் கழிச்சறனை யோங்குவிக்கு மாதே
யதிரக் கடனண் டது.

இ-ள். பெண்ணே கடல்நண்டுக்கறி வயிற்றுநோய் வாதகோபம் கடுவன் சருமச்சொறி ரத்தகிரணி இவைகளை உண்டாக்கும்.

## வயல் நண்டுக்கறியின் குணம்

வயலினுரு நண்டருந்த வாதக் குடைச்ச
லயலினுமி ருக்கா தணங்கே—துயிலவொட்டா

வன்சயித்தி யங்கரப்பன் மன்குடலி ரைச்சலும்போ
முன்பயித்தி யங்கதிக்கு முன்.

இ-ள். மாதே வயல்நண்டுக் கறியை யுண்ணில் வாதக்கடுப்பு தூங்கவொட்டாத கபரோய் குடலிரைச்சல் இவைபோம். பித்தம் பெருகும். 1027

## நத்தைக்கறியின் குணம்

நத்தைக் கறிதனக்கு நாடாது மூலமத
லொத்தமல ரோகமெலா மோடுங்கா—ணித்தமித்தந்
தின்றூற் செறியாது தேடரிய தாதுவிர்த்தி
நன்றுகு மாதே நவில்.

இ-ள். காரிகையே! நத்தைக்கறிக்கு மூலமுளையும் மலாசயப் பிணிகளும் நீக்கும், இதை தினமும் புசிக்கில் அசீரணமும் சுக்கிலப்பெருக்கமும் உண்டாம். 1028

## ஆமைக்கறியின் குணம்

ஆமைக் கறியருசி யையும்பித் துண்மூலஞ்
சேமக் கனல்சூகி தாமேக—நாமரத்தப்
பேதி கிராணிமலப் பேதியகற் றும்பசியுந்
தாதுவுமே லுங்கொடுக்குந் தான்.

இ-ள். ஆமைக்கறி, அரோசகம்பம் பித்தம் உள்மூலம் உட்சூடு கருப்பமேகம் ரத்தாதிசாரம் சீதகிரகணி மலபேதி இவைகளை நீக்கும். 1029

---

# கடைச்சரக்கின் வகை

## சுக்கின் குணம்

சூலைமந்த நெஞ்செரிப்புத் தோடமேப்பம் மழலை
மூல மிரைப்பிருமன் மூக்குநீர்—வாலகப
தோட மதிசாரந் தொடர்வாத குன்மநீர்த்
தோடமா மம்போக்குஞ் சுக்கு.

## இதுவுமது-எண்சீர்ச்சந்த விருத்தம்

வாதப் பிணிவயி றூதற் செவியாய்
வலிதலை வலிகுலை வலியிரு விழுநீர்
சீதத் தொடுவரு பேதிப் பலரோ
சிகமலி முகமக முகவிடி கபமார்

சீதச் சுரம்விரி பேதச் சுரநோய்
  தெறிபடு மெனமொழி குவர்புவி தனிலே
யீதுக் குதவு மீதுக்குதவா தெனும்விதி
  யிலையெவ சுறுகுண முளவே சுக்கு.

இ-ள். சுக்கினால் விலாக்குத்தல் அசீரணம் மார்பெரிச்சல் புளி யேப்பம் தோஷகுணம் வெப்பம் ஆசனநோய் சுவாசம் காசம் ஜல பீனசம் நீரேற்றம் மேகவாதகுன்மம் ஜலதோஷம் சீதகிரகணி வாதநோய் வயிற்றுப்பிசம் செவிக்குத்தல் முகநோய் சிரநோய் குலை வலி கபஸ்ராவம் சீதபேதி பலவித அரோசகம் அலிமுகப்பாண்டு வயிற்றுக்குத்தல் கபசீதசுர முதலிய சுரரோகங்களாகிய இவை நீங்கு மென்று சொல்லுவர். ஆயினும் இதனாலுண்டாகும் ஆரோக்கியத் தைக் கருதுமிடத்தி லிந்நோய்க்குதவும் இந்நோய்க்குதவாது என் னும் நியதியில்லாததால் சகல ரோகங்களுக்கும் உபயோகப்படத் தக்கதாம் என்க.

தேரையர்கூறிய இவ்விரண்டாஞ் செய்யுளில் மொழிகுவர் எனக் குணபாடங்களை கூறியிருப்பதை உன்னிப்பார்க்கில் சுக்கு இந்நோய்க்குதவும் இந்நோய்க்குதவாதெனவும் விதியில்லை யென்றும் சொல்லியிருப்பதுந் தவிர இச்சுக்கு மூர்த்திகள் சொரூபமென்று சொல்லும் திரிகடுகத்தின் முதன் மருந்தாயும் ஆயுள்வேதியர் கையி லெடுக்கும் ஆயுதமாயும் சிருஷ்டி கர்த்தாவாகிய பிரமனைத் தனக்கு அதிதேவதையாய்ப் பெற்றிருப்பதாயும் பிரமகுலமாயும் பாக பேதங்களினாலனந்த ஔஷத ரூபங்களாயும் மகௌஷதம் என்னும் சஞ்சீவியின் பேராகிய கோடதகம் என்னும் நாமங்களைக் கொண் டிருப்பதாயும் தேவாராதனைக்கும் உபயோகப்படுவதாயும் இருப்பதி னால் சகல ரோகங்களையும் நீக்கும் என்பது கருத்து. 1031

## மிளகின் குணம்

### வெண்பா

சீதசுரம் பாண்டு சிலேத்மங் கிராணிகுன்மம்
வாத மருசிபித்த மாமூல—மோதுசந்நி
யாசமபஸ் மார மடன்மேகங் காசமிவை
நாசங் கறிமிளகி னால்.

### இதுவுமது

கோணுகின்ற பக்கவலி குய்யரோ கம்வாத
சோணிதங் கழுத்திற்குட் டோன்றுநோய்—காணரிய
காதுநோய் மாதர்குன்மங் காமாலை மந்தமென்றீ
ரேதுநோய் கரியிருக்கி லீங்கு.

இ-ள். மிளகினால் குளிர்ச்சுரம் பாண்டு கபம் கிரகணி குன்மம் வாயு அரோசகம் பயித்தியம் மூலம் சந்நியாசம் அபஸ்மாரம் பிரமேகம் இருமல் பங்குவாதம் குய்யரோகம் வாதசோணிதவாதம் களநோய் செவிவலி ரத்தகுன்மம் அசீரணம் இவைபோம். கரி-மிளகு.

## வெள்ளைமிளகின் குணம்

வெள்ளை மிளகருந்த வீறு கிரகணிபோந்
தள்ளு கபவாதந் தானேகு—முள்ள
சுரம்போகுந் தீபனமாந் தொன்மேகம் போமுத்
திரம்பார்த் தெவர்க்குந் தெரி.

இ-ள். வெள்ளை மிளகினால் கிரகணி சிலேத்மவாதம் ருட்சைசீழ்ப்பிரமேகம் இவை நீங்கும். ஜடாக்கினி உண்டாமென்க. 1034

## வால்மிளகின் குணம்

வாதபித்த மையம் வயிற்றுவலி தாகஞ்
சீதம் பலநோய் சிதையுங்காண்—போத
வதிதீ பனமா மணங்கரமே சேநாளுந்
துதிவான் மிளகருந்தச் சொல்.

இ-ள். பெண்கள் நாயகமே! வால்மிளகினால் திரிதோஷகோபம் குன்மம் விதாகம் வெட்டை முதலிய சிற்சில ரோகங்கள் விலகும், பசியுண்டாகுமென்க. 1035

## திப்பிலியின் குணம்

கட்டளைக்கலிப்பா

இருமல்குன்ம மிரைப்பாசயப்பிணி
யீளைபாண்டுசந் நியாசமரோசகம்
பொருமலூதை சிரப்பிணிமூர்ச்சைநோய்
பூரிக்குஞ்சல தோடம்பீலிகமும்
வருமலப்பெருக் கோடுமகோதரம்
வாதமாதிமுத் தோடஞ்சுரக்குளிர்
பெருமலைப்புரி மேகப்பிடகமும்
பேருந்திப்பிலிப் பேரங்குரைக்கவே.

இதுவுமது—வெண்பா

ஆசனநோய் தொண்டைநோ யாவாண பித்தமுத
ஞசிவிழி காதிவைநோய் நாட்புழுநோய்—வீசிவிடு
மங்கலாஞ் சனஞ்சிதைவு மப்பா யழிவிந்தும்
பொங்கலாஞ்ச நக்கையர்கோட் போல்.

இ-ள். திப்பிலியால் காசம் கபகுன்மம் சுவாசம் க்ஷயம் கோழை பாண்டு சந்நியாசம் அருசி வயிற்றுப்பிசம் வாயு சிரஸ்தாபம் மூர்ச்சை நீரேற்றம் பீலிகநோய் அதிசாரம் பெருவயிறு திரிதோஷம் நடுக்கல் சுரம் மேகக்கட்டி குதரோகம் நெஞ்சுநோய் ஆவிருதபித்தம் பீநசம் விழிநீர்க்கம்மல் கர்ணநாதம் கிருமி முகத்தில் எழும்புகின்ற கறுத்தமச்சம் முதலியவை நீங்கும். 1037

## யானைத்திப்பிலியின் குணம்

வாதமறுந் தீபனமா மாருக் கபங்கரப்பா
ஞேதுகுரற் கன்மலிவை யோடுங்காண்—பூதலத்திற்
சோனையைநேர் நாசியினீர் தோலாச் சுவாசமும்போம்
யானையினற் றிப்பலியா லாய்.

இ-ள். யானைத்திப்பிலியால் வாதகோபம் சிலேஷ்மம் கரப்பான் சுரசாதரோகம் நீர்ப்பீநசம் இரைப்பு இவை நீங்கும், தீபனமுண்டாம். 1038

## திப்பிலிமூலத்தின் குணம்

தாகபித்தஞ் சோகந் தணியாச் சுரமிருமன்
மேகங் குரற்கம்மன் மெய்க்கடுப்பு—மேகுங்காண்
திப்பிலிமூ லங்கண்டத் திப்பிலிய தாநறுக்குத்
திப்பிலியென் றேயொருகாற் செப்பு.

இ-ள். திப்பிலி மூலத்திற்குப் பித்ததாகம் மூர்ச்சை சந்தசுரம் காகம் பிரமேகம் சுக்கிலரோகம் சரீர நோவு இவை போம். திப்பிலி மூலம் கண்டத்திப்பிலி நறுக்குத்திப்பிலி நறுக்குமூலம் தன்மூலம் எனவும் வழங்குமாம். 1039

## திரிகடுகின் குணம்

முக்கடுகா லாகியநோய் மூலங் கொடிறுபிணி
திக்கடு பாண்டோடு சிரத்துறுநோ—யக்கடுக்குந்
தாவரநஞ் சென்றுலகிற் சாற்றுகின்ற நோய்முழுதுந்
தீவரநஞ் சுண்டிறக்குந் தேர்.

### இதுவுமது

திரிகடுகாற் சீதபித்தஞ் சிக்குவைநோய்க் கீட
மெரிக்கடுதே ளீளைபிருமன் முடுக்கு—தெரிசந்நி
யாமழிசி யபஸ்மார மற்புதப் புண்மிக்க
வீகசர்க்க ராநோய்போம் விள்.

இ-ள். திரிகடுகு என்பது சுக்கு மிளகு திப்பிலி ஆம். இவைக ளால் ஆகிய வாதங்கள் குதாங்குரம் கர்ணரோகம் பாண்டு சிரஸ் தாபம் அஸ்தியைப்பற்றிய தாவரவிஷம் கபபித்தம் சிக்வாகண்டம் கிருமிமா சர்ப்பவிஷம் தேள்விஷம் கோழை காசம் சந்நிதியாசம் அரோசகம் அபஸ்மாரம் அற்புதவிரணம் நாடிவிரணம் இவை விலகும். 1041

## கடுக்காயின் சிறப்பு

கடுக்காயுந் தாயுங் கருதிலொன் றென்றாலும்
கடுக்காயத் தாய்க்கதிகங் காணீ—கடுக்காய்நோ
யோட்டி யுடற்றேற்று முன்றவன்னை யோசுவைக
ளூட்டியுடற் றேற்று முவந்து.

இ-ள். கடுக்காயுந்தாயும் ஒன்றென ஒருவாறு நினைந்தாலும் தாயைப்பார்க்கிலும் கடுக்காயே அதிகமாம்; ஏனெனில் கடுக்காயா னது பிணிகளை நீக்கிச் சரீரத்தை தேற்றும், தாயானவள் அறுசுவை உணவை ஊட்டி உடலை வளர்ப்பாள் என்க. பிணிகளை நீக்கினலல் லவோ உணவு பயன்பட்டு உடல்தேறும் என்னும் வகையறியாமல் உணவை மாத்திரம் ஊட்டுந்தன்மை யுடையவளாதலால் அத்தாயி னும் கடுக்காய் சிறந்ததெனக் கூறினர். 1042

## கடுக்காயின் பொதுக்குணம்

தாடைக் கழுத்தக்கி தாறி குறியிவிடப்
பீடை சிலிபமுதற் பேதிமுட—மாடையெட்டத்
தூலமிடிப் புண்வாத சோணிகா மாலையிரண்
டாலமிடி போம்வரிக்கா யால்.

இ-ள். கடுக்காயினால் கன்னம் களம் கண் நா ஆண்குறி இவ்வி டத்துநோய்கள் பாதவன்மீகம் அதிசாரம் பங்குவாதம் அதிதூலம் இடிப்புண் வாதசோணிவாதம் காமிலம் தாவர சங்கம விஷங்கள் இவைபோம். வரிக்காய்-கடுக்காய். 1043

## கடுக்காய்ப்பிஞ்சின் குணம்

வன தூர்க்கிச் சேய்க்கு மணித்தயிலம் பூசி
யனலிற் பொரித்தாங் கருந்தத்—தினமுமலச்
சிக்கிலக்க டுப்பகின்ற சீதமறுங் காற்றுகைத்த
முக்கலக்க டுப்பிருக்கு மோ.

இ-ள். கடுக்காய்ப் பிஞ்சுக்கு ஆமணக்குநெய் தடவித் தீயில் வறுத்துத் தூள்செய்து அப்போதே உண்டால் மலச்சிக்கலும்

எலும்பைப்போல வெளுத்து நின்ற சீதமும் நீங்கும், மூலவாயுவி னால் பிறந்த முக்கலும் ஆசனக்கடுப்பும் இருக்குமோ; இராதென்பது கருத்து. வனதுர்க்கி-கடுக்காய்மரம். 1044

## கடுக்காயின் பேதம்

ஆதி விசய னரோகிணியோ டேபிருதி
தீதி லமிர்த சிவந்திமலே—மீதார்
திரிவிருத் தீயபயன் செப்பிலிவை யேழா
மரிதகியின் பேர தறி.

இ-ள். கடுக்காய் எழுவகைப்படும் அவையாவன: விஜயன் அரோகிணி பிரிதிவி அமிர்தை சிவந்தி திரவிருத்தி அபயன் என் பனவாம். 1045

## 1-வது விசயன் கடுக்காயின் குணம்

விசயனெனுங் கடுக்காய் வீரியத்தைச் சொல்வோம்
நிசமதுதான் வாதத்தை நீக்கு—முசையுரைக்கப்
பேய்ச்சுரைக்காய் போலிருக்கும் பேரவந்தி யாந்தேசம்
வாய்ச்சிருக்கு மக்காயை வாழ்த்து.

இ-ள். பேய்ச்சுரைக்காய் குறியுள்ள விசயன் என்கிற கடுக்காய் வாதரோகத்தைப்போக்கும்; இது அவந்திதேசத்தில் உற்பத்தியாம்.

## 2-வது அரோகிணிக் கடுக்காயின் குணம்

ஓது மரோகிணிக்கா யொன்றுண்டா னற்சந்நி
பாதமொடு சீதம் பறக்குங்காண்—மீதுகுறி
நான்குவரி யாய்த்தோற்று நங்கா யதன்றேச
மாங்குகன்னி யாகுமரி யாம்.

இ-ள். கனனியாகுமரி தேசத்தில் பிறக்கின்ற அரோகிணிக் கடுக்காயால் சந்நிபாதமும் சீதமும் நீங்கும்; இதன்மீது 4-வரை போல் குறியிருக்கும். 1047

## 3-வது பிருதிவிக் கடுக்காயின் குணம்

தோற்றும் பிருதிவிதான் றோலாப் பயித்தியத்தை
மாற்றும் வயதை வளர்க்குமதன்—மேற்றோலோ
மெல்லியதா மக்கால் விளைதேச மேதென்னில்
வல்லசவு ராட்டிகமாய் வாழ்த்து,

இ-ள். மெல்லியதோலுள்ள பிருதிவிக் கடுக்காய் பித்தரோயை நீக்கும், ஆயுளை விருத்திசெய்யும், சவுராஷ்டிர தேசத்தில் உற்பத்தி யாம். 1048

## 4-வது அமிர்தக்கடுக்காயின் குணம்

அமிர்த மெனுங்கடுக்கா யம்புவியி லுள்ள
திமிர்த சிலேட்டுமத்தைத் தீர்க்கும்—வமிதச்
சதைப்பற்றுண் டாயிருக்குஞ் சாற்றில்தன் றேசங்
கதிக்கொத்த காசியென்பார் காண்.

இ-ள். விம்மித் தசை மிகுந்துள்ள அமிர்தக் கடுக்காய் கண்டத்தில் ஒருவித ஒலியைத் தருகின்ற கபத்தை ஒழிக்கும். இது காசி தேசத்தில் உற்பத்தியாம். 1049

## 5-வது சிவந்திக்கடுக்காயின் குணம்

சிவந்தி யெனுங்கடுக்காய் செய்குணத்தைக் கேட்பாய்
விவர்ந்தமூ லத்தையெலா மேய்க்குஞ்—சிவந்ததிகப்
பொன்னிறம தாயிருக்கும் பூங்குழலே யக்கடுக்காய்
துன்னுவனந் தோறுமுண்டாஞ் சொல்.

இ-ள். மலரணிந்த கூந்தலை யுடையாளே! மிகு சிவப்பும் தங்கச் சாயலுமுள்ள சிவந்திக் கடுக்காயானது வாத மூல ரோகங்களை விலக்கும். இது வனங்களில் உற்பத்தியாம். 1050

## 6-வது திரிவிருத்திக் கடுக்காயின் குணம் (மொந்தன்)

திரிவிருத்திக் கடுக்காய் தேகத்தி னூறும்
வருவிரணம் போக்குமதன் வன்ன—மொருவிதமோ
பஞ்சவன்ன மூவரம்பு பற்றி யிருக்குமது
விஞ்சுமலை தோறுமுண்டாம் விள்.

இ-ள். வெண்மை கருமை செம்மை பசுமை மஞ்சள் என்னும் பஞ்சவன்னமும் மூன்று வரியுமுடைய திரிவிருத்திக் கடுக்காய் சகல விரணங்களையும் நிவர்த்தி செய்யும். இது மலைகளில் உற்பத்தியாம்.

## 7-வது அபயனென்னும் கடுக்காயின் குணம்

அபய னெனுங்கடுக்கா யங்கரோ யெல்லா
மபயமிட் டோட வடிக்கு—மபயங்
கதிக நிறங்கறுப்ப தாகும் விளைபூமி
பொதிய மலையாம் புகல்.

இ-ள். கருமை நிறமுள்ள அபயன்கடுக்காய் எலும்பைப்பற்றிய ரோகங்களையெல்லாம் நீக்கும். இது பொதியமலையில் உற்பத்தியாம்.

## சங்கரசாதிக் கடுக்காய் நான்கு வகையில்

## 1-வது கருங்கடுங்காயின் குணம்

பழமலத்தைப் போக்கும் பகரி லுடலுக்
கழகுதரும் புத்தி யளிக்கும்—பழைய

மருங்கடுத்த வாதபித்த வன்கபத்தைத் தீர்க்குங்
கருங்கடுக்கா யென்றுளத்திற் காண்.

இ-ள். கருங் கடுக்காயாவது பழைய மலக்கட்டையும் திரிதோஷ ரோகங்களையும் போக்கும். அழகையும் அறிவையும் கொடுக்கும் என்க. 1053

## 2-வது செங்கடுக்காயின் குணம்

சுத்தியொடு புத்தி சுகமும் புகழுமுண்டா
மெத்தவொளிர் பொன்னிறமா மேனியெல்லாஞ்—சுத்தகப
வங்கடுத்த விளைபல வன்காச மும்மலமுஞ்
செங்கடுக்காய்க் கில்லையெனத் தேர்.

இ-ள். செங்கடுக்காய்க்கு மலாசயச் சுத்தி அறிவு இன்பம் கீர்த்தி சரீரத்தில் பொற்சாயல் ஆகியவைகள் உண்டாம். தனிச் சிலேத்மக் கோழை பலவித இருமல் மலக்கட்டு ஆகியவைகள் விலகுமென்க. 1054

## 3-வது வரிக்கடுக்காயின் குணம்

மிடுக்காக்குந் தேகத்தை விந்துவையுண் டாக்குஞ்
சடக்கெனவே யுண்டியையுட் சாடுந்—துடுக்கான
வாதபித்த வையகற்றும் வன்னியொடு நவ்விதருஞ்
சாதி வரிக்கடுக்காய் தான்.

இ-ள். வரிக் கடுக்காய், தேகபுஷ்டி தாதுவிர்த்தி அசனசீரணம் வாத பித்த தோஷங்களை யகற்றும், அழகை யுண்டாக்கும். 1055

## 4-வது பால்கடுக்காயின் குணம்

ஆமங் கெடுங்கா ணழகும் பொலிவுமிகுஞ்
சேமம் பெருமலமுஞ் சேருமே—தாமநெடும்
வேற்கடைக்கண் கும்பமுலை மெல்லியலே யெப்போதும்
பாற்கடுக்கா யுண்பவரைப் பார்.

இ-ள். மெல்லியலே! பால்கடுக்காயால் சீதகிராணி நீங்கும். வனப்பு தேஜசு வன்மை இவை விருத்தியாகும். 1056

## நெல்லிமுளையின் குணம்

ஆகவன லஞ்சசியர்க் கென்புருக்கி கண்ணோய்
தாக முதிரபித்தந் தாதுநட்டம்—மேனகத்தி
னில்விமுள்ளி போலருக லெண்கா மியவியங்க
நெல்லிமுள்ளி யாற்போம் நினை.

இதுவுமது

நல்லநெல்லி முள்ளியது நாவுக் குரிசைதரு
மல்லல்விரி பித்த மகற்றுமதை—மெல்லத்
தலைமுழுகக் கண்குளிருந் தாவுபித்த வாந்தி
இலையிழிமே கங்களும்போ மெண்.

இ-ள். நாவுக்குரிசை தராநின்ற நெல்லிமுள்ளியால் உட்சூடு சோமரோகம் மாதர்கள் ருது தோஷம் அஸ்திசிராவம் தாம்பிரமேகம் இரத்தபித்தம் விம்மிக்ஷீணம் அருசல் ஆண்குறிக் கொப்பளம் பயித்தியம் பித்த வாந்தி பிரமேகம் ஆகியவைகள் விலகும். இதை அரைத்துச் சிரசுக்கிட்டு முழுக நேத்திரம் குளிருமென்க. 1058

## தான்றிக்காயின் குணம் (இதுவே தாணிக்காய்)

சிலந்திவிடங் காமியப்புண் சீழான மேகங்
கழந்திவரும் வாதபித்தங் காலோ—டடர்ந்துடலி
லூன்றிக்காய் வெப்ப முதிரபித் துங்கரக்குந்
தான்றிக்காய் கையிலெடுத் தால்.

இதுவுமது

ஆணிப்பொன் மேனிக் கழகு மொளிவுமிகுந்
தோணிக்கொள் வாதபித்தக் கொள்கைபோந்—தாணிக்காய்
கொண்டவர்க்கு மேகமறுங் கூறு வனற்றணியுங்
கண்டவர்க்கு வாதம்போங் காண்.

இ-ள். தான்றிக் காயால் சிலந்தி விஷம் ஆண்குறிக் கிரந்தி சீழ்ப்பிரமேகம் திரிதோஷ சுரம் இரத்தபித்தம் வாத பித்தத் தொந்தம் பித்தநீர் உட்சூடு வாத கோபம் இவைகள் போம். அழகும் ஒளியும் உண்டாம். 1060

## திரிபலத்தின் குணம் (இதுவே கடுநெல்லித் தான்றி)

வித்திரதி நாசிநோய் வெண்குட்ட மாசனப்புண்
குற்றிருமல் பாண்டுகுட்டங் குன்மமிரைப்—பொற்றுமத
மூர்ச்சைபிலி கம்பிரம மோடுறுபுண் சர்வவிட
மூர்ச்சையறு முப்பலத்தான் முன்.

இ-ள். திரிபலத்தால் வித்திரி பீநசம் வெள்ளைக்குஷ்டம் பகந்தரம் புண்கையிருமல் பாண்டு பெருவியாதி குன்மம் சுவாசம் மதரோகம் மூர்ச்சை பிலிக்கட்டி பிரமேகம் வயிற்றுநோய் விரணம் சர்ப்பகீட விஷங்களால் வந்த சோபம் ஆகியவை நீங்கும். 1061

## பேரீச்சங்காயின் குணம் (இதுவே கர்ச்சூர்க்காய்)

வாயிலுண்டா மூற்றலை மாற்றும் பசியில்லை
யாயிலுண்டா லுண்டா மதுமேக—நோயுள்
பெருநீர் மறுக்குமினுப் பெண்களைக்கூட் டுங்காற்
றருநீர்மை தருச்சூர்க்காய் தான்.

இ-ள். பேரீச்சங்காய் உமிழ் நீர்ப் பெருக்கையும் மதுநீரையும் போக்கும். பசியையும் புணர்ச்சியில் திருவாகத்தையும் உண்டாக்கு மென்க. 1062

## கண்டுபாரங்கியின் குணம் (இதுவே சிறுதேக்கு)

விருத்தம்

கண்டுபா ரங்கியெனுஞ் சிறுதேக்குண்டாற்
காலெங்கே பித்தமெங்கே கபந்தானெங்கே
தொண்டுதொட்டுத் தொண்டர்சுவாச காசமெங்கே
சுரமெங்கே வெறியெங்கே தொனிநோயெங்கே
மிண்டுபுரி பீசநீர்க் கோவையெங்கே
வெளிநீருண் ணீரெங்கே விரற்காலெங்கே
யண்டுபடாச் சீதசுரங் கடுப்புமெங்கே
யழலையக நோயெங்கே யறைகுவீரே.

இ-ள். கண்டுபாரங்கி என்கிற சிறுதேக்கினால் திரிதோஷ விகுணம் கசச்சுவாசகாசம் ருட்சை பயித்தியம் சுரசாதம் நாசிநோய் சலதோஷம் மூங்நீர்க்கோவை புச்சாவர்த்தவாதம் குளிர்ச்சுரம் உடல் வலி உடல் காந்தல் மனச்சங்கடம் இவைகள் போகும். 1063

## அரத்தையின் பொதுக் குணம்—வெண்பா

தொண்டையிற்கட் டுங்கபத்தைத் தூரத் துரத்திவிடும்
பண்டைச்சீ தத்தைப் பறக்கடிக்குங்—கெண்டைவிழி
மின்னே கரப்பனையே ருக்கும் பசிகொடுக்குஞ்
சொன்னே மரத்தைச் சுகம்.

இதுவுமது

மார்பை யடர்பிணி மாசுவாச காசமூலஞ்
சேர்சோபை தட்டச் சூர்வாச—சோணி
சுரத்தை யடுபடாமற் றாறுக ணேரி
னரத்தி னெடுதுகளி தாம்.

இ-ள். கெண்டைமீனைப்போன்ற கண்களையுடையவளே! அரத்தை நெஞ்சுக்கோழை சீதளம் கரப்பான் இருத்ரோகம் ஈளை இருமல்

மூலம் வீக்கம் தந்தநோய் வாதசோணிதம் தீச்சுரத்தால் பிறந்த கபம் தந்தமூலம் பிணி இவைகளை நீக்கும். பசியைத்தரும். 1065

## பேர் அரத்தையின் குணம் (இதுவே தும்ராஷ்டகம்)

வாத மிசிவுவலி சந்நிபித் தத்தையும்
சீதசுரந் தாவிரணஞ் சொன்னநீ—ரோதுபல
வாங்கடுப் பூப்படரு மாறு மொளியாரு
மீங்கடரும் பேரரத்தை யால்.

இ-ள். பேரரத்தையினால் வாதநோய் பின்னிசிவு வலிப்பு சந்நி பாதம் பித்தகபம் நடுக்கற்சுரம் கிளைக்கின்றபுண் சிரசில் நீரேற்றம் சலவிஷம் ஸ்திரீகள் ருதுதோஷம் இவையொழியும், தேஜசுண்டாம்.

## சிற்றரத்தையின் குணம்

வாந்திபித் தங்கரப்பான் வாதஞ் சிரரோகஞ்
சேர்ந்தகப முத்தோடஞ் சீதமொடு—நேர்ந்தசுர
மற்றரத்தைக் காட்டி வருமிரும லுந்தீருஞ்
சிற்றரத்தை தன்மருந்தாற் றேர்.

இ-ள். சிற்றரத்தையால் சர்த்தி பயித்தியம் கரப்பான் வாயு சிரஸ்தாபம் சிலேஷ்மம் சிரதோஷம் சீதளம் பலசுரம் காசமும் போம். 1067

## வசம்பின் குணம்

கட்டளைக்கலித்துறை

பாம்பாகி நஞ்சற் புதப்புண் வலிவிட பாகங்குன்மஞ்
சூம்பா ரிரத்தபித் தம்முக நாற்றம்வன் சூலைசந்நி
வீம்பாம்பை சாசம் பிலீகஞ் சிலிபதம் வீறிருமா
றும்பாக்கிருமி யிவையேகு மாசி வசம்பினுக்கே.

இ-ள். வசம்பை விரும்புவையாகில் சர்ப்பகீட தாவரகிதத்திரம் முதலிய விஷங்கள் அற்புதவிரணம் ஐவகைவலி விஷபாகரோகம் குன்மம் ரத்தபித்தம் வாய்நாற்றம் சூலை சன்னிபாதம் பிசாசம்பிலி கம்பாதவன்மீகம் காசம் வயற்றுப்பல் நீண்டமலக்கிருமி இவைபோம்.

## வட்டத்திருப்பியின் குணம்

வெண்பா

ஐயநஞ் சூதைபித்தத் திக்கறைவ மாபிரமி
வெய்யசுரம் பேதி விரணமெலாம்—வையம்விடுத்
தெட்டத் திரும்பிவிடு மென்பையூ றைக்குமன்றி
வட்டத் திருப்பிவிடு மால்.

இ-ள். வட்டத்திருப்பி சிலேத்மகோபம் விஷம் வாததோஷம் பித்தநோய் அஸ்திசிராவம் பிரமியம் பித்தசுரம் அதிசாரம் சிரங்கு ஆகியவைபோம்; மாமிசதாதுவை விருத்திசெய்யுமென்க. 1069

## கோஷ்டத்தின் குணம்

### விருத்தம்

திட்டிகவுள் அகடுகளஞ் சென்னிநாவி
 தெறிபுண்வெப்ப மைதப்புதா வர்த்தமூழை
முட்டியெழு முளைவிரணஞ் சுவாசகாச
 மூடிகத்தோ டரவுமரவிடங்கண் மேகக்
கட்டியஜ கல்லிவிட பாகம்பூத
 கணம்பால கிரகமொடு தாதுநட்டஞ்
சொட்டிவரு பிரமிபித்த மிவையொருங்கே
 தொலையும் விரணாரிக்குச் சுகப்பேறுமே.

இ-ள். கோஷ்டத்தினால் கண் தாடை வயிறு கழுத்து சிரசு நாவாய் இவ்விடங்களினோய்கள் தோஷசுரம் வீக்கம் உதாவர்த்தகம் கம்பவாதம் முளை மூலசம் ஈளை இருமல் எலி சர்ப்பம் நாவி முதலிய விஷங்கள் மேகப்பிடகம் அஜகல்லிகாரோகம் விஷபாகம் 18-வகை பூதகணங்கள் பாலகிரகதோஷம் வீரியநஷ்டம் வெள்ளைவீழல் பயித்தியம் ஆகிய இவை விலகும், சுகப்பிரசவம் உண்டாம் என்க. விரணாரி-கோஷ்டம். 1070

## அதிமதுரத்தின் குணம் (இதுவே மதூகம்)

கத்தியரி குப்பிணியால் வகுப்புண் டாகுங்
 கண்ணோயுன் மாதம்விக்கல் வலிவெண்குட்டம்
பித்தமெலும் புருக்கிரிச் சரமா வர்த்த
 பித்தமத மூர்ச்சைவிட பாகம்வெப்பந்
தத்திவரு வாதசோ ணிதங் காமாலை
 சருவவிடங் காமியநோய் தாதுநட்டம்
குத்திரும வாசியங்க மிதன்நோ யிந்து
 குயப்புணும்போ மதூகமெனக் கூறுங்காலே.

இ-ள். அதிமதுரத்தினால் ஆயுதங்களாற் சனித்த சத்தியோ விரணம் வாதாதிகளாற் பிறந்த நிஜவிரணம் நாவறட்சி நேத்திர நோய் உன்மாதம் இத்தியாதிரோகம் 5-வித வலிகள் வெண்குஷ்டம் பயித்தியம் அஸ்தி சிராவம் மூத்திரக்கிரிச்சம் அவர்த்த பயித்தியம் மதம் மூர்ச்சை பித்தவிஷபாகம் சுரம் வாதசோணிதவாதம் காமிலம் தாவரசங்கம் விஷங்கள் குய்யரோகம் சுக்கிலநஷ்டம் புகையிருமல்

..பாகம் சிரநோய் ஒஷிடரோகம் சோமரோகம் ஸ்தனவித்திரிக் ..ட்டி இவைகள் போம் என்க. 1071

## அதிவிடயத்தின் குணம்

வெண்பா

அதிவிட யஞ்சருக்க ரார்ப்புதநோய் வெப்பு
கொதிமருவு பேதியொடு கோழை—யெதிர்வாந்தி
யென்றுரைக்கு நோய்க்கூட்ட மில்லா தகற்றிவிடுங்
குன்றை நிகர்முலையாய் கூறு.

இ-ள். மலைபோலு முலைகளையுடையவளே! அதிவிடயம் சருக் கரார்ப்புதவிரணம் சுரம் தேகமுள் அதிசாரம் ஈளை மேல்நோக்கிய ..ர்த்தி முதலிய நோய்களை விலக்கும். 1072

## அக்காரகாரத்தின் குணம்

அக்கார கார மதன்பே ருரைத்தக்கா
லுக்கிர காலத்தோட மோடுங்காண்—முக்கியமாய்
கொண்டாற் சலமூறுங் கொம்பனையாய் தாகசுரங்
கண்டாற் பயந்தோடுங் காண்.

இ-ள். கொம்பனையாளே! அக்காரகாரத்தால் பயங்கரமான காலதோஷமும் தாகசுரமும் நீங்கும்; இதை வாயில் அடக்கிக்கொள் ளில் சலம் ஊறும். 1073

## கடுகுரோகணியின் குணம்

மாந்தஞ் சுரமையம் வாயுகரப் பானுமச்
சேர்ந்தமலக் கட்டுந் திரிதோடம்—பேர்ந்தபொட்டிப்
புண்வயிறு நோயிவைபோம் பொற்கொடியே பேதியுண்டாந்
திண்கடுகு ரோகணிக்குத் தேர்.

இ-ள். கொடியிடையாளே! கடுகுரோகணிக்கு க்ஷீராலஜகம் கணசுரம் கபாதிக்கம் வாதகோபம் கரப்பான் சீதபேதி பழைய மல பந்தம் தோஷம் விரணம் வயிற்றின் வலி இவை விலகும், விரே சனமுண்டாம். 1074

## பீதரோகணியின் குணம்

படர்நீல காசம் படலமொடு பில்லந்
தொடரிமைக ளிற்றேன் றுந் தோட—மடரு
மருவியெனச் சொல்லுகின்ற வக்கிநோ யேகு
மொருபீத ரோகணியை யுன்.

இ-ள். பீதரோகணியால் கருவிழி நீலகாசம் கிருஷ்ண மண்ட லம் இமையைப்பற்றிய நீர்ப்பில்லம் கிருச்சிரோன் மீலனம் முதலிய ரோகங்கள் கபஸ்ராவம் ஆகிய இவைகள் நீங்கும் என்க. 1075

## கிரந்திதகரத்தின் குணம்

சிறுபித்த நோயுந் திரைபொருதல் போலுமெறிந்
தேறுஞ் சுவாசநோ யென்பதுவும்—வீறிப்
பரந்தசர்க் கார்ப்புதமும் பன்னப் புகுங்காற்
கிரந்திதக ரத்தாற் கெடும்.

இ-ள். கிரந்தி தகரத்தால் பயித்தியரோகமும் சுவாசரோகமும் சர்க்காரார்ப்புத விரணமும் ஒழியும் என்க. 1076

## செவ்வள்ளிக்கொடியின் குணம்

செவ்வள்ளி யின்கொடிக்குச் சேடித்த குட்டமொடு
கவ்வக் குறைநோய் கரப்பானு—மிவ்வுலகின்
மானே குடல்வாதம் வல்ல கடுவனுட
னுனபரு மூலமும்போ மால்.

இ-ள். மானனையாளே ! செவ்வள்ளிக் கொடிக்கு வீறுகுஷ்டம் பெருவியாதி கடுவன் குடலண்டம் நகம் குதிக்கால்களைப் பற்றிய கொப்புளம் மூலம் இவை தீரும். 1077

## சவ்வியத்தின் குணம் (இது செவ்வியமென மருவியது)

சூலை யருசிசன்னி தொல்லீரம் பீளைபித்த
மேலைக் குரற்கம்மல் வெங்களநோய்—மூலசுரங்
கவ்வியங்கத் தேறு கனதா வரவிடமுஞ்
சவ்வியங் கொள்ளவிடுந் தான்.

இ-ள். சவ்வியத்தால் குத்தல் அரோசகம் சந்நிபாதசுரம் நீடித்தகாசம் கோழை பயித்தியம் சுரசாதம் தொண்டைநோய் புராணசுரம் எலும்பைப்பற்றி யேறுகின்ற தாவரவிஷம் ஆகியவைகள் போம். 1078

## சடாமாஞ்சியின் குணம் (இதுவே பருங்கோரை)

குட்டம் சிலந்திவிடங் கோர புராணசுர
முட்டினங்கால் பேதிகண்ணோ யொட்டிருமல்—சொட்டிரத்த
பித்தமிரைப் பேகும் பெருங்கோரை யென்றுரைக்குஞ்
சுத்தசடா மாஞ்சிதனைச் சொல்.

இ-ள். சடாமாஞ்சியால் குஷ்டம் சிலந்திவிஷம் பழையசுரம் உட்சூடு வாயு பேதி விழிநோய் காசம் ரத்தபித்தம் சுவாசம்போம்.

## விலாமிச்சவேரின் குணம்

மேகம் விழியெரிச்சல் வீறிரத்த பித்தமொடு
தாகமத மூர்ச்சைபித்தஞ் சார்மயக்கஞ்—சோகஞ்

சிரநோயிவைபெகுஞ் செய்யவிலா மிச்சைக்
கெரிகிரமு மின்றென் றிசை.

இ-ள். விலாமிச்சினால் மேகநீர் கண்ணெரிவு உதிரபித்தம் தாகம் மதம் மூர்ச்சை பயித்தியம் மயக்கம் சோபம் தலைவலி சுரம்போம்.

## பறங்கிப்பட்டையின் குணம்

தாகம் பலவாதந் தாதுநட்டம் புண்பிளவை
மேகங் கடிகிரந்தி வீழ்மூலங்—தேகமுடன்
குட்டை பகந்தரமேற் கொள்வமனம் போம்பறங்கிப்
பட்டையினை யுச்சரித்துப் பார்.

இ-ள் பறங்கிப்பட்டையால் தாபம் பற்பல வாதநோய் விந்து நஷ்டம் விரணம் பிளவை நீரிழிவு கடிவிஷம் சிரங்கு மூலமுளை முடவாதம் குறைநோய் கபம் பகந்தரப்புண் வாந்தி இவைகெடும்.

## பிசின்பட்டையின் குணம்-(இதுவே மயிலாலக்கடி)

தசையிலுஞ் சோரி தனிலும் பறந்தே,
வசிபோற்குத் திக்குடையும் வாய்வை—நிசமாகக்
கொல்லு முடம்பின் கொதிப்பை யொருநொடியில்
வெல்லும் பிசின்பட்டை விள்.

இ-ள். பிசின்பட்டை மாமிசத்தையும் உதிரத்தையும் பற்றி விருக்கின்ற ஆவிருவாதத்தையும் சரீரவெப்பத்தையும் போக்கும்.

## வெள்ளிலோரத்தின் குணம்

தாவரநஞ் சென்புருக்கி தாழா மகோதரநோய்
கூவவொட் டாத குராற்சாதம்—பூவுலகில்
வெல்ல வரிதாய வியங்கமுதா வர்த்தமும்போம்
நல்லவெள்ளி லோரத்தி னால்.

இ-ள். வெள்ளிலோரத்தினால் விஷவிருக்ஷங்களின் நஞ்சு எலும்புருக்கி பெருவயிறு குராற்கம்மல் வியங்கரோகம் உதாவர்த்த ரோகம் இவைகள் தீருமென்க. 1083

## இலவங்கப்பட்டையின் குணம்

தாதுநட்டம் பேதி சருவவிட மாசியநோய்
மீக கிரஞ்சிலந்திப் பூச்சுவிடஞ்—சாதிவிட
மாட்டுமிரைப் போடிரும்ப லாதியநோய்க் கூட்டமற
வோட்டு மிலங்கத் துரி.

இ-ள். இலவங்கப் பட்டையானது சுக்கில நஷ்டம் அதிசாரம் பற்பல விஷங்கள் வாயை யனுசரித்த வாதம் தேவபூதமாகிய கிரகங்கள் சிலந்தி விஷம் பாம்பு விஷம் சுவாசகாசம் முதலிய நோய்களை விலக்கும். 1084

## சன்ன லவங்கப்பட்டையின் குணம்

சன்ன லவங்கப்பட்டை தான்குளிர்ச்சி யுண்டாக்கு
மின்னுமிரத் தக்கடுப்பை யீர்க்குங்காண்—முன்னமுறு
முந்திக் கடுப்பகற்று முண்மூலப் புண்போக்குங்
கந்தமிகு பூங்குழலே காண்.

இ-ள். மலரணிந்த கூந்தலை யுடையவளே! சன்னலவங்கப் பட்டை ரத்தகிரகணி வயிற்றுப்பிடுங்கல் மூன்றும்வலைய மூலவிரணம் இவைகளை நீக்கும்; குளிர்ச்சியைத்தரும். 1085

## இலவங்கப்பத்திரியின் குணம்

மேகசுரம் சீதசுரம் வெட்டைசுவா சங்காசந்
தாகபித்தம் வாந்திசர் வாசியநோய்—வேகத்தின்
கட்டியொடு தாதுநட்டங் கைப்பருசி போக்கிவிடு
மிட்டவில வங்கத் திலை.

இ-ள். இலவங்கப்பத்திரி பிரமேகசுரம் குளிர்சுரம் வெள்ளை இரைப்பு இருமல் பித்ததாகம் வமனம் விவிர்தாசியம் சம்விவிர்தகசி மேகப்பிடகம் க்ஷீணசுக்கிலம் வாய்கசப்பு அரோசகம் இவை நீக்கும்.

## இலவங்கப்பூவின் குணம்

பித்த மயக்கமறும் பேதியொடு வாந்ியும்போஞ்
சுத்தவிரத் தக்கடுப்புந் தோன்றுமே—மெத்த
விலவங்கங் கொண்டவருக் கேற்றசுக மாகு
மலமங்கே கட்டுமென வாழ்த்து.

## இதுவுமது

சுக்கிலநட் டங்காணச் சூர்வியங்க லாஞ்சனந்தாட்
சிக்கில்விடாச் சர்வாசி யப்பிணியு—மக்கிக்குட்
டங்கப்பூ வோடு தரிபகிருந் தோன்றில
வங்கப்பூ வோடுரைத்து வா.

இ-ள். இலவங்கப்பூ பித்தகோபம் அதிசாரம் சர்த்தி உதிரக்கிரகணி ஆசனப்பிடுங்கல் க்ஷீணவிந்து செவிநோய் சிவந்தமச்சம் கறுத்தமச்சம் விவுர்தம் சம்விவுர்தம் என்ற வாதங்கள் கண்ணில் பூப்படை முதலிய நோய்கள்போம், மலங்கட்டும், சவுக்கியமும் உண்டாகும். 1088

## சாதிக்காயின் குணம்

நாதுநட்டம் பேதி சருவாசி யஞ்சிரநோ
யோதுசுவா சங்காச முட்கிரணி—வேதோ
டிலக்காய் வரும்பிணிபோ மேற்ற மயல்பித்தங்
குலக்கா யருந்துவர்க்குக் கூறு.

இ-ள். சாதிக்காய்க்கு விந்துநஷ்டம் அதிசாரம் ஆகிய வாதங்கள் தலைநோய் இரைப்பு இருமல் உஷ்ணவாத கிரகணி முதலிய ரோகங்கள் விலகும், மயக்கம் பித்தம் அதிகரிக்கும் என்க. குலம்-சாதி. 1089

## சாதிப்பத்திரியின் குணம்

சாதிதரும் பத்திரிக்குத் தாபச் சுரந்தணியு
மோதுகின்ற பித்த முயருங்காண்—தாதுவிர்த்தி
யுண்டாங் கிரகணியோ டோதக் கழிச்சலறும்
பண்டாங் குரையே பகர்.

இ-ள். சாதிப்பத்திரிக்கு அழற்சுரம் கிரகணி சலமந்தபேதி இவை நீங்கும், பயித்தியமும் சுக்கிலப்பெருக்கமும் உண்டாம் என்க. சாதி-சாதிக்காய். 1090

## தாளிசப்பத்திரியின் குணம்

நாசிகளுக் குப்பிணிக ளுட்பட்ட காசஞ்சு
வாச மருசி வமனங்கால்—வீசிவரு
மேகமந்த சுத்திசுரம் விட்டேகுந் தாளிசத்தா
லாகுஞ் சுகப்பிரச வம்.

இ-ள். தாளிசபத்திரியால் பீநசம் கிளரோகம் நாட்சென்ற இருமல் இரைப்பு அரோசகம் வாந்தி வாய்வு கீழ்ப்பிரமேகம் அசீரணம் அஸ்ததாது கதசுரம் ஆகிய இவைபோம், சுகப்பிரசவம் உண்டாம். 1091

## முப்பத்திரியின் குணம்

பத்திரிகண் மூன்றிற் பயிலுங் குணங்கேளாய்
நித்த மலக்கட்டு நீங்கிவிடுஞ்—சுத்தசுரந்
தாகமொடு வாந்திவிக்க றங்காவெக் காலையிலுங்
கோகிலமே யிக்குணத்தைக் கூறு.

இ-ள். குயில்போலும் இனிய மொழியையுடையவளே! இலவங்கம் சாதி சாளிசம் என்ற மூன்று பத்திரிகளாலும் மலபந்தம் தனிச்சுரம் அதிதாகம் வமனம் விக்கல் இவையொழியும். 1092

## கற்கடகசிங்கியின் குணம்-(இதுவே கடுக்காய்)

முக்கலையங் காசகப மூடுகிரா ணிமூல
கக்கிரத்த பித்தங் கறைப்பேதி—யுட்குடலிற்
றங்கொலிநீர்ப் புண்சுரஞ் சமீரம்விட வெப்பிவைபோஞ்
சிங்கியினாற் போகமுறுந் தேர்.

இ-ள். கற்கடக சிங்கியினால் முக்கல் ஆமம் இருமல் க்ஷயம் கிரகணி மூலமுளை ரத்தபித்தம் ரத்தபேதி குடலிரைச்சல் மேகவிரணம் சுரம் விஷசுரம் ஆகிய இவைபோம், வீரியம் உண்டாம். 1093

## நாகப்பூவின் குணம்

### விருத்தம்

மதமூர்ச்சைபிரமியஞ் சுவாசகா சம்புகைச்சல்
வுதிர்குற்றகம்மல்கிட விடஞ்சருவாசியங்தே
எதிகாரங் கமலப்புண் ணோரத்தமூலம்மேகஞ்
சதிநீர்விந்துவினட் டம்போ மரிநாகமலரினுக்கே.

இ-ள். நாகப்பூவிற்கு மதமூர்ச்சை ரத்தப்பிரமியம் இரைப்பு இருமல் கண்புகை நடுக்கல் சுரசாதம் எலி முதலிய விஷம், வாயைப் பற்றிய வாதரோகங்கள், தேள்விஷம் பேதி புண்டரீககுஷ்டம் உதிரமூலம் பிரமேகம் வெப்பு வெகுமூத்திரம் க்ஷீணசுக்கிலம் ஆகியவைபோம். 1094

## சிறுநாகப்பூவின் குணம்

### வெண்பா

சிறுநாகப் பூவினது செய்கைதனைச் சொல்வோங்
குறியாடு மேகத்தைக் கொல்லு—நெறியைவிட்டுத்
தீதாற்செல் வாயுவையுந் தீர்க்குமிரு மற்போகுங்
கோதா யிதையறிந்து கொள்.

இ-ள். பெண்ணே! சிறுநாகப்பூவானது ஆண்குறியால் விழுகின்ற வெள்ளை மார்க்கந்தப்பிய ஆவிருதவாதம் காசரோகம் இவைகளை நீக்கும். 1095

## கண்டில்வெண்ணெய் கூகைநீற்றின் குணம்

கண்டில்வெண்ணெய் மாதேகேள் காந்திப் பிரதாபமுமாந்
தொண்டையினுண் ணீர்க்கட்டுத் தூரிருமன்—மிண்டிவரு
நீர்க்கடுப் பக்ஷலத்து ணீர்க்குத்த லும்போக்கும்
பார்க்கு ளறியப் பகர்.

### இதுவுமது

கூகைநீற்றான் மாதர் குய்யநோய் வித்திரிதி
யாகமெனு மார்பிணோ யண்டுமோ—போகமதில்

வீரியமு முண்டாக்கும் வீழ்கிருமி நோயோடுந்
தூரிருமல் வீளையும்போம் சொல்.

இ-ள். கண்டில் வெண்ணெயினால் காந்தியும் பிரதாபமும் உண்டாகும். தொண்டையின் நீர்க்கட்டு, நீர்க்கடுப்பு இவை நீங்கும். ...கை நீற்றினால் யோனிரோகம் வித்திரிதிக் கட்டி இருத்வாதம் ...ரிப்பழு காசம் கோழை இவை போம். விந்து புஷ்டியாம். 1096

## நாகத்தின் குணம் (இதுவே நகம்)

தலைவலி நீரேற்றந் தலையிடுப்புக் குத்தற்
றொலையாம லட்டுநோய் சோமை—நிலைவிழிநோய்
பாகனைய சொல்லாய் பெருமுதர ரோகமும்போ
நாகணத்தி லேகீ நவில்.

இ-ள். பாகன்ன வசனிப்பவளே! நாகணத்தினால் சிரஸ்தாபம் சலதோஷம் தலையிற்குத்த லுடலிடுப்பு மலட்டுநோய் வீக்கம் நீங் காத கண்ணோய் பெருவயிறு இவை ஏகும். 1097

## மாசிக்காயின் குணம்

அக்கரங்கள் போக்கிவிடு மாருத வெப்பகற்று
மெய்க்குறுதி மாசிக்காய் மென்மேலும்—தக்கதொரு
பாலர்கண் ணோய்போக்கும் பன்மேக முந்தொலைக்கும்
வேலனைய கண்ணாய் விரி.

இ-ள். வேலனைய கண்ணையுடையவளே! மாசிக்காய் பித்த சுவாகண்டம் மாருத உட்சூடு சிசுக்களின் கணச்சூடு பல மேகங் கள் இவைகளை நீக்கும், உடற்குப் பலந் தரும். 1098

## வலம்புரிக்காயின் குணம்

பூதபை சாசம் பொறுக்கொணு நேத்திரச்சூர்
கீத மிகுசெவிநோய் கேவல்விக்க—லோதுகுளிர்த்
தோடமொடு மேகங்கூன் சொன்னவையெ லாநடுக்கி
யோட வலம்புரியை யுண்.

இ-ள். வலம்புரிக்காயால் பதினெண் பூதகணங்கள் சகிக்கா விழிநோய் கர்ணரோகம் இருமலின் தீவரத்தால் வராநின்ற கேவல் விக்கல் சீத சுரத்தினது ஆயாசம் மேகம் கூன்விழுதல் ஆகியவை போமென்க. 1099

## வாய்விளங்கத்தின் குணம்

பாண்டுகுட்ட குன்மம் பருந்தூல நோய்வாதந்
தீண்டு தியவிடஞ்சி ரந்துண்டம்—தீண்டமடி
நோய்விளக்கங் காட்டாத நுண்கிருமி யாசனப்புண்
வாய்விளங்கஞ் சாட்டவிடு மால்.

இ-ள். வாய்விளங்கத்தால் பாண்டு குட்டம் குன்மம் அதிசூலம் வாயு சர்ப்பகீட தாவர விஷங்கள் சிரசு நாசி வயிறு இவைகளில் இப் பிணியுளதென்றறிதற்கரிய சன்னக்கிருமி பகந்தரம் ஆகிய இவை கள் போம் என்க. 1100

## தக்கோலத்தின் குணம் (இதுவே தக்கோலப்பொட்டு)

பாண்டுசுரம் போகும் பகரிற் பலஞ்சேருந்
தீண்டுமுப் யாசியமுந் தீருங்கா—ணீண்டதொரு
தாதுவிர்த்தி யாகுந் தளர்ந்தமல முங்கட்டுங்
கோதகலுந் தக்கோலங் கொள்.

இ-ள். தக்கோலத்தினல் பாண்டு நோய் சுரமும் இருவித மாகிய வாதங்களும் போம். பலமும் விரியவிருத்தியும் மலக்கட் டும் உண்டாம். 1101

## விழல் அரிசியின் குணம்

விழலரிசி யென்றுன் மிகுபித்த மேகு
மழல்குடலின் வாத மகலுந்—துழவு
பரிதோட மேகமிவை சேராவா நீயுங்
குறியா யிதையறிந்து கொள்.

இ-ள். விழலரிசியால் பித்தாதிக்கம் சுரம் ஆந்திர பித்தவாதம் வாத பித்த கப தோஷம் சீழ்ப்பிரமேகம் இவைகள் விலகும். 1102

## கார்போக அரிசியின் குணம்

கார்போக மாவரிசி கண்டாற் கரப்பான்புண்
பீர்சருவ நஞ்சிவை பித்தமுறும்—பார்மீதில்
வாதகப நமைச்சல் வன்சொறி சிரங்குமறும்
சீதமலர்க் குழலாய் செப்பு.

இ-ள். மலரணிந்த கூந்தலையுடையவளே! கார்போக அரிசி யால் கடுவன் விரணம் பயங்கரமான சர்ப்பகீட தாவர விஷங்கள் வாத சிலேத்ம தொந்தம் தினவு யானைச்சொறி கிரந்தி ஆகியவை விலகும். பயித்தியம் அதிகரிக்குமென்க. 1103

## வாலுழுவை அரிசியின் குணம்

வயிற்றுக் கடுப்புவலி மாறுக் கிராணி
பயித்தியங் காசமல பந்தஞ்—சயிக்கவொணுச்
சூசிகா வாதமும்போந் தொல்வா லுழுவைவிதைக்
காதிநவ சித்தர்மொழி யாம்.

இ-ள். வாலுழுவை அரிசிக்கு வயிற்றுப்பிடுங்கல் கடுப்பை யுடைய இரத்தபேதி பித்தம் இருமல் மலக்கட்டு அசிர்க்கரம் ஆகிய இவைகள் போம். 1104

## வெட்பாலை அரிசியின் குணம்

வெட்பாலை தன்னரிசி வீறுபித்த வாதமொடு
கொட்பார் கரப்பான் குடல்வாத—முப்பிசத்தைக்
காணும லேநாளுங் கண்டிக்குங் காசினியிற்
பூணூர் முலையாய் புகல்.

இ-ள். ஆபரணமணிந்த முலையை யுடையவளே! வெட்பாலை அரிசியானது பயித்திய வாத தொந்தம் கடுவன் குடல்விர்த்தி ரோகம் வயிற்றுப் பொருமல் இவைகளை விலக்கும். 1105

## காசினிவிதை, துளசிவிதை இவைகளின் குணம்

காசினி விதைக்குக் கதித்த வரோசிசர்த்தி
காசினியை விட்டேகுங் காணனமே—பேச
மளவிகற் பம்போ மருசி நடுங்குந்
துளசி நறுவிதைக்குச் சொல்.

இ-ள். அன்ன நடையாளே! காசினி விதைக்கு அருசியும் வாந்தியும் நீங்கும். துளசி விதைக்குச் சிலேத்மமும் அரோசகமும் விலகும் என்க. 1106

## புத்திரசீவி விதையின் குணம்

ஆகியதோர் மூலமன லம்வெட்டை மேகமும்போம்
போகம் விளையும் பொருமலறுந்—தாகம்போம்
புத்திர சீவியெனப் போற்றும் விதையதனு
வித்தரையுண் மாதே யியம்பு.

இ-ள். பெண்ணே! புத்திரசீவி விதையினுல் மூல சுரம் வெள்ளை நீர்ப்பிரமேகம் வயிற்றுப்பிசம் நாவறட்சி இவை போம். சுக்கிலம் விளையுமென்க. 1107

## சமுத்திரசோஷி விதையின் குணம்

ஐய மகற்று மரோசகத்தை மாற்றிவிடும்
பையுதிர வாயுவையும் பற்றறுக்கு—மெய்யை
யமிழ்த்துகின்ற நீரை யனிலத்தைப் போக்குஞ்
சமுத்திரநற் சோஷிவிதை தான்.

இ-ள். சமுத்திரசோஷி விதையானது கப தோஷம் சோணித மந்தம் அருசி அருசி அதிமூத்திரம் வாதாதிக்கம் ஆகிய இவைகளை யொழிக்கும். 1108

## கசகசாவின் குணம்

கிருமி நமைச்சல் கிராணியதி சாரஞ்
சிரநீரு நித்திரைபோஞ் செப்பி—லுருவழகுங்

காந்தியுமுண் டாகுங் கசகசா வின்குணத்தை
தேர்ந்தவர்க்கு விந்துவுமாந் தேர்.

இ-ள். கசகசாவினால் ரசதாதுக் கிருமி தினவு சீதரத்தக் கழிச்சல் மலபேதி சலதோஷம் நித்திரைபங்கம் இவை போம். தேகத்தில் சவுந்தரியம் தேஜசு சுக்கிலம் இவை விருத்தியாம். 1109

## பெரிய ஏலத்தின் குணம்—விருத்தம்

தொண்டைவாய்கவுடாலுகுதங்களிற்
றோன்றுநோயதிசாரம்பன்மேகத்தா
லுண்டைபோலெழுங்கட்டிகிரிச்சுர
முழலைவாந்திசிலந்திவிடஞ்சுரம்
பண்டைவெக்கைவிதாகநோய்காசமும்
பாழுஞ்சோமப்பிணிவந்துநட்டமுள்
வண்டையீளவன்பித்தமிவைக்கெலா
மாலமாம்பருமேலமருந்தே.

இ-ள். பருத்த ஏலமானது சுறக்கினம் பித்த முகபாகம் தாலுபாகம் பித்த சிஹ்வாகண்டகம் சருமகீலம் பேதி அரையாப்புக்கட்டி கிரிச்சரம் வாயுமூலை சர்த்தி சிலந்திவிஷம் ரூட்சை உஷ்ணபேதி விதாகம் இருமல் சோமரோகம் வயிற்றில் கப நிறைவு நெஞ்சிற் கோழை இரத்தப் பித்தமாகிய நோய்களை விலக்கும். 1110

## சிறு ஏலத்தின் குணம்—வெண்பா

மலவாத மோடு வயிற்றுக் கொதிப்புச்
சலமூறல் வாயினிப்புத் தாகஞ்—சலபேதி
வேர்க்குந் தலைநோய் மிகுரூட்சை யையமிவை
போக்குஞ்சிற் றேலமெனப் பேசு.

இ-ள். சிறு ஏலம் மலாவிருதவாயு நுரைத்தமலம் உமிழ்நீர் ஊறல் வாயினிப்பு வாகம் சலபேதி வியர்வைத் தலைவலி மிகுசுரம் கபம் ஆகியவைகள் தீரும். 1111

## மலையேலத்தின் குணம்

நாவறட்சி தாகசுர நாடா தகற்றிவிடுந்
தீவறட்சி நீர்க்கடுப்பைத் தீர்க்குங்காண்—மூவறட்சி
கூடு மரசத்தைக் கூடாம லோட்டிவிடு
நாடுமலை யேல நவில்.

இ-ள். மலையேலமானது நாவறளல் வரட்சுரம் பித்தச் சொறி நீர்ச்சுருக்கு திரிதோஷ வறட்சியால் பிறந்த அருசி ஆகியவைகளை நீக்குமென்க. 1112

## காட்டுஏலத்தின் குணம்

தீராத வாந்தி சிலேத்ம மதிசாரம்
பேரா வருசிபித்தம் பெருங்காண்—சோராமல்
காட்டேல வார்குழலே காராம் பரிமளஞ்சேர்
காட்டேல மென்றுரைக்குங் கால்.

இ-ள். நீண்ட கூந்தலை யுடையவளே! உறைப்பும் மணமும் உள்ள காட்டு ஏலத்தினாலே நீங்காத சர்த்தி கபம் பேதி அரோசகம் பயித்தியம் இவைகள் போம். 1113

## சீரகத்தின் குணம்

வாந்தி யறுங்குன்மம் வாய்நோய் பிலீகமிரைப்
பேந்திருமல் கல்லடைப்பு லாஞ்சனமுட்—சேர்ந்தகம்ம
லாசன குடாரியெனு மந்தக் கிரகணியும்
போஜன குடாரியுண்ணப் போம்.

### இதுவுமது

வாயுவொடு நாசிநோய் வன்பித்தஞ் சேராது
காய நெகிழாது கண்குளிருந்—தூயமலர்க்
காரளகப் பெண்மயிலே கைகண்ட சித்தனையுஞ்
சீரகத்தை நீதினமுந் தின்.

இ-ள். கறுத்த கூந்தலுடையாளே! சீரகத்தினால் பித்த சாந்தி அரோசகம் வயிற்றுவலி முகரோகம் பீலிகநோய் சுவாசம் காசம் அசமறிமச்சம் சுரக்கினம் சீதரத்த கிராணி வாதாதிக்கம் பீநசம் பயித்தியம் இவைகள் விலகும். சரீரத்திற்கு உறுதியும் கண்ணுக் குக் குளிர்ச்சியுமாம். 1115

## பெருஞ்சீரகத்தின் குணம் (இதுவே சோம்பு)

யோனிநோய் குன்ம முருட்சை மந்தம்பொருமல்
பேனமரு காசம் பிலீகமிரைப்—பீனவுரை
சேர்க்கின்ற வாதமும்போஞ் சீர்பெரிய சீரகந்தான்
மூக்குநோ யில்லை மொழி.

இ-ள். பெருஞ்சீரகத்தினால் வாமினி யோனி ரோகம் வயிற்று வலி சுரம் அசீரணம் வயிற்றுப்பிசம் நுரைத்த கபவிருமல் பிலீகம் சுவாசம் தொனிகத்த வாதம் அதிதும்மல் பீனசம் ஆகியவைகள் போகும் என்க. 1116

## கருஞ்சீரகத்தின் குணம்

கருஞ்சீ ரகத்தாற் கரப்பனொடு புண்ணும்
வருஞ்சீராய்ப் பீநசமு மாறி—மருந்தினாற்

காய்ச்சல் தலைவலியுங் கண்வலியும் போமுலகில்
வாய்ச்ச மருந்தெனவே வை.

இ-ள். கருஞ்சீரகமானது மண்டைக் கரப்பான் விரணம் சிராப் பீநச ரோகம் உட்சூடு சிரநோவு கண்ணோய் ஆகிய இவைகளைப் போக்கும் என்க. 1117

## காட்டுச்சீரகத்தின் குணம்

கைகறுப்பு மாறுங் கடியமே கம்போகு
மெய்க்குத்தண் ணையபித்தம் வீறுவாங்—கைக்கரிமாக்
கோட்டுப் பணைமுலையாய் குன்மவா தங்கொலையு
காட்டுநற் சீரகத்தைக் காண்.

இ-ள். யானைத் தந்தம்போலும் முலைகளை யுடையவளே! காட்டுச்சீரகத்தால் உள்ளங்கைக் கரும்புள்ளி பிரமேகம் பயித்தியம் வாத குன்மம் இவை போம். குளிர்ச்சி யுண்டாம். 1118

## பிளப்புச் சீரகத்தின் குணம்

உடலுக் கழகா முறைபித்த மேகு
மடலீறு வாத மதமாங்—கடிசேர்
தளவுநகைக் கோட்டுமுலைத் தையலே நாளும்
பிளவுநறுஞ் சீரகத்தைப் பேண்.

இ-ள். பெண்ணே! பிளப்புச் சீரகத்தினால் நீங்காப் பயித்தியமும் வாதகோபமும் நீங்கும். சரீரத்திற்கு அழகுண்டாகும். 1119

## கொத்தமல்லியின் குணம் (இதுவே உருள் அரிசி)

கொத்தமல்லி வெப்பங் குளிர்காய்ச்சல் பித்தமந்தஞ்
சர்த்திவிக்கல் தாகமொடு தாதுநட்டங்—கத்தியெழும்
வாத விகாரமடர் வன்கர்த் தபிவிரணம்
பூதலத்தில் லாதகற்றும் போற்று.

இ-ள். கொத்தமல்லியானது உட்சூடு நளிர்சுரம் பயித்தியம் பயித்தியவேகம் அசீரணம் வாந்தி விக்கல் நாவறட்சி க்ஷீணசுக்கிலம் பெரும் எப்பம் கர்த்தவிரணம் இவைகளைப் போக்கும். 1120

## செங்கடுகின் குணம்

இடிகாச நாசிச்சூ ரீளைகபம் பித்தங்
கடிவாத சீதங் கடுப்போ—டுடலிற்
படுகோட்டு நோயென்னும் பங்கி வளைச்செங்
கடுகோட்டு மேன்மருந்து காண்.

## இதுவுமது

பந்தமயக் கம்வாதம் வாய்நீர்ச் சுழற்றலறு
முந்து சுகப்பிரச வங்களுண்டா—மிந்துநுதன்
மானே கிரகணிக்குன்ம மாறுமுத்தோ டங்களறுந்
தானே கடுகிற்குத் தான்.

இ-ள். பிறைபோலும் நெற்றியை யுடையவளே! செங்கடுகு தலையிடிப்பைத் தாரநின்ற இருமல் பீநசம் கோழைக் கபம் பயித்தியம் காணு விஷக்கடி வாதகபம் குடைச்சல் முடம் அக்கினிமந்தம் வாததோஷம் குழம்பிய உமிழ்நீர் கிரகணி வயிற்றுவலி திரிதோஷம் இவைகளை விலக்கும். சுகப் பிரசவத்தைத் தரும். 1122

## வெண்கடுகின் குணம்

பாலகிர கம்பூத பைசாச மோட்டிவிடு
மால விடங்கடிக ளாற்றுங்காண்—கோலமிகு
வள்ளைச் செவிமாதே மாபங்க நோய்விலகும்
வெள்ளைக் கடுகின் விதி.

இ-ள். பெண்ணே! வெண்கடுகானது கந்தகிரகம் முதலிய 12-பாலகிரகங்கள் தேவபூத முதலிய 18-வகை பூதங்கள் மகா சர்ப்ப விஷம் வண்டு முதலிய விஷக் கடிகள் பங்குவாதம் இவைகளை நீக்கும் என்க. 1123

## சிறுகடுகின் குணம்

தோலிரத நெய்யூன்மே தாதா தின்வளிக்கு
மேலிரணப் பூச்சு விடங்கபநோய்—காலிங்
கெறியகடு விருமலும்போ மேங்கெழிலார் மாதே
சிறியகடு கின்குணத்தைத் தேர்.

இ-ள். அழகிய பெண்ணே! சிறிய கடுகினால் விஷம் சிலேஷ்ம நோய் மூச்செறியச் செய்கின்ற வயிற்றுவிம்மல் இவை நீங்கும். இது சருமம் ரத்தம் மாமிசம் மேதை ஆகிய இத்தாதுக்களின் வாயுவினால் பிறக்கின்ற பிணிக்கு விரணம் உண்டாகும்படிப் பூசுகிற லேபன சிகிச்சைகளும் ஆம். 1124

## நாய்க்கடுகின் குணம்

சூதக வாயுவொடு சோணிதத்தின் வாதமும்போம்
வாதவலி குன்ம மடியுங்காண்—மாதுநல்லாய்
பேய்கட் புகைபோடப் பேசா தொழிந்துவிடு
நாய்க்கடுகைநீ விரும்பி னால்.

இ-ள். மாதே! நாய்க்கடுகினால் வாதகசிர்க்கரம், வாதசோணி தம் வாதக்கடுப்பு குன்மம் இவைகள் போம். இப் புகையால் பூத பைசாசங்கள் விலகும். 1125

## வெந்தியத்தின் குணம்

மேதிகண மத்திசுர மேகங் கயஞ்சீத
பேதியதி சாரநோய்ப் பித்திரும—லாதியநோய்
நீக்கு மனறணிக்கு நித்தமுற விந்துவையுண்
டாக்கு மனமே யறி.

இ-ள். அன்ன நடையாளே! வெந்தியமானது கணமாந்தம் அஸ்திசுரம் பிரமேகம் க்ஷயம் சீதக்கழிச்சல் பேதி இரத்தப்பித்தம் காசம் உட்சூடு முதலிய பிணிகளை விலக்கும். நிரந்தரமாகச் சுக்கிலத்தை விளக்கு மென்க. மேதி - வெந்தியம். 1126

## ஓமத்தின் குணம்

சீதசுரங் காசஞ் செரியாமந் தம்பொருமல்
பேதியிரைச் சற்கடுப்புப் போரா—மோதிருமற்
பல்லோடு பன்மூலம் பகவின்றோ யென்செயுமோர்
சொல்லொடு போமெனச் சொல்.

இ-ள். ஓமத்தினால் குளிர்ச்சி சுரம் இருமல் அசீரணம் வயிற்றுப்பிசம் அதிசாரம் குடலிலெரிச்சல் ஆசனக்கடுப்பு சீதபேதி சுவாசகாசம் தந்தரோகம் தந்தமூலரோகம் குய்யரோகம் இவை விலகும். 1127

## குரோசானி ஓமத்தின் குணம்

வெகுமூத் திரவாதம் வீரியநட் டம்புண்
ணுகுபேதி யுட்கடுப்பி னோடே—மிகுகரப்பான்
தீருக் கபமிவைபோஞ் செய்யகுரோ சானியென்றால்
வாரா மயக்கமுறு மால்.

இ-ள். குரோசானி ஓமத்தினால் அதிமூத்திரம் வாதாதிக்கம் க்ஷீணவிந்து விரணம் வாதாதிசாரம் உடற்கடுப்பு கரப்பான் நீங்காக் கபநிறைவு ஆகிய இவை நீங்கும். அதிமயக்கம் உண்டாகும்.

## சதகுப்பையின் குணம்

வாதமொடு சூதிகா வாதஞ் சிரசினோய்
மோதுசெவி நோய்கபநோய் மூடுசுர—மோதுகின்ற
மூலக் கடுப்பு முதிர்பீ நசப்போக்கு
ஞாலச் சதகுப்பை நாடு.

இ-ள். சதகுப்பை வாதரோகம் அசிர்க்கரம் தலைவலி கர்ணசூலை சலதோஷம் கபருட்சை ஆசனக்கடுப்பு சலபீநசம் இவைகளை நீக்கும்.

## பெருங்காயத்தின் குணம்

### விருத்தம்

தந்தமேதந்த மூலத்தெழுபிணி சருவகாளத் திருட்சிங்கீடமா, யந்தவாத முதாவர்த்த மல்குனோய் மார்பணங்கட்ட குன்மமகோதர, முந்துகர்ப்பத்தின் வித்திரஞ்சூலை சூருதிரப் பூச்சி சிலேஷ்மத் துறுவலி, வந்தமெய்க்கடுப் போடுவை முற்றுமே மாயுநாறு காயங் கிடைக்கினே.

இ-ள். மணமுள்ள பெருங்காயத்தினால் தந்தரோகம் தந்தமூல ரோகம் சகல சர்ம்பவிஷம் தேள்விஷம் கிருமி அசீரணம் வாதாதிக் கம் உதாவர்த்தவாதம் யோனிரோகம் இருதயவாயு எண்வகைக் குன் மம் உதரத்ராகம் கருப்பவித்திரிதி சூலை ரத்தகிருமி கபநோய் குடைச்சல் தீரும். 1130

## வெள்ளைப்பூண்டின் குணம்

### வெண்பா

சந்நியொடு வாதந் தலைநோவு தாளின்வலி
வன்னிவரு நீர்க்கோவை வன்சீத—மன்னமோ
யுள்ளுள்ளிக் காண்பா யுளைமூல ரோகமும்போம்
வெள்ளுள்ளி தன்னால் வெருண்டு.

இ-ள். அன்ன நடையாளே! வெள்ளைப்பூண்டினால் சந்நிவாத ரோகம் சிலேஷ்ம சிரஸ்தாபம் வாய்பூட்டுநோய் நீரேற்றம் சீதபேதி அரசகம் இவை நீங்கும். 1131

## அபினியின் குணம்

நல்லபி னிக்குணத்தை நாடறிய நாம்புகல்வ
தல்லல்குன்ம வாத மருஞ்செவிநோய்—பல்லின்வலி
பேதியந்த மத்திநோய் பீநசம்போம் வன்மையுண்டாஞ்
சாதியுதி ரச்சுத்தி காண்.

இ-ள். அபினியால் வயிற்றுநோய் வாதாதிக்கம் கர்ணசூலை தந்தநோய் அதிசாரம் அசீரணம் எலும்பிற் குடைச்சல் நாசிகாரோ கம் இவைபோம், சாதிலிங்க நிறமுள்ள உதிரச்சுத்தியும் உண்டாம்.

## கஞ்சாவின் குணம்

மூலக் கிராணியறு முன்புள்ள பேதிகட்டுஞ்
சாலமயக் கும்பசியுஞ் சாருங்காண்—தூலஞ்செய்
வாதமொடு வைபமும்போம் வன்கரப்ப னுங்தொலையுங்
கோதறு கஞ்சாச் சடைக்கு.

இ-ள். கஞ்சாவிற்கு மூலவாய்வு கிரகணி நீடித்த அதிசாரம் அதிசூலம் கபாதிக்கம் கரப்பான் இவைபோம், மிகுமயக்கமும் அதி தீபனமும் உண்டாம். 1133

## கரியபோளத்தின் குணம்

மார்புவலி வீக்கம் வயிற்றுவலி பக்கநோய்
வார்மேகக் கட்டியொடு மாவாதம்—பாருலகி
னீளங்கை காலி நிலைசூலி யங்கறுத்த
போளந்தனைக் காணிற் போம்.

இ-ள். கரியபோளத்தினால் இருத்வாதம் சோபை குன்மம் மூடம் சிமகப்பிடாரம் மகாவாதரோகம் கைகால் குத்தல் இவைபோம்.

## ரத்தபோளத்தின் குணம்

விழுந்திறந் தங்கிமிக வீங்கு முறுவிக்க
மெழுந்துநிற்க வொட்டா விசுவோ—டழுந்தி
யுரைத்த தமரும்வலி யோடுமெதிர் நிற்கா
திரத்தபோ ளத்தை யெடு.

இ-ள். ரத்தபோளத்தினால் விழுந்து ரத்தம்கட்டி அதன்மே லதிகரித்த நோவுடன் வீங்குகின்ற வீக்கமும் எழுந்து நிமிர்ந்து நிற்கவொட்டாத பக்கநோயும், மார்பின் உபத்திரவமும் நீங்கும்.

## வாலேந்திரபோளத்தின் குணம்

சூலை சயரோகஞ் சொறிகரப்பான் குன்மமிவை
யாலைவா யின்கோற்போ லாகுங்கா—ணீலசக்ர
வாளமெனத் தோன்றுமுலை மாதரசே வாளேந்திர
போளந் தனையெடுக்கும் போது.

இ-ள். பெண்கள் நாயகமே! வாலேந்திர போளத்தினால் கீல் பிடிப்பு க்ஷயம் நமைச்சல் கரப்பான் வயிற்றுநோய் ஆகியவைகள் விலகும். 1136

## வெளிச்சப்பிசின் குணம்

முகசந்நி பாதமொடு முட்டிவரு நீரு
முகவாத சன்னிகளு மண்டா—மகிழுங்
களிற்றை நிகருமுலைக் காரிகையே நாளும்
வெளிச்சப் பிசினை விளம்பு.

இ-ள். பெண்ணே! வெளிச்சப்பிசினால் வாயுவாற் பிறந்த சிம்ம கம்புகன், நேத்திரம், பிரலாபம், அந்தகம், என்னும் சந்நி பாதங் களும் அதிநீரும் போம். 1137

## நாவியின்பொதுக் குணம்

வாதவலி மந்தமறன் மாறுக் கபப்பிணிக
ளோதுகுட்டு குன்மங்கே ளோடுங்காண்—காதலர்தம்
புத்தியோ டாருயிரும் பூவும் வனைகுழலை
சுத்திசெய்த நாவியின்பேர் சொல்.

இ-ள். விரும்பப்பட்ட நாயகருடைய அறிவையும் உயிரையும் கூந்தலோடு முடித்துக்கொள்ளுகின்ற பெண்ணே! சுத்திசெய்த நாவியினால் வாதக்கடுப்பு அசீரணம் ஓதமுள்ள ஜலதோஷங்கள் குஷ்டம் வயிற்றுவலி தேள்விஷம் இவை நீங்கும். 1138

## பச்சைநாவியின் குணம்

கடியதொரு குட்டங் கனந்த விடசந்நி
கொடியதொரு குன்மங் குலையும்—படியிற்
றளிரத்தி வெப்புடனே தாகசுரந் தீரும்
வளர்பச்சை நாவிதனை வாழ்த்து.

இ-ள். பச்சை நாவியால் குறைநோய் விஷசந்நிபாதம் வயிற்று நோய் அஸ்திச்சூடு தாகசுரம் ஆகியவை கெடும். 1139

## வெள்ளைநாவியின் குணம்

குட்டங் கடிசூலை கூடுபுரி வன்கிருமி
துட்டகுன்ம வாதந் தொலையுங்காண்—வட்டமுலைப்
பெண்ணே சுரந்தணியும் பேருலகத் தார்பகைக்குள்
வெண்ணாவி தன்னை விரும்பு.

இ-ள். பெண்ணே! வெண்ணாவியால் குஷ்டம் காணாக்கடி குத்தல் மார்பை வீங்கச்செய்கின்ற கிருமிரோகம் வாதகுன்மம் சூட்சை ஆகியவைகள் ஒழியும். 1140

## கருநாவியின் குணம்

எண்ணாச் சுரம்போ மிறங்கும் பீலிகமறும்
புண்ணாறு மூலவரும் புழுக்கள் விழுந்—தண்ணாறும்
வல்லை கவிகையொடு வாத சுரமிவைக
ளில்லையொரு கார்நாவிக் கே.

இ-ள். கருநாவிக்கு நாவொட்டிக்காய்ச்சல் நழுகிய பீலிகம் விரணம் கிருமிகள் வல்லக்கட்டி மகோதரம் வாதசுரம் இவைதீரும்.

## சூத்திரநாவியின் குணம்

காய்ச்சல் தலைநோய் கனத்தசந்நி பாதமெரிப்
பூச்சி விடக்கடியுட் புண்குட்டங்—கூய்ச்சறகு
காத்திரதே ளுங்குடிபோங் காரளகப் பைங்கொடியே
சூத்திரநா விக்குத் துவண்டு.

இ-ள். சூத்திரநாவிக்கு சிரம் சிரஸ்தாபம் சந்நிபாதம் எரிக் கிருமி சர்ப்ப விஷக்கடி உள்விரணம் குறைநோய் தேள்விஷம் இவைபோம். 1142

## நிலஆவரையின் குணம்

நிலாவாரை யின்குணந்தா னீகேண் மயிலே
பலமூல வாயுவெப்புப் பாவைச்—சிலகிரந்தி
பொல்லாத குன்மம் பொருமுமலக் கட்டுமுத
லெல்லா மகற்றுமென வெண்.

இ-ள். மயிலனையவளே! நில ஆவாரை பற்பல மூலவாயுக்கள் சுரம் சிழ்ச்சிரங்குகள் வயிற்றுவலி வயிற்றை உப்பச்செய்கின்ற மலக்கட்டு இவைகளை நீக்கும். 1143

## சிவதைவேரின் பொதுக்குணம்

உள்ள மலமு முதாவர்த்த மும்வயிற்றைக்
கொள்ளுபித்த வாதமும்போங் கூறுங்காற்—பிள்ளைகட்குச்
செப்பு கிரகமும்போங் தேனே யுலகத்துட்
டப்பிற சிவதைக்குத் தான்.

இ-ள். குற்றமற்ற சிவதைக்கு, பழையமலம் உதாவர்த்தம் பித்தவாததொந்தம் பாலகிரகதோஷம் ஆகியவை விலகும். 1144

## வெண்சிவதை வேரின்குணம்

கைப்புந் துவர்ப்புங் கலந்திருக்கும் பித்தத்தை
இப்புவியி லொடொட்டா திவ்வளவே—செப்புதரத்
தொள்ளைக் கிருமி தொலைக்குமிகு பேதிதரும்
வெள்ளைச் சிவிதைதனை விள்.

இ-ள். கசப்புந் துவர்ப்புமுள்ள வெண்சிவதை, பைத்திய கோபத்தையும் மலாசயக் கிரிமியையும் போக்கும், விரோசனத்தைத் தரும். 1145

## கருஞ்சிவதை வேரின்குணம்

காரமுடன் கைப்புண்டாங் காணுவெலி விடத்தைப்
பாரவனற் குன்மத்தைப் பற்றறுக்கும்—பாரிற்

றெரிஞ்சுரைத்தோம் பேதிதரும் தேன்மொழியே கேளாய்
கருஞ்சிவத்தைக் கந்தமது காண்.

இ-ள். தேன்மொழியாளே! காரமும் கசப்புமுள்ள கருசிவதை அறிவதற்கரிய எலி விஷத்தையும் பித்தகுன்மத்தையும் நீக்கும விரோசனத்தைச் செய்யும். 1146

## நேர்வாளக்கொட்டையின் குணம் (இதுவே நேபாளம்)

ஓதிலுாதத் தூறுமலம் பன்னோய் விலகும்
பேதி மருந்திற் பெரிதாகும்—வாதமறுங்
கூர்வாளை யொத்தவிழிக் கொம்பனையே பண்டிதர்சொன்
னேர்வாளக் கொட்டைதனை நீ.

இ-ள். பேதிமருந்தில் முக்கியமாய் நேர்வாளப்பருப்பால் மலாசய பழைய மலமும் அதைப்பற்றிய பல பிணிகள் வாதநோய் போம். 1147

## வாளப்பருப்பு சிலநோய்க்கு ஆகும் ஆகாதெனல்

விருத்தம்

உரைத்திடு வாதநோய்க்கு முறைகெடு விடஞ்சந்நிக்கு
நிரைத்திடு சூலைகுன்மம் நீடிடுமலக் கட்டிற்குங்
கரைத்திடு வாளந்தன்னை கதித்திடு மேகத்திற்கு
மறைத்திடு பித்தத்தோர்க்கு மகற்றிய வதனைத்தானே.

இ-ள். வாளப்பருப்பை வாதரோகம் விஷம் சந்நிபாதம் தேகக்குடைச்சல் வயிற்றுநோய் மலபந்தம் ஆகிய நோய்க்குபயோகப்படுத்தலாம் அதிமேக நீரையும் பித்தநோயும் உடையவர்க்கு நீக்கவும். 1148

## நீரடிமுத்தின் குணம்

வெண்பா

நீரடி முகத்திற்கு நீங்கா கிரந்தி குஷ்டம்
போரிடு வாதவினை போகுங்காண்—காரடுக்கு
மென்குழலாய் பித்த மிகுமனல முண்டாகு
முன்கிளர் நமைச்சலு மறுமுன்.

இ-ள். மெல்லிய கூந்தலை யுடையாளே! நீரடிமுத்துக்கு தீராச்சிரங்கு பெருநோய் வாதரோகம் தினவு இவை நீங்கும், பைத்தியம் உஷ்ணமு முண்டாம். 1149

## சேங்கொட்டையின் குணம்

சிருமி கயஞ்சூலை கிரந்தி திமிர்வாதம்
பொருமுகுன்ம முண்மூலம் புண்ணை த்—தருமா
கரிமுகக் குட்டக் கடிவிடபா கம்போ
மெரிமுகிக் குச்சகமா மெண்.

## சாம்பிராணியின் குணம்

வாதநங் கண்ணோய் மாருத சென்னிவலி
யோதமுறு பீநசத்துண் போட்டுங்காண்—பூதலத்தில்
வேம்பிது தாமெனன்ன மிருகசப்பைத் தானளிக்குஞ்
சாம்பிராணி சரக்குத் தான்.

இ-ள். வேம்பைப்போற் கசப்புள்ள சாம்பிராணி வாதகபம் விழிநோய் நீங்காத சிரநோய் ஜலபீநசம் இவைகளை விலக்கும். 1155

## கருப்பூரத்தின் குணம்

கிருமி சலதோடங் கிளைப்புவலிப்பு சந்நி
பொருமுமந்த மங்கிபட்ட புண்ணே—டெரிசுரங்கள்
வாந்திபித்தஞ் சீதமுறு வாதஞ் செவிமுகநோய்
சாந்திகருப் பூரமொன்றாற் சாற்று.

இ-ள். கருப்பூரத்தினால் கிருமி நீரேற்றம் இசிவு சந்நிபாதம் வாதாலசகம் தீப்புண் கோரசுரம் சர்த்திபைத்தியம் சிலேட்ம வாதம் கர்ணசூலை சிலேட்மமுபாகரோகம் இவை போம். 1156

## பச்சைக் கருப்பூரத்தின் பொதுக்குணம்

அட்டகுன்மஞ் சூலை யணுகாது வாதமொடு
துட்டமே கப்பிணியுந் தோற்றுவே—மட்டலறுங்
கூந்தன் முடிமாதே கொடிய கபம்போகுஞ்
சார்ந்த பச்சைக்கர்ப்பூரத் தால்.

இ-ள். தேன் பொருந்திய கூந்தலை யுடையவளே! பச்சைக் கருப்பூரத்தினால் 8-வித குன்மங்கள் சூலைகளில் குத்தல் வாதநோய் சீழ்ப்பிரமேகம் சிலேட்மகோபம் இவை நீங்கும். 1157

## பச்சைக் கருப்பூரத்தின் பேதம்

பச்சைக் கருப்பூர வகையில் ஈசன் வீமன் பூதாச்சிறையன் என மூவிதப் பச்சைக்கற்பூரங்கள் உண்டு.

## ஈசன் என்னும் பச்சைக்கருப்பூரத்தின் குணம்

ஈசனென்னும் பூரணம் வெண்மையும் காரமுமாம்
பேசரிய சீதமுஷ்ணம் பித்தயயல்—வீசுகின்ற
பீநசமுட் டாகமிவை போத்துவிடுங் காந்தி
யானதநுவசிய மாம்

இ-ள். சேங்கொட்டைக்குப் புழு க்ஷயம் கீல்பிடிப்பு சிரங்கு சருமத் திமிர் மகாவாதம் வாதகுன்மரோகம் உள்மூலம் விரணக்கருங் குஷ்டம் காணுக்கடி விஷபாகம் விலகும். வீரிய விருத்தியுண்டாம்.

## தேங்காய்ப்பிண்ணாக்கின் குணம்

சொறிசிரங்கு புண்ணுமாந் தோலாக் கரப்பான்
வறுவாகு மேனியெல்லா மாதே—சிறுக
வயிற்றிற் புழுவினங்கண் மாறா தாகிக்குஞ்
சுயத்தேங்காய்ப் பிண்ணாக்காற் சொல்.

இ-ள். பெண்ணே! தேங்காய்ப் பிண்ணாக்கினால் நமைச்சல் சிரங்கு விரணம் நீங்காத கரப்பான் மலாசயகிருமிகள் இவையுண்டாம். 1151

## எள்ளுப்பிண்ணாக்கின் குணம்

உள்ளிற்புண் ணுங்கிரந்தி யூரலு மிகக்கிளைத்தே
யெள்ளின் பிண்ணாக்குக் கெழும்புங்காண்—விள்ளுங்
கரப்பான் விரணங் கதித்த நீர்மேக
முரப்பாகு நாளு முறை.

இ-ள். எள்ளுப்பிண்ணாக்கு தாதுவைப்பற்றிய விரணம் சிரங்கு நமைச்சல் கரப்பான் புண் கலமேகம் இவை விளையும். 1152

## வேப்பம் பிண்ணாக்கின் குணம்

சந்நியுடன் வாதத் தலைநோய்போம் வாதமறும்
முன்னின்ற தோட முறியுங்காண்—பன்னுதமிழ்
வல்லவரே வேம்பின்வழி வந்தபிண்ணாக் கென்றொருகாற்
சொல்ல வையம்போமோ தொலைந்து.

இ-ள். சொல்லுகின்ற தமிழ் வல்லவர்களே! வேப்பம் பிண்ணாக்கினால் சந்நிபாதம் வாதசிரஸ்தாபம் வாதரோகம் திரிதோடம் சலாதிக்கம் இவைபோகும் என்க. 1153

## இலுப்பைப்பிண்ணாக்கின் குணம்

பொத்திக் கடுவனொடு புண்ணுங்கரப் பானும்போம்
வித்தைப்பு தோடமிவை வீறுவா—மெத்தெனவே
யெண்ணெய்க் கசிவுகளு மேகு மிலுப்பைவிதைப்
பிண்ணாக்குக் கென்றியப் பேசு.

இ-ள். இலுப்பைப் பிண்ணாக்கு கடுவன் விரணம் கரப்பான் பிஜவீக்கம் திரிதோடம் எண்ணெய்ச்சிக்கு இவை நீங்கும். 1154

## சாம்பிராணியின் குணம்

வாதங் கண்ணோய் மாறாத சென்னிவலி
யோதமுறு பீநசத்துண் போட்டுங்காண்—பூதலத்தில்
வேம்பிது தாமென்ன மிருகசப்பைத் தானளிக்குஞ்
சாம்பிராணி சரக்குத் தான்.

இ-ள். வேம்பைப்போற் கசப்புள்ள சாம்பிராணி வாதகபம் விழிநோய் நீங்காத சிரநோய் ஜலபீநசம் இவைகளை விலக்கும். 1155

## கருப்பூரத்தின் குணம்

கிருமி சலதோடங் கிளைப்புவலிப்பு சந்நி
பொருமுமந்த மங்கிபட்ட புண்ணோ—டெரிசுரங்கள்
வாந்திபித்தஞ் சீதமுறு வாதஞ் செவிமுகநோய்
சாந்திகருப் பூரமொன்றாற் சாற்று.

இ-ள். கருப்பூரத்தினால் கிருமி நீரேற்றம் இசிவு சந்நிபாதம் வாதாலசகம் தீப்புண் கோரசுரம் சர்த்திபைத்தியம் சிலேட்ம வாதம் கர்ணசூலை சிலேட்மமுபாகரோகம் இவை போம். 1156

## பச்சைக் கருப்பூரத்தின் பொதுக்குணம்

அட்டகுன்மஞ் சூலை யணுகாது வாதமொடு
துட்டமே கப்பிணியுந் தோற்றுமே—மட்டலருங்
கூந்தன் முடிமாதே கொடிய கபம்போகுஞ்
சார்ந்த பச்சைக்கர்ப்பூரத் தால்.

இ-ள். தேன் பொருந்திய கூந்தலை யுடையவளே ! பச்சைக் கருப்பூரத்தினால் 8-வித குன்மங்கள் சூலைகளில் குத்தல் வாதநோய் சீழ்ப்பிரமேகம் சிலேட்மகோபம் இவை நீங்கும். 1157

## பச்சைக் கருப்பூரத்தின் பேதம்

பச்சைக் கருப்பூர வகையில் ஈசன் வீமன் பூதாச்சிறையன் என மூவிதப் பச்சைக்கற்பூரங்கள் உண்டு.

## ஈசன் என்னும் பச்சைக்கருப்பூரத்தின் குணம்

ஈசனென்னும் பூரணம் வெண்மையும் காரமுமாம்
பேசரிய சீதமுஷ்ணம் பித்தயயல்—வீசுகின்ற
பீநசமுட் டாகமிவை பேர்த்துவிடுங் காந்தி
யானததுவசிய மாம்

இ-ள். வெளுப்பும் காரமும் தளதளப்பும் உள்ள ஈசன் என்னும் பச்சைக்கருப்பூரம் வசியத்திற்காகும், சிலேட்மசுரம் பயித்தியம் மயக்கம் நாசிநோய் தாகரோகம் ஆகிய இவைகளைப் போக்கும்.

## வீமன் என்னும் பச்சைக்கருப்பூரத்தின் குணம்

வீமனென்னுங் கர்ப்பூர மேகவெண்மை யாயிருக்குஞ்
சேமமுறுங் குளிர்ச்சி தின்றக்கா—ஞமருபி
நோயகலுந் தாகமறு நண்பேதியு மாகுந்
தூயமதி முகத்தாய் சொல்.

இ-ள். மதிமுகமாதே! அழுக்கு வெண்மைகலந்த மேகநிறம் உள்ள வீமன் என்னும் பச்சை கருப்பூரத்தினுல் கந்ததாளிநோயும் தாகரோகமும்போம் சரீரசவுக்கியமும் குளிர்ச்சியும் அற்பவிரோசனமும் உண்டாம். 1159

## பூதாச்சிறையன் என்னும் பச்சைக்கருப்பூரத்தின் குணம்

பூதாச் சிறையன் என்னும் பூரமஞ்சள் கைப்பாகுங்
கோதையர்க் காங்காசக் கொடுமேகம்—வாதாதி
யென்னுந் தனித்தோட மேறுமுத்தோ டஞ்சொறியுந்
துன்னிரண மும்போக்குஞ் சொல்.

இ-ள். மஞ்சள் நிறமும் கரப்புமுள்ள பூதாச்சிறையன் என்னும் பச்சைகற்பூரம் இருமல் அரித்திராமேகம் வாதபித்தகபம் என்கிற தனித்தனி தோஷங்கள் திரிதோடம் நமை நெருங்கிய புண்களிவை நீக்கும் ஸ்திரீகளுக் குபயோகிக்கின்ற ஔஷதங்களுக்குமாகும். 1160

## புழுகுச்சட்டத்தின் குணம்

### விருத்தம்

ஆசுருக் காந்தியுண்டா மசீரண வாதம்போகுந்
தேசுதான் வளரும்பித்த சிலேட்மமும் விடமுமேரு
மாசறு மாயுளுண்டாம் வசனமா தருளுஞ்சேரும்
வாசமார் புழுகுச்சட்ட மகிமையை யுரைக்குங்காலே.

இ-ள். மணமுள்ள புழுகு சட்டத்தினுல் மந்தவாதமும் பித்தகபமும் விஷமும்போம் ஒளியும் தேஜசும் நிறையாயுளும் திருமகளருளும் உண்டாம். 1161

## கஸ்தூரியின் பொதுக் குணம்

சொல்லரும் வசியங்காந்தி சுகமுத லணுகும்பின்னு
மெல்லியார் தமக்குவாத விருத்தியாந் தலைநோயேகும்
பல்லுரு கபமுந்தீரும் பகரொணுப் பலமுமுண்டா
மல்லடர் சன்னிருட்டை மாறுங்கஸ்த் தூரிக்காமே.

இ-ள். கஸ்தூரிக்குத் தலைநோய் கபந்தமூலம் சன்னிசுரங்கள் போம்; வசியம் தேஜசு சவுக்கியம் மாதர்க்கு நாதவிருத்தி வன்மை இவை உண்டாம். 1162

## கஸ்தூரியின் பேதம்

### வெண்பா

*கஸ்தூரி யைந்தாங் கரிகைதில கைகுளுந்தை*
*கைத்தபிண்ட கைநா யகைமுறையே—மொய்த்தசிவப்*
*பெள்ளுரு கொளுகட்டி சிறிதுபரு மங்களென*
*விள்ளுமிவைக் கேகும் வினை.*

இ-ள். கஸ்தூரி கரிகை திலகை குளுந்தை பிண்டகை நாசகை என ஐவகைப்படும்: இவைகளில், கரிகை சிகப்புநிறமும், திலகை எள்ளின் உருவமும், குளுந்தை கொள்ளினது வடிவமும், பிண்டகை கட்டி கட்டியாகவும் நாசகை சிறியபெரிய உருண்டைகளாகவும் இருக்கும். இவைக்கு சந்நிபாதம் அசீரணப்பிரசவ மலினம் முதலிய நோய்கள் விலகும். 1163

## சவ்வாதின் குணம்

*சுரமுந் தலைவலியுந் துண்டத் தடைப்பு*
*முரமுந்து நோயோ டுடற்குட்—பரவிமிகக்*
*குத்துகின்ற வாயுவும்போங் கோதிற்சவ் வாதினுக்கு*
*மெத்த வசியமுமாம் விள்.*

இ-ள். குற்றமற்ற சவ்வாதுக்கு வாதகபருட்சை சிலேஷ்மம் சிரஸ்தாபம் சலபீநசம் இருத்வாதம் அங்கசலவாதம் இவைபோம் வசீகரமாம். 1164

## குங்குமப்பூவின் குணம்

*விந்துநட்டந் தாகமண்டம் மேகசலஞ் சூலைகப*
*முந்துசுரம் பித்தங்கா லுச்சிவலி—முந்துகண்ணிற்*
*றங்குமப்பூ வோடுறுநோய் சர்த்தியிவை நீங்கவென்றாற்*
*குங்குமப்பூ வோரிதழைக் கொள்.*

### இதுவுமது

*குங்குமப்பூ வைக்கண்டாற் கூறுகொண்ட பீநசநோய்*
*தங்குசெவித் தோடஞ் சலதோடம்—பொங்கு*
*மதுரதோ டந்தொலையு மாதர் கருப்ப*
*வுதிரதோ டங்களறு மோர்.*

இ-ள். குங்குமப்பூவினால் சீரண சுக்கிலம் நாவறட்சி குடல் விருத்தி மேகநீர் கீல்பிடிப்பு கபாதிக்கம் அதிருட்சை பயித்தியம்

விகுணவாதம் மண்டைவலி கருவிழியிற் படர்கின்றபூ கண்ணோவு வாந்தி சலபீநசம் கர்ணோன்மந்தம் நீரேற்றம் வாயினிப்பு பிரசவ மலினம் இவை தீரும். 1166

## கோரோசனையின் குணம்

நீரழிவு மேகசுர நீங்காக் கனல்வேகங்
கூறியவுன் மாதங் குழந்தைகணோய்—பாரகபம்
வீறு மசூரியும்போம் வேதந் தனிலிரண்டாய்க்
கூறுங்கோ ரோசனைகட் கு.

இ-ள். ஆயுள்வேதங் கூறிய இருவகை கோரோசனைகளுக்கும் மேகநீர் மேகருட்சை பித்தகோபம் உன்மாந்தம் சிசுக்களுக்குண்டாகின்ற கணமாந்த முதலிய ரோகங்கள் சிலேஷ்மாதிக்கம் மசூரிகைப் புண்கள் இவை நீங்கும். இது மான்வயிற்றிலும் பசுவின் வயிற்றிலும் பிறப்பதாம். 1167

## சந்தனத்தின் பொதுக்குணம்

கோதில்சந்தஞ் சீதோட்ணங் கொண்டிருக்கு மச்சந்தம்
வாதபித்த வைய மனப்பிரமை—யோதுசுரம்
மேகந் தனிதாகம் வெப்பு சொறியும்போ
மாகந் தனக்குறுதி யாம்.

இ-ள். குளிர்ச்சியும் வெப்பமும் உள்ள குற்றமற்ற சந்தனம் திரிதோஷம் சித்தப்பிரமை ருட்சை ஒழுக்குப்பிரமேகம் நாவறட்சி உட்சூடு நமைச்சல் இவைகளைப்போக்கும். சரீரத்திற்குப் பலமாம்.

## சந்தனத்தின் பேதம்

மும்மையெனச் சொல்வார் முருகுசந்தப் பேதமவை
செம்மைமஞ்சள் வெண்மையெனத் தேர்முறையே—நன்மைதரு
முத்தமமு மத்திபமு மோதத மும்மாகுந்
தத்தை மொழியணங்கே சாற்று.

இ-ள். கிளிமொழியாளே! சந்தனத்தில் மூன்றுபேதம் உண்டென்பர், அவையாவன: சிவப்பு மஞ்சள் வெள்ளை என்பனவாம். இவற்றுள் சிவப்பு மருந்துகளுக்கு உத்தமம், மஞ்சள் மத்திபம், வெள்ளை அதமம், என்றறிக. 1169

## பச்சிலைக் கிச்சிலிக்கிழங்கு இவைகளின் குணம்

பச்சிலைக்குக் காந்தம் பரிமளிக்கு மவ்விலையோ
வெச்சைக் கிரந்திதனை மெய்ப்புழுவைச்—சொச்சமற
வோன்டுநற் கிச்சிலியி னெண்கிழங் குக்கபமும்
பூட்டுமுட மும்புண்ணும் போம்.

இ-ள். பரிமளமுள்ள பச்சிலையானது பித்தகப விரணத்தையும் ரத்தகபம் மலம் இவைகளைப்பற்றிய கிருமிகளையும் போக்கும். இச்சிலிக் கிழங்குக்கு, சிலேஷ்மரோகமும் கீல்பிடிப்பும் விரணமும் நீங்கும். 1170

## உப்பின் பொதுக்குணம்

அளத்திலுறை நல்லுப் பனல்வாத மாற்றுங்
களத்துநோய் தன்னைக் களையுங்—கிளைத்தகப
வாசுடைய வல்லைநோ யட்டகுன்ம மும்போக்குங்
காசினியுண் மாதே கழறு.

இ-ள். பெண்ணே! அளத்திலுள்ள நல்ல உப்பு உஷ்ணவாதம் கண்ட வாதரோகிணி ஆமந்திரண்டவல்லைக்கட்டி 8-வித குன்மம் இவைபோம். 1171

## கறி உப்பின் குணம்

மந்தம் பொருமலரும் வாய்வும்போந் தீபனமாந்
தொந்தித்த வையந் தொடருமோ—சந்ததமு
மக்கினியின் புட்டி யடருங் கறியுப்பாற்
சிக்குகின்ற நீரிறங்குஞ் செப்பு.

இ-ள். கறியுப்பினால் அசீரணம் வயிற்றுப்பிசம் வாதாதிக் கபம் நீரடைப்பு இவைபோம். பசியும் சாமக்கினியும் விருத்தியாம்.

## கல்லுப்பின் குணம்

ஐயமறுஞ் சூலை யரோசிபித்தஞ் சர்த்தியொடு
வெய்யபிணி யட்டகுன்மம் விட்டேகும்—பெய்வளையே
வாதமதி தாக மலக்கட்டும் போமுலகிற்
கோதறுகல் லுப்பைக் கொடு.

இ-ள். வளையலணிந்த காரிகையே! நல்லுப்பினால் கபம் குத்தல் அருசி பயித்தியம் வாந்தி உஷ்ணவாயு 8-வித குன்மம் வாதநோய் நாவறட்சி மலபந்தம் இவை ஏகும். 1173

## கம்பி உப்பின் குணம்

மல்லாரு மட்டகுன்ம மாதருத ரக்கட்டி
கல்லா மறைப்புநீர்க் கட்டருக—வெல்லாமே
கம்பிகம்பி யென்றுங் கருவுண்டா மங்கிநின்ற
கம்பிகம்பி யென்றுரைக்குங் கால்.

## இதுவுமது

சூதக வாயுவொடு சோணிதத்தின் வாதமும்போம்
வாதவலி குன்மமிவை மாறுங்காண்—மீதாங்

கொடிய வயிறிழியுட் கோழை கபமேகும்
வெடியுப்புத் தன்னை விளம்பு.

இ-ள். பஞ்சபூத உப்பில் தேயுவின் கூறாகிய சம்பி உப்பினால் 8-வித குன்மம் கருப்பாயசக்கட்டி சோபை மூத்திரகிரிச்சுரம் நீர்ச் சுருக்கு சூதிகாவாதம் மாதசோணிதம் சாமானிய வாதபித்த கப குன்மங்கள் பெருவயிறு ஈளை சிலேஷ்மவாதம் இவை ஒழியும். பேரிளம்பெண் பருவங்கடந்த மாதர்கட்கும் கருப்பம் உண்டாகும்.

## அட்டுப்பின் குணம்

பித்தங் குடிவிலகும் போராத சூலையறுஞ்
சர்த்தி யருசியிவை சாராவா—மொத்தகச்சிற்
கட்டுப் படாக்கொங்கைக் காரிகையே சங்கையற
வட்டுப்பின் பேரை யறை.

இ-ள். கச்சுக்கடங்காத் தனத்தாளே ! அட்டுப்பினால் பயித்தி யம் குத்தல் வாந்தி அரோசகமும் போம். 1176

## வளையல் உப்பின் குணம்

துளையார் குடல்வாதந் தொந்தவா தத்தோ
டிளையாச் சுவாசமறு மின்னும்—வளையலுப்பாற்
குன்மவலி சூலைவெப்பங் கூறும் பிலீகமிவை
சென்மம்விடுத் தோடுமெனத் தேர்.

இ-ள். வளையலுப்பினால் ஆந்திரபித்தவாதம் வாதபித்தம் இரைப்பு வயிற்றுநோவு கீல்பிடிப்பு சுரம் பிலீகம் இவைபோம்.

## இந்துப்பின் குணம்

அட்டகுன்ம மந்த மசிர்க்கரச்சூர் சீதபித்தந்
துட்டவைய நாடிப்புண் டோடங்கள்—கெட்டமலக்
கட்டுவிட விந்துப்பைக் காமியநோய் வன்கரப்பான்
விட்டுவிட விந்துப்பை விள்.

### இதுவுமது

சென்னிகண்ணு பற்றூர் செவிகள்கண் டம்பகநோய்
சந்நியா சங்காசந் தாகமிரைப்—புண்ணிரத்த
மூலஞ் சிலந்திகளி மூடிகஞ் சூதைவலி
சூலஞ் சிதையுமிந்தாற் சொல்.

இ-ள். இந்துப்பினால் எண்விதக் குன்மம் அலசம் அசிர்க்காகப் பித்தம் கபாதிக்கம் நரம்புச்சிலந்தி திரிதோஷம் மலபந்தம் விஷம்

சுக்கிலம் சிலேத்ம உபதமசம் கடுவன் தலை விழி நாவு தந்தமூலம் காது கழுத்து கண் யோனி இவ்விடத்து நோய்கள் சந்நியாசம் நேத்திரகாசம் தாகரோகம் சுவாசம் இரத்தமூலம் சிலந்தி தேள் எலி இவற்றின் விஷங்கள் வாதக்கடுப்பு குத்தல் ஆகிய இவை கள் கெடும். 1179

## பஞ்சலவணத்தின் குணம்

நீராமை யர்ப்புதமை நெஞ்சுவலி மாகுன்மம்
பேராக் கிராணி பிலீகமந்தந்—தீராக்கல்
விஞ்சவுப்பைக் குக்கிநோய் மெய்ச்சூலை யும்பறக்கும்
பஞ்சவுப்பைத் தின்பையெனிற் பார்.

## இதுவுமது

பஞ்ச லவணம் பயித்தியகுன் மம்போக்கும்
விஞ்சிய சிலேட்டுமத்தை வீழ்க்குங்காண்—கிஞ்சுகமே
தீபனமுண் டாக்குந் திரிதோடம் போக்கிவிடுஞ்
சோபனமா மிம்மொழியைச் சொல்.

இ-ள். கிஞ்சுகம் போல்பவளே! பஞ்ச உப்பினால் ஆமைக்கட்டி ற்புத விரணம் மார்பு நோவு வலி குன்மம் வாதக் கிரகணி பீலிகம் மா ஜீரணம் மகாவாதம் மிகவும் பொருமுகின்ற சிலேத்ம குணம் நகக்குத்தல் பித்தகுன்மம் கபாதிக்கம் முத்தோஷம் இவைகள் ங்கும். பசியுண்டாம் என்க. 1181

## கந்தி உப்பின் குணம்

உடல்கரையச் செய்துவிடு முட்டினமாம் பொல்லாக்
குடல்வாதந் தன்னைவெட்டிக் கொல்லு—மடலாருந்
தந்திமந்தி மத்தகையைத் தாவுகொங்கை மாதரசே
கந்தியுப்பை நன்றாய்க் கழறு.

இ-ள். யானை மத்தகத்தை அடத்தாவுங் கொங்கைகளை யுடைய ளே! கந்தியுப்பானது அதிதூல ரோகத்தையும் குடலண்ட ாதத்தையும் போக்கும். ஆனால் வெப்ப முண்டாக்கும். 1182

## சவ்வர்ச்ச லவணத்தின் குணம்

சவ்வர்ச்ச மென்னுந் தனிலவணத் தாலுலகில்
வெவ்வச் சுரஞ்சூலை வெப்பமறுங்—கவ்வுகின்ற
நாடி விரணமுட னட்பட்ட குன்மமும்போந்
தேடியன மேயிதனைச் செப்பு.

இ-ள். அன்னம் போன்றவளே! சவ்வர்ச்ச லவணத்தால் சுரம் சீல் பிடிப்பிற்கிளைத்த உஷ்ணம் நரம்புக்கிரந்தி நீடித்த வயிற்று நோவு ஏகும் என்க. 1183

### பிடா லவணத்தின் குணம்

பிடாலவண மென்றொருகாற் பேசி னுலகில்
விடாநீ ரிழிவகலு மெய்யே—விடலரிய
மந்த மகலும் வளரு மதிகபசி
கந்தமார் வார்குழலே காண்.

இ-ள். மலர்க் குழலாளே! பிடா லவணத்தால் அதிநீரும் மந்தமும் போம். பசி யுண்டாம். 1184

### வெங்காரத்தின் குணம்

சொறிபுடையெண் குன்ம நமைச்சொறி யரசம்
பறிகிரணி கல்லூனம் பன்னோய்—நெறியைத்
தடங்கணங்க பங்கிருமி சர்ப்பவிடஞ் சந்நி
யிடங்கணங்க லச்சிசம்போ மெண்.

இ-ள். வெங்காரத்தினால் தவளைச் சொறி புடை அஷ்ட குன்மம் தினவு இரத்தமூலம் ஒழுக்குக் கிரகணி அஸ்மரி பங்கு வாத தந்த நோய் நாளவழியைத் தடுக்கின்ற மூத்திரக் கிரிச்சரங்க கபாதிக்கம் பாம்பு புழு விஷம் சந்நிபாதம் ஆகிய இவைகள் விலகும் டங்கணம் - வெங்காரம். 118

### சீனக் காரத்தின் குணம்

சீனமெனுங் காரமிது சீறிவரு பல்லரணை
யானைக்கால் கண்ணோ யனிலமொடு—மாநிலத்திற்
றுன்மாங் கிசம்வாய்வு தோலாத வுள்ளழலை
குன்மமிவை போக்குங் குறி.

இ-ள். சீனக்காரம் தந்த பிரஊனம் சிலிடதம் க்ஷதசுக்கில வாதத் திமிர் அதிமாமிசார்மம் வாதப்பிணி உட்சூடு குன்மம் ஆகி இவைகள் நீக்கும். 11

### சவுக்காரத்தின் குணம்

கரப்பானைச் சீதத்தைக் கண்டிக்கும் பேதி
யுரப்பாக்கும் வாயுவைவிட் டோட்டுந்—தரைக்குள்
வழலை யெனப்பேர் வகித்தசவுக் கார
மழலைகுன்மம் போக்கு மறி.

இ-ள். வழலை என்கிற சவுக்காரம் கடுவன் சீதளம் வாத கோபம் உட்சூடு வயிற்று நோவு ஆகிய இவைகளைப் போக்கும் விரேசனமாம். 1187

## அப்பளக்காரத்தின் குணம்

குடல்வாதஞ் சீலை கொடிதான வாத
மடல்புரியு மைய மறுக்கு—நெடுவயிற்றி
னுப்பிசத்தி னோடே யுயர்குன்ம நோயகற்று
மப்பளக் கார மது.

இ-ள். அப்பளக்காரம் வாதக் குடல் விருத்தி சீல் வீக்கம் மகாவாதம் கபாதிக்கம் வயிற்றுப்பிசம் வாதகுன்மம் இவற்றை நீக்கும் என்க. 1188

## நவாச்சாரத்தின் குணம்

குன்மங் குடற்சூலை கொல்லு மகோதரத்தை
வன்மையுறு கல்லடைப்பை மாற்றுங்காண்—சன்மக்
கவிச்சுமுத் தோடங் கனவாத நீக்கு
நவாச்சார மாதே நவில்.

இ-ள். மாதே! நவாச்சாரம் வயிற்றுவலி குடலிற் குத்தல் பெருவயிறு அஸ்மரி சரீரத்திற் புலால் வாசம் திரிதோஷம் வாத நோய் இவைகளை விலக்கும். 1189

## யவாக்ஷாரத்தின் குணம்

குய்யன் களநா கொடிறுவா யிவ்விடநோ
யைய மிரைப்பிரும லாசனப்புண்—பையவுறு
கீடவிடஞ் சோபை கிராணியையும் பம்பரம்போ
லாயவிடு மெய்யவா க்ஷாரம்.

### இதுவுமது

அட்ட குன்மஞ்சூலை யதிதூல முட்டினத்தா
லொட்டிவரு வாத முதரநோய்—துட்டமந்த
நீடுகப நீரடைப்பு நீங்காப் பிலீகமிவை
யோடுமவா க்ஷாரத்தா லுண்.

இ-ள். யவாக்ஷாரம் விரணப் பிரமேகம் களாகம் ஜிக்காலஜகம் காளுகள் சுண்டிகள் ஊர்த்வகுதம் கப விருத்தி சுவாசம் காசம் பகந்தர விரணம் செந்து விஷம் வீக்கம் வாதக்கிராணி அவுத வயிற்றுவலி குத்தல் அதிதூலம் சுவாஸித வாதம் சலோதரம் விஷாலஜகம் கபநோய் மூத்திரோச்சகம் வாத பிலீகம் இவைகளை யொழிக்கும். 1191

## சத்திக்ஷாரத்தின் குணம்

மந்தமொடு தங்கு மலசலம்பி லீகமடி
யுந்தி வருகின்ற வொலியிருமல்—குந்தவைக்கும்
வாதவலி குன்ம மகோதரங் கிராணியும்போ
மோதுசத்தி க்ஷாரத்தை யுண்.

இ-ள். சத்திக்ஷாரத்திஞல் மந்தாக்கினி சிரணமல மூத்திரம் சிலேத்ம பிலீகம் கோழை விழும்படிச் சத்தியுடன் வராநின்ற க்ஷய காசம் உருஸ்தம்ப வாதம் வயிற்றுவலி பெருவயிறு கிரகணி ஆகிய இவைகள் போம். 1192

## தும்பக்ஷாரத்தின் குணம்

ஈளை யுடனே யிறைப்பு வலிவாத
மாளைவிடாக் குன்மநோ யாவதும்போ—வேளையிமைப்
போதில்வெல்லும் வேழப் புருவச் சிலைமயிலே
கோதில்துப்பக் காரத்தைக் கூறு.

இ-ள். மதனை இமைப்போதில் வெல்லும் வில்லனைய புருவ முடையவளே! தும்பராட்சாரத்திஞல் கோழை சிலேத்ம சுவாசம் வாயுவினிசுவு திரிதோஷ குன்மம் இவைகள் விலகும். 1193

## உமிலக்ஷாரத்தின் குணம்

குடல்வாதஞ் சூலை கொடுங்குன்ம மோடும்
விடலருநீர்க் கட்டும் விலகு—மடவார்
கமல வதனக் கனங்குழலே நாளு
முமிலட் சாரத்தை யுரை.

இ-ள். தாமரை மலர்போன்ற முகத்தையும் மேகம்போன்ற கூந்தலையு முடையாளே! உமிலட்சாரத்திஞல் வாத குடல் விருத்தி குத்தல் வாத குன்மம் வாத மூத்திரக் கிரிச்சுரம் ஆகிய இவைகள் விலகும் என்க. 1194

## துத்தின் குணம் (இதுவே மடல்துத்தம்)

முற்றிற் குறிப்புண் முளைவிரணஞ் சென்னிதனைப்
பற்றிநின்ற வாதம் படர்கரப்பான்—சுத்தவிழிக்
காசங் கணம்பில்லங் கண்ணோய்க்குந் தந்தொலையும்
வாசமிகு துத்தத்தால் வாழ்த்து.

இ-ள். துத்தத்திஞல் அரிசோரோகம் முளைகளுள்ள புண்கள் வாதிரசஸ்தாபம் கரப்பான் கருவிழி மந்தாரகாசம் சுழி கணம் இமைப்பில்லா நோய் கண்ணோய் குந்தரோகம் ஆகியவை நீங்கும் என்க. 1195

## துரிசின் குணம் (இதுவே மயில்துத்தம்)

புண்ணாற்றுங் காமியத்தின் புண்ணாற்றுங் கண்ணோயை
விண்ணேற்று முத்தோட வீறடக்குஞ்—சண்ணுகின்ற
வாந்தியொடு பேதிதரும் வாய்நோய் சுரந்தணிக்குங்
காந்தி தருந்துரிசி காண்.

இ-ள். துரிசி வாதாதிதோஷ விரணம் அவமந்த குய்யவிரணம் கண்ணோய் திரிதோஷம் சிலேத்மமுகபாகம் வாதகிதசுரம் இவைகளை நீக்கும், வமனம் விரோசனம் தேஜசு இவைகளை யுண்டாக்கும்.

## அன்னபேதியின் குணம்

முளைவிரணஞ் சூலமந்த முட்டாமைக் கட்டி
விளையறன்ம கோதரநோய் வீட்டும்—வளைமலைபோற்
காட்டுமன்னந் தன்னைக் கணத்திற் சலமாக்கிக்
காட்டுமன்ன பேதியது காண்.

இ-ள். அன்னத்தை நீராய்க்கரைக்கின்ற அன்னபேதி, முளை கட்டி குத்தல் அசீரணம் பாய்கின்ற ஆமைக்கட்டி வீறிய சலோதரம் இவைகளை நீக்கும். 1197

## மாங்கிசபேதியின் குணம்

துன்மாங்கிசங் கரைக்குஞ் சோபை யழலையொடு
வன்மைமிகு சூடுகப மாற்றுங்கா—ணன்மயிலே
யொப்பறுபி லீகமென வோதுகட்டி யைக்கெடுக்குஞ்
செப்பசய மாங்கிச பேதி.

இ-ள். நல்ல மயில்போல்பவளே! மாங்கிசபேதி விரணாதிகளின் துர்மாமிசம் வீக்கம் உள்வெப்பம் கீல்பிடிப்பு கபதோஷம் பிலீகக்கட்டி இவைகளை விலக்கும். 1198

## அம்பரின் குணம்

அளகமுள வாரமிர்தே யாண்மையையுண் டாக்கும்
பளபளென மெய்புரப் பாக்குங்—குளகுளத்த
புண்ணுற்று மம்பர் பொரிகரப்ப னைப்போக்கும்
விண்ணோர்க்கும் வாசனையாம் விள்.

இ-ள். அளகத்தையுடைய ஆரமிர்தனையாளே! பரிமளமுள்ள அம்பர் சுக்கிலவிருத்தியையும் தேஜசையும் பலத்தையுந்தரும், அளிவிரணத்தையும் கரப்பானையும் நீக்கும். 1199

## குந்திரிக்கத்தின் குணம்

காச சுவாசங் கனத்தமே கக்கட்டி
வீசு விடக்கடி விறுச்சுகுட்டம்—பேசு
படர்தா மரைசிரங்கு பண்டை விரணங்க
ளிடர்செய்யிற் குந்திரிக்க மேந்து.

இ-ள். குந்திரிக்கத்தினால் இருமல் இரைப்பு மேகம் பிடகம் பலவிஷம் கிருஷ்ணகுஷ்டம் படர்தாமரைக்கிரந்தி நீடித்த சிரங்குகள் இவைபோம். 1200

## குங்கிலியத்தின் குணம்

பெரும்பாடு மேகம்போம் பேரா துடலி
லரும்பியபுண் ணாற்று மிவையல்லாற்—றுரும்பா
கெலும்புருக்கி புண்சீழு மேகு மூலகிற்
சலம்பருகுங் குங்கிலியத் தால்.

இ-ள். நீரையிழுக்கின்ற குங்கிலியத்தால் அசிர்க்கரம் தந்தி மேகம் கிளைக்கிறவிரணம் அஸ்திசிராவம் சீழ்விரணம் இவை விலகும். 1201

## வெள்ளைக்குங்கிலியத்தின் குணம்

வெள்ளை யளிந்த விரணநா பிக்கமலத்
தொள்ளைவிரண மேகந் தோற்றுகினு—முள்ளே
வருவரசே மேற்புண் வரினுஞ் சுமேகச்
சருவரச மேற்பழியைச் சாற்று.

இ-ள். வெள்ளைக் குங்கிலியத்தால் மேகத்தாற் பிறந்த நாளப் புண் உந்திக்கமலவிரணம் சீழ்மேகம் உள்மூலவிரணம் இவை நீங்கும். சருவரசம்-குங்கிலியம். 1202

## குக்கில் குணம்

காததர நாசிநோய் கட்டிகடி மேகப்புண்
வாதவித்தி ரஞ்சூலை வன்குநக—மோதிவையிக்
திக்கி லிருக்கத் திடமுள வோவுபயக்
குக்கி லிருக்கமக் குள்.

இ-ள். கருமை செம்மை என்னும் இருவிதக்குக்கிலால் கர்ணபூதி திரிதோஷ ஒஷ்டம் கிராணிபாகம் பிடகம் காணுவிஷம் மேகரணம் வாதவித்திரிதி கீல்பிடிப்பு நகங்களைப்பற்றிய விரணம் இவைபோம். 1203

## அரக்கின் குணம்

குட்ட மசிர்க்குபித்தங் குன்மமிரைப் பென்புருக்கி
பட்டிடுபுண் ணாகச்சூர் பங்கநோய்—கொட்டோ
ராக்கரக்குஞ் சந்நிசுர மையமிவைக் கெல்லா
மாக்கரக்கு நூலை யறி.

இ-ள். அரக்கு குறைநோய் அசிர்க்கரம் சிலேஷ்ம பயித்தியம் வயிற்றுநோய் சுவாசம் அஸ்திசிராவம் சத்தியோவிரணம் இருதவிருதவாதம் முடம் சந்திக சந்நிபாதம் கபாதிக்கம் இவைகளைக் கெடுக்கும். 120

## மெழுகின் குணம்

அறைபக்க வாத மதைப்பைய மூதை
குறைவிற் திதழ்நோய்தேள் கூளி—கறையைப்
புழுகெடுக்க வங்கதுறு புண்ணிடிப்புண் டீப்புண்
மெழுகெடுக்க வாங்கமது மெய்.

இ-ள். மெழுகினால் பாரிசவாயுவு வீக்கம் கபநோய் வாதகோபம் சுக்கில நஷ்டம் சிலேஷ்மோஷ்விரோகம் தேள்விஷம் பைசாசம் குஷ்டம் ஆகந்துகவிரணம் இவைபோகும் என்க. 1205

## பலவகை மெழுகின் குணம்

பொன்மெழுகு மாரல் சுரங்கண்ணோய் போக்கிவிடு
நன்மெழுகு கண்ணோய்க்கு நஞ்சாகு—முன்னுங்
கொசுமெழுகு நாளுங் குறித்தவசி யத்திற்
கிசையுமெந்தி ரத்திற்கு மெண்.

இ-ள். பொன்மெழுகு திரியாகிய சுரத்தையும் கண்ணோயை யும்போக்கும், நல்லமெழுகு விரணத்தில் உண்டாகின்ற நோயை நீக்கும். கொசுமெழுகு வசியத்திற்கும் யந்திரத்திற்கும் உதவும்.

## அப்பிரகத்தின் குணம்

அப்பிரகமான் றைந்தா லண்ட மகோதரமு
வெப்பிரமி யங்கலமுன் னீரிழிவும்—வெப்பூரற்
பேதமும்போ காமேகப் பித்தமுங்கண் ணோயும்பல்
வாதமும்போந் தாதுவுமா மால்.

இ-ள். அப்பிரகத்தில் குடலண்டம் பெருவயிறு பிரமியம் அதி மூத்திரம் சுரம் நமைகள் மேகபயித்தியம் கண்ணோய் பாதாக்ஷேபக முதலிய வாதரோகங்கள் இவை ஒழியும், வீரியவிருத்தி உண்டாம்.

## கல்நாரின் குணம்

காசபித்தம் வாதம் கடுப்பீறு நோயெரிவு
வீசுசர்த்தி நீரடைப்பு விந்துநட்டம்—பேசுமசை
தின்னுரைக் கூவுமந்தந் தீக்குடர்க்கல் தாகமிவை
கன்னுரைக் கூவவிடுங் காண்.

இ-ள். கல்நாரினால் பித்தகாசம் வாதரோகம் பற்குடைச்சல் பல்லரணை நீர்க்குறி எரிச்சல் பித்தவாந்தி மூத்திராதீதம் சீதசுக்கி லம் அஜீரணம் பித்தக்குடஸ்வாதம் பித்ததாகம் இவை நீங்கும்.

## சகஸ்திரவேதியின் குணம்

அத்திசுரந் தாகசுர மாசனவி ரத்தமொடு
குத்திவரு வாந்திகபஞ் கூறுசந்நி—மெத்த
நிகழ்த்துகண்ணோய் தாதுநட்ட நீட்டநீங்கா மேகம்போஞ்
சகத்திர வேதிக்குத் தளர்ந்து.

இ-ள். சகஸ்திரவேதிக்கு அஸ்திசுரம் தாகபூர்வசந்தி ரத்த பேதி வமனம் கபாதிக்கம் சந்நி கண்ணோய் வீரியக்குறைவு பிரமேக மிவைபோம். 1209

## கல்மதத்தின் குணம்

கண்டபடி பிணிமேகங் கல்லொடுநீ ருனடைப்பு
வண்டற் கிரிச்சுரநோய் மாபிரமி—புண்டலினாற்
பன்மதஞ்சேர் தாதுநட்டம் பன்னுமிந்நோய்க் கூட்டத்துட்
கன்மதஞ்சே ரக்கரக்குங் காண்.

இ-ள். கன்மதத்தினால் அரைபுகரோகம் தந்துமேகம் அஸ்மரி மூத்திரபிந்து வாதவஸ்தி சதையடைப்பு தடித்த மூத்திரகிரிச்சரம் வாதப்பிரமியம் அதிகொழுப்பினாற் பிறந்த தாதுநஷ்டமிவை தீரும்.

## சிலாசத்தின் குணம் (இதுவே கற்பூர சிலாசத்தம்)

கல்லடைப்பு மேகங் கனதூலம் வித்திரிதி
சொல்லடைக்கு நீருரகற் சோணிதந்தான்—மெல்லிடையார்க்
கில்லசச்சத் தில்லையெனு மிந்திரிய நட்டமுமாங்
கல்லகச்சத் தில்லையெனுங் கால்.

இ-ள். கிலாசத்தினால் அஸ்மரி கில்மேகம் அதிதூலம் வித்திரி திகிரிச்சரமா சோணிதவாதம் சந்ததிக்கு ஏதுவாகிய விந்துநஷ்டம் இவைபோம். இது மலைக்குள்ளிருந்து வருதலால் கல்லகச்சத்தென் றூர். 1211

## கோமூத்திர சிலாசத்தின் குணம்

கோமூத் திரசிலா சத்தாற் குறுகிப்
போமூத்திர மெரிவுட் புண்மேகம்—நாமேவு
மெப்புதிர வெப்புமறும் விழிமுனி விம்பர்
துட்புமஞ்சு மெல்லிதழாய் சொல்.

இ-ள். மெல்லிதழாய் கோமூத்திர சிலாசத்தால் மூத்திரகிரிச் சரம் நாளத்தெரிவு உள்விரணம் பிரமேகம் நாவிற்சூடு ரத்தக் கொதிப்பு இவை நீங்கும் என்க. 1212

## சிலாரசத்தின் குணம்

தலைவலி நீரேற்றந் தறுர்வாதஞ் சந்நி
குலைகுலையுந் தும்மற் குடிபோஞ்—சிலைநுதலே

மாசுடையி லஞ்சுநிறம் வாய்ந்திருப்ப தன்றிமணம்
வீசு சிலாரசத்தால் விள்.

இ-ள். சிலைநுதலாளே! மலினமேக நிறமும் மணமுமுள்ள சிலாரசத்தால் சிரஸ்தாபம் ஜலதோஷம் தநுர்வாதம் சந்நி அதி தும்மற் பீனசம் இவைகள் போம். 1213

## நண்டுக்கல்லின் குணம்

நீருருக நீரடைப்பு நீங்காப் பெருவயிறு
நீரொழுகு மேகம்வெட்டை நீங்குங்கா—ணாரமிர்தே
பைய மறுக்கு மரியதொரு நண்டுக்கல்
செய்யுங் குணமிதுவாந் தேர்.

இ-ள். ஆரமிர்தம்போன்றவளே! நண்டுக்கல் க்ஷிணமூத்திரம் அஸ்மரி மகோதரம் சலப்பிரமேகம் வெள்ளை வீழல் கபாதிக்கம் ஆகிய இவைகளை விலக்கும். 1214

## காவிக்கடல், கடல்நுரை இவைகளின் குணம்

அடலுறுநற் காவிக்க லட்சுரோய் மேகம்
வெடியக்கி வாந்திபித்தம் வீட்டுங்—கடனுரையே
நேத்திர நோய்விரண நீடுகபங் குன்மமிவை
தீர்த்திடுங்காண் டப்பாது செப்பு.

இ-ள். காவிக்கல் கண்ணோவு மேகநீர் கிளை அக்கிபித்தவமனம் இவைகளை நீக்கும். கடல் நுரை விழிநோய் புண் க்ஷயம் குன்மம் இவைகளை நீக்கும். 1215

## சுக்கான் கல்லின் குணம்

விரணந் தனையாற்றும் வீறுசந்நி நீக்கு
மரணஞ்செய் வாயுவையும் வாட்டுங்—கரணத்தின்
மிக்கான வின்பமருண் மெல்லியலே தூயவெள்ளைச்
சுக்கா னெனுங்கலது சொல்.

இ-ள். கரணங்களுக்கு மிகுந்த வின்பந்தரும் மெல்லியளே! சுக்கான்கல் புண் சந்நி மகாவாதம் இவைகளை நீக்கும். 1216

## நான்குவகை நிமிளைகளின் குணம்

தாதுவைவ ளர்க்குந் தனிப்பித்தத் தைப்போக்கு
போதுசந்நி பாதத்தை யோட்டுங்கா—ணோதை
வொருநா வுறுதே யுயர்பொன் முதலா
மொருநால் வகைநிமிளை யும்.

இ-ள். பொன் வெள்ளி வெண்கலம் செம்பு என்கிற நான்கு வித நிமிளைகளும் விந்துவை வளர்க்கும். அதிபித்தத்தையும் சந்நியையும் நீக்கும். 1217

## வெள்ளைச்சங்கின் குணம்

கசிவா மிரத்தபித்தங் கண்ணோய்க ளேகும்
பசியாரும் வாதம் பறக்கு—மிசிவுடனே
தங்குமு ளைவிரணந் தானகலு மேவெள்ளைச்
சங்கமது வுண்டேயிற் றான்.

இ-ள். வெண்சங்கத்தினால் உதிரபித்தம் விழி ரோகங்கள் வாத தோஷம் இசிவு முளைக்கட்டி இவைகள் நீங்கும். தீபனமுண்டாம்.

## முத்துச்சிப்பியின் குணம்

ஈளை விலகு மிருமல் குடியோடுங்
கோமவிழு நங்காய்நீ கூறக்கேள்—வாளுடலிற்
கப்பிவரு மேகக் கட்டியையும் போமுத்தின்
சிப்பிதனைக் கண்டவிடத் தே.

இ-ள். முத்துச்சிப்பியினால் கபக்கோழை காசம் க்ஷயரோகங்கள் மேகப்பிடகம் சிலேத்மாதிக்கம் இவைகள் விலகும். 1219

## பலகறையின் குணம் (இதுவே கவடி)

மாந்தந் தங்கிரணி மாவிடச்சு ரங்கண்ணோய்
தொந்தம் பரிநாமச் சூலைகய—மிந்த
வுலகறையக் காலொடிவை யோடு நரைத்த
பலகறையைக் காணியம் பார்.

இ-ள். வெண்பலகறையினால், அஜலம் தாகம் கிராணி விஷசுரம் விஷநோய் வாத தொந்தம் பலவிதக் குத்தல் க்ஷயம் கபவாதம் இவைகள் போம். நரை - வெள்ளை. 1220

## கலைமான் கொம்பின் குணம்

அவயவத்தின் வெப்ப மதியத்தி மேகங்
கவிழ்திரிதோ டம்பெருந்தா கங்க—ளிவைதா
நிலைக்குமோ மார்புநோய் நேத்திரநோய் நீங்கும்
கலைக்கொம்பாற் பேயுமிலைக் காண்.

இ-ள். கலைமான் கொம்பினால் கைகால்களில் அரிவு அஸ்தி மேகம் முத்தோஷம் விதாகங்கள் மருமவலி கண்ணோவு பிசாசம் இவைகள் ஏகும். 1221

## சோகி-பீங்கான்-மிருகக்கொம்பு-பல் எலும்புகளின் குணம்

சோகிபீங் கானறுக்குந் துன்மாங்கி சந்தனைக்
கோகுதிரை யொட்டை குரங்கமுவா—வேகப்

பலமிருகப் பல்லெலும் பல்விழி நோய்தீர்க்குங்
கலமிகு மாதே நவில்.

இ-ள். நன்மை மிகுந்த மாதே! பலகறை பீங்கான் இவைகள் விருத்தி மாமிசாதி நோயையும் பசு குதிரை ஒட்டை குரங்கு யானை பன்றி முதலிய பல மிருகங்களின் நகம் என்புகளும் பற்பல விழிப் பிணியையும் நீக்கும். சோகி - பலகறை. 1222

## பஞ்சலோக ஐந்தெண்ணெய், குதிரைக்குளம்பு, கழுதைக்குளம்பு, எருமைக்கொம்பு இவைகளின் குணம்

பஞ்சலோ கச்சார்வு பற்றறுக்குங் கண்ணோயை
யஞ்செண்ணெய் வாதசந்நி யைப்போக்கும்—விஞ்சு
குதிரைக் கழுதைக் குளம்பெருமைக் கொம்பும்
குதிரைவலி நீக்குங் குறி.

இ-ள். பொன் காரீயம் செம்பு இரும்பு அத்தநாகம் என்கிற பஞ்ச லோகங்கள் விழிப் பிணியையும், வேம்பு புங்கு புன்னை ஆமணக்கு என்கிற இவற்றின் ஐவித நெய்கள் வாத சந்நிகளையும், குதிரை வலியையும் நீக்கும். 1223

## சீலை, கம்பளம், மயிலிறகு இவ்வகைச் சாம்பலின் குணம்

அத்திபிர மேகம்போ மாடையின்றன் சாம்பலுக்குத்
தத்திவரு ரத்தந் தடைப்படுங்காண்—சத்தியமாய்
கம்பளச் சாம்பல்சந்நி காதுமஞ்ஞைத் தோகைபற்பங்
கும்புவிக்கல் வாந்திகெடுக் கும்.

இ-ள். சீலைச் சாம்பலுக்கு என்புருக்கியும் மீறி இரத்தமும் போம். கம்பளச் சாம்பல் சந்நியையும், மயிலிறகுச் சாம்பல் விக்கல் சர்த்தியையும் நீக்குமென்க. 1224

## ஒட்டறையின் குணம் (இதனை ஒட்டடை என்பர்)

குட்டங் களநோய் குருதிமூ லம்பேதி
யுட்டங் கசிரணமுள் ளூறுகுன்மங்—கெட்டசிரா
வற்புதம்புண் சீதசுர மாப்பவகி நஞ்சிவைகள்
புற்புதம்போ லொட்டறையாற் போம்.

இ-ள். ஒட்டறையால் குறைநோய் சிலேத்மங்கள் கண்டரோகம் இரத்தமூலம் அதிசாரம் மந்தம் சிலேத்மகுன்மம் நரம்புக்கிரந்தி நடுக்கற்சுரம் சிறுபாம்பு விஷம் ஆகியவைகள் போகும். 1225

## இந்திரகோபப் பூச்சியின் குணம்

கருமேகந் தாதுநட்டங் கக்கும்கபம் போக்குந்
தருமேகற் காயசித்தி தன்னை—வருமேக

சாலமுறை வாளரகத் தையலே நன்மாரிக்
காலமுறை யீயலது காண்.

இ-ள். மேகம்போன்ற கூந்தலாளே! இந்திரகோபப்பூச்சி, கரு
மேகத்தையும் சுக்கில க்ஷீணத்தையும், சிலேத்ம ரோகத்தையும் நீக்
கும். காயசித்தியைச் செய்யும். ஈயல் - இந்திரகோபம். 1226

## முசுறுமுட்டையின் குணம்

துள்ளு மடல்வாதத் துன்பமந்தம் வல்லிசிவு
தள்ளு வலிக்குழிச தக்கபநோ—புள்ளில்
விகிறுசந்நி பாதம் விலகும்தூ கத்தார்
முசுறுமுட் டைக்குணத்தை முன்.

இ-ள். இலுப்பைமரத்து முசுறுமுட்டையினால் மகாவாதம் மந்
தம் இசிவு ஐவித வலி நீர்க்கபநோய் சந்நி இவைகள் விலகும். 1227

## பூநாகத்தின் குணம்

மாதவறு செய்வறட்சி மாறுமடங் காஞ்சந்நி
பாதவறுநோ யோடென்றும் பாறுமடல்—வாதமறு
குண்ட பதமீளு மோக்காள மையமும்போம்
கண்ட பதமென்னுங் கால்.

இ-ள். பூநாகத்தினால் மிகவுந் துன்பத்தை விளைக்கின்ற காச
ரோகமும் 7-வித அசாத்திய சந்நிபாதசுரங்களும் ஊருஸ்தம்பமென்
கிற மகாவாதமாகிய புலியினால் கவர்ந்துகொள்ளப்பட்ட தொடையும்
ஒக்காளமும் சிலேத்ம ரோகமும் ஒழியுமென்க. புலி வாயில் அகப்
பட்ட ஆட்டுத்தொடை மீளாததுபோல் இந்த மகாவாதத்தில் அகப்
பட்ட மனிதர் தொடை இவ்வியாதியினின்றும் நீங்குவது அரு
மையாயிருப்பினும் இது இதை நீக்கும் என்னுந் துணிவு தோன்ற
அறுகுண்டபதம் என்றார். அறுகு-புலி, கண்டபதம்-பூநாகம். 1228

## கற்பாசியின் குணம்

பண்டைமே கத்தைப் பறக்கடிக்கும் பேதிகட்டு
மண்டையெறி வாசனையி லாருங்காண்—தொண்டைக்
கனிக்குமெழி லூட்டுமிதழ்க் காரிகையே கார்நற்
கனிக்குமொரு கற்பாசி தான்.

இ-ள். ஆதொண்டைக் கனியினுமழகிய இதழையுடையவளே!
மழையாற் பிறந்த கற்பாசி நீடித்த மேகத்தையும் அதிசாரத்தையும்
க்கும் . வாசனைத் திரவியங்களில் ஒன்றாகப் பொருந்தும். 1229

# பாஷாண வகை

## பாதரசத்தின் குணம்

விழிநோய் கிரந்திகுன்ம மெய்ச்சூலை புண்குட்
டழிகாலில் விந்துவினு லத்தை—வழியாய்
விரியும் விதியாதும் புரியினே யெல்லா
மிரியும்விதி யாது மிலை.

இ-ள். சிவவீரியம் என்கிற ரசத்தை ஜீவரட்சாமிர்த சாஸ்திர முறைப்படி செய்யத்தக்க சுத்தியெல்லாஞ் செய்து பிரயோகித்தால் நேத்திரநோய் நரம்புக்கிரந்தி அஷ்டகுன்மம் கீல்பிடிப்பு மகா விரணங்கள் பெருவியாதி க்ஷீணவாதம் இவை முதலிய ரோகங்களும் விலகும். இதைச் சொல்லாத சாஸ்திரம் யாதொன்றுமில்லை. 1230

## பாதரசதோஷத்தின் குணம்

### விருத்தம்

கலையைக்கிழிக்கு மவிழ்த்தெரியுங் கல்லைத்தேடி யெடுத்தெரியு
மலையிற்குதிக்கும் புனன்மூழ்கி மருள்சேர்பித்தந் தனைக்கொடுக்கும்
முலையினனல்போ துடல்வெதுப்பு மோயாவழலை வியர்வாக்கும்
பலகாலமுமே வாய்பிதற்றும் பாதரசதோ டமுமிஃதே.

இ-ள். பாதரசத்தைச் சுத்திசெய்யாமையால் வருந்தோஷங்களாவன: துணியைக்கிழித்தல், அதனை யவிழ்த்தெறிதல், கல்லாலடித்தல், மலையினின்றுங் குதித்தல், தண்ணீரில் முழுகிமுழுகிக் கிளம்பல், மயங்கிப் பித்துக்கொள்ளல், தேகத்தில் அழலையுண்டாகுதல் மாறாது வாயில் சலமூறல், அதிவேர்வை பெருகல், எப்போதும் பிரலாபித்தல் இவைகளாம். 1231

## எண்வகைத்தோஷம் நீங்காத ரசத்தின் குணம்

### வெண்பா

சர்ப்பம்வங்கங் கந்திவன்னி சஞ்சலம லங்காள
மொப்புண்மந்த மெண்டோட மோட்டிரத்தத்—தைப்புசிப்பார்
கொப்புளங்குட் டங்கியெரி கோதுவிந்தி னைப்பிறத்த
லப்புளமூர்ச் சைக்குமரி யார்.

இ-ள். ரசத்திற்கு எண்வகைத்தோஷமுண்டு அவையாவன:— சர்ப்பம் வங்கம் கந்தி வன்னி சஞ்சலம் மலம் காளம் மந்தம் என்பனவாம். அவைகளை நீக்காமல் அந்த ரசமருந்தை யுண்பவர்கள் முறையே விரணம் பெருவியாதி தீச்சுவாலை தபித்தல் உதிரப்பசையற்ற தேகநிறம் வீரியநாசம் மரணம் சோபம் என்கிற 8-வித ரோகங்களையும் அடைவார்கள். 1232

சாலமுறை வாளரகத் தையலே நன்மாரிக்
காலமுறை யீயலது காண்.

இ-ள். மேகம்போன்ற கூந்தலாளே! இந்திரகோபப்பூச்சி, கரு
மேகத்தையும் சுக்கில க்ஷீணத்தையும், சிலேத்ம ரோகத்தையும் நீக்
கும். காயசித்தியைச் செய்யும். ஈயல் - இந்திரகோபம். 1226

## முசுறுமுட்டையின் குணம்

துள்ளு மடல்வாதத் துன்பமந்தம் வல்லிசிவு
தள்ளு வலிக்குழிச தக்கபநோ—புள்ளில்
விகிறுசந்நி பாதம் விலகும்தா கத்தார்
முசுறுமுட் டைக்குணத்தை முன்.

இ-ள். இலுப்பைமரத்து முசுறுமுட்டையினால் மகாவாதம் ம
தம் இசிவு ஐவித வலி நீர்க்கபநோய் சந்நி இவைகள் விலகும். 122

## பூநாகத்தின் குணம்

மாதவறு செய்வறட்சி மாறுமடங் காஞ்சந்நி
பாதவறுநோ யோடென்றும் பாறுமடல்—வாதமறு
குண்ட பதமீளு மோக்காள மையமும்போம்
கண்ட பதமென்னுங் கால்.

இ-ள். பூநாகத்தினால் மிகவுந் துன்பத்தை விளைக்கின்ற கா
ரோகமும் 7-வித அசாத்திய சந்நிபாதசுரங்களும் ஊருஸ்தம்பமெ
கிற மகாவாதமாகிய புலியினால் கவர்ந்துகொள்ளப்பட்ட தொடையு
ஓக்காளமும் சிலேத்ம ரோகமும் ஒழியுமென்க. புலி வாயில் அக
பட்ட ஆட்டுத்தொடை மீளாததுபோல் இந்த மகாவாதத்தில் அக
பட்ட மனிதர் தொடை இவ்வியாதியினின்றும் நீங்குவது அ
மையாயிருப்பினும் இது இதை நீக்கும் என்னுந் துணிவு தோன்
அறுகுண்டபதம் என்றார். அறுகு-புலி, கண்டபதம்-பூநாகம். 12

## கற்பாசியின் குணம்

பண்டைமே கத்தைப் பறக்கடிக்கும் பேதிகட்டு
மண்டையெறி வாசனையி லாருங்காண்—கொண்டைக்
கனிக்குமெழி லாட்டுமிதழ்க் காரிகையே கார்நற்
கனிக்குமொரு கற்பாசி தான்.

இ-ள். ஆதொண்டைக் கனியினுமழகிய இதழையுடையவளே
மழையாற் பிறந்த கற்பாசி நீடித்த மேகத்தையும் அதிசாரத்தை
க்கும் . வாசனைத் திரவியங்களில் ஒன்றாகப் பொருந்தும். 12

# பாஷாண வகை

## பாதரசத்தின் குணம்

விழிநோய் கிரந்திகுன்ம மெய்ச்சூலை புண்குட்
டழிகாலில் விந்துவினு லத்தை—வழியாய்
விரியும் விதியாதும் புரியினே யெல்லா
மிரியும்விதி யாது மிலை.

இ-ள். சிவவீரியம் என்கிற ரசத்தை ஜீவரட்சாமிர்த சாஸ்திர முறைப்படி செய்யத்தக்க சுத்தியெல்லாஞ் செய்து பிரயோகித்தால் நேத்திரநோய் நரம்புக்கிரந்தி அஷ்டகுன்மம் கீல்பிடிப்பு மகா விரணங்கள் பெருவியாதி க்ஷீணவாதம் இவை முதலிய ரோகங்களும் விலகும். இதைச் சொல்லாத சாஸ்திரம் யாதொன்றுமில்லை. 1230

## பாதரசதோஷத்தின் குணம்

### விருத்தம்

கலையைக்கிழிக்கு மவிழ்த்தெரியுங் கல்லைத்தேடி யெடுத்தெரியு
மலையிற்குதிக்கும் புனன்மூழ்கி மருள்சேர்பித்தந் தனைக்கொடுக்கும்
முலையினனல்போ துடல்வெதுப்பு மோயாவுழலை வியர்வாக்கும்
பலகாலமுமே வாய்பிதற்றும் பாதரசதோ டமுமிஃதே.

இ-ள். பாதரசத்தைச் சுத்திசெய்யாமையால் வருந்தோஷங்களாவன: துணியைக்கிழித்தல், அதனை யவிழ்த்தெறிதல், கல்லாலடித்தல், மலையினின்றுங் குதித்தல், தண்ணீரில் முழுகிமுழுகிக் கிளம்பல், மயங்கிப் பித்துக்கொள்ளல், தேகத்தில் அழலையுண்டாகுதல் மாறாது வாயில் சலமூறல், அதிவேர்வை பெருகல், எப்போதும் பிரலாபித்தல் இவைகளாம். 1231

## எண்வகைத்தோஷம் நீங்காத ரசத்தின் குணம்

### வெண்பா

சர்ப்பம்வங்கங் கந்திவன்னி சஞ்சலம லங்காள
மொப்புண்மந்த மெண்டோட மோட்டிரத்தத்—தைப்புசிப்பார்
கொப்புளங்குட் டங்கியெரி கோதுவிந்தி ளைப்பிறத்த
லப்புளமூர்ச் சைக்குமரி யார்.

இ-ள். ரசத்திற்கு எண்வகைத்தோஷமுண்டு அவையாவன:— சர்ப்பம் வங்கம் கந்தி வன்னி சஞ்சலம் மலம் காளம் மந்தம் என்பனவாம். அவைகளை நீக்காமல் அந்த ரசமருந்தை யுண்பவர்கள் முறையே விரணம் பெருவியாதி தீச்சுவாலை தபித்தல் உதிரப்பசையற்ற தேகநிறம் வீரியநாசம் மரணம் சோபம் என்கிற 8-வித ரோகங்களையும் அடைவார்கள். 1232

## ரசாஞ்சனத்தின் குணம்

அரியரசாஞ்சனத்தா லம்புவியி லுள்ள
விரிவிழிநோ யெல்லா மறையு—மருவி
வருகா மியவிரண மாறும்புண் ணாறு
மொருமா மயிலே யுரை.

இ-ள். மயில்போன்ற சாயலாளே! ரசாஞ்சனத்தினால் பூப்படலம் விழிப்புண் குய்யாரோகப்புண் ஆறாக்கிரந்திகளும் விலகுமென்க. 1233

## ரசகர்ப்பூரத்தின் குணம்

இடைவாத சூலை யெரிசூலை குன்மந்
தொடைவாழை வாதமாஞ் சோணி—யிடையாதோர்
வொக்கும்ரச கர்ப்பூர மொன்றே யளவொடுநல்
விக்குவெல்லத் தேழுநா ளீ.

இ-ள். சுத்தித்த ரசகருப்பூரத்தைப் பிணிகளின் வன்மைக்கொப்ப நல்லவெல்லத்தில் தராமாணமாக வைத்துப் பத்தியத்தோடு ஏழுநாள் கொடுக்கச் சகனுவர்த்த வாதப்பிடிப்பு பித்தசூலை வயிற்றுநோய் சிலேஷ்மவூறல் கம்பவாதம் வாதாதிக்க சோணுவாதம் இவை போம். 1234

## சாதிலிங்கத்தின் குணம்

பேதிசுரஞ் சந்நி பெருவிரணஞ் சீதல்
காதிகடி காசங் கரப்பான்புண்—மீதூத
உருவிலங்கச் சங்கமதா யூறுகட்டி யும்போங்
குருவிலங்கச் சங்கமதைக் கொள்.

## இதுவுமது

ஆதரம் பாதவுருக் காதலாற் சாதிலிங்க
மோதி விரத்தகுண முற்றுடலிற்—றீதுபுரி
குட்டங் கிரந்தி கொடுஞ்சூலை வாதமுத
லுட்டங்கு நோய்களையோட் டும்.

இ-ள். சிவந்த சாதிலிங்கம் முதலிய பாதரச உருக்காகையால் அந்த ரசகுணத்தைக்கொண்டு அதிசாரம் ரூட்சை சந்நிபாதம் அற்புதப் புண் அதிமூத்திரம் காணுவிஷம் இருமல் கரப்பான் சிரங்கு நுணுக்காய்க் கிரந்தி மண்டலகுஷ்டம் பாமை சரீரக்குத்தல் வாதநோய் அந்தர்முக ரோகங்கள் ஆகிய இவைகளை விலக்கும் என்க.

## சவ்வீரத்தின் குணம்

குன்மமொடு குட்டங் கொடியவனி லத்திரட்டு
துன்மாங்கி சப்பெருக்கஞ் சூலைநோய்—வன்மையுறு

காமியப்புண் ணாதியநோய் கண்டாற்சவ் வீரனெனுஞ்
சாமியினு மத்தையுச் சரி.

இ-ள். சவ்வீரத்தினால் குன்மம் முறைநோய் மகாவாதங்கள் வளருகின்ற துர்மாமிசங்கள் கீல்பிடிப்பு அரிசோரோகம் இவை நீங்கும். 1237

## நெல்லிக்காய்க் கந்தகத்தின் குணம்

நெல்லிக்காய் கந்திக்கு நீள்பதினெண் குட்டமந்தம்
வல்லை கவிகைகுன்ம வாயுகண்ணோய்—பொல்லா
விடக்கடிவன் மேகநோய் வீறுசுரம் பேதி
திடக்கிரக ணீபம்போந் தேர்.

இ-ள். நெல்லிக்காய்க் கந்தகத்துக்கு 18-குட்டம் அலஜம் வல்லை கட்டி கவிகை மகோதரம் குன்மம் குந்தநோய் மகாவிஷமேக வியாதி வாதசுரம் வாதாதிசாரம் கபகிரகணி கபாதிக்கமிவைபோம்.

## வாணகந்தகத்தின் குணம்

வாணக் குழாய்க்கந்தி வாசனையை கண்டவுடன்
காணக் கிருமிசொறி காணுவாந்—தோணும்
பெருவியா திக்கூட்டம் பேருமத னூலின்
மருவியா ழுங்கொடியே வாழ்ந்து.

இ-ள். மதனநூலின் வகைகளறிந்தவளே! வாணமருந்துக்கான குழாய்க்கந்தகத்தால் ரசரத்தநாதுகளிற் பிறந்த சிறுகிருமி நமை குஷ்டங்கள் இவை போம். 1239

## தாளகத்தின் குணம்

தாளகத்தின் பேருரைக்கத் தாலுகப நோய்குட்டம்
நீளக் குளிர்க்காய்ச்ச னீர்க்கங்க—ளாளங்கொள்
துட்டப் பறங்கிப்புண் சூழழுகண் மண்டைநோய்
கிட்டப் படுமோ கிளத்து.

இ-ள். தாளகத்தினால் அதிசிக்வாரோகம் தாளுகச்ச கபநோய் குட்டரோகம் நடுக்கற்சுரம் க்ஷயகாசசுவாசம் துஷ்டவிரணம் ஜலஸ்ராவம் சிரஸ்தாபரோகம் ஆகிய இவைகள் விலகும் என்க. 1240

## சிவந்த அரிதாரத்தின் குணம்

சிவந்தவரி தாரமது செஞ்சிலைபோற் காட்டு
முவந்தனை யுண்முறையோ டுண்டா—லிவர்ந்தாழ்
சுரங்குளிர்மா வாதமுடற் சூலைநமை குட்ட
மிறங்குமென நாளு மிசை.

இ-ள். சிவந்த கல்லைப்போலிருக்கின்ற அரிதாரத்தைச் சுத்தி செய்து கிரமமாகவுண்டால் குளிர் சுரம் மாவாதரோகம் சரீரக்குத்தல் தினவு கிடிபகுட்டரோகம் ஆகிய இவைகள்போம் என்க. 1241

## மடல் அரிதாரக்காடுகள், மனோசிலை இவைகளின் குணம்

மடலரிதா ரத்தில் வருங்கா டிரண்டு
முடல்விடங்க ளைக்களையு முண்மை—கொடியகுட்டம்
காய்ச்ச லடுக்கலஜ கள்ளியிரைப் புச்சிலந்திப்
பேச்சறும னோசிலைக்குப் பேசு.

இ-ள். மடலரிதாரத்தில் பலவகை கட்டியென்கிற 2-விதக் காடுகளாலும் உடலிலூறிய விஷங்கள் நீக்கும். மனோசிலையில் சரும குட்டம் குளிர்சுரம் அஜகள்ளிகாரோகம் சுவாசம் சிலந்திவிஷம் இவைபோம். 1242

## மடலரிதாரத்தின் குணம்

ஈளை யுடனே யிருமல் குடிவிலகுங்
கோழை மலமகலுங் கொம்பனையாய்—நாளு
மடலுறுக யங்கரப்பா னூறுப்புண் ணும்போம்
மடலரிதா ரத்தை மதி.

இ-ள். புட்பக்கொம்பனையாளே! மடலரிதாரத்தினால் தமக சுவாசம் காசம் சிலேஷ்ம மலாவாதம் யக்ஷம் ரோகம் கரப்பான் விரணம் இவை ஏகும். 1243

## அரிதாரத்தின் குணம்

காசமுடனே கயநோய் கபவாதம்
பேசரிய குன்மமெட்டும் பேருங்காண்—மாசகன்று
கீற்று மதிநுதலே கேளாயுள் வேதமது
சாற்று மரிதாரத் தால்.

இ-ள். பிறையையொத்த நெற்றியையுடையவளே! அரிதாரத்தினால், க்ஷயகாசம் ரோகராஜம், சிலேஷ்மவாதரோகம் அட்டகுன்மம் ஆகிய இவைகள் போகுமென்க. 1244

## பொன் அரிதாரத்தின் குணம்

மந்தாரத் தாலே வளருஞ் சுவாசநோ
யுந்திவரு தீச்சுரநோ யோடுங்காண்—முந்து
தொனிக்கயஞ்செய் யான்கடியுந் தோற்குட்டு மேகுந்
தனிப்பொன் னரிதாரத் தால்.

இ-ள். பொன்னரிதாரத்தினால் மந்தாரசுவாசம் வாதசுரம் சத்திக்கிற க்ஷயம் செய்யான்விஷம் சருமதலகுட்டம் இவை நீங்கும்.

### மிருதாரசிங்கியின் குணம்

மிருதார சிங்கெனவே மெல்லவுரைத் தாலு
முருவா ருடைகரப்பா னேடு—மொருவிதமோ
சாலச் சிரங்குபுண் ணுந் தப்பாம லாறிவிடும்
வேலொத்த கண்மயிலே விள்.

இ-ள். வேலொத்த கண்ணுளே! மிருதாரசிங்கியினுல் உடம் பெங்கும் பரவுகின்ற பிததவிரணம் கரப்பான் கிரந்திக் கூட்டம் மகாவிரணம் இவைகள் விலகுமென்க. 1246

### வெள்ளைப்பாஷாணத்தின் குணம்

வெள்ளைப் பாஷாணம் விடங்கடிதீ ரும்பூசக்
கொள்ளைச் சுரந்தோடம் கோரசன்னி—தொள்ளையுறு
நாசிப்புண் வாய்ப்புண் ணளைகிரந்தி போமுண்ண
வாசிக்குங் கும்பமுலை யாய்.

இ-ள். பரிமளிக்கா நின்ற கும்பமுலையாளே! வெள்ளைப் பாஷா ணத்தைப் பச்சையாக அரைத்துக் கடிவாயில் பூசினுல் சர்ப்ப விஷம் தீரும். கிரமமாக வுண்ணில் கபசுரம் திரிதோஷ சந்நிபாதம் துட்ட பீநசம் முகபாகம் சீழ்ப்புண் இவைகள் நீங்கும். 1247

### கௌரிப் பாஷாணத்தின் குணம்

அவுரியொடு பாகலிலை யாற்சுத்தி செய்த
கவுரிபா டாணத்தைக் கண்டாற்—சவுரியஞ்செய்
வாதநோய் மந்தமொடு வந்த சுரங்களெலாம்
காதிவிழுந் தோடுமெனக் காண்.

இ-ள். அவுரி பாகல் இவ்விலைகளின் சாற்றுல் சுத்தித்த கௌரி பாஷாணத்திஞல் மகாவாதமும் அசலமும் வாத கப சுரங்களும் போம். 1248

### நீலாஞ்சன பாஷாணத்தின் குணம்

வன்னியறு வெட்டுப்புண் மாபிரமி யக்கிச்சூர்
சந்நியனல் கீடவெட்டுத் தாகஞ்சூ—டுன்னசிர்க்கு
நீங்குநீ லாஞ்சனத்தா னீடொளிதண் ணேருக்க
மோங்குநீ லக்குயிலே யோர்.

இ-ள். நீலக்குயிலனைய பெண்ணே! நீலாஞ்சனத்தால் ரச வன்னி தோஷம் ஆகந்துகவிரணம் பிரமேகம் விழிப்பிணி சந்நிச் சுரம் புழுவெட்டு விதாகம் உட்சூடு இரத்தபித்தம் இவைகள் விலகும். தேஜசு குளிர்ச்சி அழகு பலம் இவைகள் மிகும். 1249

### தொட்டிப் பாஷாணத்தின் குணம்

தொட்டிப்பா டாணமெனச் சொன்னாற் சுரங்கிரந்தி
யெட்டிப்பார்க் காவா மிடருறக்கக்—கிட்டிவரு
வாயுவின் றன்பெருக்கு மந்த மூலக் கட்டியும்போ
மாயினது வாதவித்தைக் காம்.

இ-ள். தொட்டிப் பாஷாணத்தினால் ரூட்சை சிரங்கு வாதா திக்கம் அசிரணம் மூல விரணம் இவைகள் போம். இது வாதத் தொழிற்காம். 1250

### பஞ்ச பாஷாணத்தின் குணம்

பஞ்சபா டாணமெனப் பாரிலுரைக் கிட்டாலும்
வெஞ்சதையே ணிப்புட்டும் வீழுங்காண்—விஞ்சுவார்
கண்புற்றுத் தீருமதி காய்ச்சசற்குளிர் மேகம்போம்
பண்புற்ற மாதே பகர்.

இ-ள். மேன்மையுடையாளே! பஞ்சபாஷாணத்தால், ககரம் சிலிபதம் முதலிய ரோகங்கள் உண்டாகும். விழி சதைப்புற்று மிகு சுரம் குளிர்மேகம் போம். 1251

### நவ பாஷாணத்தின் குணம்

நவபாடா ணந்தன்னை நற்சுத்தி செய்தங்
குவகையாய்ச் சிந்தூரித் துண்டா—னவமாக்
காய மிருகுங் கனத்தரோ யும்போகு
மாயுரோ யெல்லா மதி.

இ-ள். சுத்தித்த நவ பாஷாணத்தைச் சிந்தூரஞ் செய்து உண்ணில் தேகவண்மை உண்டாகும். மகாவாதமும் பல சுரங்களும் போம் என்க. 1252

---

## உலோக வகை

### பொன்னின் குணம்

அடற் றூவாவிடங்க ளங்கொளி மங்கல்
தடத்தாழுத் தோடகயங் காச—முடற்றூபஞ்
சேகையிருந் தாதுநட்டந் திட்டிநோ யீளையிவை
யீகையிருந் தாமேலகு மெண்.

இ-ள். பொன்னினால் தாவர விஷங்கள் தேஜசு மங்கல் அபி நியாச சந்நிபாதம் பித்த க்ஷயம் தேக வெப்பு முதிர்ந்த கப தோஷம் சுக்கிலம் விழிநோய் கோழைக்கட்டு ஆகியவைகள் விலகும். 1253
நகை—பொன்.

## வெள்ளியின் குணம்

பாய்க்கூட்டங் காட்டப் பழையசுரந் தாருவிடம்
வாய்க்கூட்டாச் செய்மேக வாதமுத—னேய்க்கூட்ட
மண்டாது காணிகொளு மத்திமே கக்கசிவும்
வெண்டாது காணிமெய்யை மேல். வெண்தாது - வெள்ளி.

## இதுவுமது

இரத்தங் கயம்பித்த மீளைகண்ணோய் காச
முரத்தைய மட்டகுன்மம் மூதை—வருத்தும்
விரணஞ் சிலேட்டுமநோய் மெய்ப்புளிப்புண் ணுண்ண
மரணமுறும் வெள்ளியினால் வாழ்த்து.

இ-ள். வெள்ளி பாயலுக்குப் பஞவு காட்டாது துர்ப்பலஞ் செய்கிற புராணசுரம் மரவிஷம் ஒருவரால் உணவை ஊட்டஞ் செய்கிற மேகவாதப் பிடிப்பு முதலிய நோய்கள் ஒழுக்கு வெள்ளை உதிரபேதி க்ஷயம் பைத்தியம் கோழை விழிநோய் இருமல் மார்புச் சளி அஷ்டகுன்மம் வாதகோபம் கிரந்தி நீர்க்கோவை லாஞ்சனம் சிரங்கு சொறி இவைகளை விலகும். 1255

## தாம்பரத்தின் குணம்

தாம்பரத்தாற் சோரிபித்தஞ் சந்நிவழு வைகபம்
வீம்பார பீலிகமந்தம் வெண்மேகந்—தேம்பமலை
சூதகநோய் புண்கிரந்தி தோடகவா சக்கிருமி
தாதுநட்டங் கண்ணோய்போஞ் சாற்று.

இ-ள். தாம்பரத்தினால் இரத்தபித்தம் சந்நிபாதம் வழுவை மகோதரம் கபாதிக்கம் பிலீகம் அஜீரணம் வெண்குஷ்டம் பித்த கபம் இரத்தகுன்மம் விரணம் திரிதோஷகாசம் கிருமி தாதுநட்டம் விழிநோய் இவைகள் போகும் என்க. 1256

## பித்தளையின் குணம்

தாதுவிர்த்தி யுண்டாகுந் தாபச்சுரம் போகுஞ்
சீதளமாம் வாதஞ் சிதையுங்காண்—பூதலத்துண்
மாட்டியதோர் பித்தகுன்ம மாறுமலர்த் திருவே
நாட்டியதோர் பித்தளை யினால்.

இ-ள். மலர்மேல் வசிக்கும் திருமாதனையாளே! பித்தளையினால் சுக்கிலப் பெருக்கும், குளிர்ச்சியும் உண்டாகும். தீச்சுரம் வாதாதி கபம் பயித்திய குன்மம் இவைகள் நீங்கும். 1257

## வெண்கலத்தின் குணம்

நேத்திரநோய் சோமவினை நீர்பெருக்கி ரத்தபித்தம்
வீழ்த்து சுவாசம்மந்த மோகமோ—டாழ்த்துகப
வாதவலி சூலை மகோதரம்போம் பித்தமொடு
தாதுவுமாம் வெண்கலத்தாற் றான்.

இ-ள். வெண்கலத்தினால் விழிநோய் சோமரோகம் வெகுமூத்திரம் உதிரபித்தம் இரைப்பு அஜீரணம் கபவாத பிரமேகம் குத்தல் பெருவயிறு இவைகள் போம். சுக்கிலமும் பித்தமும் விருத்தியாம் என்க. 1258

## தராவின் குணம்

சூலையொடு மேகத்தை தோன்றும லோட்டிவிடு
மேலை வருகாலை விலக்குங்கா—ளுல
வாரமேவிய வல்கு லாரணங்கே வெட்டைத்
தராவெனுமு லோகமது தான்.

இ-ள். விடத்தையுடைய சர்ப்பத்தின் படம்போன்ற அல்குலாளே! வெட்டையாகிய தராவானது கீல்பிடிப்பு வெள்ளை வீழ்தல் கபவாத தொந்தம் ஆகியவைகளைப் போக்குமென்க. 1259

## வெள்ளீயத்தின் குணம் (இதுவே வெண்ணாகமம்)

தாகங் கரப்பான் சலமேகம் பித்தகப
மேகமொளி மங்கல் வெப்புபல—மாகிரந்தி
துள்ளீய மந்தார சுவாசமுமந் தாக்கினியும்
வெள்ளீய மன்போக்கும் விதி.

இ-ள். வெள்ளீயம் ரக்ஷாய தாகரோகம் சலப்பிரமேகம் பித்த கப தொந்தம் மேக மூத்திரம் தேஜசு குன்றல் சுரம் துர்ப்பலவிரணம் மந்தார சுவாசம் கபஞ் சேர்ந்த மந்தாக்கினி ஆகியவைகளை நீக்குமென்க. 1260

## காரீயத்தின் குணம்

பன்மரநஞ் சக்கிநோய் பாகர்த் தபிவிரணங்
குன்மங்கால் சூலங் குதவிரணஞ்—சன்மம்
பெருநாக மேகப் பிணிசுர மிவற்றைக்
கருநாக மேநீக்குங் காண்.

இ-ள். காரீயம் கரவீரம் முதலிய பற்பல தாவரவிஷம் கண்ணோய் கர்த்தபிரோகம் வலிவாத குன்மம் குத்தல் பகந்தர விரணம் கஜசரும குஷ்டம் ரூட்சை ஆகியவைகளை யொழிக்குமென்க கருநாகம் - காரீயம். 1261

## துத்திநாகத்தின் குணம்

மேகங் கிளர்பேதி வெட்டையழ லைத்தணிக்கும்
வேகங் கிராணி விலக்குங்காண்—போகாப்
பரியமுளைப் புண்ணைப் பயித்தியத்தைப் போக்கு
மரியதுத்தி நாக மது.

இ-ள். துத்திநாகம் விரணபிரமேகம் அதிசாரம் வெள்ளை உட்சூடு சீதரத்தக்கழிச்சல் மூளைவிரணம் பித்தம் இவைகளை நீக்கும்.

## இரும்பின் குணம்

பாண்டுவெண் குட்டம் பருந்தூத நோய்சோபை
மாண்டிடச்செய் மந்தங்கா மாலைகுன்மம்—பூண்ட
பெருந்தாது நட்டமும்போம் பேதிபசி யுண்டாம்
கருந்தாது நட்டமிடுங் கால்.

இ-ள். இரும்பினால் பித்தபாண்டு சிலேஷ்ம வெள்ளைக்குஷ்டம் அதிதூலரோகம் வீக்கம் விஷாலஜகம் காமிலம் வயிற்றுநோய் சுக்கில நஷ்டம் இவைவிலகும், மலவிருத்தியும் தீபனமும் உண்டாம்.

## எஃகுவின் குணம்

தந்தமந்த மூலவுரு தாதுநட்டஞ் சோபைகண்ணோய்
வந்தமந்தம் பாண்டுவினை வன்மைகுன்றல்—முந்த
பெருக்கிடையாய் நீட்டுகப பேத மிவைகட்
குருக்கிடையா தோட்டு முறை.

இ-ள். எஃகு தந்தரோகம் தந்தமூலநோய் க்ஷீணசுக்கிலம் வீக்கம் நேத்திரரோகம் அலஜம் உடல்வெளுப்பு தூர்ப்பலம் படுக்கையே கதியாக வீழ்த்தாநின்ற க்ஷயரோகங்கள் இவைகளை யொழிக்கும். 1264
உருக்கு-எஃகு.

## காந்தத்தின் குணம்

காந்தத்தாற் சோபைகுன்மங் காமிலமே கம்பாண்டு
சேர்ந்திரிதோ டம்வெட்டை சீதங்கா—லோய்ந்தபசி
பெருதரங் கண்ணோய் பிரமியநீ ராமையும்போ
மோரினிறை யாயுளுறு முன்.

இ-ள். காந்தத்தால் வீக்கம் குன்மம் காமாலை பிரமேகம் பாண்டு முத்தோஷம் வெள்ளைவீழல் சீதளம் வாதநோய் மந்தம் மகோதரம் விழிநோய் ஜலமேகம் நீராமைக்கட்டி இவைபோம், பூர்ணாயுளுண்டாம். 1265

### மண்டூரத்தின் குணம்

கிட்டமொன்றுற் சோபை கிளைவீக்கம் மத்திசுரந்
துட்டவிட பாகஞ் சுவாசகபங்—கெட்டகொடும்
பாண்டிருமல் னீராமை பாழும் பிரமியமுந்
தாண்டிவிடு முண்டிரத்தத் தாது.

இ-ள். மண்டூரத்தினால் வாதசோபை முதலிய வீக்கங்கள் அஸ்திசுரம் கொடியவிஷப்பாகம் இரைப்பு கபகோபம் தேகவெளிறல் காசம் நீராமைக்கட்டி அசிர்க்கரம் இவைநீங்கும், உதிரவிருத்தியாம்.

---

## நவரத்தின வகை

### மாணிக்கத்தின் குணம்

சுரரோகஞ் சந்திகளின் தோட மதிதாக
முரமான மேக மொழியும்—திரமாக
ஊணிக்கோ ணேத்திரநோ யோடுமர வீன்றவொளி
மாணிக்கத் தால்வசிய மாம்.

இ-ள். சர்ப்பங்கக்கிய மாணிக்கத்தினால் சரீராதிசுரங்கள் சந்திபாததோஷங்கள் திரிதோஷ தாகரோகம் வாதபிரமேகம் கண்ணோய் ஆகிய இவைகள் ஒழியும், வசீகரம் உண்டாகும் என்க. 1267

### வயிரத்தின் குணம் (இதுவே வச்சிரம்)

ஆறுவித மாம்வயிர மவ்வவற்றுண் டாரசம்
வீறி நிலைத்திருக்கு மேன்மையினாற்—கூறுமவைக்
கெப்பிணியு நீங்கு மிணையில் வனப்புமுண்டாஞ்
செப்பிணையின் மாமுலையாய் செப்பு.

இ-ள். செப்பைப்போன்ற முலையாளே! தேவ பிரமக்ஷத்திரிய வைசிய சூத்திர சங்கர என்கிற ஆறுவகை வயிரங்களிலும் மகாரசங்கள் தங்கியிருப்பதால் அவைகளுக்கு நேத்திரரோக முதலிய பற்பல ரோகங்கள் விலகும், சரீர அழகுண்டாம். 1268

### வைடூரியத்தின் குணம்

சீதவாதத் தோடு சிலேட்மம் புளியேப்பங்
காதுசூ லைப்பிணிக ளத்தகுன்ம—மோதுபித்த
மென்றுரைக்கு நோய்களறு மெப்போதுந் தோடமிலை
நன்றுவை டூரியத்தி னால்.

இ-ள். வைடூரியத்தினால் சிலேஷ்மவாததோஷம் கபம் புளி யேப்பம் வருத்துகின்ற கீல்பிடிப்பு வாதகுன்மம் பயித்தியம் அபத் திய முதலிய சப்ததோஷங்கள் ஆகிய இவை நிவர்த்தியாகும். 1269

## கோமேதகத்தின் குணம்

வாதபித்த கோபத்தை மாற்றுமலக் கட்டறுக்கு
மோதுமந் தாக்கினியை யோட்டுங்காண்—மீதி
லழறரு விகார மகற்றுமொளி செய்யுங்
கழறுகின்ற கோமேத கம்.

1270 இ-ள். கோமேதகம் வாதபித்த மிஸ்ரம் மலபந்தம் சுரத்தால் பிறந்த துர்க்குணம் இவைகளை நீக்கும், மினுமினுப்பைத்தரும்.

## புட்பராகத்தின் குணம்

வீரிய விர்த்தியது மேன்மேலு முண்டாகுங்
கூரியநற் புத்தியுண்டாங் கூறுங்காற்—பாரிற்
பிணிவருக்க மேகும் பெரும்புட்ப ராக
மணியாற் புகழுமுண்டாம் வாழ்த்து.

இ-ள். புட்பராகத்தினால், விருத்தி சுக்கிலமும், நல்லறிவும், கீர்த்தியும் உண்டாகும். மேகமுதலிய நோய்க் கூட்டம் நீங்கும்.

## பவளத்தின் குணம்

சுரதோட மையமுத் தோட சுரங்காச
மருசி கீடத்தாதா மாதம்—பெரும்விந்து
நட்ட மதிதாக நாவறட்சி போமொளியுங்
கிட்டும் பவளத்தாற் கேள்.

இ-ள். பவளத்தினால் ரூட்சையின் விகாரம் கபம் சந்நிபாத சுரம் இருமல் அருசோகம் கீடவிஷம் சுக்கில க்ஷீணம் விதாகம் நாவில் சுற சுறப்பு ஆகிய இவை விலகும் சரீரகாந்தி உண்டாகும். 1272

## முத்தின் குணம்

அத்திசுரஞ் சோபை யருசிதுர்ப்ப லங்கண்ணோய்
பித்துவிடஞ் சீதளநோய் பேசுகபஞ்—சத்தத்
தயிரியநட் டத்தோடு தாதுநட்ட மும்போ
முயிறுநண் முத்திருந்தா லோது.

இ-ள். ஜீவரத்தினம் என்கிற முத்தினால் அஸ்திசுரம் வீக்கம் அரோசகம் மெலிவு விழிநோய் அக்கினிகீடவிஷம் சுட்க சிலேஷ்மம் குரல்வளையிற் சத்திக்கிறகோழை அதைரியம் வீரியநாசமிவைபோம்.

### மரகதத்தின் குணம்

தாதுதரும் பூதபை சாசந் தமையோட்டு
மீதுவரு புண்ணை விலக்குங்காண்—மாதுபுரி
மச்சை யகற்றும் மதுமேகம் போக்கும்
பச்சை யதுமதுரம் பார்.

இ-ள். இனிப்புள்ள மரகதம் விந்துவை விலக்கும் 18-வித பூத பைசாசங்கள் விரணம் பலவிஷங்கள் மதுமேகம் இவை நீங்கும் என்க.

### நீலத்தின் குணம்

குதிவலி மேகபித்தங் கூறரிய பாண்டு
மதிமயக்க மெல்லா மருளு—மதிநுதலே
புத்தியொடு மேன்மேலும் போகசுக முண்டாகுஞ்
சுத்தநறு நீலத்தாற் சொல்.

இ-ள். மதிநுதலாளே! நீலத்தினுல் குதிகால்நோவு மேகநீர் அதிபித்தம் பாண்டு மனச்சோர்வு இவைபோகும், நல்லறிவும் மிகு சுக்கிலமும் உண்டாகும். 1275

---

# வைத்தியாங்கம்



### மருத்துவன் குணம்

#### கழிநெடில் விருத்தம்

தெய்வவுபாசனைபலநூ லெல்லேகாண்டற்
    றிரிகரணசுத்திபன்னோய் தீர்த்துநாளு
வைகன்றதீரமதி நட்பஞ்சான்றோ
    ரைட்பொழுக்கமேன்மைகுண மன்புள்ளானாய்
மெய்வசுதைவிகலையணங் குரைபதார்த்த
    விதியுடற்காதார மடலங்கிமாந்தற்
கைவருமெண்பேதமெலா முணர்ந்துற்றானய்க்
    காணிவந்தமருத்துவன்கைக் கரணியுண்ணே.

இ-ள். தேவவுபாசனை பலசாஸ்திரங்களை நன்றாக ஆராய்ந்தறிகுதல் மனவாக்கு காயமென்னும் திரிகரணசத்தியால் பல வியாதிகளைத் தீர்க்குதல் நாளும் வியாதியைக்கண்டு அஞ்சாத தீரத்துவம் மிகுந்த புத்திவிட்பம் பெரியோர்சிநேகம் ஆசாரம் மேம்பாடு நற்குணம் அன்பு இத்தன்மைகளுள்ளவனுகித் தேகம் தேசம் காலம் ரோகம் ஔஷதம் பதார்த்தகுணம் உடம்புக்காதாரம் உதராக்கினி தேகபலம் ஆகாரம்

கைபாகம் செய்பாகம் இன்ன நோய்க்கு இத்தனை நாள் ஔஷதங் கொடுக்கவேண்டுமென்கிற கால அளவு என்னும் இப்பேதங்களை யெல்லாம் அறிந்திருப்பவனாகத் தெரிந்தால் அந்த வைத்தியன் கொடுக்குஞ் சஞ்சீவியையொத்த மருந்தை உண்ணக்கடவை என்க. சரீரத்துக்குள்ள ஆதாரபேதமானது வாதம் பித்தம் சிலேத்மம் ரசதாது மாமிசதாது மேதோதாது அஸ்திதாது மகமைதாது சுக்கிலதாது மலம் மூத்திரம் முதலிய 102-ம், உதராக்கினி பேதமாவது சாமாக்கினி விஷமாக்கினி தீக்ஷணாக்கினி மந்தாக்கினி முதலிய 1004-ம் தேக பலமாவது சகசபலம் கால்பலம் யுத்தகிருதபலம் என்னும் சாஸ்திரத்தில் தோஷபேத படலத்தில் காண்க. 1276

## கைபார்த்த மருத்துவன் நடத்தை—வெண்பா

கன்மவுரு நோயதைமுக் கண்கொடறி வுற்றறிந்தார்
தன்மநீ ராடற் சகத்துடனெட்—டின்மையெனி
லங்கைபதத் தூய்மையின்றே லங்குலிபூ வெற்றலின்றேற்
கங்கை பதம்புனிறு காண்.

இ-ள். நோயானது கன்மரூபமாகையால் அந்நோயை 3-விரலைக் கொண்டு பிணியாளனுடைய கை முதலாகிய தசவித நாடிகளையும் தொட்டறிந்து கொள்க. அதுவுமன்றி அஷ்டவித பரிக்ஷையினாலும் அறிந்த மருத்துவர்கள் முக்கியமாக நடந்துகொள்ளத்தக்க ஒழுக்கமாவது 108-ஸ்நானஞ் செய்தல் அல்லது கைகால்களைச் சுத்தஞ் செய்தல் அவ்விரலைப் பூமியில் தட்டுதலாம். இப்படிச் செய்யாவிட்டால் சகல பாபங்களையும் நிவர்த்தி செய்யுங் கங்காநதியை யொத்த வைத்தியருக்கும் பக்குவமாகச் செய்யப்பட்டிருக்கிற ஔஷதங்களும் ஆசூசம் உண்டாம் என்க. கண்போலத் தெரிவிக்கின்றமையால் விரலைக் கண்ணென்றார். இவ்வொழுக்கமில்லாத வைத்தியர்கள் கைமருந்து பிணியை நீக்காதென்பது கருத்து. 1277

## பிணியாளன் குணம்—கழிநெடில் விருத்தம்

அருப்பமுடனரசெனினுந் தீர்ப்பானைக்கண்
டழைத்தவனையாதியரு மவனென்றோர்தல்
விருப்பமுறத்தவிசிருத்தன் மெய்யன்பாடல்
வேண்டுதலீந்திடலுறையேற் றுண்டலத்தைத்
திருப்பவருந்துயராற்றற் சாதங்கூறற்
செப்புளொடுங் கற்பன்மருந்தொழித்தலூழா
மிருப்பகற்று முறைகுயிற்ற லிவையுள்ளானே
லிவனுமம்புகலுநர்க்கு மின்றுநோயே.

இ-ள். இராசனேயானாலும் தனக்கு வியாதி சம்பவித்தால் வைத்தியரை உபசாரத்துடன் அழைத்தல், தாய் தந்தை குரு தெய்வம் இந்த வைத்தியரே என்று நினைக்குதல், விருப்பமுண்டாகும்படி ஆசனங் கொடுத்திருக்கச் செய்தல், உண்மையான அன்பு வைத்தல், ஔஷதத்துக்கு வேண்டிய திரவியங் கொடுத்தல், அவர் கொடுக்கின்ற மருந்தை இரண்டு கையினாலும் வாங்கி உண்ணுதல், ஔஷதத்தை வேண்டாமென்று மாற்றும்படி யுண்டாகும் வருத்தத்தைச் சகித்தல், ஔஷதஞ் சாப்பிடுவதனாற் றனக்கிருக்கும் குணாகுணங்களை யுண்மையாகக் கூறுதல், அன்றியுமவர் சொல்லுக்குள் அடங்கியிருத்தல், கண்ட ஔஷதங்களை யுண்ணாமல் நீக்குதல், பூர்வ கர்மத்தினால் வியாதி சம்பவிப்பதாதலால் அந்தக் கர்மத்தை நிவர்த்தி செய்துகொள்ளுதல் என்னும் இந்தக் குணங்களையுடையவனாயிருப்பானால் இவன் பேரை யுச்சரிப்பவர்களுக்கும் வியாதி யணுகாது என்க. 1278

## பாகஞ்செய்வான் குணம்—வெண்பா

பிணியர்க் குரியர் பிருக்குளத்தை யொப்ப
ரணியிற் சிறந்தநட்ப ராம்பற்—பணியர்குட்
டுப்புறையை யுண்மைமிகு தூய்மையிவை யார்ந்தாரை
யொப்புறையை யாடற் குவந்து.

இ-ள். பிணியாளர்களிடத்திலிருந்து ஔஷதபாகஞ் செய்கிறவர்கள் அவர்களுக்கு உரிமையுள்ளவர்களும் மிகுந்த நன்மையுள்ள சிநேகிதரும் வைத்தியர் மனதை ஒத்தவர்களுமாயிருக்க வேண்டும், அத்தன்மையர்களில்லாத பட்சத்தில் மற்ற ஏவலாளிகளுக்குள் தேகபலம் பிணியாளர்களுடைய ஆயுசு விர்த்தியை விரும்புதல் புத்தி நுட்பம் சத்தியம் பரிசுத்தமென்னும் நற்குணம் உள்ளவர்களை பரிசோதித்து ஔஷத பாகஞ்செய்ய வைத்துக்கொள்ள வேண்டுமென்க. இந்த 4-பாடலும் தேரையர் செய்த இலவருக்குச் சுருக்கம் என்னும் சாஸ்திரத்திலிருந்து சேர்க்கப்பட்டவை. 1279

## கருமை, செம்மை, வெண்மை, மஞ்சள் என்னும் நிறத்தையுடைய கலுவங்களின் குணம்

கருங்கற் கல்வத்தவிழ்தங் காணிலுடற் கின்பா
நெருங்கி வந்தக் கற்றோடநீக்கு—மொருங்குவெள்ளைக்
கன்மருந்தோ வீரமொடு காரமுமின் மஞ்சளம்மி
யின்மருந்தோ நோய்விலக்கா வெண்.

இ-ள். கரியநிறமுள்ள கலுவத்திலரைத்த மருந்து உடலிற்கு நலஞ்செய்யும், சிவப்புநிற அம்மியினது மருந்து சகல தோஷத்தையும் நீக்கும், சுத்த வெண்மைநிறக் குழிக்கல்லினது மருந்திற்கு வீரமும் சுவையும் இன்மையாம், மஞ்சள் நிறக்கல் மருந்து பிணிகளை நீக்காதென்றெண்ணுவாயாக. 1280

## மருந்தினது பக்குவ குணம்

பக்குவபா கத்தை யுறுமருந் தும்பிறழ்
பக்குவபா கத்துப் பருமருந்து—மெய்க்குறுங்கா
லக்கால மும்பருண வாழிமருந்துன் சிந்துசேடன்
கக்காலமும் பொருந்துங் காண்.

இ-ள். தகுமான முறையினுற் செய்யப்பட்ட ஔஷதங்களேயானுலும் பக்குவ பாகத்தை பொருந்துமானுல் அது தேவர்களுண்ணத் திருப்பாற்கடலில் உண்டான அமிர்தத்துக் கொப்பாம், கனமான முறையினுற் செய்யப்பட்ட ஔஷதங்களேயானுலும் செய்த பாகங் கெடுமானுல் அக்காலத்தில் ஆதிசேடன் கக்கிய விஷத்துக் கொப்பாகு மென்க. 1281

## மறுபாகக் குணம்

மாகமோட் டிக்குளிர்ந்த பாணியிர சாயனநல்
வேகவிலே கங்குடிநீர் மெய்ச்சுரச—மேகுமிரா
மீந்தவெஞ்ச லாதிகளை மீளவொரு காவானடி
மாந்தநஞ்சம் வேறிருக்கு மா.

இ-ள். பக்குவமாகக் காய்ச்சி ஆறின வெந்நீர் ரசாயனம் நல்ல வீரியமுள்ள லேகியம் கஷாயம் கனியே இடித்துப்பிழிந்து முறித்த சுரசம், சென்ற இரவில் மீந்த பதார்த்தம் முதலியவைகளை மறுபடியும் ஒருதரம் அடுப்பில் வைத்துப் பாகஞ்செய்து புசிக்கல் இதுவே விஷமாம். 1282

## மருந்து வைக்கும் பாத்திரத்தின் குணம்

தெங்கின் குடுக்கை திகிரிதந்தப் பாத்திரத்தார்
நன்கிராப் பன்மருந்து நன்மருந்தாம்—வெண்கலந்தான்
மையிரும்பாற் கட்டைகளாற் கொம்பாற் பாத்திரங்கட்
செய்யினிரண் டாம்பட்சஞ் செப்பு.

இ-ள். தேங்காய்க்குடுக்கை மூங்கிற்பரணை தந்தச்சிமிழ் இவைகளில் வைக்கிற நலமில்லாத அற்ப மருந்தும் உயர்ந்த மருந்தாம், வெண்கலம் இரும்பு மரம் மிருகங்களின்கொம்பு இவைகளாற்செய்த பாத்திரங்களில் ஔஷதங்களை வைப்பது மத்திம பட்சமாம். 1283

## மருந்தூட்டும் பாத்திர பேதம்

வாதமுதன் முப்பிணியோர் வைத்திட்டுண் பாத்திரத்தின்
பேத முறையேகேள் பெருங்கஞ்சஞ்—சாதகும்பந்
தாம்பரமா மின்றென்னிற் சக்கரிகைப் பாத்திரநன்
றும்பரமா யுட்கொடுக்கு மாற்கு.

இ-ள். வாத ரோகிகளுக்கு வெண்கலப் பாத்திரத்திலும், பித்த ரோகிகளுக்குத் தங்கப் பாத்திரத்திலும் சிலேத்ம ரோகிகளுக்குத் தாம்பரப் பாத்திரத்திலும் மருந்திழைத்து உண்ணக் கொடுக்க வேண்டும். இவைகள் இல்லையெனில் குயப்பாத்திரமே உத்தமமாகும். இது பூரணாயுளைத் தரும். 1284

## மருந்தூட்டுங் காலம்

அனிலநோ யர்க்க சனமாகா முன்பிறந்த
துனியர்க் கசனநடு தூவை—யெனுநோயர்க்
கரகரப் பின்னுமருந்தி லுறையப் பிணியாக்
கரசரப் பின்னுலகிற் றுன்.

இ-ள். வாத ரோகிகளுக்குப் போஜனம் செய்யுமுன்னும் பித்த ரோகிகளுக்குப் போஜன நடுவிலும் சிலேத்ம ரோகிகளுக்குப் போஜனஞ் செய்தபின்பும் ஔஷதம் உண்ணக் கொடுத்தால் அந்த வியாதியினால் சமுத்திரஞ்சூழ்ந்த உலகத்தில் அவர்கள் இறக்கார்கள். 128

## மருந்தருந்தியபின்பு வாயிலிடும் வஸ்துக்கள்

சீவற் கனமதுதிராட்டை தும்பை மூக்குடிராகம்
பூவற சரநெற் பொரிச்சத்தூள்—பூவி
னிருந்துண்ட நீர்மைகுன்று தேற்றுமேன் மக்கண்
மருந்துண்ட வாய்க்கிவையா மால்.

இ-ள். கொட்டைப்பாக்குச் சீவல் நாகப்பூ தேன் திராட்சை பழம் வெற்றிலைக்காம்பு கிராம்பு ஒரு வருஷஞ் சென்ற நெற்பொரி பச்சைக் கர்ப்பூரத் தூள் இவைகள் உண்ட மருந்தின் தன்மையைக் கெடுக்காத வஸ்துக்களாதலாலும் வெகுட்டினால் முகத்தின் சுபாவ தன்மை மாறாமலிருக்கும்படிச் செய்யத்தக்கவை யாதலாலும் அவைகளிலொன்றை ஔஷதம் உண்ட மேன்மக்கள் வாய்க்குக் கொஞ்சம் கொடுக்கவும். 128

## பகல் உறக்கத்தை நீக்கி மருந்தூட்டும் உபாயம்

வேசையர்கூத் தொன்றொழித்த வேறுவேறுங் கூத்தா
லாசியத்தாற் கீதத்தா லற்புதத்தால்—வீசுபுகழ்

## மருந்தூட்டும் பாத்திர பேதம்

வாதமுதன் முப்பிணியோர் வைத்திட்டுண் பாத்திரத்தின்
பேத முறையேகேள் பெருங்கஞ்சஞ்—சாதகும்பந்
தாம்பரமா மின்றென்னிற் சக்கரிகைப் பாத்திரநன்
றும்பரமா யுட்கொடுக்கு மாற்கு.

இ-ள். வாத ரோகிகளுக்கு வெண்கலப் பாத்திரத்திலும், பித்த ரோகிகளுக்குத் தங்கப் பாத்திரத்திலும் சிலேத்ம ரோகிகளுக்குத் தாம்பரப் பாத்திரத்திலும் மருந்திழைத்து உண்ணக் கொடுக்க வேண்டும். இவைகள் இல்லையெனில் குயப்பாத்திரமே உத்தமமாகும். இது பூரணாயுளைத் தரும். 1284

## மருந்தூட்டுங் காலம்

அனிலநோ யர்க்க சனமாகா முன்பிறந்த
துனியர்க் கசனநடு தூவை—யெனுநோயர்க்
கரசரப் பின்னுமருந்தி லுறையப் பிணியாக்
கரசரப் பின்னுலகிற் றூன்.

இ-ள். வாத ரோகிகளுக்குப் போஜனம் செய்யுமுன்னும் பித்த ரோகிகளுக்குப் போஜன நடுவிலும் சிலேத்ம ரோகிகளுக்குப் போஜனஞ் செய்தபின்பும் ஔஷதம் உண்ணக் கொடுத்தால் அந்த வியாதியினால் சமுத்திரஞ்சூழ்ந்த உலகத்தில் அவர்கள் இறக்கார்கள். 1285

## மருந்தருந்தியபின்பு வாயிலிடும் வஸ்துக்கள்

சீவற் கனமதுதிராட்டை தும்பை மூக்குடிராகம்
பூவற சரநெற் பொரிச்சத்தூள்—பூவி
னிருந்துண்ட நீர்மைகுன்று தேற்றுமேன் மக்கண்
மருந்துண்ட வாய்க்கிவையா மால்.

இ-ள். கொட்டைப்பாக்குச் சீவல் நாகப்பூ தேன் திராட்சைப் பழம் வெற்றிலைக்காம்பு கிராம்பு ஒரு வருஷஞ் சென்ற நெற்பொரி பச்சைக் கர்ப்பூரத் தூள் இவைகள் உண்ட மருந்தின் தன்மையைக் கெடுக்காத வஸ்துக்களாதலாலும் வெகுட்டினால் முகத்தின் சுபாவத் தன்மை மாறுமலிருக்கும்படிச் செய்யத்தக்கவை யாதலாலும் அவைகளிலொன்றை ஔஷதம் உண்ட மேன்மக்கள் வாய்க்குக் கொஞ்சம் கொடுக்கவும். 128

## பகல் உறக்கத்தை நீக்கி மருந்தூட்டும் உபாயம்

வேசையர்கூத் தொன்றொழித்த வேறுவேறுங் கூத்தா
லாசியத்தாற் கீதத்தா லற்புதத்தால்—வீசுபுகழ்

இ-ள். அயச்செந்தூரம், கபப்பிணி வீக்கம் காமாலை பித்த பாண்டு இவைகளை நீக்கும், புஜபலத்தையும் பசியையும் தரும், நீனிப்பையின் நரம்புகளைப்பற்றிய மஞ்சள் நிறத்தால் பிறப்பதால் வயிற்றூலூறு காமாலையென்றூர். 1290

## காந்தச்சிந்தூரத்தின் குணம்

காந்தச் சிந்தூரங் கருகரிய வுந்திவலி
போந்த வதிசாரம் பொங்கிவரு-வாந்திகப
காசச் சுவாசம் காமாலைப் பாண்டுவொடு
பூசல்வினை நீக்கும் புகல்.

இ-ள். காந்தச்செந்தூரம் நாபிவலி பேதச்சுரம் வமனம் க்ஷய இருமல் இரைப்பு காமிலம் பாண்டு நீங்காநோய் இவைகளை விலக்கு

## தாம்பரபஸ்பத்தின் குணம்-சந்தவிருத்தம்

உருவங் குறுபசியும் பெறுமுரமும் பெறுமிரமா
மிருகண்ட ருடநயன் பெறுமிகையும் பெறுகுவரே
வறுசெம் பிறுவலினங் தெறிவகையும் பொடிவகையும்
பருகும் பெருவிதமுந் தெரிபவரம் புவிமிசையே.

இ-ள். செம்பில் பொருந்திய களிம்பை நீக்கும் வகையும் ப மஞ்செய்யும் வகையும் இதனை உண்ணும் பெரிதானவகையும் அ தவர்கள் வயிற்றிலுண்டாகும் பசியையும் பலத்தையும் தவத்தி உயர்ந்த மிருகண்ட மகாரிஷி புத்திரராகிய மார்க்கண்டேயர்பே ஆயுசு விருத்தியும் அடைவார்கள் என்க. உண்ணும்போது ட மாண அனுமான பத்தியவகைகளை அறிந்துண்ணவேண்டு பெ பதைப் பற்றிப் பருகும் பெருவிதமென்றூர் என்க. 12

## இதுவுமது—வெண்பா

தாம்பிர பஸ்பஞ் சகலகுட் டங்குறைநோய்
சோம்புகுட்ட மெல்லாந் துரத்துமென்பார்—தேம்பி
யிருக்கின்ற பித்தமுட னீளைசுரஞ் சந்நி
குருக்கின்ற வாயுவும்போக் கும்.

இ-ள். தாம்பிரபஸ்பம் குன்மங்கள் பெருவியாதி மூர்ச்சை குஷ்டம் அதிபித்தம் சுவாசம் சுரம் சந்நி மிகுவாயு இவை நீக்கும்

## வங்கச்சிந்தூரத்தின் குணம்

வங்கச் சிந்தூர மடமேக நீரிழிவோ
டங்கமுறு தாப மகற்றுங்காண்—பொங்கிவரு
மோதவுதி ரத்தா லுறுவிரண நோய்போக்குந்
தாதுவையுண் டாக்குமது தான்.

இ-ள். வங்கச்சிந்தூரம் மதுநீர் அதிமூத்திரம் சுரம் ரத்தவிர்த்தியினாற் பிறந்தபுண் இவைகளை ஒழிக்கும். சுக்கிலத்தை வளர்க்கும்.

## ஆனந்தபைரவம், சுத்தபைரவம், சொர்ணனந்தபைரவம், பிரமானந்தபைரவம், ஆனந்தரசம், விநோதபைரவம் இவைகளின் குணம் - விருத்தம்

ஆனந்த பைரவம்பி னடர்சுத்த பைரவஞ்சொர்
ணனந்த பைரவம் பிர்ம்மானந்த பைரவம்மா
வானந்த ரசம்விநோத மாம்பைரவ மிவற்றால்
வானந்த மேவுருட்சை வருதிரிதோ டம்போமே.

இ-ள். ஆனந்தபைரவம் சுத்தபைரவம் சொர்ணனந்தபைரவம் பிர்மானந்தபைரவம் ஆனந்த ரசம் விநோதபைரவம் இவைகளினால் முக்கியமான சுரமும் திரிதோஷாரம்ப ரோகங்களும் போகும்.

## சுத்தமண்டூரம் மகாமண்டூரம் சித்தமண்டூரம் திரிகடுகாதி மண்டூரம் நாராயணமண்டூரம் இவைகளின் குணம்

வெண்பா

சுத்திமண் டூரந் துதிமகா மண்டூரஞ்
சித்தமண் டூரந் திரிகடுக—மொத்திடுமண்
டூரநா ராயணமண் டூர மிவைக்குவெகு
தூரமாம் பாண்டொடு சோபை.

இ-ள். சுத்தமண்டூரம் மகாமண்டூரம் இவைகளுக்கு ஐவகைப் பாண்டு நோய்களும் ஆறுவித சோபரோகங்களு மொழியும். 1296

## வாதராக்ஷச மாத்திரை, தசவித அக்கினிகுமாரம் இவைகளின் குணம்

இகல்வாத ராக்ஷசனுக் கெண்பது வாய்வும்
புகலாம லோடும் புறத்தே—யிகலார்
தசவித வக்கினிக் குமாரர்க்குச் சந்நி
நசிசுரங்க ளும்போ நவில்.

இ-ள். வாதராக்ஷச மாத்திரையால் 80-வித வாதநோயும் தசவித அக்கினிகுமாரத்தினால் சந்நியும் அசாத்திய சுரமும்போம்.

## கோரோசனாதிக்குளிகை, தாகசோப சமனமாத்திரை இவைகளின் குணம்

கோரோச னாதிக் குளிகைக்குப் பித்தசுரந்
தீராத தாகஞ் சிறுவர்சுர—நேராது

தாககோ பச்சமனந் தன்னாற் சுரஞ்சந்நி
நாகபித்தம் போமே தணிந்து.

இ-ள். கோரோசனாதி மாத்திரைக்கு பயித்தியசுரமும் நீங்காத நாவறட்சியும் குழந்தைகள் ரூட்சையும் விலகும். தாககோபசமன மாத்திரையினால் சுரரோகமும் சந்நிபாதமும் பித்தவிதாகம் தீரும்.

## குன்மகுடாரம், சுயம் அக்கினி, பாஷாணபின்ன வச்சிரரசம் இவைகளின் குணம்

குன்ம குடாரமெனக் கூறிலட்ட குன்மமும்போம்
வன்னசுய மக்கினிக்கு வாதமந்தம்—பின்னமுறும்
பாடாண பின்னவச்சிர பாரசத்தைப் பார்த்தவுடன்
கேடாகுங் கல்லடைப்பிற் கே.

இ-ள். குன்மகுடார மாத்திரையினால் 8-விதக் குன்மங்களும் சுயம் அக்கினி மாத்திரைக்கு தனிவாத சீரணமும் பாஷாண பின்ன வச்சிரரசத்தினால் 4-வகை அஸ்மரி ரோகங்களும் கெடும் என்க.

## மேககுலாந்தகன், சர்வசித்திரசம் இவைகளின் குணம்

மேக குலாந்தகனான் மேககுலம் போமரிச
யோகசர்வ சித்திரச மொன்றுக்கே—போகும்
பெருமூத் திரமென்ற பேரும்பே தித்து
வருமூத் திரமுமறி வாய்.

இ-ள். மேககுலாந்தக மாத்திரையால் 20-வித மேகங்களும் சர்வசித்திரரசத்திற்கு வெகு மூத்திரம் பலசொட்டு மூத்திரங்களும் நீங்கும். 1300

## கோடாசலக்குளிகை, மகாவன்னிரசம் இவைகளின் குணம்

கோடா சலத்தாற் கொடும்பாண்டு சோகைமுத
லோடாக் கிரகணியு மோடுங்கா—ணீடுமகா
வன்னிரச மென்றுரைக்கில் வாடாச் சலோதரமும்
பின்னிடையுந் தப்பாது பேசு.

இ-ள். கோடாசலக்குளிகையால் பாண்டுரோயும் வீக்கமும் நீங்காத கிரகணியும்போம், மகாவன்னி ரசத்திற்குச் சலோதார ரோகம் ஏகும். 1301

## உலோத்தமரசம், வங்கேசுவ்ரம், நாரசிங்கரசம் இவைகளின் குணம்

உனுத வுலகோத் தமரசத்தா லுன்னும்
வினைதமெனும் பேதி விளையுங்—கனமான

வங்கேஸ் வரத்திற்கு வல்லேகுன்மம் போம்நார
சிங்கம்மூ லச்சுரந்தீர்க் கும்.

இ-ள். உலகோத்தமரசத்தால் பற்பல வியாதிகள் நீங்கும், விரேதபேதியுண்டாம்; வங்கேஸ்வரத்திற்கு வல்லேக்கட்டியும் குன்மக்கட்டியும்போம், நாரசிங்கத்திற்குப் புராணசுரம் விலகும்; இது நகங்களில் உந்தியில் தடவினாலும் புஷ்பச்செண்டில் தெளிந்துமோந்தாலும் பேதியாகும்படிச் செய்வதினால் விரேதபேதி என்றார்.

## சிந்தாமணி, திரிலோகசிந்தாமணி என்னும் குளிகைகளின் குணம்

சிந்தா மணிக்குளிகை சேர்ந்தமலக் கட்டறுக்கு
மூந்துசுர வாயுவையு மோட்டுங்கா—ணந்தாத்
திரிலோக சிந்தா மணியென்னிற் சந்நி
திரிலோகத் தப்புறம்போந் தேர்.

இ-ள். சிந்தாமணிக்குளிகை பழைய மலச்சிக்கலேயும் உஷ்ணவாயுவையும் நீக்கும், திரிலோக சிந்தாமணி மாத்திரைக்குச் சந்நி 1303
விலகும்.

## திரிலோகசூடாமணி, திரிலோகரக்ஷாமணி இவைகளின் குணம்

திரிலோக சூடா மணிக்குந் திறல்சேர்
திரிலோக ரட்சா மணிக்கு—முரவுநோய்
காசம்விக்கல் சந்நி கபந்தலேநோய் மந்தஞ்சு
வாசம்பாண் டும்போ மதி.

இ-ள். திரிலோக சூடாமணி மாத்திரைக்கும் திரிலோகரட்சாமணிக் குளிகைக்கும் மார்புவலி இருமல் காசம் சந்நிபாதம் க்ஷயம் சிரஸ்தாபம் அலஜம் இரைப்பு சரீரவெளிறல் ஆகிய இவை நீங்கும்.

## ராஜமிருகாங்கம், மகாராஜமிருகாங்கம் இவைகளின் குணம்

ராஜமிரு காங்கமது ராஜநோய் போக்குமகா
ராஜமிரு காங்கமது ராஜநோய்க்—காசகபம்
பாண்டு காமாலே பலபீநசஞ் சோபை
தாண்டுபித்த நோயகற்றுஞ் சாற்று.

இ-ள். ராஜமிருகாங்க மாத்திரை ராஜரோகம் என்கிற க்ஷயத்தையும் மகாராஜ மிருகாங்கமாத்திரை க்ஷயகாசம் சுவாசம் பாண்டு காமிலம் பற்பலபீநசம் வீக்கம் பித்தகோபம் இவற்றை விலக்கும்.

## ராஜகண்டேச்சுரம், ராஜராஜேச்சுரம், ராஜகேசரிவடகம் இவைகளின் குணம்

ராஜகண் டேச்சுரமும் ராஜராஜேச் சுரமும்
வீசுசுர மெல்லாம் விலக்குங்காண்—ராஜகற்

கேசரிய தாம்வடகங் கேதஞ்செய் தோடசுர
நாசமுறக் காட்டுமதை நாடு.

இ-ள். ராஜகண்டேச்சுர மாத்திரையும் ராஜராஜேச்சுர மாத்திரையும் வாதசுர முதலிய சகல சுரங்களேயும் போக்கும்; ராஜகேசரிவடகம் திரிதோஷங்களிற் பிறந்த 13-சந்நிபாத சுரங்களேயும் கெடுக்கும். 1306

## சந்திரோதயம், சந்திரகாசரசம் சந்திரபிரபாவ்வடகம் பூரணச்சந்திரோதயம் இவைகளின் குணம்

### விருத்தம்

சந்திரோ தயத்தால்வெப்பந் தணியுஞ்சந் திரகாசத்தாற்
பிந்துமுத் தோடஞ்சந்திர பிரபாவ வடகமோநான்
கைந்துநீர் போக்கும்பூர்ண மாஞ்சந்தி ரோதயத்தால்
விந்துவு மதிகரிக்கும் வீறுநோய்க் குழுவும்போமே.

இ-ள். சந்திரோதய மாத்திரையால் தாபச்சுர முதலிய சகல சுரங்களும் சாந்தமாம், சந்திரகாச மாத்திரையிஞல் திரிதோஷ விகுணம் நீங்கும், சந்திர பிரபாவ வடகமானது 20-வித மேகங்களேயும் விலக்கும், பூரண சந்திரோதயத்திஞல் வீரிய விருத்தியாகும், பற்பல நோய்களும் போகும் என்க. 1307

## வசந்தகுசுமாகர மாத்திரையின் குணம் - வெண்பா

வசந்தகுசு மாகரத்தால் வல்லசயங் காச
முசந்தவிட பாண்டுகுன்மம் முற்றுய்க்—கசிந்தநீர்க்
கட்டுபுளி யேப்பமொடு கல்லடைப்புந் தாகமிவை
விட்டு விடுங்காண் விரைந்து.

இ-ள். வசந்தகுசுமாகர மாத்திரையால் க்ஷயம் இருமல் விஷ பாண்டு குன்மம் சொட்டுமூத்திரம் புளியேப்பம் அஸ்மரி தாக நோய் இவைகள் நீங்கும். 1308

## மகாவசந்த குசுமாகர மாத்திரையின் குணம் - விருத்தம்

மகாவசந்த குசுமா கரத்தால் வந்த
வாயுகபம் பித்தமந்தம் வயிற்று நோய்கள்
விகார வுன்மாதங் காமாலே பாண்டு
விடுசிறுநீர் கட்டுசந்நி குன்மஞ் சோபை
யகாத கயகாச சுவாசம் பிரமேக
மதிசார மெனும்புருக்கி விக்கன் மூலஞ்
சிகாவாதஞ் சுருங்ககுட்ட மார்பு நோயுந்
தீருமதற் கனுபானந் தெரியுங்காலே.

இ-ள். மகா வசந்த குசுமாகர மாத்திரையைக் கொடுக்கிற அநுபானமறிந்து கொடுக்கில் திரிதோஷத்தின் குணம் அசலம் உதர நோய்கள் உன்மாதம் காமிலம் பாண்டு விஷபேதி மூத்திர பிந்து வாதவஸ்து சந்நி குன்மம் வீக்கம் க்ஷயம் காசம் சுவாசம் மேகநீர் பேதி அஸ்திசிராவம் இத்மாமூலம் சிரஸ்தாபம் குறை நோய் மார்புவலி இவைகள் தீரும். 1309

## லங்கேச்சுரம், பிரதாபலங்கேச்சுரம் இவைகளின் குணம்

வெண்பா

இலங்கேச் சுரத்திற் கெழுகு திரைக்கா
விலங்கா கிரகணியு மில்லை—நலங்கொள்பிர
தாபலங் கேச்சுரத்திற் சாந்தமாஞ் சீதசுரம்
சோதமுறு நோயினமுஞ் சொல்.

இ-ள். லங்கேச்சுரத்திற்குச் சூதிகாவாதமும் கிரகணியும் பிரதாபலங்கேச்சுரத்தினால் சீத சுரமும் மூர்ச்சை முதலிய பிணிகளும் போம் என்க. 1310

## ஏகாதச ருத்திர மாத்திரை, சிந்தூர பூஷணங்களின் குணம்

ஏகா தசருத் திரமென்னு மாத்திரைக்குப்
போகாத சந்நிசுரம் போகுங்காண்—வாகான
சிந்தூர பூஷணத்தார் சீர்கருப்ப மாதருக்கு
வந்தசுரம் போமுணரு வாய்.

இ-ள். ஏகாதச ருத்திர மாத்திரைக்கு அசாத்திய சந்நிபாதமும், சிந்தூரபூஷண மாத்திரையால் கருப்ப ஸ்திரீகட்குற்ற சுரமும் நீங்கும் என்க. 1311

## பூபதி மாத்திரையின் குணம்

நாவிலிட வன்னமுறு நாளும் விடம்போகு
மேவுசுரஞ் சந்நிகளும் விட்டுப்போங்—காவிவிழி
மாதர் வசியமது வாய்க்கு மிலேபனமாந்
தானேகேள் பூபதிக்குத் தான்.

இ-ள். பூபதிமாத்திரைக்கு விஷம் சுரம் சந்நிபாதங்களும் விலகும். தீபனமும் ஸ்திரீ வசியமும் ஆண்குறி எழுச்சியும் உண்டாம்.

## நவலோக பூபதி, சூலைப்பூபதி இவைகளின் குணம்

நவலோக பூபதிக்கு நண்ணுசுரஞ் சந்நி
புவலோக வாழ்க்கைவிட்டுப் போங்கா—ணவுசூலைப்
பூபதிக்குச் சூலைசந்நி பொங்கனலந் தென்றிசைவாழ்
பூபதிக்கா ளாகும் புகல்.

இ-ள். நவலோகபூபதி மாத்திரைக்குச் சந்தசுரம் சந்நியும் விலகும். சூலைப்பூபதிக்குக் கீல்பிடிப்பு சந்நியும் தாபச்சுரமும் கெடும்.

## பூபதிரசம், ரசபூபதி இவைகளின் குணம்

பூபதிர சத்திற்போஞ் சன்னிமங் தம்மிரத
பூபதிக்குச் சந்நி பொருச்சிநோய்—கோபமிகு
காசஞ் சுவாசங் கடுஞ்சூலை பாண்டுமுத
ஞசங் கபவாய்வு நாடு.

இ-ள். பூபதி ரசத்திற்குச் சந்நிபாதமும் அலச ரோகமு
போம். ரசபூபதிக்குச் சந்நிபாதசிரமும் சோமரோகம் இரும
இரைப்பு கீல்பிடிப்பு பாண்டுரோகம் சிலேத்ம வாத தொந்த
இவைகள் கெடும். 131

## மருந்தருந்துங் கால அளவு கூறல்—விருத்தம்

தாதுநட்ட பஸ்மமாரஞ் சுவாச காசந்
தனியுன்மா தன்னிவைக்காண் டுறையா மென்பர்
மோதுகிரிச் சரம் விரணங் கல்லடைப்பு
முதிர்மேக நீர்க்குமருந் தீரைந்திங்க
ளோதுமுதா வர்த்தமா தங்களேழென்
றுரைவித் திரிதிக்குமருந் தரையாண் டன்றி
மீதுவேண் டாவுரைத்த விம்மட் டுண்ணின்
விலகுமவை சடமற விரும்பிக்காணே.

இதுவுமது

சோகபகந்தரமூல முதிரச்சூலை
சூலைகுருதிக்குன்ம மசிர்க்குநோயா
நாகமுபயாட்டிலமெய் திமிரங்குன்ம
நாறுகயமிவைக் குறைசேணுன் காந்திங்க
ளாகமகுமூர்ச்சை தவுல்லியகிரந்தி
யாமமிலபித்தஞ் சீதபித்தமுட்டி
யேகவருமதிமந்தஞ் சோமரோக
மிவைக்குறைமும் மதியுண்ணிலிணிமீளாவே.

இதுவுமது

வாந்திவிக்கல் கணமாந்தம் பேதிகட்கு
மண்டலமென் றுரைவாதங் காமிலங்கட்
கேந்திரு மண்டமுரை பற்பாண்டுசோகை
யென்மகோதரம்பிரி துனிக்கட்கூக்க
மோய்ந்திடமும்மண்டல நல்லுரைநாட்சென்று
மொழிவில்சுரங்கட்குரை மண்டலநான்குன்னி
மாந்திடபோமித்திரனே சகலநோய்க்கு
மருந்தூட்டின்மீட்டுமவை வாட்டாவாமே.

இ-ள். சுக்கிலநட்டம் அபஸ்மாரம் சுவாசகாசம் உன்மாதம் என்னும் பிணிகளுக்கு ஒவ்வொரு வருஷகாலமும், கிரிச்சுரம் துஷ்ட விரணம் அஸ்மரிமதுமேகம் இவைகளுக்கு 10-மாதமும், உதாவர்த் தம் பக்ஷகாதம் 7-வகை வித்திரிதிக்கட்டிகள் இவைகளுக்கு 6-மாத மும், பகந்தரம் மூலம் ரத்தசூலை வாதசூலை ரத்தகுன்மம் அசிர்க் கரம் ஆநாகம் அஷ்டிலம் பிரத்தியஷ்டிலம் திமிரம் குன்மம் க்ஷயம் இவைகளுக்கு 3-மாதமும், வாந்தி விக்கல் கணம் மாந்தம் அதிசாரம் இவைகளுக்கு 3-மண்டலமும், வாதம் காமாலை இவைகளுக்கு 2-மண்டலமும், பலவகைப் பாண்டு சோகை அஷ்டமகோதரம் துனி பிரதிதுனி இவைகளுக்கு 3-மண்டலமும், புராணசுரத்துக்கு 4-மண் டலம் ஔஷதங் கொடுக்கவேண்டும். இவ்வாறே மற்ற ரோகங் களுக்கு எண் என்கிற சாஸ்திர விதிப்பிரகாரம் ஔஷதம் ஊட்டில் மறுபடியும் அப்பிணிகள் ரோகியை வருத்தாவாம் என்க. 1317

# பத்திய வகை

## கஷாயம் சுரசம் ஸ்நானபானங்களுக் குரியசலம் இவைகளின் உஷ்ணநிதானம் - விருத்தம்

சுத்தநற்குடி நீர்காண்டஞ் சுரசமுண்டிடி லூதைக்கு
மெத்தவுஞ் சூடாப்பித்தம் வெப்பிரத்தஞ் சந்நிக்கு
முத்தமங் குளிர்ச்சியாகு மோங்கைக்குச் சிறிபசூடாங்
கொத்தடர் தொந்தநோய்க்குக் குறிசமோட் டினமாங்கூறே.

இ-ள். பரிசுத்தமாகிய நல்ல கஷாயம் வெந்நீர் சுரசம் முதலிய வைகளை அருந்துமிடத்து வாதநோய்க்கு மிகுந்த உஷ்ணமும் பித் தம் சுரம் சத்தியோவிரண ரத்தம் சந்நிபாதம் இவைகட்குக் குளிர்ச் சியும் அதிகரித்த சிலேஷ்மநோய்க்கு அற்பச் சுடுகையும் தொந்த நோய்க்குச் சமவெப்பமும் உத்தமமாம் என்க. சமவெப்பம் என்பது அதிக உஷ்ணம் குளிர்ச்சி இளஞ்சுடுகை என்னும் மூவகை நீரையும் சமமாகக் கலப்பதாம். 1318

## பிணியாளர்க்குத் தயிர்தோய்க்கும் விதி - வெண்பா

காற்றெழிக்கக் கோட்டையுமக் காலொடு சேரையென்னுங்
கூற்றெழிக்கச் சுக்குங் குறுமிளகு—மூற்றடுபித்
தம்மொழிக்கக் கட்டியும்பா றன்னிலிட்டுத் தோய்ப்பர்பத்தி
யம்மொழிக்க மாட்டா தவர்.

இ-ள். தயிரை மோரை நீக்காத ரோகிகள், வாயுவை நீக்குதற்கு இஞ்சியும் வாதகபத்தை ஒழித்தற்குச் சுக்கும் சிறுமிளகும் பித்தத்தை விலக்குதற்கு வெல்லமும் பாலிலிட்டுக்காய்ச்சி தயிர் தோய்ப்பார்கள். 1319

### பிணியாளர்க்கு மோர்சேர்க்கும் விதி

கிரிச்சங் தனக்குவெல்லங் கேள்பாண்டு நோய்க்கு
மரிப்பேதி கட்குஞ்சுக் காகு—மெரிப்பான்
மேகங் தனக்குத்தேன் மிக்குபிணி கட்கேளையு
ளுகங் கொடிவேலி யூட்டு.

இ-ள். கிரிச்சரத்துக்கு வெல்லமும், பாண்டுவாதாதிசாரம் முதலிய நோய்கட்குச் சுக்கும், மேகத்துக்குத்தேனும் மந்தாக்கினியாற் பிறந்த ஏனையரோகங்களுக்குச் சித்திரமூலப்பட்டையும், தயிரில் பிரமாணமாக ஊறவைத்துக் கடைந்தமோரைக் கூட்டவேண்டும்.

### மருந்துண்பார்க்கு ஊறுகாய் வகை

சுண்டைநெல்லி தேறுகளா தூதுளைபா வட்டையா
தொண்டைநா ரத்தங்கச் சறிஞ்சி—பண்டைநாட்
சென்றவரு ணக்காயுஞ் சேரூறு காயென்னிற்
றின்ற மருந்தினமுறு தே.

இ-ள். சுண்டை நெல்லி தேற்றான் களா தூதுளை பாவட்டை ஆதொண்டை எலுமிச்சை இக்காய்களும் நாரத்தம்பிஞ்சும் இஞ்சியும் நாட்பட உப்பில் ஊறவைத்துப் புசித்தால், தின்ற மருந்தின் குணங்கெடாது. 1321

### அயச்செந்தூரத்தின் பத்தியம் - விருத்தம்

பத்தியங் திலங்கூஷ்மாண்டம் பறங்கிகொள் கடுகுதோரை
கத்திரி பிரமபத்திரி கட்கஞ்சா வபினிமாதர்
சுத்தமா காதுபரனெய் துய்த்திடலாம் புளிப்புப்
புத்தம மகற்றலானு லுத்தமம் பழுதுமின்றே.

இ-ள். அயச்சிந்தூரத்துக்குப் பூசினி கொள் கடுகு மூங்கிலரிசி கத்திரி புகையிலை கெஞ்சா அபினி இவை ஆகாவாம் புணர்ச்சியோ வெனில் பரிச்சேதங்கூடாது. பசுவின்பாலும் ஆகும், இதில் புளிப்பும் உப்பும் நீக்கினால் உத்தமம். அன்றியும் உத்தமமாகிய அம் மருந்து பழுதுபடாது. 1322

### காந்தச் சிந்தூரத்தின் பத்தியம் - விருத்தம்

பத்தியம் புளியுப்பின்றேற் பலிதமாம் வாரத்துள்ளே
நத்திடி லிரண்டுமார நவிலுமிச்சா பத்தியங்கொள்

கத்திரிக்கா யகத்தி கடுகுகூஷ்மாண்ட மெள்ளு
கொத்தவரைக் காய்மாங்காய் கூலக்கா யிவையாகாவே.

இ-ள். காந்தச்சிந்தூரத்துக்குப் புளி உப்பு நீக்கில் அது ஒரு வாரத்துக்குள் பயனைத் தரும். அவைகளை விரும்பினல் இச்சாபத்தியத்துடன் 2-வாரம் உண்ண வேண்டும். இச்சாபத்தியமாவது கத்திரி அகத்தி கடுகு பூசனி திலம் கொத்தவரை மாங்காய் பலாக்காய் இவைகளை நீக்கவும். 1323

## தாம்பிர பஸ்பத்தின் பத்தியம்—விருத்தம்

புளியொன்று தவிரவெல்லாம் புசிக்கினு நவையுறாது
இளைபெரு நெருப்புக்கீர மில்லையென் பதுபோலாகு
மளைமுசலி குசங்காடி யாமிலமடாது பாகற்
சுளையற மகட்பழம்நெய் சுதைசருக்கரை மானன்றே.

இ-ள். தாம்பிரபஸ்பத்திற் புளிப்பு ஒழிந்த மற்ற சுவையுள்ள பதார்த்தங்களையெல்லாம் உண்ணினும் குற்றம் வராது. ஏனெனில் நீரை வறட்டுகிற பெரு நெருப்பிற்கு ஈரமில்லை என்பதுபோலாம். ஆனல் புளித்த தயிர் முயற்கறி எலுமிச்சம்பழம் காடி நெல்லிக்காய் இவை கூடாது. பலாச்சுளை வாழைப்பழம் பசுநெய் பால் சர்க்கரை இவை நலமாம் என்க. 1324

## பாதரசத்தின் பத்தியம்—வெண்பா

மற்சமுப்பு சீதோட்டின மந்தாதி வத்தெண்ணெய்
துற்சமத்தி யங்கைப்பு தொங்குபுளியைச்—சற்றுங்
கூட்டாமற் சூதங் கொடுப்பருண் டாரை நமன்பாற்
கட்டாமற் றுமிருத்தக் காண்.

இ-ள். ரசத்திற்கு மீன் லவணம் சீதளவெப்பமுள்ள பண்டம் அக்கினிமந்தவஸ்து எண்ணெய்கள் கசப்பு புளிப்பு இவை கூடாவாம்.

## பறங்கிப்பட்டையின் பத்தியம்—விருத்தம்

மஞ்சளோ டெண்ணெய்பாக்கு மாங்கிச மலுவாகார
மிஞ்சிகார் கடுகுகைத்த விழிவுறு புளிமண்ணுப்பு
மஞ்சுறு வாளைகோலா மடவைமீன் சன்னைவெளவால்
சிஞ்சித மருந்தினுலுங் கெடும்பறங்கித் தோன்மாதோ.

இ-ள். பறங்கிப்பட்டைக்குக் கறிமஞ்சள் நல்லெண்ணெய் களிப்பாக்கு மிருகமாமிசம் காரம் இஞ்சி கடுகு கசப்பு புளிப்பு இலவணம் இவைகளும், கோலா மடவை சன்னை வெளவால் முதலிய மீன்களும் லவலேசமும் சேரலாகாது, சேரில் அம்மருந்தின் தன்மை கெடும்.

## தைலங்களின் பத்தியம்—விருத்தம்

புலர்த்திய பின்பருந்து போசனந் தனிற்புளிப்பு
சலத்துறு ததிபால்பாகல் சரகம்மீ னிறைச்சியச்ச
நிலத்தெழு பிரமபத்திரி நித்திரை மடவாரின்னு
நலத்துறு வகைநீக்கிப்பின் னாளும்பத் தியத்துணில்லே.

இ-ள். தைலமாடி ஈரந் துவட்டியவுடன் நீ உணவில் புளி தயிர் பால் பாகற்காய் இலைக்கறி மச்சவகை மாமிசங்கள் அகத்தி புகையிலை பகல் நித்திரை புணர்ச்சி இன்னும் தகாதநடத்தை இவைகளை நீக்கு வதுந்தவிர மறுநாளிலும் பத்தியமா யிருக்கக்கடவை என்க. 1327

## முக்கியமாக மருந்துக்குதவாத வஸ்துக்கள்

### வெண்பா

சிந்தக் கனிமிகுந்த சீவனந்தாம் பூலம்வெல்லம்
பந்தப் பயற்றுப் பருப்புமோர்—சிந்து
கடலை யிவையற் றுரைகறித்தி டார்தங்க
ளுடலை யிவையத்திருந்தா ருன்.

இ-ள். எவ்வித மருந்துகளுக்கும் முக்கியமாக உதவாத பதார்த்தங்களாவன: புளி அதிகஜலபானம் அடைக்காய் கன்னல் வெல்லம் காராமணிப் பருப்பு மோர் கடலைப்பயறு ஆகிய இவைகளாம். 1328

## பத்திய பதார்த்தங்கள்—விருத்தம்

பொன்னாங்காணிசிறுகீரை புதியநறுநெல்வரால்குறவை
சொன்னாங்கோவைக்காய்வற்றல் சுண்டையவரைப்பிஞ்சுடனே
பன்னுவப்பைவெள்ளுள்ளி பரியமுருங்கையிளம்பிஞ்சும்
நன்னீர்விளைத்தசிறுபயறு நன்மாங்காய்க்குட்பிஞ்சுநன்றே. 1329

### இதுவுமது

அத்திப்பிஞ்சுகருவாழை யதன்றன்பிஞ்சுபூவாகும்
கத்தித்திரியுமூக்குருவி காடையுடனேசிலவாமை
சுத்தமாங்காய்நறும்பருப்புஞ் சுறுமீன்றிருக்கைக்கருவாடாம்
பத்தியத்திலிவைதவிறப் பச்சைமீன்கள்பகையாமே. 1330

### இதுவுமது

வேண்டியமருந்துண்பார்கள் விராலொடுகுறவைதேளி
யாண்டிடுமயிரையூடா னனசன்னையுஞ்சுதும்பு
மீண்டிடுமிருநோய்த்தோஷி யிவைகளையருந்துங்காலை
மீண்டிவைபுலர்ந்ததாகும் விரைமலர்க்குழலினாளே. 1331

இதுவுமது

காடையுடும்புகவுதாரி காட்டினெலியுமூர்க்குருவி
யாடுவிரும்பில்வெள்ளாடா மதுவுமுலர்த்திக்கறிகொள்ளு
நாடுதனில்வாழ்வரால்குறவை நலமாமிவையுமுலர்த்திக்கொள்
கூடுங்கூடாதென்றுதே கூட்டின்மருந்துங்குணந்தருமே.

இ-ள். வாசனைபொருந்திய கூந்தலாளே! பத்திய பதார்த்தங்களாவன: பொன்னாங்காணி சிறுகீரை அன்றுருக்கிய பசுநெய் கோவை சுண்டை முதலிய வற்றல் அவரைப் பிஞ்சு அப்பைக் கோவைக்காய் வெள்ளைப்பூண்டு முருங்கைப் பிஞ்சு பணிப்பயறு மாவடு அத்திப் பிஞ்சு கருவாழைக்கச்சல் ஷை பூ மாம்பருப்பு ஆகிய இவைகளுள், ஏரி வரால் குறவை சிட்டுக்குருவி காடை கவுதாரி ஆமை விலாங்கு கடல் குறவை தேளி அயிரை ஊடான் சன்னை சுதும்பு சிறிய நெய்த்தோலி பெரிய நெய்த்தோலி உடும்பு காட்டெலி இவைகளின் கறிகளும் சுறா திருக்கை காடை கவுதாரி ஊர்க்குருவி வெள்ளாடு இருகுறவை இவற்றின் கருவாடுகளும் ஆகும் என்க. 1332

பேதியைக் கட்டுகிற பதார்த்தங்கள்

மானேவயிறு கழிவார்க்கு வாழைக்கச்ச லத்திக்காய்
தானேதிரியு மூர்க்குருவி காடையுடும்பு கவுதாரி
தானேயாகு முயலுலரிற் றக்குளத்துக் கருவாடா
மீனேவிரும்பித் தின்பீரால் வீணேயுயிரை யிழந்தீரே.

இ-ள். அதிசார ரோகிகட்கு வாழைப்பிஞ்சு அத்திப்பிஞ்சு சிட்டுக்குருவி காடை உடும்பு கவுதாரி முயல் குளத்துக்கருவாடு என்னுமிவைகள் ஆகும். பச்சைமீனையருந்தில் உயிருக்கு அபாயம். 1333

பேதியாகிற பதார்த்தங்கள்—வெண்பா

காரா மணிக்கீரை காட்டுப் பறங்கியிலை
பேராம் பெரும்பயற்றின் பேரிலைகள்—சீரா
ரதத்திபெருங் கத்திரிக்கா யாயிழையே மீன்கள்
பகைத்ததிக பேதிதரும் பார்.

இ-ள். ஆபரணமணிந்த பெண்ணே! காராமணி பறங்கி பருங்காராமணி அகத்தி என்னும் இக்கீரைகளும் கத்திரிக்காயும் பச்சை மீன்களும் மிகுபேதியை உண்டாக்கும். 1334

பத்தியாபத்திய பதார்த்தங்கள்—விருத்தம்

மயறிகுறவைவரால்தேளி மற்றுக்குறவைநாய்க்கெளிறு
அயிரைசன்னைபத்தியமா மகரமீன்களினிக்கேளு

முயரும்வாளையிருல்கூனி யோங்கும்கெளிறுவிலாங்குகெண்டை
கயலோடிவைகளாகாவாங் காரார்குழலேகண்டுரையே.

இ-ள். கறுத்த கூந்தலாளே! பத்திய பதார்த்தமாவன: மயறி குறவை வரால் தேளி ஆற்றுக்குறவை நாய்க்கெளிறு அயிரை சன்னை என்னும் மீன்களாம். அபத்தியமீன்களாவன: வாளை இருல் சன்னக்கூனி பருங்கெளிறு பரும்விலாங்கு பருங்கெண்டை சேற்கெண்டை என்னுமிவைகளாம் என்க. 1335

## அபத்திய பதார்த்தங்கள்

கொள்ளுகாடிகுமட்டிக்காய் கோழிபன்றிகொக்குடனே
முள்ளிற்பெரியபாகற்காய் முதிருமவரைபயற்றங்காய்
பள்ளத்தொழுந்தமடற்சேம்பு படரும்வள்ளிபாலையிவை
யெள்ளத்தனைதான்றின்பீரே லெல்லாமருந்துமிழந்தீரே.

## இதுவுமது

மாங்காயிளநீர்மாதுளங்காய் மாவின்பண்டம்புளிகடுகு
தேங்காய்நெய்பால்கிழங்குபழந் தின்னும்காயம்வெங்காய
மீங்காதரிக்குஞ்சுராபான மீச்சங்கள்ளுபனங்கள்ளு
மாங்கேயிவற்றுளொன்றேனு மருந்தாதிருந்தால்மருந்தாமே.

இ-ள். அபத்தியமான பதார்த்தங்களாவன: கொள்ளு காடி குமட்டிங்காய் சேவல் வராகம் கொக்கு கொம்புப்பாகல் முத்தின அவரைக்காய் காராமணிக்காய் சேப்பங்கிழங்கு வள்ளிக்கிழங்கு பாலைக்கீரை மாங்காய் இளநீர் மாதுளங்காய் மாப்பலகாரம் புளி கடுகு தேங்காய் எருமைநெய் கிழங்குகள் முப்பழங்கள் பெருங்காயம் வெங்காயம் கள் ஈச்சங்கள் பனங்கள் இவைகளாம். 1337

## வாதரோகாரி வஸ்துக்கள்—வெண்பா

செங்கழு நீர்கோட்டந் தேன்மிளகு நல்லெண்ணெய்
தங்குபெருங் காயந் தழுதாழை யெங்கெங்கும்
கூட்டுசிறு முத்துநெய் கோதி லுழுந்திவைகள்
வாட்டும்வா தத்தை மதி.

இ-ள். செங்கழுநீர்க்கிழங்கு கோஷ்டம் குறிஞ்சித்தேன் மிளகு எள்ளின்நெய் பெருங்காயம் தழுதாழையிலை சிற்றாமணக்கெண்ணெய் உளுந்து ஆகிய இவைகள் வாதரோகத்தைப் போக்கும். 1338

## பித்தரோகாரி வஸ்துக்கள்—விருத்தம்

கொம்மட்டுவாழைப்பன்னன் கொளுத்தியகரிபிஞ்சோடே
விம்மியதண்ணீர்விட்டான் வேரொனுங்கிழங்குசாந்தஞ்

செம்மைசேர்நெல்லிமுள்ளி சேருமிம்மருந்தெல்லாமே
கம்மியபித்தத்திற்குக் காலனென்றோதுவாரே. 1339

இதுவுமது

செம்புநாவல்மீத்தாருச் சருமமுழுத்தக்காசுஞ்
செம்பருத்தியுட்செழித்த தெங்கிளம்பூவுங்கன்ன
லம்புயத்தாதினோடே யதனுறுவளையநெய்தல்
வெம்பியசீலைச்சாம்பல் வெள்ளைப்பூசினிக்காயென்னே.

இ-ள். கொளுஞ்சி நாரத்தம்பழம் வாழைச்சருகு சுட்டகரி தண்ணீர்விட்டான் கிழங்கு சந்தனம் நெல்லிமுள்ளி சம்புநாவல் பெருமரப்பட்டை கோரைக்கிழங்கு செம்பருத்தி தென்னம்பூ கருப்பு தாமரைப்பூவினது கரந்தம் மேற்படி வளையம் செங்குவளைக்கேசரம் வஸ்திரஞ்சுட்ட சாம்பல் கலியாணப் பூசினிக்காய் இவை பித்தத்தை நீக்கும். 1340

சிலேத்மரோகாரி வஸ்துக்கள்—வெண்பா

ஆவி னதுபா லரத்தைமுள் ளங்கிமயிற்
றாவி நறுஞ்சாம்பல் தூதுளங்தேன்—மாவோமங்
தூய்ய சருக்கரை தூழாய்விதை விளாம்பழமு
மையனை யோட்டு மறி.

இ-ள். பசும்பால் தும்பராஷ்டம் முள்ளங்கி மயிலிறகுச் சாம்பல் தூதுளைச்சமூலம் மலைத்தேன் ஓமம் வெள்ளை சருக்கரை துளசி விதை விளாம்பழம் முதலியவை சிலேத்ம ரோகத்தை விலக்கும்.

மூலரோகாரி வஸ்துக்கள்

மருள்சா ரணைகருணை வச்சிரவல்லி காட்டுக்
கருணை விளிநரளை காராக்—கருணை
மெருகோடு வெள்ளறுகு வெண்சித் திரமூலம்
மருமூலம் போக்கு மருந்து.

இ-ள். மருட்கிழங்கு வெண்சாரட்டை சமூலம் கருணைக்கிழங்கு இரண்டை காட்டுக்கருணை புளிநரளை காராக்கருணை மெருகின்கிழங்கு வெள்ளறுகு வெண்சித்திரமூலம் முதலியவை மூலரோகம் நீக்கும்.

விஷாரி வஸ்துக்கள்

பேய்ச்சுரை பேய்க்கொமட்டி பேய்ப்பீர்க் கொடுதுமட்டி
பேய்ப்புடலை புங்கழிஞ்சிற் பேரவுரி—வாய்த்தமலை
வேம்புசிவ னார்வேம்பு வெள்ளெருக்கு வெள்ளறுகு
சோம்புவிடம் போக்குமெனச் சொல்.

இ-ள். பேய்ச்சுரை பேய்க்கொம்மட்டி பேய்ப்பீர்க்கு தும்மட்டி பேய்ப்புடல் புங்கு அழிஞ்சில் காட்டவுரி மலைவேம்பு சிவனார்வேம்பு வெள்ளெருக்கு வெள்ளறுகு இவைகள் விஷவேகத்தை நீக்கும்.

## பித்தசம திரவியம்

மொச்சை கடலைபெரு முற்கழுந்தே லம்வெந்தி
மெச்சு மிளகுசுண்டை வெண்ணெயிஞ்சி—பச்சைநிறங்
காட்டுமப்பைக் கோவை கருநிம்பஞ் சீரகங்கள்
கூட்டுகறி பித்தசமங் கூறு.

இ-ள். வெள்ளை மொச்சைக்கொட்டை கடலை பெருங்காராமணி உளுந்து ஏலம் வெந்தியம் மிளகு சுண்டைக்காய் பசுவின்வெண்ணெய் இஞ்சி அப்பைக்கோவைக்காய் கருவேப்பிலை சீரகம் முதலியவைகள் சேர்ந்த பதார்த்தங்களால் பித்தகோபம் சாந்தியாகும். 1344

## திரிதோஷசம திரவியம்—விருத்தம்

ஒன்றியவாதபித்த கபமிவையுருதவண்ண
நன்றுறுகறிகளெல்லா நாளுமேசமைப்பராய்ந்தோர்
தின்றிடுமிளகுமஞ்சள் சீரகமுயர்ந்தகாயம்
வென்றிகொள்சுக்கோடேலம் வெந்தயமுள்ளிசேர்த்தே.

இ-ள். மிளகு மஞ்சள் சீரகம் பெருங்காயம் சுக்கு ஏலம் வெந்தியம் வெள்ளைப்பூண்டு இவைகளை நல்ல பதார்த்தங்களில் விதிப்படி சேர்த்து தினமுண்ணில் திரிதோஷம் ஒன்றுக்கொன்று மீறாவாம்.

## அறுசுவைகளின் மிகுதிக்குணம்—வெண்பா

புளிதுவர்விஞ் சுங்கறியாற் பூரிக்கும் வாதந்
தெளியுவர்கைப் பேறில்பித் துச்சீறுங்—கிளிமொழியே
கார்ப்பினிப்பு விஞ்சிற் கபம்விஞ்சும் சட்டிரதச்
சேர்ப்புணரி ஞேயணுகா வே.

இ-ள். கிளிமொழியாளே! புளிப்பும் துவர்ப்பும் அதிகரிக்கில் வாதம் அதிகரிக்கும். உப்பும் கசப்பும் அதிகரிக்கில் பித்தம் அதிகரிக்கும். உறைப்பும் தித்திப்பும் அதிகரிக்கில் சிலேத்மம் அதிகரிக்குமாதலால் அறுசுவைகளையுங் கிரமமாகப் பதார்த்தங்களில் சேர்த்துண்ணிற் பிணிகள் சாராவாம் என்க. 1346

## காலைக் கறிக்கான பயறு முதலியவை

காலைக் கறிக்காகுங் காரா மணியுளுந்து
தூலக் கடலை துவரையெள்ளு—கோலமொச்சை

தட்டைச் சிறுபயறு தாழ்வில் கடுகுகறி
இட்சு சுக்குகாய மிவை.

இ-ள். காலைப்பதார்த்தங்களுக்கு உதவும் பயறு முதலியவை யாவன: காராமணி உளுந்து கடலை துவரை திலம் மொச்சைக் கொட்டை தட்டைப்பயறு கடுகு மிளகு சுக்கு பெருங்காயம் இவைகளாம். 1347

## மத்தியானகாலக் கறிவகை

கந்த வருக்கங் கனிவருக்கம் வாதமெழு
மந்த வருக்கமந்த மாம்வருக்கங்—கந்தமுறு
தண்டை வருக்கந் ததிமோ ரிவையென்று
ணுண்டையாற் றேடமறு மோர்.

இ-ள். மத்தியான போஜனத்தில் கிழங்குவகைகள் பழங்கள் வாதவஸ்துக்கள் மந்த பதார்த்தங்கள் மணமும் சீதளமுமுள்ள இலைக்கறிகள் எருமைத்தயிர் மோர் இவைகளையுண்ணில் சூரியவெப் பத்தினாலும் தேக உழைப்பினாலும் அவைகளின் தோஷம் நீங்கும்.

## இராக்காலக் கறிவகை

அவரைப்பிஞ் சத்திக்கா யாப்பான் முருங்கை
துவரைப் பருப்பாற்றுத் தோணி—யெவையுமே
கண்டா விழுக்குந் தடத்தூ தூணமிவையா
லுண்டா விழுக்குமிலை யுண்.

இ-ள். அவரைப்பிஞ்சு அத்திக்காய் பசுவின்பால் முருங்கைப் பிஞ்சு துவரம்பருப்பு ஆற்றுமுள்ளிக்காய் யாரையுமுட்களாவிழுக் கின்ற காட்டுத் தூதுளங்காய் முதலியவைகளை மாலைக்காலக் கறிக ளாக உண்ணில் குற்றமின்று. 1349

## காலைமாலை போஜனத்தின் நெய் மோர் பேதம்

காலைக் கெருமைநெய்மோர் காரத்தோ டுண்ணலாம்
மாலைக்கா வின்நெய்மோர் வார்த்துணலா—மேலையண்ட
வெப்பப்புக் காலம் விரவிவர லாற்றுகளி
லொப்பப் பகற்கனற்கண் டுண்.

இ-ள். அண்டவெப்பம் பகற்காலத்திலும் குளிர்ச்சி இராக் காலத்திலும் ஆகமாறிவருதலால் வாயுவான எருமைநெய் மோர் காரவஸ்து இவைகளைப் பகற்காலத்தில் பசியைக்கண்டுண்ணலாம். உஷ்ண சம்பந்தமான பசுவின் நெய்மோர் இவைகளை இராக்காலத் தில் உண்ணலாம், குற்றமில்லை. 1350

### வாதமுதலிய மூன்றுதேகிகட்கும் உப்புவகை

வாதபித்தை யென்றே வருதேகர்க் குக்கல்லுப்
போதவுப் பிந்துப்பா முணர்முறையோ—யோதவெள்ளம்
வற்றியவிந் துப்பதனை வாதமுத லோரருந்தக்
குற்றமிலைக் குற்றமிலைக் கூறு.

இ-ள். வாததேகிக்குக் கல்லுப்பும் பித்ததேகிக்குக் கடலுப்பும் சிலேஷ்மதேகிக்கு இந்துப்புமாகும். வாதமுதலிய மூன்று தேகிகளும் லவணத்திற்குப் பதில் இந்துப்பைச் சேர்த்துண்ண தோஷமில்லை. 1351

### வாததேகிகட்குக் கறிவகை

மாட்டுப் பறங்கிவங்க மாமுருங்கை வெள்ளவரை
நாட்டுப்பா கரபிஞ்சு நற்கருணை—காட்டுளுறை
மாகருணை யுங்கருவில் வாதத் தெழுந்துவந்த
தேகருணை நற்கறியாந் தேர்.

இ-ள். வாததேகிகளருந்துங் கறிகளாவன: கலியாணப்பூசினிக்காய் கத்தரிக்காய் வழுதுளங்காய் முருங்கைப்பிஞ்சு வெள்ளவரைக்காய் மிதிபாகல்பிஞ்சு காராக்கருணை காட்டுக்கருணை என்பனவாம்.

### வாததேகிகட்குக் கீரைவகை

மேனிமுன்னை யாரைநறும் வேளைமணத் தக்காளி
யானைநெருஞ் சின்முசுக்கை யப்பைநெடுங்—கானிலுறை
மூக்குறட்டை நல்வசலை முன்பிவைக ளாற்கீரை
யாக்குவர்வா யுத்தேகர்க் காய்ந்து.

இ-ள். வாததேகிகளுக்குக் கீரைகளாவன: குப்பைமேனி முன்னை ஆரை நல்வேளை மணத்தக்காளி யானைநெருஞ்சில் முசுமுசுக்கை அப்பைக்கோவை காட்டுமூக்குறட்டை நல்வசலை இவைகளாம். 1353

### வாததேகிகட்கு ரசவகை

சக்கர வர்த்திவெள்ளைச் சாறடைபா கன்முருங்கை
தெக்கிலிளந் தண்டுநறுந் தூதுணம்வார்—மைக்குழவே
சீதமுறு காணியிவை செந்தளிர்க ளிற்றினமும்
வாததேகி கர்க்கிரசம் வை.

இ-ள். கறுத்த கூந்தலாளே! வாததேகிகளுக்கு சக்கரவர்த்திக் கீரை வெள்ளைச்சாரடை பாகல் முருங்கை முளைக்கீரை நல்லதூதுணம் பொன்னாங்காணி இவ்விலைகளில் நித்தியமும் ரசஞ்செய்வாயாக என்க. 1354

வாததேகிகட்கு வற்றல்வகை

சுண்டைக்காய் பேய்ப்புடற்காய் தூதுளங்காய் நெல்லிக்காய்
தொண்டைமணத் துக்காளி தூதுவளை—பண்டைதுள்ளிக்
காயிவற்றின் வற்றல்களுங் கான்பிரண்டை வற்றலுமாம்
வாயுதே கர்க்கறிந்து வை.

இ-ள். வாததேகிகளுக்குச் சுண்டை பேய்ப்புடல் தூதுணம் நெல்லி ஆதொண்டை மணத்தக்காளி வெள்ளவரை முள்ளி ஆகிய காய்களும் காட்டுப்பிரண்டையும் வற்றல் செய்வாயாக. 1355

வாதகேகிகட்கு ஊறுகாய்வகை

நாரத்தை தான்றிகடு நற்றேற்று னீடுகளா
வேரொத்த புன்களா விவ்வகைக்காய்—காருப்பப்
பூறியகா யோடு முயரிஞ்சி யும்மமையுங்
கூறனில தேகிகளுக் கு.

இ-ள். வாதகேகிகளுக்கு நாரத்தை தான்றி கடு தேற்றான் பருங்களா சிறுகளா ஆகிய இவ்வகைக்காய்களும் இஞ்சியும் உப்பு நீரிலூறியதாகும். 1356

பித்ததேகிகட்குக் கறிவகை - விருத்தம்

வெள்ளரி யிரண்டுபாகல் விரிபுடல் பீர்க்குசிம்பை
முள்ளரி பூசிணிகத்தார் முருங்கைமா களவரம்பை
யெள்ளிலிக் காய்கள்வள்ளி யிருளிக் கதலிப்பூதண்
டள்ளியுண் ணுஞ்செய்வ ரரும்பித்த தேகர்க்கென்றே.

இ-ள். பித்ததேகிகளுக்கு வெள்ளரி கொம்புபாகல் மிதிபாகல் நீளப்புடல் பீர்க்கு அவரை ஆற்றுமுள்ளி கல்யாணப்பூசினி கத்தரி முருங்கை பருங்களா வாழையாகிய இக்காய்களையும் வள்ளிக்கிழங்கு வெங்காயம் வாழைப்பூ ஷை தண்டு இவைகளைச் சாப்பிடலாம்.

பித்ததேகிகட்குக் கீரைவகை - கலித்துறை

புளியாரை கோவைமுருங் கைவசலை நற்பொன்முசுட்டை
மிளகப்பையோரிதழ்த் தாமரைபாலை வெளிமுசுக்கை
வளர்தூ துணஞ்சுரை வல்லாரைசில்லி மணத்தக்காளி
தளிரிளங்கீரைகள் புத்தசுதேகிக டாமுண்பரே.

இ-ள். பித்ததேகிகள் புளியாரை கோவை முருங்கை வசலை நல்பொன்முசுட்டை மிளகு அப்பக்கோவை ஓரிதழ்த்தாமரை பாலை காட்டுமுசுக்கை தூதுணம் சுரை வல்லாரை சிறுகீரை மணத்தக்காளியாய இக்கீரைகளைப் போசனத்திற் சேர்த்தருந்துவர். 1358

### பித்ததேகிகட்கு ரசவகை - வெண்பா

கொத்து வசலை கொடிவசலை நல்லகத்தி
தத்துபுனல் வழுக்கை தைவேளை—நெய்த்தராச்
சாகங்களை யவித்துச் சாறுவைத் துண்பார்பித்த
தேகங் களையுடையார் தேர்.

இ-ள். பித்ததேகிகள் கொத்துவசலை கொடிவசலை வெள்ளையகத்தி பிரமியவழுக்கை தைவேளை தரா ஆகிய இலைகளை வேகவைத்து இறுத்த சலத்திற்செய்த ரசத்தை உணவுடன் சேர்த்தருந்துவார்.

### பித்ததேகிகட்கு வற்றல் வகை

சுத்தமுள்ளி பேய்ப்புடல் தூதுணங்காய் சுண்டைகண்டங்
கத்திரி பயற்றைமணத் தக்காளி—நித்தமுறு
கஞ்சம் வல்லாரையிவை காய்த்தநறுங் காய்வற்றல்
விஞ்சுபித்த தேகிகட்காம் விள்.

இ-ள். பித்ததேகிகளுக்கு வெண்முள்ளி பேய்ப்புடல் தூதுணம் காட்டுச்சுண்டை கண்டங்கத்திரி பயற்றங்காய் மணத்தக்காளி தாமரை வல்லாரை ஆகிய இவ்வகைக்காய்களின் வற்றல்களாகும்.

### பித்ததேகிகட்கு ஊறுகாய்வகை - கலித்துறை

பச்சைமிளகிஞ்சி தூதுளங்காய்முப் பலநாரத்தங்
கச்சைதமரத்தம்புன்னை வடங்கவில தேற்றுன்மா
கொச்சையிளம்பிஞ்சு மாகாளிக்கந்தங் கொளுஞ்சியெலு
மிச்சையுப் பூறியகாய்பித்த தேகர்க்குமிக்குநன்றே.

இ-ள். பித்ததேகர்க்கு பச்சைமிளகு இஞ்சி தூதுணம் கடுநெல்லி தான்றி நாரத்தை தமரத்தை புன்னை ஆல் விலா தேற்றுன்மா ஆகிய இவ்விளம்பிஞ்சுகளும் பருநன்னாரிக்கிழங்கு கொளுஞ்சி நாரத்தங்காய் எலுமிச்சங்காய் இவைகளும் உப்பில் ஊறில் மிகவுத்தமம். 1361

### சிலேத்மதேகிகட்குக் கறிவகை - விருத்தம்

கத்தரிபேய்ப்புட லவரையிருபாகல் பருங்களாகண்டங்கத்திரி
யத்திக்காய்களும் வருக்கைமரபயற்றைசுரையால் பீர்க்கரும்பிஞ்சுவேர்
மொய்த்த சூரணங்கதலித்தண்டோடப் பூமுளங்கிமுருக்கரும்பு
மத்தபூசினிக்காயிருள்ளிவள்ளி யுங்கபதேதார்க்காணமாமே.

இ-ள். சிலேத்மதேகிகளுக்கு கத்திரி பேய்ப்புடல் அவரை கொம்புபாகல் மிதிபாகல் பெரியகளா கண்டங்கத்திரி அத்தி ஆகி

யவைகளும் பலா பயற்றம்பிஞ்சு சுரை ஆல்பீர்க்கு இவற்றின் பிஞ்சு களும் கருணைக்கிழங்கு வாழைத்தண்டு ஷ பூ முள்ளங்கி முள் முருக்கினரும்பு கூஷ்மாண்டம் வெங்காயம் வள்ளிக்கிழங்கு என்னு மிவைக ளாகும். 1362

## சிலேத்ம தேகிகட்குக் கீரைவகை

காரையிருகோவை முன்னைசெம்மைபுடலை துயிலிவழுக்கை நெருஞ்சி, லாரைபுளியாரை முல்லைமருதநெய்தன் மேனிநல்வல் லாரைபொன்னு, வாரைமுசுக்கை முருங்கையிருபிண்ணாக் கோடு பண்ணைமணலிபிள்ளைக், கீரைமுசுட்டையுங் காராமணிமாடங் கடலை புளிக்கிரிக்களாவே.

### இதுவுமது—வெண்பா

வேளைமணத் தக்காளி மென்சிறை சக்கிரவர்த்தி
பீளை வசலைசுக்கு பெண்சுணங்கன்—வேளையிவைச்
செந்தளிர்கா ளைக்கீரை செய்வர்கப தேகர்நிதம்
வந்தளி யுணத்தான் மகிழ்ந்து.

இ-ள். சிலேத்ம தேகிகளுக்குக் காரை அப்பக்கோவை வரிக் கோவை பசுமுன்னை கருஞ்செம்பை பேய்ப்புடல் துயிலி பிரமி வழுக்கை நெருஞ்சில் நீராரை புளிசாரை முல்லை மருதம் நெய்தல் குப்பைமேனி வல்லாரை பொன்னுவாரை முசுமுசுக்கை பெருபிண் ணாக்கு சிறுபிண்ணாக்கு பண்ணை மணலி முளைக்கீரை முசுட்டை காராமணி உளுந்து கடலை புளிப்புள்ள மலைக்களா வேளை மணத் தக்காளி பொன்னுங்காணி சக்கிரவர்த்தி பீளை வசலை சுக்கு கற் றாழை நாய்வேளை வேளை ஆகிய இக் கீரைகளைச் சமைத்துப் போசன னத்தில் உண்பார்கள். 1364

## சிலேத்ம தேகிகட்கு ரசவகை

கந்தவோ மஞ்செங் கடுகுசத குப்பைதரா
வெந்தியங் கொத்தமலி வேளைசுக்கு—முந்தகத்தி
தூறு குறிஞ்சாபாக றும்மையிச் சாகங்கள்வெந்த
சாறுகப தேகர்க்காஞ் சாற்று.

இ-ள். சிலேத்ம தேகர்க்கு ஓமம் செங்கடுகு சதகுப்பை வெந் தியம் கொத்துமல்லி வேளை சுக்கு அகத்தி குறிஞ்சா பாகல் தும்பை ஆகியவற்றின் இலைகளை அவித்திறுத்த சலங்களில் வைத்த ரசங்கள் ஆகுமென்க. 1365

## சிலேத்ம தேகிகட்கு வற்றல் வகை

சுண்டைமணத் தக்காளி தூதுணம்பு ரண்டையா
தொண்டைமுள்ளி பேய்ப்புடலை தொண்டைசிம்மை—கண்டூறு

கத்திரி நெல்லிப்பிஞ்சு கானரந்தம் பிஞ்சிவகை
கொத்த வற்றலையத்தேகர்க் குன்.

இ-ள். சிலேத்ம தேகர்க்குச் சுண்டை மணத்தக்காளி தூது ணம் புரண்டை கோவை முள்ளி பேய்ப்புடல் ஆதொண்டை அவரை கண்டங்கத்திரி இக்காய்களும் நெல்லி காட்டுநாரத்தைப் பிஞ்சுகளும் வற்றல் செய்யலாம் என்க. 1366

## சிலேத்ம தேகிகட்கு ஊறுகாய் வகை

மஞ்சண் மிளகுசுண்டை வாழைத்தண் டோடுமாம்
பிஞ்சாலம் பிஞ்சத்திப் பிஞ்சுகளும்—விஞ்சுகப
நாறுநறுந் தூதுணமு நெய்யபா கற்பிஞ்சு
மூறுகாயத் தேகர்க் கோர்.

இ-ள். சிலேத்ம தேகிகளுக்குப் பசு மஞ்சள் மிளகு சுண்டை வாழையிளந்தண்டு மாம்பிஞ்சு அத்திப்பிஞ்சு கபநாசனி என்கிற தூதுணம் மிதிபாகற்பிஞ்சு இவற்றின் ஊறுகாய்கள் ஆம். 1367

## காலபேதங்களுக்கு அவிரோத பதார்த்தம்

எல்லாக் கறிகளுமே யெல்லுக்கா மல்லுக்கா
மெல்லாக் கறிகளுமெல் லார்க்குமாம்—பொல்லாக்
கறிகளுக்குச் சத்துரு கலந்தமைத்து நன்றுங்
கறிகளுக்குள் வைத்தருந்துங் கால்.

இ-ள். தோஷமுள்ள பதார்த்தங்களை அவைகளுக்குச் சத்துரு வாகிய வஸ்துக்களால் தோஷத்தை நீக்கி அந்தப் பதார்த்தங்களை நற்குணங்களையுடைய பதார்த்தங்களுடன் வைத்துக்கொண்டு உண் ணில் பகல் இரவு என்னும் இரண்டு காலங்களுக்கும் வாத முதலிய மூன்று தேகிகளுக்கும் விரோதஞ் செய்யாமல் அவைகள் சவுக்கியந் தரும். 1368

## இவ்வித நோய்க்குத் தாம்பூலங் கூடாதெனல்

மதமூர்ச்சா ரோக மகாசன்னி பாத
மதிரூட்சை சுட்கரோ யாளு—முதிர்விடங்கள்
பித்தங் கயஞ்சிரநோய் பேசுமிவைக் காகாது
சுத்தந்தாம் பூலமெனச் சொல்.

இ-ள். மதரோகம் மூர்ச்சை அபிநியரச சந்நிபாதம் தாபச் சுரம் அதிசுஷ்கரோகம் தேகத்திலூறிய விஷங்கள் பயித்தியம் ரஜக்ஷயம் ஸ்தாபம் ஆகிய இவைகளுக்குப் பரிஷ்காரமாகத் தாம் பூலங்கூடாது. 1369

### இவ்வித நோய்க்கு நெய் கூடாதெனல்

தருணசுரஞ் சந்நி சலதோடந் தோட
மருணம் மகோதரமா நாகம்—வருணவதி
சாரங்க வீனவுரை தாவரிக்குன் மங்களுக்கா
தாரங்க வீனவுரை தள்.

இ-ள். தருணசுரம் சன்னிபாதம் நீர்க்கோவை சப்ததோஷம் நவயிறு ஆநாசம் ரோகம் பபதி தொனிகத்தவாதம் குன்மம் னும் இவை அதிகரிப்பதற்கு நெய்யே காரணமாதலால் அத ; தள்ளுவாயாக என்க. 1370

### இவ்வித நோய்க்குத் தயிர் கூடாதெனல்

குட்டமதைப் பக்கநோய் குன்மங்கா மாலைமந்தந்
துட்டவிடு சிக்களச்சூர் சோபைகபங்—கெட்டசுர
மீரமிவை பீநசம்பி லீகம்புண் பாண்டொடதி
சாரமிவைக் கில்லைத் ததி.

இ-ள். குறைநோய் வீக்கம் நேத்திரரோகம் வாதகுன்மம் லெம் அலசம் விஷஉசி களப்பிணி சோபை சலதோஷம் விஷம் ம் பீனசம் பிலீகம் கிரந்தி பாண்டுபேதி இவைகளுக்குத் தயிர் டாது. 1371

### தற்கால பலாபல பதார்த்தம்

திரிபதார்த்தம் பலமே செய்யு முடனே
திரிபதார்த்த மபலஞ் செய்யுந்—தெரிமுறையே
சிதவம் புணர்ச்சியூன் றேனுசொறி நறும்பா
லதவம் புணர்ச்சி தைலம்.

இ-ள். குளிர்ந்தசலம் நாவுக்குருசியைத் தெரிவிக்கின்ற மாமி பசும்பால் இந்த 3-ம் தற்கால பலத்தைச்செய்யும் கடூரவெய்யில் ணர்ச்சி நற்றயில ஸ்நானம் இந்த 3-ம் உடனே துர்ப்பலத்தைச் ய்யும். 1372

---

## வீட்டின் வகை



### சொர்ன வீட்டின் குணம்

மேனிதனிற் காந்தியெழில் வீறமுத ராக்கினியு
ஞானமுமே தோதாது நண்ணுங்காண்—வானே
மிகைசேர் சகலகுண விர்த்திகளும் விர்த்தி
தகைசோர்சொர் னத்தினில்லத் தால்.

இ-ள். மான்போன்ற விழியாளே! சொர்ன வீட்டில் வசிப்பவர்களுக்கு சரீரத்தில் தேஜஸ் அழகு ஜடராக்கினி அறிவு மேதோதாது பற்பல சிறப்பு இவைகள் விருத்தியாம். 1373

## கருங்கல் வீட்டின் குணம்

அலங்கார முமதமு மக்கினியு நீங்குந்
துலங்கா தவமுந் துலங்கா—திலங்க
வருங்கலகப் பித்து மனத்துயர நோயுங்
கருங்கலகப் பித்தார்க்குக் காண்.

இ-ள். கருங்கல் வீட்டில் வாசமாயிருக்கும் வெறியர்களுக்கு உலகில் விளங்குகின்ற சூரியகிரணமுஞ் சந்திரகிரணமுமில்லை, அதனால் அழகும் வீரியமும் உதராக்கினியும் நீங்கிவிடும், கலகஞ்செய்கின்ற பித்தமும் மனத்துன்பமும் சிலேஷ்மரோகமும் மிகுதியாக உண்டாம். 1374

## மேல்வீடு, ஓட்டுவீடு, புல்வீடு - இவைகளின் குணம்

நீட்டையுறு மேல்வீசி நீணிலவெப் போடுபல
வேட்டை யொழிக்குங்காண் மிக்கெழிலா—லோட்டையுறு
கல்வீ டுயர்வென்னுங் காலிமஞ்சாரா நலத்தாற்
புல்வீ டுயர்வாம் புகல்.

இ-ள். உயர்ந்த மெத்தைவீடானது பூமியின் உஷ்ணத்தோடு விஷஜெந்து மிருக முதலியவைகளால் உண்டாகிற பலவித துன்பங்களையும் நீக்கும் ஓட்டுத்தடுக்குள்ள கல்வீடானது அழகினுலுயர் வுரினும் காற்றும் பனியும் சாராத நன்மையினுல் விழல் தடுக்குவீடே உயர்வாம். 1375

## காலை விழிப்பின் குணம்

புத்தி யதற்குப் பொருந்து தெளிவளிக்குஞ்
சுத்த நரம்பினற்ற றாய்மையருந்—பித்தொழியுந்
தாலவழி வாதபித்தந் தத்தநிலை பண்ணுமதி
காலைவிழிப் பின்குணத்தைக் காண்.

இ-ள். உதயகாலத்தில் விழிப்பவர்களுக்கு புத்திக்குத் தெளிவையுணர்த்துகின்ற சுத்த நரம்பு என்னும் ஒருவித நரம்பினது துவாரத்தில் நிறைந்திருக்கின்ற நீரானது கலங்கலின்றிப் பரிசுத்தமாயிருக்கும். பத்தியகோபம் நீங்கும் உலகத்தில் வழங்குகிற வாதமும் பித்தமும் சிலேஷ்மமும் தங்கள் இடங்களிலேயே பொருந்தும் என்க. 1376

## விழித்தவுடன் சுத்தஜலம் அருந்தலின் குணம்

தூங்கி விழித்தவுடன் சுத்தோதக மருந்தி
லோங்கின்ற பித்த மொழிவதன்றித்—தேங்கு

மல மூத்திரங் தங்கா வாதியுந் தத்தந்
தலமாத் திரமுலவுந் தான்.

இ-ள். நித்திரை செய்து விழித்தவுடன் சுத்தோதகமென்னும் ·காரம் அல்லது நல்லசலம் இவைகளில் ஏதேனும் ஒன்றைய் மாணமாகப் பருகில், பயித்தியதோஷம் விலகும், அன்றியும் மல பந்தங்களும் நீங்கும் வாதமுதலிய மூன்று தோஷங்களும் தத் நிலைகளிற் சஞ்சரிக்கும். 1377

## விழித்தவுடன் பார்க்கத்தக்க வஸ்துக்கள்

கஞ்சந்தங் கந்தீபங் கண்ணாடி யெல்லங்கி
செஞ்சந்த நீர்மண் சிவலிங்க—மஞ்சங்கல்
கற்றூதம துவலக் கைமனைத டாரியிவை
யுற்றால் விழிப்பினுத்த மம்.

இ-ள். நித்திரைசெய்து விழித்தவுடன், தாமரைப்பூ தங்கம் ம் கண்ணாடி சூரியன் புகையொழிந்த நெருப்பு செஞ்சந்தனம் ல் வயல் சிவலிங்கம் முகில்சூழ்ந்தமலை கன்றையுடைய பசு தமது க்கை மனைவி மிருதங்கம் இவற்றுள் ஏதேனும் ஒன்றைப்பார்க் உத்தமமாம். 1378

## விழித்தவுடன் கண்ணாடிபார்த்தலின் குணம்

தாதுவுங்க ளிப்புஞ் சகல வசீகரமும்
போத வறிவுமுண்டாம் பூதலத்து—ணாகமுறும்
பண்ணாடிப் பார்க்கும் பனிமொழியே நீவிழிப்பிற்
கண்ணாடி பார்த்திதனைக் காண்.

இ-ள். பனிமொழியாளே! தூங்கி விழித்தவுடன் கண்ணாடி ர்த்தலினால் வீரியவிருத்தியும் மகிழ்ச்சியும் சர்வவசியமும் ஞான ம் அதிகரிக்குமென்க. 1379

## விழித்தவுடன் பார்க்கத்தகாத வஸ்துக்கள்

விருத்தம்

ஊனம்வத்திரம் பவங்கல்லாடைசங்கை
பூமைதட்டை செவிடரங்கல்சடைநிராசை
கூனமுக்குமேனிவிரி மூர்த்தந்தூக்கங்
குட்டமறநெய்த்தலையா குலமுன்மாதந்
தீனமறற்கயமிவையுள் ளார்முகத்துத்
திட்டமுகைவிதவை வஞ்சியர்முகத்துங்
கானவரவிந்திபலி மூரிமாறு
கயிறுலக்கை முறத்திடத்தும் விழித்தறீதே.

இ-ள். நித்திரைசெய்து எழுந்தவுடன் அங்கவீனம் வஸ்திர வீனம் பாவம் காவிவஸ்திரம் சிரகசங்கை ஊமை மொட்டைத்தலை செவி அழுகை சடை மனிதரிடத்தில் விருப்பமில்லாமை கூன் அழுக்குமேனி விரிந்த மயிர்த்தலை சதாநித்திரை குஷ்டம் கொல்லை எண்ணெய்த்தலை மனேவியாகுலம் உன்மாதம் தரித்திரம் க்ஷயரோகம் இவைகளையுடையவர் முகத்தையும் பாம்பு பூனை சாம்பல் எருமை விளக்குமாறு உலக்கை முறம் என்னும் இவைகளையும் பார்த்தால் அன்றைக்குக் கெடுதியுண்டாகும். 1380

## சிலம்பம் மல்யுத்தம் குதிரையேற்றம் பாதநடை இவைகளால் உண்டாகுங் குணம்

சிலம்பமுதன் மல்யுத்தந் தேசிநடை கொள்ளிற்
பலம்பரவு மெய்யிருக்கும் பன்னத்—தலங்குபசி
யுண்டாங் கபவாத மோடுவலி சூலையும்போம்
பண்டா மலமிறங்கும் பார்.

இ-ள். காலையில் சிலம்பம் மல்யுத்தம் இவைகளைப் பழகுவதாலும், குதிரையேறிச் செல்லுதல் பாதசாரியாகி நடக்குதல் ஆகிய இச்செய்கைகளினாலும் வன்மைதளர்ந்த உடல் இறுகுதல் அதிக தீபனம் இவை உண்டாம். கபவாததொந்தமும் வாதசூலையும் பழய மலபந்தமும் நீங்கும். 1381

## மிதாமிதவார்த்தையின் குணம்

மிதவார்த்தைக் குள்ளறிவு மெய்ச்சுகமுங் குன்று
மதிவார்த்தைக் கவ்வுரைகெட் டப்போ—டுதிரமிவை
சுண்டும் பொங்குபித்தஞ் சூழுதலா லையவினை
யண்டும் பொங்கும் புன்னோய்.

இ-ள். மிதமாக வசனித்தால், உள் அறிவும் சரீர சவுக்கியம் உண்டாம் அதிகமாக வசனித்தால் முற்கூறிய அறிவும் சவுக்கியமும் கெடும் அன்றியும் சுரதாதுவும் ரத்ததாதுவுஞ்சுண்டும் இவை குறைவதினால் பித்தம் அதிகரிக்கும், அதனால் கபநோய் பிறக்கும், நீர்ரோகம் உண்டாம். 1382

## வெயிலால் உண்டாகுங் குணம்

வாதமொடு காந்திகெடு மாதுயரால் வேர்வைபல
மோதுபசி பித்தமிவை யுண்டாங்காண்—ஓதக்
குயிலி னிசைபழிக்குங் கோதின் மொழிமாதே
வெயிலி னுறுகுணத்தை விள்.

இ-ள். குயின்மொழிமாதே! வெயிலினால் வாதாதிக்கமும் அத கும் விலகும் வருத்தம் வியர்வை வன்னம் ஜடராக்கினி பித்த கோபம் இவை அதிகரிக்கும் என்க. 1383

காலை மாலை வெயிலால் உண்டாகுங் குணம்

காலைவெயிற் காய்ந்தார்க்குக் காணாப் பிணியனைத்தும்
பாலைவெயிற் போலப் பரவுங்காண்—மாலைவெயிற்
ாய்ந்தார்க் குறுபிணிமுற் காசறுமி லக்கணநூ
ாய்ந்தார்க் குறுவழுச்சொ லாம்.

இ-ள். உதயகால வெய்யிலில் காய்ந்தவர்களுடைய சரீரத்தில் ல்லாத வியாதிகளெல்லாம் பாலைநிலத்து வெய்யிலைப்போல் மாகப்பரவும் மாலைக்கால வெய்யிலில் காய்ந்தவர்களுக்குப் ந்திய பிணிகள் பழமையாகிய குற்றமற்ற இலக்கணநூல்களை ச்சிசெய்த புலவர்களுக்குக் காட்சியிற்பட்ட வழுச்சொற்கள் பதுபோல நீங்கிவிடும். 1384

நிழலால் உண்டாகுங் குணம்

மேனி தடிக்கும் விவர்ன்னவழ குண்டாகும்
போனவலி வாதமந்தம் பூரிக்கும்—தானே
வளர்ந்தேறுஞ் சோம்பல் மதிவதன மாதே
குளிர்ந்த நிழலின் குணம்.

இ-ள். மதிவதனமாதே! குளிர்ந்த நிழலில் இருப்பவர்களுக்கு தூலித்தலும் வேறுநிறமான அழகும் நீங்கிய கடுப்புவாதமும் மும் அசதியும் அதிகமாம். 1385

மழைமந்தாரத்தின் குணம்

நித்திரை காந்தி நெடியபசி தாகம்போ
மொத்த மகிழ்ச்சிகுளி ரூதையொடு—மெத்த
வழைவந் திடச்செயிரைப் பாதியநோ யுண்டா
மழைமந்தா ரத்தால் வழுத்து.

இ-ள். மழை மந்தாரத்தினால் தூக்கம் ஒளிவு தீபனம் தாகம் போம். சளிப்பு நடுக்கல் சீதவாயு சுவாசமுதலிய பிணிகளும் டாம். 1386

தீக்காய்வதின் குணம்

தீக்காயில் வாதமொடு சீத நிவாரணமா
மூக்கமிரு தாகமதி யுட்டினமு—நீக்கா

விரத்தபித்த நோயு மிரத்தக் கொதிப்பு
முரத்தெழும்பு மென்றே யுரை.

இ-ள். தீக்காய்தலினால் வாதக்கடுப்பு சீதம் விலகும். உபசர்க்க தாகம் சூடு இரத்தபித்தம் உதிரக்கொதிப்பு இவை அதிகரிக்கும்.

### வேள்விப்புகை சுடுகாட்டுப்புகை தயிலப்புகை இவைகளாலுண்டாகுங் குணம்

மகத்தூம மியாயுள் வளர்க்குஞ் சவஞ்சா
ரகத்தூம மத்தை யழிக்கு—மகத்தா
மருந்தயிலத் தூம மடர்வாத வன்னோய்
விருந்தயிலு மென்றே விதி.

இ-ள். வேள்விப் புகையானது தீர்க்காயுசு கொடுக்கும்; சுடுகாட்டுப் புகையானது உள்ள ஆயுளையும் கெடுக்கும்; மகா தயிலப் புகையானது வாதரோகத்தை விருந்தாக உண்டுவிடும் என்க. 1388

### மலசலம்விடுத்தலின் குணம்

இருமலங் கடங்கா வுறங்குங்காண் மூன்று
மிருமலங்கா டங்கணிலை யெய்து—மிருபச்
சமனுக் கினிசாருஞ் சாராநோய் கூட்டம்
நமனுக் கினிசாரா தாம்.

இ-ள். மலம் சலம் இரண்டையும் சிக்கலின்றிக் காலைமாலைக் காலங்கடோறும் விடுப்பவர்களிடத்து வாதபித்த கபங்கள் தத்தம் நிலைகளிலுலவும் ஜடராக்கினி அதிகரிக்கும் நோய்க்கூட்டம் ஒழியும் எமனுக்கிளையும் செல்லாவாம். 1389

### பல்விளக்குவதின் குணம்

துகளிலை காட்டமிவை தொட்டுத் துலக்கிற்
றுகளிலை காட்டாது தோடந்—துகளிலைகண்
மெய்துவரை யொத்திருக்கின் மேனாள் வரைமூரன்
மெய்துவரை யொத்திருக்கு மே.

இ-ள். தூள் இலை கொம்பு இவைகளால் பல் விளக்கினால் பல்லுகளுக் கூனமில்லை. வாதபித்த கபங்களால் பல்லினிடத்தும் அவ்வேரினிடத்தும் பிறக்கின்ற 23-ரோகங்களும் உண்டாகாது ஆனால் அந்த தூளும் இலையும் கொம்பும் இயல்பாகத்துவர் உள்ளதுகளாயிருந்தால் இறுதிநாள் வரைக்கும் பற்கள் மலைபோல் அசைவற் றுறுதியாகும். 1390

### பல்விளக்கத்தக்க கொம்புகள்

வேலுக்குப் பல்லிறுகும் வேம்புக்குப் பற்றுலங்கும்
பூலுக்குப் போகம் பொழியுங்கா—ஞாலுக்குத்
தண்டா மரையாளுஞ் சாருவளே நாயுருவி
கண்டால் வசீகரமாங் காண்.

இ-ள். கருவேல்குச்சியால் பற்களுக்குறுதியும், வேப்பங்குச்சி
ல் பற்களுக்கொளிவும், நீர்ப்பூலாக்குச்சிக்கு வீரிய விருத்தியும்,
லம் விழுதுக்கு லட்சுமிகடாட்சமும், நாயுருவிவேருக்கு முகவசீ
மும் உண்டாமென்க. 1391

### பல்விளக்கத்தகாத வஸ்துக்கள்

கல்லு மணலுங் கரியுடனே பாளைகளும்
வல்லதொரு வைக்கோலும் வைத்துநிதம்—பல்லதனைத்
தேய்த்திடுவா ராமாயிற் சேராளே சீதேவி
வாய்த்திடுவண் மூதேவி வந்து.

இ-ள். செங்கல்மா மணல்கரி தென்னம்பாளை வைக்கோல்
வைகளால் தினமும் பல்துலக்குவரிடத்தில் லட்சுமி நீங்கி மூதே
ர்வாள். 1392

---

## ஸ்நானவிதி வகை

### சுத்தஸ்நானத்தின் குணம்

சுத்தப் புனலாடத் தென்னமைச்ச லாயாசந்
தொத்தெரிச்சற் பாரிப்புத் தோன்றுவா—மெத்தனவுங்
காந்தி பலம்பசியுங் கட்டழகு முண்டாகு
மேந்துமுலை மாதே யியம்பு.

இ-ள். பெண்ணே! ஆறு மடுக்களில் அதிகாலையில் தினம் சுத்த
நானஞ்செய்பவர்க்கு தினவு சோர்வு வெப்பம் தேகக்கனதி இவை
ங்கும். தேஜசும் வன்மையும் தீபனமும் நல்லவனப்புமுண்டாம்.

### காலைமாலை குளியலின் குணம்

காலைக் குளிக்குக் கடும்பசியுண் டாநோய்போ
மாலைக் குளிக்கவிவை மத்திபமே—சோலையுடை
வாதநீர் சுத்தசலம் வன்னிநீ ராங்கால
தேசமுடற் பேதமுன்னிச் செப்பு.

இ-ள். மா நெல்லி முதலிய இலைகளை ஊறவைத்த ஜலத்தையா
து சுண்ணப்பொடி தூவிய பரிமள ஜலத்தையாவது அது கலவாத

சுத்த ஜலத்தையாவது வெந்நீரையாவது தங்கள் இருப்பிடங்களில் வைத்துக்கொண்டு காலதேச தேக பேதங்களையுணர்ந்து அவைகளுக்குப் பொருந்தியவாறே அதிகாலையில் ஸ்நானஞ்செய்பவர்களுக்கு ஜடராக்கினி புஷ்டியுண்டாம், சகல வியாதிகளும்போம். இவ்வண்ணம் மாலைக் காலங்களில் ஸ்நானஞ் செய்பவர்களுக்கு மேற்சொல்லிய குணங்கள் மத்திபமாம். 1394

## மஞ்சட்குளியலின் குணம்

மஞ்சட் குளிதனக்கு மாறுத்தூர்க் கந்தமொடு
விஞ்சுமுக சாட்டியமும் விட்டகலுந்—தொஞ்சலுறு
மைய மொழியு மடர்வியர்வுங் காணுது
வைய மதனால் வகுத்து.

இ-ள். பரிமள கலவையுள்ள மஞ்சள் காப்பிட்டுக்கொண்டு ஸ்நானஞ் செய்பவர்களுக்குக் கற்றுழை நாற்றமும் முகத்திலுண்டாகின்ற ரோகமும் சீரண சிலேஷ்மமும் வியர்வையும் நீங்குமென்க.

## பஞ்சகற்பத்தின் குணம்

மிருகமதம் பித்தமணி வேம்புகடு நெல்லி
கருகுறுதும் பாலரைத்துக் காய்ச்சி—யொருமிட
விங்கற்ப நோய்க்கு மிடமின்று மெஞ்ஞான்று
மைங்கற்ப மீதே யறி.

இ-ள். கஸ்தூரிமஞ்சள் மிளகு வேப்பம்வித்து கடுக்காய்த் தோல் நெல்லிப்பருப்பு இவைகளைக் கிரமப்பிரகாரம் காராம்பசுவின் பால்விட்டரைத்துக் கொதிக்கவைத்து ஒப்பற்ற சிரசிற்றேய்த்துக்கொண்டு ஸ்நானஞ்செய்தால் எந்நாளும் பிணிகளுக்குக் கிஞ்சித்தேனும் இடமில்லை. இதுவே பஞ்சகற்பவிதியென்று அறியக் கடவை. 1396

## அப்பியங்கனத்தின் குணம்

தலைமுழுக்காற் சென்னிமுழந் தாளிவைக்கு நீங்காப்
பலமுண்டாங் கேசம் படரும்—தலைநோய்போம்
பஞ்சேந் திரியம் பலத்துத் தெளிவையுறு
மெஞ்சாத் தொனியுமெழி மெண்.

இ-ள். அப்பியங்கனத்தால் மெய் வாய் கண் மூக்கு செவி என்கிற பஞ்சேந்திரியங்களும் பலத்துத்தெளிவுறும். சிரசு முழங்கால் கட்குப் பலமும் ரோம வளர்ச்சியும் நற்றொனியுமுண்டாம். தலைவலி விடும். 1397

## நித்திய அப்பியங்கனத்தின் குணம்

தினமப்பி யங்கனமே செய்யிற் சரும
மினுமினுக்குஞ் சோம்பல் விலகுந்—தனியான
ஐயமுத் தோட மருசிதந்த நோயொழியு
மெய்யுமிகப் புட்டியிடு மே.

இ-ள். தினமும் அப்பியங்கனம் செய்வதினால் தொக்கேந்திரியப் பளப்பும் தேகபுஷ்டியும் உண்டாம். சோருதல் தனிக்கபநோய் திரிதோஷதொந்தம் அரோசகம் உபகிருசரோகம் இவை நீங்கும்.

## பசுவினது நெய் முழுக்கின் குணம்

மைந்தர்முதன் முப்பருவ மாந்தர்க்கு மாமுடலின்
முந்தெரிச்ச லுன்மாத மூர்ச்சைகப—முந்திரத்த
பித்தம்மா தாகமொடு பேசுவிகா ரங்களுக்கு
முத்தம்மா னெய்முழுக் குன்.

இ-ள். பசுவினது நெய்முழுக்கு பால்ய குமாரவிருத்தர்களுக்கும் ஆம். ரசதாதுவின் கொதிப்பாற்கண்ட எரிச்சல் உன்மாதம் மூர்ச்சை மூளையைப்பற்றிய கபம் ரத்தபித்தம் விதாகம் இவைகளை நீக்கி நன்மையைத் தரும். 1399

## தைலாதிகளின் குணம்

எள்ளினெய்யு முக்கூட் டெணுநெய்யு மானெய்யும்
வில்லுதயி லாதியென விறுநெய்யு—முள்ளபடி
வாரந் தனக்கிருநாள் வைத்தாடி னேய்களதி
காரந் தனக்கிடமிற் காண்.

இ-ள். எண்ணெய் முக்கூட்டுநெய் பசுவின்நெய் உயர்ந்த தயிலம் முதலியவைகளை எட்டுத்தினத்திற்கு இரண்டுதரம் ஸ்நானம் செய்யில் சகல ரோகங்களும் தேகத்தை வருத்துதற்கு அதிகாரம் இன்றாம். 1400

## தைலம் தேய்க்கும் விதி - விருத்தம்

எடுத்தநற் றயிலநாசிக் கீரிரண் டாறுகாதுக்
கடுத்திடத் துளிவிட்டுச்சி யங்கந்தா ளடிகளிற்குக்
கொடுத்திடாத் தேய்த்தூறச்செய் திப்புறஞ்சிகைகாய் வெந்நீர்
விடுத்துட னுடிநீரும் வியர்ப்புமற் றிடப்புலத்தே.

இ-ள். நல்ல தயிலங்களை மூக்கில் 4-துளியும் காதில் 6-துளியும் விட்டு சிரசு உடம்பு பாதத்தினடி இவைகளிலிட்டுச் சுடுகை பிறவாமல் தேய்த்து ஊறவைத்துப் பின்பு சிகைக்காய் தேய்த்து வெந்நீரில் ஸ்நானஞ்செய்து அந்த நீரும் வியர்வையும் நீங்கும்படி உலர்த்தவும்.

## பாதாதிகளில் தைலமிடலின் குணம்

வெண்பா

பாதத் திடிற்கண்ணோய் பாழுமக் கிக்கிடினே
காதுற் றெழுநோய் கரந்துபோம்—காதுவிடில்
தலைநோ யகலுந் தலைக்கிடினே யெல்லா
நிலையா வறலாடி னெய்.

இ-ள். எண்ணெய் முதலிய தயிலங்களை உள்ளங்காலிற்றேய்க்கில் கண்ணைபற்றிய நோய்களும் கண்ணுக்கு கட்டினால் செவிரோகங்களும் செவியிற் குத்தினால் சிரஸ்தாபங்களும் சிரசில்தேய்த்து ஸ்நானஞ்செய்தால் சரீரத்திலுள்ள சகலரோகங்களும் நிவிர்த்தியாகும்.

## அரைப்பு வகை

சீக்கிராந் தூள்விரணை தேகர்க் கரைப்பாகு
மாக்கிலுப்பைக் கட்டிசொறி யாளர்க்குத்—தூக்குமணிப்
புங்கரைப்புஞ் சீய்க்காயும் போக்கடிக்கு மெண்ணெய்களைக்
கங்குலுறை கூந்தன்மின்னே காண்.

## இதுவுமது

பருப்பரைப்புக் கோடிநெய் பண்ணுமெண்ணெய் யாதிக்
கரைப்புச் சிகைக்காயு மாகும்—நெருப்பன்றி
நெய்யாதி பானெய்க்கு நீள்கரைப் பூண்டாதி
மெய்யாரைப் பாகுமே வின்.

இ-ள். மேகம்போன்ற கூந்தலாளே! விரணதேகிகட்கு உசிலந்தூளும் சொறிதினவை உடையவர்களுக்கு இலுப்பைப் பிண்ணாக்கும் எண்ணெய் முதலிய தயிலங்களுக்குப் பொன்னாங்காயும் சிகைக்காயும் பசுவின் நெய்க்குப் பச்சைப்பயறும் பன்றி காக்கை முதலிய நெய்கட்குக் காரைச்செடிகளின் தூளும் அரைப்பாகும். 1404

## ஸ்நானகாலவிதி - கலித்துறை

அயமானிவைக்கைம்பதற்றுளியாம் குளிர்க்கட்டமத்துள்
வயமாகனிக்குங்கோல்கேட்டுகநான்குவின்மானிரண்டே
பயமார்கடமர்ச்சத்திற்குந் திரிக்குட்பகர்திங்களி
னயமாந்துயிலங்களாடவேரோகமெய் நண்ணுவரே.

இ-ள். சித்திரை வைகாசிமாதங்களில் சூரியன் உதயமான ஐந்து நாழிகைக்குள்ளும் ஆனி ஆடிமாதங்களிலெட்டு நாழிகைக்குள்ளும் ஆவணி புரட்டாசி ஐப்பசி கார்த்திகை மாதங்களில் நாலு நாழிகைக்குள்ளும் மாசி பங்குனி மாதங்களில் மூன்று நாழிகைக்குள்ளும் பக்

குவ பரகமுள்ள தைல ஸ்நானஞ்செய்தால் அரோசிக தேகத்தைப் பொருந்துவார்கள் என்க. 1405

### க்ஷவரத்தின் குணம் - வெண்பா

தூக்கம் விரணந் தொடைவலிசூ லங்காசந்
தற்கால சாந்தஞ் சவரத்தால்—மிக்குடற்குச்
சாந்திமனப் பூரிப்புக் கண்ணொளிரு காமமுமாஞ்
சேர்ந்ததிங்க ளுக்கிரண்டாந் தேர்.

இ-ள். ஒரு மாதத்திற்கு இரண்டுதரஞ் செய்துகொள்ளுகிற க்ஷவரத்தினால் மனத்துயரம் புண் தொடைநோவு குத்தல் இருமல் ஆகிய இவைகள் உடனே கொஞ்ச சவுக்கியமாம். தேகவொளியும் மனச்சந்தோஷமும் விழிக்குப் பிரகாசமும் தாதுவிருத்தியும் உண்டாகும். 1406

---

## வஸ்திர வகை

### சாலுவையின் குணம்

சலதோடம் போகுந் தலைவலியு மேகு
மூலவிவரு நோய்வாத மோடும்—வலிய
வயிற்றுவலி போங்குளிரை மாறும் பனியைச்
சயித்ததொரு சாலுவைக்குத் தான்.

இ-ள். நல்ல சாலுவைக்கு நீரேற்றம் சிரோரோகம் வலிவாதம் வாதகுன்மம் குளிர் மூடுபனி இவையொழியும் என்க. 1407

### பட்டுவஸ்திரத்தின் பொதுக்குணம்

பித்த கபமகலும் பேரா மகிழ்ச்சியொடு
புத்தி மிகும்வியர்வை பூணுங்கா—ணித்தியமும்
காந்தியது முண்டாங் கனஞ்சேர்பட் டுத்துகிலுக்
கேந்துமுலை மாதே யியம்பு.

இ-ள். பெண்ணே! உயர்ந்த பட்டு வஸ்திரத்தினால் பயித்திய சிலேஷ்மம் விலகும், மனக்களிப்பு ஞானம் வியர்வு தேஜசு இவை உண்டாகும். 1408

### வெண்பட்டு வஸ்திரத்தின் குணம்

வெண்பட் டுடையால் விரிசுரமும் சீதமும்போம்
பண்பட்ட வாதம் பறக்குங்காண்—பெண்கிட்டுங்
காந்தியு முண்டாகுங் கதித்த வழகுமுண்டாங்
காந்தி|மதிமுகத்தாய் காண்.

இ-ள். பிரகாசமுள்ள சந்திரவதனியே! வெள்ளைப் பட்டுவஸ்திரத்தால் அதிசுரமும் குளிரும் வாதநோயும்போம் ஸ்திரீவசியமும் ஒளியும் வனப்பும் உண்டாம் என்க. 1409

## நாருமடியின் குணம்

சளியொடு நீரேற்றந் தங்கா தகலும்
வளியொடு சந்நியும்பின் வாங்கு—மளியினங்கள்
சேருமடிக் கூந்தன்மின்னே தேகமிகச் சுத்தியதாம்
நாருமடிக் கென்றே நவில்.

இ-ள். வண்டுகள் மொய்க்கும் வாசனை பொருந்திய கூந்தலையுடையவளே! நாருமடிக்குக் கபக்கட்டு சலதோஷம் குடல்விருத்தி வாதம் சந்நிபாதசுரம் ஆகிய இவைபோம் சரீரஞ் சுசிகரமாம். 1410

## வெள்ளை வஸ்திரத்தின் குணம்

ஓடுந் திரிதோட மோங்கா விசுப்பெருகும்
கூடுந் திருவழகுக் கூர்களிப்பு—நீடுமதி
போதமுறும் வெற்றிவரும் பூரிக்கு மெய்வியர்வு
பேதமறும் வெண்டுகிலுக் கே.

இ-ள். வெண் துகிலுக்கு வாதாதி தோஷங்களும் வியர்வும் விலகும் ஆயுசு விருத்தி லட்சுமி விலாசம் வனப்பு மகிழ்ச்சி அறிவு பலம் இவையுண்டாம். 1411

## சிவப்பு வஸ்திரத்தின் குணம்

ஏந்துபித்த முட்டின மெதிர்ந்த கருணசுரம்
வாந்தி யருசிகப மந்தமிவை—சேர்ந்திடுங்காற்
செய்ய கடுஞ்சிவப்புச் சேலையுடுத் தாலவைகள்
பைய வதிகரிக்கும் பார்.

இ-ள். அதிபயித்தியம் உட்சூடு கருணசுரம் வமனம் அரோசகம் சிலேஷ்மகோபம் அலசம் என்னுமிவைகளில் ஏதேனும் ஒரு ரோகம் அனுசரித்திருக்குங் காலத்தில் மிகவும் சிவந்த வஸ்திரம் உடுக்கலாகாது; உடுத்தால் மேற்சொல்லிய ரோகங்கள் விருத்தி யடையுமென்க. 1412

## மஞ்சள் வஸ்திரத்தின் குணம்

நீர்க்கடுப்புக் காசமொடு நீடு விடசுரமுந்
தீர்க்கநமை யும்வெப்பஞ் சேர்மலமும்—பார்க்குண்மிக
வஞ்சியே யேகுமஞ்ச ளாம்வத்தி ரம்புனைந்தால்
வஞ்சியே நன்றாய் வழுத்து.

இ-ள். பெண்ணே! மஞ்சள் வஸ்திரத்தினால் வாதநீர் சுருக்கு இருமல் விஷசுரம் மாருத்தினவு தனிச்சுரம் மலபந்தம் இவை நீங்கும். 1413

## பச்சை வஸ்திரத்தின் குணம்

மெய்யழலை யேகும் விழிக்குக் குளிர்ச்சியுண்டாம்
பொய்யி லுடலமெல்லாம் பூரிக்கு—மையமுறு
நச்சை நிகரு நளினவிழிப் பெண்ணமிர்தே
பச்சையுடை யின்குணத்தைப் பார்.

இ-ள். நஞ்சையொத்த கண்ணாளே! பச்சை வஸ்திரத்தினால் உட்சூடு சிலேத்தும தோஷமும் போம்; கண்ணுக்குக் குளிர்ச்சியும் தேகபூரிப்பும் உண்டாம் என்க. 1414

## கறுப்பு வஸ்திரத்தின் குணம்

காசமொடு வெப்புங் கறுத்த கொடுவிடமும்
பேசுமந் தாக்கினியும் பித்தமும்போ—நேச
வெறுப்புறு வின்பநய மெல்லியலே நீலக்
கறுப்புநிற மாந்துகிற்குக் காண்.

இ-ள். வெறுப்புறுவின்பமுடையாளே! கறுப்பு வஸ்திரத்திற்கு இருமல் சுரம் மகாசர்ப்பநஞ்சு அக்கினிமந்தம் பயித்தியமும் போம்.

## அழுக்கு வஸ்திரத்தின் குணம்

நோயடருங் காந்திகெடு நுண்ணறிவும் போயொளிக்குந்
தீயகுளிர் துக்கந் தினவுசங்கை—வாய்பேசக்
கூசுதலு முண்டாகுங் கோதாரு மாசுடைக்குப்
பேசுதலு மியாதிதற்குப் பின்பு.

இ-ள். அழுக்குவஸ்திரம் தரிப்பவருக்குப் பற்பல துன்பம் மிகுளிர் துயரம் நமைச்சல் கிரகசங்கை நாணம் ஆகியவைகள் உண்டாகும். சரீர ஒளியும் நுட்பமாகிய அறிவும் விலகும். 1416

## கம்பளத்தின் குணம்

பெரும்பா டசீரணங்கள் போராக் கிராணி
யருஞ்சூலை பேதி யகற்றுங்—கருஞ்சீழைப்
போக்குங் குளிர்வாடை பொல்லாப் பனிநீக்கிக்
காக்கும் பருங்கம் பளம்.

இ-ள். சீதளக்காட்டையும் மூடுபனியையும் விலக்கி உடலைக் காக்காநின்ற பெரிய கம்பளம் அசிர்க்கரம் அசீரணங்கள் திரிதோஷ கிரகணி சீல்பிடிப்பு அதிசாரம் கறுப்பாக ஒழுகுகிற சீழ் இவைபோம்.

### முண்டாசு கவசம் நடுக்கட்டு இவைகளின் குணம்

முண்டாசு வாதபித்த முன்பொழிக்கு மெய்க்கவச
முண்டாயிற் காந்திபுட்டி யுண்டாகுந்—திண்டாடு
பித்தமறுந் தீயாம் பிணைத்தநடுக் கட்டுக்குக்
கொற்றமுறு வீரியமாங் கூறு.

இ-ள். சிரசிற் கட்டுகின்ற முண்டாசு, வாதபித்த தொந்தத்தைப் போக்கும். கவசம் என்கிற அங்கியினால் தேக ஒளியும் புஷ்டியும் உதராக்கினியும் உண்டாவதுந் தவிரப் பித்தகோபமும் நீங்கும். நடுக்கட்டு என்கிற அரைக்கச்சைக்குப் பலம்பொருந்திய ஆண்மையுண்டாமென்க. 1418

### ஆபரணத்தின் குணம்

ஆபரணஞ் சூடி லரியலீ லாலயமா
மாபரண மெய்க்குமதி மங்கலங்காண்—சோபமனத்
துக்கத் தொடுநோய்போஞ் சொல்ல வசியமும்
மிக்குக் களிப்படரு மெய்.

இ-ள். ஆபரணம் பூணில், அது மகன்கூத்துக்கு ஓரிடமாயிருப்பதுந் தவிர சரீரத்துக்கு அழகியபரணம் என்கிற கவசமுமாகும். இதனால் மங்களகரமும் வசிகாமும் மகிழ்ச்சியும் உண்டாகும். சோர்வு மனத்துயரம் வியர்த்தி உன்மாதம் முதலிய ரோகமும் நிவர்த்தியாகும். 1419

---

# புசிப்பு வகை

### பசியின் குணம்

பசியா லழகாண்மை பூரிப்பு மோகம்
ருசியாவி வார்த்தையிவை சோரும்—பசியாலாந்
தாதினத்தின் சீரணமுந் தள்ளு கிழத்தனமு
மோதினத்தின் பேதமுமா மோர்.

இ-ள். பசியினால் வனப்பு பலம் மகிழ்ச்சி ஆசை ஆகாரம் உயிர் பேச்சு இவை நீங்கும். அன்னரசத்தால் வளருகின்ற சப்ததாதுக்களுக்கு விகற்பமும் மூப்புத்தன்மையும் சுற்றத்தார் விரோதமும் உண்டாகும். 1420

### போஜன காலவிதி

தன்மமிரண் டேயுண் தப்பிமுக்காற் கொள்ளினினண்
சின்மதலை காளமுற்றற் சேர்பருவ—நன்மூகூர்த்த
மொன்றுக்கு ணன்குக்கு ளோதுமிரண் டுக்குளுண்பர்
நன்றுக்குத் தீயோர் நயந்து.

இ-ள். தருமசாஸ்திரத்திற் கூறிய இரண்டுகால போஜனமே நலமாம், அதுதப்பி மூன்றுகால போஜனங் கொள்ளவேண்டுமானல் சூரியனுக் கிளம்பருவமாகிய உதயமுதல் $3\frac{3}{4}$-நாழிகைக்குள்ளும், காளைப் பருவமாகிய 15-நாழிகைக்குள்ளும், மூப்புப் பருவமாகிய இரவில் $7\frac{1}{4}$-நாழிகைக்குள்ளும் நலம் பெறுதற்குச் சாமாக்கினியை யுள்ளவர்கள் கொள்ளுவார் என்க. 1421

## காலாகாலபோஜன குணம்

மூன்றுநான் காறென் முகூர்த்தங் களின்முறையே
ஞான்றுணுண் ணு மந்த நறுமுணவே—தோன்றுடலுக்
கொக்குமித நோயாமு ரோகமுயிற் கந்தரஞ்செய்
விக்குமித மாராய்ந்து விள்,

இ-ள். சூரியனுதயமாகிய $11\frac{1}{4}$-நாழிகைக்குள் உண்கிற நல்ல உண்டி தேகத்திற்குப் பொருந்தும் 15-நாழிகை உணவுமிதம் என்கிற அளவிட்டுப் பிணிகளை விலக்கும் $22\frac{1}{2}$-நாழிகையில் புசிக்கில் ரோகசம்பவமாம். 30-நாழிகையிலருந்தும் அசனம் உயிருக்கு முடிவைத்தரும். இந்த 4-முதல் 2-ம் காலபோஜனமும் மற்றவை அகால போஜனமாம். 1422

## போஜனம்செய் விதி

ஆதி யினிப்புநடு வாம்பிரநீ ரூப்பொடுசா
காதியுறைப் பப்பா லந்தத்திற்—கோதிருமாப்
பாந்தியும் பூறியகா யாதிவகை சேருணவை
மாந்ததிச கத்தையுறு வாய்.

இ-ள். போஜன முதலிய மதுரவஸ்துவும் மத்தியில் புளிப்பு உப்பு உறைப்பு இலைக்கறிகளும், முடிவில் துவர்ப்புச் சம்பந்தமான புளித்ததயிர் ஊறுகாய் நீ உண்ணக்கடவை; உண்ணில் இன்பம் உண்டாம். 1423

## போஜன அளவைக்கூறல் - கலிநிலைத்துறை

முக்காலுணவன்றி யெத்தேகிகட்கு முழுவுணவி
லக்காரணமன்ன ராகாதிகூடி யரைதிற்பால்
சிக்காவமுதம் புதக்கிரங்காலுண்டி சேடமுறை
வைக்காவிடிலுண்டி வேகாதனலும் வளியுமின்றே.

இ-ள். சகல தேகிகளுக்கு $\frac{3}{4}$-வயிற்று உணவேயன்றி முழு உணவு இல்லை; அதன் விவரம் அன்னமுங் கறிகளுங்கூடி $\frac{1}{2}$-பால் மோர் சலம்கூடி $\frac{1}{4}$-ஆக $\frac{3}{4}$-வயிற்றுணவேயாம். இன்னும் $\frac{1}{4}$-வயிறு இடைவெளிவைத்ததற்குக் காரணம் சமானவாய்வும் அனல் பித்தமும் சொலித்து அவ்வுண்டியைப் பஸ்மஞ் செய்வதற்கேயாம் என்க.

### புசித்தபுசிப்பின் பிரிவுகூறல் - வெண்பா

பிலத்தமரு முண்டுப் பிரிவை யுருக்கிற்
பலத்த கிருமிகட்கோர் பங்கு—மலத்திற்கோர்
பங்குமாய் வில்லனற்கோர் பங்கு முடலினுக்கோர்
பங்குமாய்த் தங்குமுன்னிப் பார்.

இ-ள். துவாரத்தையுடைய தீனிப்பையிற்றங்கிய உணவானது 4-பிரிவையுறும். அவையாவன: ஒருபங்கு கிருமிகளுக்கும் ஒரு பங்கு மலத்திற்கும் ஒருபங்கு ஜடராக்கினிக்கும் ஒருபங்கு தேகத்திற்காம். 1425

### புசித்த அன்னசாரச் செய்கைகூறல் - விருத்தம்

ஒருநாளுண்ணனவிரதமிரத்தாது வைநனைத்தங்கூறிநிற்கு
மிருநாளுண்டிடினஃதங் கிரத்தாதுவிலேறுமிவ்வாறேபின்
வருநாளுண்மெணழுநாலு மாழிநகுதெழுதாதுவையம்வளர்த்தே
தருநாளுஞ்சோராதவலிவுதனை யெட்டாநாட்சடத்தினுக்கே.

இ-ள். ஒருநாளுண்ட உணவில் நின்றும் பிரிவுற்ற அன்னரசமானது அன்றைக்கு ரசதாதுவை நனைத்து ஊறித் தங்கும் 2-ம் நாள் உண்ட அன்னரசம் அந்த ரசதாதுவிலேற முன்பு ஊறிநின்ற ரசம் ரத்ததாதுவிற்பாயும், இவ்வாறே 3-ம் நாள் மாமிசதாதுவிலும் 4-ம் நாள் மேதோதாதுவிலும் 7-ம் நாள் சுக்கிலதாதுவிலுமாகச் சென்று அத்தாதுக்களை விருத்தியடையச்செய்து 8-ம் நாள் தேகத்திற்குக் குன்றாத வன்மையைக் கொடுக்கும். 1426

---

## உண்கல வகை

### தங்கக்கலத்தின் குணம் - வெண்பா

தங்கக் கலத்திலுண்ணத் தாதுவிர்த்தி யுடம்பசியும்
பொங்க மிகுதிடமும் பூரிப்பு—மங்குறையும்
பித்தசோ பைப்பிணியிப் பேருலகை விட்டகலுஞ்
சுத்தரசத் தீங்கினியே சொல்.

இ-ள். தங்கப்பாத்திரத்திற் புசிக்கில் சுக்கிலவிருத்தியும் சமாக்கினியும் வன்மையும் உற்சாகமும் உண்டாம். பித்தசோகை நீங்கும்.

### வெள்ளிக்கலத்தின் குணம்

வெள்ளிக் கலத்திலுண்ண வீறி வருகசமுந்
துள்ளியெழு பித்தமும்போஞ் சொல்லவோ—விள்ளிய

காந்தியுண்டா நாளுங் களிப்புண்டாந் தேகத்திற்
சேர்ந்துவரும் வாதமுண்டாஞ் செப்பு.

இ-ள். வெள்ளிப்பாத்திரத்தில் அருந்த சிலேத்மகோபம் பித்த கோபமும் நீங்கும், தேஜசு மகிழ்ச்சி வாதாதிக்கமும் உண்டாம்.

## செம்புக்கலத்தின் குணம்

செம்பு கலத்திலுண்ணத் தேகா அரோக்கியமாம்
பம்பிரத்த தோடம் பறக்குங்கா—ணம்புவியி
லண்ணியிடுங் காந்தி யணங்கே விழியொளியாம்
புண்ணியமு நண்ணும் புகல்.

இ-ள். தேவமகளிரையொத்த பெண்ணே! செப்புப் பாத்திரத்திலுண்ணில் சரீரசவுக்கியம் தேஜசு கண்ணுக்கொளிவு சுகிர்தம் இவையுண்டாம். ரத்த பித்தரோகம் விலகும். 1429

## வெண்கலத்தின் குணம்

தாம்பரத்தில் வெள்ளீயந் தான்கலக்க வெண்கலமென்
றும்பெயர் பெறுங்கலத்து ளன்னமுண்ணிற்—றேம்புகின்ற
சோபமொடு ரத்தபித்தந் தோன்றவழி யாதனங்கள்
சாபமெனச் சொன்னுதலே சாற்று.

இ-ள். மதன்வில்லனைய புருவத்தாளே! வெண்கலப் பாத்திரத்திற் புசிக்கச் சோர்வும் உதிரபித்தமும் போம் என்க. 1430

## தாம்பரம், வெள்ளி, கலப்பு வெண்கலம் இக்கலங்களின் குணம் - விருத்தம்

தக்கதாம்பரத்தின்வட்டிற் றூனதிரத்தபித்த
மெயக்குறுதகற்றும்வெள்ளி விலக்கிடுமையந்தன்னை
யொக்கவேகலப்புவட்டி லுறுதிரிதோடம்போக்குங்
கக்கியவுதிரமேறுங் கனத்தவெண்கலத்திற்கென்னே.

இ-ள். செப்புக்கலம் சுதபித்தத்தை விலக்கும், வெள்ளிக் கிண்ணி கபத்துன்பத்தை நீக்கும், கலப்புலோகவட்டில் திரி தோஷங்களை மாற்றும் வெண்கல உண்கலத்தினால் குறைந்த ரத்த தாதுவிருத்தி செய்யும். 1431

## உண்கலத்தில் இவைகள் முக்கியமெனல் - வெண்பா

வாழைவெள்ளைப் பன்னநன்று மற்றிலைகண் மத்திமமா
மாவைவெள்ளி வெண்கலமு மாநன்றாம்—கோழை
கயப்பாண்ட நோய்போகுங் கருதினிவைக் கெல்லாங்
கயப்பாண்ட மேலசனங் கொள்.

இ-ள். மனோற்சாக போஜனத்திற்கு வெள்வாழையிலை நன்று, மற்றைய இலைகள் மத்திமமாம். தங்கம் வெள்ளி வெண்கலம் இவைகளாற் செய்த உண்கலங்கள் மிகவு நலமாம். இவைகளைவிட மட்கலமே சிறந்தது. இதில் புசிக்கில், க்ஷயமும் பாண்டுரோகத்தாற் பிறந்த நீர்ச்சுரப்பும் விலகும் என்க. 1432

## வாழையிலையின் குணம்

தொக்கி னுறுமின்னுஞ் சுகபோ கமுமன்னு
மக்கினி மந்தம் மபலமொடு—திக்கிடுகால்
பாழை யிலைப்புமறும் பன்னுபித்த முஞ்சமனும்
வாழையிலைக் குணரு வாய்.

இ-ள். வாழையிலைக்கு சருமதாதுவிற் பளபளப்பும் சுகபோகங் களும் பொருந்தும்; மந்தாக்கினி நிர்மலம் க்ஷீணவாதம் சிலேத்ம அரோகம் இவை நீங்கும். பித்தகோப சாந்தமாம் என்க. 1433

## பலா இலையின் குணம்

பலாவிலையி லுண்ணப் பதுங்கிநின்ற பித்தங்
குலாவி யெழும்பிக் குதிக்குந்—நிலாவிவரு
குன்ம மகோதரநோய் காணு தகலாத
குன்ம மகலுங் குறி.

இ-ள். பலா இலையில் உண்டால் அடங்கிய பித்தமும் அதிகரிக் கும் ஊழால்வந்த பெருவயிறும் குன்மரோகமும் நீங்கும். 1434

## பாலுள்ள மரத்திலைகளின் குணம்

பாலிருக் கின்றமரப் பன்னங் களிலுண்டாற்
சோவிருக்கச் செய்வாதங் கோழைகபங்—கால
வசிர்க்குபித்தந் தாகமிவை யுண்டா தகலு
முசிக்குமதி சீதளமா மோர்.

இ-ள். பாலுள்ள மரத்தின் இலைகளில் உண்ணில் பங்குவாதம் க்ஷயம் அசிர்க்கரம் பயித்தியம் தாகம் இவை நீங்கும். அதிக குளிர்ச்சியுண்டாம். 1435

## தாமரையிலையின் குணம்

தாமரைப்பன் னத்திலுண்டாற் றுங்கரிய வுட்டிணமாம்
நாமவா தஞ்சினந்து நண்ணுங்காண்—தாமமுறு
வக்கினிமந் தங்களுண்டா மன்றே மலர்த்திருவத்
திக்கினி விராளெனவே தேர்.

இ-ள். தாமரையிலையிற் புசிக்கில் வெப்பமும் வாதரோகமும் மந்தாக்கினியும் உண்டாகும். சம்பத்து நீங்கிவிடும் என்க. 1436

### கரபாத்திரத்தின் குணம்

கைப்பாத் திரத்திற் கலந்தன்னங் கொள்ளுங்கால்
வைப்பா மனச்சேட்டை மாறுங்கா—ணிப்பாற்
சருவ கிலேசமும்போஞ் சாற்றவயின் றூலின்னும்
பெருவருசி நோயும்போம் பேசு.

இ-ள். சகல கறிகளுங்கலந்த அன்னத்தைக் கைப்பாத்திரத்தி லுண்ண மனச்சேஷ்டை மனோதுக்கம் பல அரோசகம் போம். 1437

## சோற்றின் வகை

### அதிசுடுகையன்னத்தின் குணம்

அதிசுடுகை யன்ன மரத்தபித் தந்தாகம்
பிதிரேறு சித்தப் பிரமை—மதரோக
மென்றுரைக்கு நோய்கட் கிடங்கொடுக்குந் தப்பாது
குன்றுரைக்கும் பூண்முலையே கூறு.

இ-ள். ஆபரணத்தை யணிந்த குன்றனைய முலைகளையுடையவளே! நித்தியமும் புசிக்கின்ற மிகுசுடுகை அன்னமானது உதிரபித்தம் தாகபிரமை மதரோகம் இவைகளை யுண்டாக்கும் என்க. 1438

### அற்பச்சுடுகையன்னத்தின் குணம்

அற்பச்சூட் டன்னமவா தாதிகளாற் பீனசத்தா
லுற்பவித்த நோயை யொழித்துடற்கு—நற்பலத்தைச்
செய்யு மருசிதனைத் தீர்க்குஞ்சர் வோத்தகம்
பெய்யும்வளைக் கைமாதே பேசு.

இ-ள். வளையலணிந்த கரங்களையுடையவளே! கொஞ்சஞ் சுடுகையுள்ள அன்னமானது உத்தமத்தி லுத்தமமாம். அது வாதபித்த கபங்களாலும் பீனசத்தாலும் விளைகின்ற நோயையும் அரோசகத்தையும் நீக்கும், சரீரத்துக்கு வண்மையைத் தரும் என்க. 1439

### புழுங்கலரிசியன்னத்தின் குணம்

தென்புவி நாளுஞ் செழித்துவள ருஞ்சாலி
வன்பு புழுங்கல் வடிசாத—முன்புணவே
வாயுவிலே யத்தால் வலியும்வன் ஞேயுமின்
நோயுடை யார்க்காகு நுவல்.

இ-ள். புழுங்கலரிசி அன்னத்தைப் புசிக்கில், வாத கோபமும் பலமும் வலி ரோகங்களும் இல்லை, இது நோயாளருக்குதவும். 1440

## பச்சையரிசியன்னத்தின் குணம்

பச்சரிசிச் சோறு பலங்கொடுக்கும் வாயுவென்பார்
நிச்சயமா கப்பித்தை நீக்குங்கா—ணச்சமற
மூத்திரக்கி ரிச்சரத்தை முன்பொழிக்குஞ் சேய்க்குமந்த
மாத்திரமுண் டாகும் வழுத்து.

இ-ள். பச்சரிசியன்னமானது பலத்தையும் குழந்தைகளுக்கு மாந்தத்தையும் உண்டாக்கும்; பித்த கோபத்தையுங் கிரிச்சரத்தையும் நீக்கும். இதில் வாயுவுண்டென்பார். 1441

## நன்றாகச் சமையாத அன்னத்தின் குணம்

நன்றாச் சமையா நடுத்தண் டுலச்சோறு
தின்றால் மலஜலமுஞ் சிக்குமென்ப—தொன்றேகேண்
மற்றைநா ளுஞ்செரிக்க மாட்டா ததுவுடலிற்
சற்றும்வியா பிக்காது சாற்று.

இ-ள். நட்டரிசி யன்னத்தைப் புசிக்கில் மலசலம் சிக்குவதுந் தவிர அது மறுநாளும் சீரண சக்தி யாகாது. அவ்வன்னரசம் உடலில் பரவாது. 1442

## குழைந்த அன்னத்தின் குணம்

குழைந்த சோறுண்ணிற் கொடுமேகங் காச
மருந்து மந்தாக்கினியு மாறும்—விழுந்திடச்செய்
துர்ப்பலமும் பீநசமுந் தோன்று மரிவையர்க்குட்
பொற்படரு மாதே புகல்.

இ-ள். மாதருக்குள் சிறந்த மாதே! அளிந்த அன்னத்தைப் புசிக்கில் வாத பிரமேகம் இருமல் அக்கினிமந்தம் துர்ப்பலம் பீநசம் இவை உண்டாகும் என்க. 1443

## சுத்த அன்னத்தின் குணம்

சுத்தவன்னங் குற்றமிலேத் தோஷங் களையகற்று
முத்தாத்தே கிக்குமது முக்கியங்காண்—பத்தியத்திற்
காகுமது முப்பிணிக்கு மாமலிய சனங்கலந்து
ணேகுமுண் ணேயெல்லா மிரங்கி.

இ-ள். குற்றம் நீக்கிய அன்னத்தை நற்கறிகளோடுண்ணில் அது வாத பித்த சிலேத்மம் என்னும் மூவித ரோகங்களுக்கும் முக்கியமாக உதவும். பத்தியத்திற்கும் வாதாதி மூவித ரோகங்களுக்கும் ஆகும். அன்றியும் குடல் நோய்கள் முழுமையும் வில

தும். குற்றமில்லை என்க. சுத்தன்னம் என்பது, பழைய அரிசியைத் தவிடு நொய் முதலியவை போம்படி நன்றாகத் தீட்டி முழு அரிசியாக ஆராய்ந்து எடுத்து இள வெந்நீராற் கழுவி வஸ்திரத்திற் கொட்டிச் சற்றே ஆறவைத்து ஒரு பாண்டத்தில் அரிசிக்கு மூன்று பங்கு சலம்விட்டு அடுப்பேற்றி அது நுரைகட்டிக் கொதிக்கும் பொழுது அந்த அரிசியை அதிற் போட்டு முக்காற் பாகமாக வெந்தவுடன் கரண்டியால் துழாவி வடித்துக்கொண்டு மறுபடியும் தணலில் வைத்துப் பக்குவப்படுத்தி இறக்கிக் கொள்வதாம். 1444

## பொங்கல் அன்னத்தின் குணம்

பொங்கலெல்லா மந்தம் பொருமலெனு நோய்விளக்கு
மங்கமெலாம் வாதமுண் டாக்குமன—லங்கொடுக்கு
சம்பாநெற் பச்சரிசித் தன்பொங்கற் றுதுவிர்த்தி
யென்பார் பெரியோர்க ளெண்.

இ-ள். பச்சரிசிப் பொங்கல் அன்னமெல்லாம் சகல அலசரோகம் வயிற்றுப்பிசம் அங்கலசன வாதம் வெப்பம் இவைகளை உண்டாக்கும். சம்பாப் பச்சரிசிப் பொங்கல் அன்னம் விந்துவை வளர்ப்பிக்கும். 1445

## பாலும் அன்னமும் புசித்தலின் குணம்

பாலுமன்ன மும்புசிக்கிற் பன்னுபித்தந் தாகமரு
மேலுமற்ப மந்தமென்பார் மேனியிடு—ஞாலமதி
லப்பொழுதே தாதுவிர்த்தி யாகுஞ் சிசுவாதி
யெப்பருவத் தார்க்குமா மெண்.

இ-ள். பாலுஞ் சோறும் உண்டால் பித்த கோபமும் தாகமும் விலகும். கொஞ்ச மந்தம் தேகபுஷ்டி உடனே வீரியவிருத்தி இவைகளுண்டாகும். இது பால கவுமார விருத்தர் பரியந்த முதவும். 1446

## பசும்பாலின் பத்தியம்

ஆறின் முதனடுவா காவாப்பா லைவளர்க்கு
பீறின் சுவையிரண்டேற் றென்பர்கார்ப்—பூறினுறுங்
கண்டொக்கு முண்ணெண் களையொழிபாத் தோடருந்தப்
பண்டாக்கு முண்ணி பகர்.

இ-ள். பசுவின் பாலைச் சாப்பிட வேண்டுமானால் புளிப்பு துவர்ப்பு உவர்ப்பு கைப்பு கார்ப்பு இனிப்பு என்னும் 6-சுவையில் 1-வதும் 2-வதுமாகிய 4-சுவையுள்ள வஸ்துக்கள் எதனையும் அனுபானமாகச் சேர்த்துக்கொண்டு உண்ண லாகாது. சுக்கிலத்தை விருத்தி செய்யும்படியான கடைசியிற் சொல்லிய 2-சுவையுள்ள வஸ்துக்களை அனுபானமாகச் சேர்த்துக்கொண்டு உண்ணச் சிலர்

# பதார்த்த வகை

## சமைத்த துவரம்பருப்பின் குணம்

தண்ணக் குறிஞ்சித் தலத்தா டகிப்பிளப்பை
வண்ணச் சுடற்குள் வைத்தாக்கி—யுண்ணற்
கடிக்கும் பசுவின்று மாச்சியத்தோ டுண்ணிற்
பிடிக்குப் பிடிசதையாம் பேசு.

இ-ள். சீதளமுள்ள மலைநாட்டுத் துவரம்பருப்பை வெந்நீரி லிட்டுச் சமைத்துப் போஜனமுதலிய பசுவின்நெய்யுடன் அன்னத் திற் கலந்துண்ணில் ஒருபிடி அன்னத்திற்கு ஒருபிடி சதைவளரும் எனக் குறிஞ்சி நிலவஸ்துக்கள் மிகுவன்மையுள்ளவை யாதலால் அந்நிலத் துவரையை விசேஷமாக கூறினர். 1453

## நெய்சேர்த் துண்பதின் குணம்

பருப்பிலெழு வெப்பும் பருங்குடன் முறைப்புந்
திருப்புறு முன்மலத்தின் சிக்குந்—தரிப்புறு
மெய்க்குள்ள காந்தி விலா தழகுறுநன்
னெய்க்குள்ள வுண்மை நெறி.

இதுவுமது

புத்திமிகுஞ் சிக்குவைநோய் போயொழியு நேத்திரத்தின்
மெத்த வொளியும் விளங்குங்காண்—பித்தமொடு
வாதகப மாறு வறட்சியெல்லா நீக்கும்
கோதின்று நெய்யைக் குடி.

இ-ள். போஜன ஆரம்பத்தில் நெய்சேர்த்துண்பதில் துவரம் பருப்பினது உஷ்ணம் குடல் விகுத்தல் பழைய மலபந்தம் சிக்வா கண்டரோகம் பித்தாதிக்கம் வாதகபதோஷம் நீங்காச்சொறி இவை நீங்கும், அதிஞாபகம் தேஜசு வனப்பு கண்ணுக்கு ஒளியுண்டாம் என்க. 1455

## பொரியலின் பேதகுணம்

கார மிகுபொரியல் காயந்தனிற் கபத்தைச்
சேர வுறவாக்குந் திண்ணமே—சோரப்
புளியிட் டிடும்பொரியல் போர்மந்தத் தோடு
வளியிட் டிடுமனத்துள் வை.

இ-ள். உறைப்பு சுவையதிகரித்த பொரியல் கபத்தைத்தரும், புளிச்சுவை மிகுந்த பொரியல் அலசுநோயையும் வாதபிணியையும் விளைக்கும். 1456

### வறலின்பேத குணம்

இளவறுப்பான் மந்த மெழுப்புங் கருக
லுளவறுப் பான்முத்தோட மோங்கு—மனவருத்த
மையவறற் பிணிக்கும் வாதமடு மாயினஃ
தையவறற் பிணிக்கு மாம்.

இ-ள். இளவறுப்பாக வறுத்த பதார்த்தத்தினால் மந்தமும் கருகும்படி வறுக்கில் வாதபித்த கபதோஷங்களும் உண்டாகும். இவற்றில் இரண்டிற்கும் நடுத்தரமாக வறுத்தகறிகள் தொந்தவாதத்தை நீக்குவதுமன்றி கபசம்மந்தமான சகல தோஷங்களுக்கும் 1457
உதவும்.

### பச்சடியின்பேத குணம்

புளிப்பான பச்சடியாற் போம்பித்தங் கார்த்தல்
வுளைப்பான பச்சடிக்கை வாத—மிளைக்கு
மினித்தபச்ச டிக்கருகி யேகுந் துவராற்
சனித்தபச்ச டிக்குறும்வா தம்.

இ-ள். புளிச்சுவையுள்ள பச்சடியால் பித்தபிரகோபமும் உறைப்புப் பச்சடியால் சிலேஷ்மவாதம், இனிப்புப் பச்சடியால் ஆரோசகமும் நீங்கும், துவர்ப்புள்ள பச்சடியால் வாதாதிக்கம் உண்டாம்.

### துவையலின்பேத குணம்

புளிப்பா மிலைத்துவையல் போக்கும்பித் தத்தைப்
புளிப்பா லமைதுவையல் பொல்லா—புளிப்பில்
வெறுந்துவையா னன்றதற்கு மிக்க வுறைப்பிட்ட
நறுந்துவைய னன்றினு நன்று.

இ-ள். புளியாரை முதலிய புளிப்பிலைத்துவையல் பித்தகோபத்தைநீக்கும். வெறும்புளித்துவையல் ரத்தத்தை முறிப்பதால் நன்மையன்று புளிசேராத்துவையல் நலமாம், அதிககாரம் சேர்ந்த நல்ல துவையல் பசியை எழுப்புவதால் உத்தமத்தில் உத்தமமாம் என்க.

### குழம்பின்பேத குணம்

சொல்லவுறைக் குங்குழம்பாற் றோன்று தனிலமஃ
தில்லையெனில் வாத மிருக்குங்காண்—தொல்லுலகி
னீர்த்தகா ரக்குழம்பா னீடுமுத் தோடமுன்பின்
பார்த்தோடு மென்றே பகர்.

இ-ள். உறைப்புள்ள கொழம்பால், வாததோஷம் சனிக்காவாம் அவ்வாறில்லாக்குழம்பால் வாதசின்னம் உண்டாம், காரத்தோடும் நீர்க்கவைத்த குழம்பால் வாதாதி முத்தோஷங்களும் விலகும்.

## துவரம்பருப்பின் ரசகுணம் - கலிப்பா

நவரைவாழைக்கனி பலவின்கனி
நல்லமாங்கனி பாலொடுநெய்க்கறி
கவரிலப்பொழுதே மந்தமாம்பரி
காரங்கேட்கும் பயித்தியக்காரரே
யெவருங்காண்க வறைதருதுமன்னத்தி
லிட்டுணுங்கரி தன்னுடன்கூடவே
துவரைநீர்மிளகுள்ளி யிட்டுக்கொளீர்
துவட்டவாதமுந் துஞ்சிடுமுண்மையே.

இ-ள். வாழை பலா மா என்கிற முப்பழங்களையும் பால் நெய்க் கறிகளையும் மிதமின்றிப் புசிக்கில் உடனே அக்கினிமந்தம் பிறக்கும், அதை நீக்குதற்கு வகையறியாது சிகிச்சை வினவுகின்ற பித்தர்களே கேளுங்கள், துவரம்பருப்புக் கட்டிறுத்த சலத்தில் மிளகு வெள்ளைப்பூண்டு முதலிய சம்பாரங்கள் சேர்த்து ரசம்வைத்து அதை நற்கறிகள் சேர்ந்த உணவுடன் சேர்த்துண்ணில் மேற்கூறிய அக்கினி மந்தமும் வாதபிரகோபமும் நீங்கும். 1461

## காடைச்சாற்றின் குணம் - விருத்தம்

பொற்றொடிமாதேகண்ணின் புண்ணொடுபிணியல்லாம்போம்
வற்றியவுடற்பருக்கும் வாதபித்தகையுமேகுஞ்
சுற்றியகிராணிகுன்மஞ் சுரம்பலசுவாசகாச
மற்றிடுங்காடைச்சாற்றா லாயியும்வளருங்காணே.

இ-ள். பொன்னாலாகிய வளையல்களை யணிந்த பெண்ணே காடைச்சாற்றினால் போதகிவர்த்தம் முதலிய சிலநேத்திர நோய்கள் சந்நிபாததோஷங்கள் கிரகணி வயிற்றுநோய் சுரம் சுவாசம் காசம் இவை போகும். இளைத்தவுடம்பு பருக்கும் ஆயுளும் வளரும் என்க.

## கொள்ளுச்சாற்றின் குணம் - விருத்தம்

வற்றியவுடம்புதூணும் வாதமும்பித்துங்குக்கி
சுற்றியகிராணிகுன்மஞ் சுரம்பலசுவாசகாச
முற்றடர்கண்ணின்புண்ணோ டுறுபிணியொழியும்வெப்பைப்
பெற்றிடுகரணச்சாற்றாற் பெருஞ்சலதோடம்போமே.

இ-ள். சூடுள்ள கொள்ளுச்சாற்றால் சுட்கியதேகம் பருப்பதுமன்றி ஸ்தம்பம்போல் உரக்கும், வாததோஷ பித்தகோபம் கிரகணி குன்மம் ருட்டை சுவாசம் காசம் விழியைப்பற்றிய விரண முதலிய சிலநோய்கள் ஜலதோஷம் ஆகிய இவை நீங்கும். கரணம்-கொள்.

## போஜன முடிவில் தயிர், உப்பு சேருவதின் குணம்

வெண்பா

மூத்ததயி ருப்புமுண்ண முண்பிறங்கு வத்துகளின்
கோத்ததிரி தோடங் குடிவிலகும்—பூர்த்தியா
யுண்டபிற குற்றநடு வுற்றவையெல் லாப்புழுக்கம்
கொண்டாடச் சீரணமா கும்.

இ-ள். போஜன அந்தத்தில் புளித்த தயிரும் லவணமும் கூட்டியுண்ண அத்தயிருக்கும் நெய்க்கும் நடுவாகத் தீனிப்பையி லிறங்கியிருக்கிற சகல பதார்த்தங் கூடிய உண்டியிலுள்ள திரி தோஷங்கள் நீங்குவதுந்தவிர அவ்வுண்டி புழுக்கங்கொண்டு நெருக்க முற்றச் சீரணமாகும். 1464

## மோரும் அன்னமும் புசிப்பதின் குணம்

மோருமன்ன மும்புசிக்கின் மூளும் பசிமேக
நீருங் குதரங் குரமுநீள் பாண்டும்—போராத
தாகங் கிராணி சலமேறு வீக்கமும்போம்
மாக விரணத்தில்விலக் கம்.

இ-ள். மோரும் அன்னமும் கலந்து புசிக்கில் ஜடராக்கினி அதி கரிப்பதுமன்றிப் பித்த மேக மூத்திரம் முளைமூலம் பாண்டு தாரம் கிரகணி சிலேத்மசோபை இவை விலகும். இரணங்களுக்கு ஆகாது.

## ஊறுகாயின் குணம்

ஊறுகா யெல்லா முதராக் கினிவளர்க்கும்
வீறருசி யென்பதையும் வெல்லுங்காண்—கூறுகின்ற
வையமொடு பித்த வனிலத்தை யுந்தொலைக்குஞ்
செய்யவடி வேற்கண்ணாய் செப்பு.

இ-ள். வேற்கண் மாதே! போசனத்துடன் கூட்டிப் புசிக் கிற நெல்லிக்காய் முதலிய பற்பல ஊறுகாய்களும் தீபாக்கினியை வளர்க்கும் அரோசகம் சிலேத்ம வயித்திய தொந்தம் வாத தோஷம் இவைகளை ஒழிக்கும். 1466

## உண்டபின் வெந்நீரருந்தலின் குணம்

உண்டபின் வெந்நீ ரொருதரமாக் கொண்டக்கால்
மிண்டுசுரம் வாதம் விதாகமந்த—மண்டுரகத்
தார்ந்த பொருமலும்போ மாயுளுண்டா மாதர்தமைச்
சேர்ந்தணையத் தாதுவுமாந் தேர்.

இ-ள். போசனந்தத்தில் திருப்தியாகும்படி வெந்நீரை யொரு தரமாக உண்டால் ருட்சை வாதாதிக்கம் விதாகம் அசலம் வயிற்றுப் பிசம் ஆகியவை போம். ஆயுசும் சுக்கிலமும் விருத்தியாகும். 1467

### நீரருந்துங் கிரமம்

தண்ணீரண் ணாந்துண்டாற் சாருஞ் செவிமந்தங்
கண்ணை குனிந்துண்டாற் காசமுண்டாங்—தண்ணீர்
குடிக்கவென்றாற் பாத்திரத்தைக் கோதறவே வாயாற்
கடித்தருந்தத் துன்பமறுங் காண்.

இ-ள். நீரை அண்ணாந்துண்ணில் பாதிரியவாதமும் குனிந்தருந்தில் இருமலும் உண்டாம். பாத்திரத்தை வாயாற் கடித்து அருந்தில் ஒரு ரோகமுமில்லை. 1468

---

## கஞ்சி வகை

### பால் கஞ்சி, பொரி சேர்ந்த கஞ்சி, சுடுகை கஞ்சி இவைகளின் குணம்—விருத்தம்

சுரைதருபாலில்வெந்த சோறுடைக்கஞ்சிகொள்ளி
லெரிதருபித்தந்தாழு மெழுமதிவிந்துவுந்தான்
பொரிதருகஞ்சிபித்தம் போக்கிடும்சுடுகஞ்சிக்குத்
தரிதருமலமும்வாய்வுந் தாகமும்போகுங்காணே.

இ-ள். பசும்பாலில் பச்சரிசி சேர்த்துக் காய்ச்சிய கஞ்சியால் பித்த எரிவு நீங்கும். புத்தியும் சுக்கிலமும் விருத்தியாம். நெற் பொரிக்கஞ்சி பயித்திய தோஷத்தைப் போக்கும். சாதத்தில் வடித்த சுடுகஞ்சிக்கு, பலமும் வாத ரோகமும் தாகவிடாயும் விலகும். 1469

### கொள்ளுக் கஞ்சியின் குணம்—வெண்பா

கொள்ளுந்தண் டுலமாய்க் கூட்டியடுங் கஞ்சியது
கொள்ளுங்காற் றீபனத்தைக் கூறுவதே—யெள்ளை
நசுக்கிப் பிழிபலமு நல்விந்து விந்துவுமே
வசிக்குங் கிழவர்கட்கும் வை.

இ-ள். கொள்ளும் அரிசியும் சேர்த்துக் காய்ச்சிய கஞ்சியைக் குடிக்கில் அதிக பசி, எள்ளைக் கையாற் கசக்கிப் பிழியும்படியான பலம், வீரியவிருத்தி ஆகியவை கிழவர்களுக்கும் உண்டாகும். 1470

### ஏவாக் கஞ்சியின் குணம்

துன்பன்றி யின்பருளச் சுட்க கபத்தோரு
மென்பன்றி மூன்பசை யிழந்தோரும்—போத
போய்ச்சலுடன் வீழ்வாரு முன்னையடுப் பாரென்னிக்
காய்ச்சேவாக் கஞ்சியுரை காண்.

இ-ள். துன்பமேயன்றி இன்பந்தராத சுட்க கபரோகிகளும் சரீரமுழுதும் எலும்புதவிர மாமிசப்பசை இழந்தவர்களும் பலமற்றுக் கைகால் ஓய்ந்து வீழ்கின்றவர்களும் உன்னைப் பிரார்த்திப்பாரேயாகில் அவர்களுக்கு ஏவா அரிசிக்கஞ்சியையே மருந்தாகக் கொடுப்பாயாக. 1471

## கோதுமைக்கஞ்சியின் குணம்

கோதுமைக் கஞ்சி கொடுஞ்சுரநீ ரேற்றமிவை
காதுமைக்குஞ் சந்நிக்குங் காதரமே—போத
வுடலுந் திடமா மெலிவண்டுங் கூற்றுங்
கடலும் பணிவிழியே காண்.

இ-ள். வண்டும் நமனும் கடலும் வணங்கும் விழியாளே! கோதுமைக்கஞ்சியானது, வாதசுரம் ஜலதோஷம் கபம் சந்நிபாதம் இவைகளை விலக்கும் தேகத்திற்கு வன்மையைத்தரும். 1472

## சிறுபயறு உளுந்து பச்சரிசி இவைகளின் கஞ்சிக்குணம்

சிறுபருப்புக் கஞ்சிபித்தந் தீர்க்கு முழுந்தி
லுறுபருப்புக் கஞ்சிவளிக் கூக்க—முறியகபம்
பச்சரிசிக் கஞ்சி பவனகபத் தைப்போக்குங்
கச்சிறுக்குங் கொங்கையின்னே காண்.

இ-ள். வாரிணலிறுக்கிய கொங்கைகளை யுடையவளே! சிறுபயறும் பச்சரிசியும் சேர்த்துக் காய்ச்சியகஞ்சி பித்தகோபத்தை விலக்கும். உழுந்து சேர்ந்தகஞ்சி வாதத்திற்கு உரப்பாம். பச்சரிசிக்கஞ்சி வாதசிலேஷ்மத்தைப்போக்கும் என்க. 1473

## கஞ்சி அன்னத்தின் குணம்—விருத்தம்

கஞ்சியன்னத்திற் காயம்பருத்திடு
மஞ்சிவெப்பமகலுஞ் சிலேட்மமோ
டுஞ்சிற்றிடு மேனிமினுத்திடும்
பஞ்சிபோலப் பறந்திடும்பித்தமே.

இ-ள். வடித்தகஞ்சியும் அன்னமுமாய்க் குடிக்கில், தேகந்தூலித்தலும் ஒளியும் கபாதிக்கமுண்டாகும்; வெப்பமும் பித்தம்போம்.

## புனற்பாகத்தின் குணம்—வெண்பா

புனற்பாக முத்தோடம் போக்கு மருந்தி
னனற்பாகந் தன்னை யடக்குந்—தனிக்குணங்க
ளும்மட்டோ வாய்க்கிதமா மாரோக்கி யங்கொடுக்குங்
கம்மிட்ட பூவனமே காண்.

இ-ள். இலக்குமி யனையாளே! புனற்பாகமானது வாதாதி மூன்று தோஷங்களையும் சுரவெப்பத்தையும் போக்கும்; குடிப்பதற்கு இதத்தையும் சரீரசவுக்கியத்தையும் தருமென்க. புனற்பாகம் என்பது ஒருதரம் வடித்த அன்னத்தை மறுபடியும் வெவ்வேறு உலையிலிட்டு வடித்தும் வடித்து அதை மறுவுலை பாய்ச்சிச் சலரூபமாகக் கொடுப்பதாம். இதனைத் தாரகபத்தியம் என்பர். 1475

## பஞ்சமுஷ்டிக் கஞ்சியின் குணம்

பஞ்சமுட்டிக் கஞ்சிநெடும் பட்டினிற் கொள்ளுங்கால்
விஞ்சனில பித்தகபம் வீறுவாம்—விஞ்சு
மிளைப்பகற்றுந் தாரக விலங்கணத்திற் கேற்குந்
திளைப்பவெழும் பூண்முலையே செப்பு.

இ-ள். அனுபவிக்கப் பூரித்தெழுந்த தனங்களையுடையாளே! தாரகபத்தியத்திற் குதவாநின்ற பஞ்சமுஷ்டிக்கஞ்சியை, நீடித்த லங்கணமுடிவில் அருந்தில் திரிதோஷ விகாரம் அதிகரிக்காது. ஆயாசம் நீங்குமென்க. பஞ்சமுஷ்டிக்கஞ்சியாவது துவரை உளுந்து கடலை சிறுபயறு பச்சரிசியில் 5-ல் 1-க்கு ஒருபிடி யெடுத்துத் தனித்தனியே மெல்லிய சீலைகளில் முடிந்து ஒரு பாத்திரத்திற் போட்டு அதில் ஆற்றுச்சலம் 2-படி விடுத்து 8-ல் ஒரு பங்காகக் காய்ச்சுவதாம். 1476

## முடிச்சுக்கஞ்சியின் குணம்

வாயுசுர நீரத்த வாறும் பசியெழும்பு
மோயும் பலதணிக ளுண்மையே—யாயுங்கா
லுண்டி பருத்திடுமெய் யுண்ணுமேகும் முடிச்சுச்
சுண்டியநீர்க் கஞ்சினாற் சொல்.

இ-ள். அரையாழாக்கு அரிசிக்கு இரண்டுபடி சலம்விட்டு அரைப்பலம் சுக்கை சிவிக்கரித்துத் துணியில் முடிந்து அதிற் போட்டு நாலிலொருபங்காகக் காய்ச்சிய கஞ்சியின்றெளிவைக் குடிப்பதினால், வாதசோகம் வெப்பம் சிவந்து இறங்குகிற மூத்திரம் பித்தாதிக்கத்தாலுண்டாகிய சிற்சில நோய்கள் குடலைப்பற்றிய செரியாமந்தம் முதலிய ரோகங்களும் நீங்கும், உதராக்கினி விருத்தியும் போஜன பெருக்கமாம். 1477

## வடிகஞ்சி உறைகஞ்சி கொதிகஞ்சி இவைகளின் குணம்

கஞ்சியெலா மந்தமவை கண்ணுக்குத் தான்குளிர்ச்சி
விஞ்சிவரும் பித்தமது விட்டகலு—முஞ்சு
மதிகஞ்சி வாயு வதிசீதஞ் சேர்க்குங்
கொதிகஞ்சி வெட்டையைப்போக் கும்.

இ-ள். சாதத்தினின்று வடிக்கப்பட்ட கஞ்சிகளெல்லாம் மந்தமேயானாலும் விழிக்குக் குளிர்ச்சியாம். இவற்றால் பித்த கோபம் நீங்கும். காலாதீதப்பட்டுத் தயிரைப் போலுறைந்த கஞ்சியானது, வாதாதிக்கத்தையும் கபப் பெருக்கையும் உண்டாக்கும். சாதம் வேகும்போது மீட்கின்ற கொதித்தண்ணீரென்கிற கஞ்சி, நீர்ச் சுருக்கைப் போக்குமென்க. 1478

## பழஞ்சோற்றின் குணம்

பழஞ்சோற்றை யந்தப் பழைய நீராகரக்
கொழுஞ்சேர்க்கை யோடுதயங் கொள்ளி—லெழுந்தாது
பித்தவா தம்போம் பெரும்பசியா மெய்யெங்கு
மொத்தவொளி யுண்டாம் விரி.

இ-ள். இரவில் நீர்யூட்டிய அன்னத்தை அந் நீராகாரத்துடன் சூரியோதய காலத்தில் அருந்தில், சுக்கில விருத்தியும், உதராக்கினியும் சரீர முழுவதும் தேஜசும் உண்டாம். பயித்திய வாததொந்தம் விலகும். 1479

## மோர் சேர்ந்த பழையதின் குணம்

மோரும் பழையதுமாய் மோடெடுக்க வுண்டார்க்குத்
தீரு மெரிவெல்லாஞ் சேயிழையே—தீராத
பித்தப் பிணியும் பிரமைநோ யும்பறக்கு
முற்றகபந் தூக்குமிகு முன்.

இ-ள். புராதன அன்னத்தில் மோர் சேர்த்துத் திருப்தியாக வுண்பவர்களுக்குத் தேக எரிச்சலும் பித்தரோகமும் பிரமைமுதலிய நோயும் நீங்கும். சிலேத்மாதிக்கமும் நித்திரையும் அதிகரிக்கும்.

## புளித்த சோற்றின் குணம்

புளித்தபழங் காடியன்னம் பொங்கனலா நாளுந்
தளிர்த்தபித்த கோபத்தைச் சாடும்—வெளுத்தமல
மந்தத்தை நீருக்கும் வாந்தி தனையொழிக்கு
மந்த முறுமணங்கே யாய்.

இ-ள். புளித்த பழைய காடிச்சாதம் உஷ்ணமாம். பித்தாதிக்கம் மந்தத்தினால் வெளுப்பாக இறங்குகிற மலம் வமனம் ஆகிய இவை நீங்கும். 1481

## ஊசிய சோற்றின் குணம்

ஊசலன்ன முண்டா லுடனேவரு முறக்கம்
பேசுவதேன் வாதம் பிரபலமா—மாசித்துச்
சீதளமும் பித்தமும்வி சேடிக்கும் வள்ளையொத்த
காதளவு நீள்விழியாய் காண்.

இ-ள். நீண்ட விழியாளே! ஊசிய அன்னத்தை உண்ணில் உடனே நித்திரை வாதகோபம் சீதாதிக்கம் பித்தவிருத்தி இவையுண்டாம் என்க. 1482

### கூழ், களி இவைகளின் குணம்

கேழ்வரகின் கூழாற் கிளர்வாத பித்தமோ
டூழ்வயிறுஞ் சாந்தமென விள்ளுவர்காண்—காழாங்
களிக்கும் பலமுண்டாங் காணி லதிவாதங்
குளிர்க்கு முலகிலிதைச் சாற்று.

இ-ள். கேழ்வரகின் கூழினால் வாதபித்த மிஸ்ரம் உதர ரோகமும் நீங்கும் என்பர். மேற்படி களிக்கு வன்மையும் வாதகோபமும் உண்டாம் என்க. 1483

### கம்பு சாதத்தின் குணம்

கம்பினது சாதத்தாற் காச்சுவா சஞ்சிரங்கும்
பம்பு முடலமிகப் பாரிக்குஞ்—செம்பரலோ
வற்றலது மன்றிநிற மாறுமென்பர் வாமமெலா
முற்று முலைமாதே மொழி.

இ-ள். பெண்ணே! கம்பஞ்சாதத்தினால் உதிரஞ் சுண்டுவது இருமல் இரைப்பு விரணம் சரீரந்தூரித்தல் விவர்னம் இவைகள் உண்டாம். 1484

### தினையின் மா, சாதம், கஞ்சி இவைகளின் குணம்

தினைமா கபவாதந் தீர்க்குமதன் சாதம்
புனைபித்த மாயினுநற் போகந்—தனைக்கொத்து
வாதம்போக் குங்கஞ்சி மாசோபைத் தோடமிதன்
பேதம்போக் கும்மெனவே பேசு.

இ-ள். தினைமா சிலேத்மவாத தொந்தத்தை விலக்கும். மேற்படி சோறு பித்த குணத்தை யுற்றிருந்தாலும் வீரியத்தை விருத்தி செய்து வாதகோபத்தை நீக்கும். கஞ்சி வீக்க தோஷ வருக்கங்களை ஒழிக்கும். 1485

### சாமைச் சாதம், அதன் கஞ்சி இவைகளின் குணம்

சாமைச்சோ றுண்டாற் றனிவாதங் கோழைகபந்
தீமைக்கா தாரமாய்ச் சேர்சோபை—மோமெத்தப்
பித்தமொடு தாதுவுமாம் பேசுமதன் கஞ்சிக்கு
முத்தோடம் போகு மொழி.

இ-ள். சாமைச்சாதத்தை உண்ணில் வாதநோய் க்ஷயம் சிலேத்ம விருத்தி வீக்கம் இவை போம். பித்தமும் சுக்கிலமும் விருத்தியாம். அதன் கஞ்சிக்கு வாதாதி மூன்று தோஷங்களும் விலகும்.

## வரகுச்சாதத்தின் குணம்

எரிகபத்தோ டேபலநோ யெய்தும் வறட்சி
சொறிசிரங்கு பித்தந் தொடரு—நிறையுங்
கரகமெனப் பூரித்த கச்சுமுலை மாதே
வரகரிசிச் சோற்றால் வழுத்து.

இ-ள். பொன்கரகமன்ன புணர் முலையாளே! வரகுச் சாதத்தி னால் மூச்செறிகின்ற சுவாசம் இதைச் சேர்க்கச் சிலநோய்கள் புடை தினவு கிரந்தி பித்தாதிக்கம் இவை உண்டாம். 1487

## சோளச்சாதங்களின் குணம்

கம்பினது சாதத்தாற் காச்சுவா சஞ்சிரங்கும்
பம்பு முடலமிகப் பாரிக்குஞ்—செம்பரலோ
வற்றுவது மன்றிநிற மாறுமென்பார் வாமமெலா
முற்றுமுலை மாதே மொழி.

இ-ள். பெண்ணே! கருமை வெண்மை செம்மை என்னும் சோளச்சாதங்களினால், தினவும் விரணமும் கரப்பானும் அதிகரிக் கும்; நல்ல ஔஷதமும் கெடும். 1488

## காடைக்கண்ணிச்சாற்றின் குணம்

எரிவொடு பித்த மெழும்புமைய வாதங்
கருகி முடிந்தோடிக் காக்கு—மரியசந்த
வாடை பொடிமணக்கு மாமுலைமா தேயுலகில்
காடைக்கண் ணிச்சோற்றைக் கண்டு.

இ-ள். களபமணக்கு முலையாளே! காடைக்கண்ணிச் சாதத் தினால் சரீர எரிச்சலும் பித்தாதிக்கமு முண்டாகும். கபவாததொந் தம் ஒளிக்குமென்க. 1489

## சித்திரான்ன பாற்பொங்கலின் குணம்

### விருத்தம்

ஒப்பிலாப் பாலில்வெந்த வுயர்சுவை யன்னமுண்ணில்
வெப்பிலா வாதமுண்டாம் வெவ்வழற் பித்தந்தாழுந்
தப்பிலா திதினெய்வெல்லஞ் சார்ந்திடுந் தன்மையாலே
செப்பிலக் கபமேலாடுஞ் செம்பித்த மொடுங்குங்காணே.

இ-ள். உருசியுள்ள பாற்பொங்கல் அருந்துவதினால் தனிவாத கோபமும், இதில் நெய்யுஞ் சருக்கரையுஞ் சேருவதால் சிலேஷ்மா திக்கமும் உண்டாகும். சுராந்தத்தில் சனித்த பித்தமும் நீங்கும் என்க. 1490

இ-ள். நீண்ட விழியாளே! ஊசிய அன்னத்தை உண்ணில் உடனே நித்திரை வாதகோபம் சீதாதிக்கம் பித்தவிருத்தி இவையுண்டாம் என்க. 1482

### கூழ், களி இவைகளின் குணம்

கேழ்வரகின் கூழாற் கிளர்வாத பித்தமோ
டூழ்வயிறுஞ் சாந்தமென வின்னுவர்காண்—காழாங்
களிக்கும் பலமுண்டாங் காணி லதிவாதந்
தளிர்க்கு முலகிலிதைச் சாற்று.

இ-ள். கேழ்வரகின் கூழினால் வாதபித்த மிஸ்ரம் உதர ரோகமும் நீங்கும் என்பர். மேற்படி களிக்கு வன்மையும் வாதகோபமும் உண்டாம் என்க. 1483

### கம்பு சாதத்தின் குணம்

கம்பினது சாதத்தாற் காச்சுவா சஞ்சிரங்கும்
பம்பு முடலமிகப் பாரிக்குஞ்—செம்பரலோ
வற்றவது மன்றிநிற மாறுமென்பர் வாமமெலா
முற்று முலைமாதே மொழி.

இ-ள். பெண்ணே! கம்பஞ்சாதத்தினால் உதிரஞ் சுண்டுவது இருமல் இரைப்பு விரணம் சரீரந்தூரித்தல் விவர்னம் இவைகள் உண்டாம். 1484

### தினையின் மா, சாதம், கஞ்சி இவைகளின் குணம்

தினைமா கபவாதந் தீர்க்குமதன் சாதம்
புனைபித்த மாயினுநற் போகந்—தனைக்கொந்து
வாதம்போக் குங்கஞ்சி மாசோபைத் தோடமிதன்
பேதம்போக் கும்மெனவே பேசு.

இ-ள். தினைமா சிலேத்மவாத தொந்தத்தை விலக்கும். மேற்படி சோறு பித்த குணத்தை யுற்றிருந்தாலும் வீரியத்தை விருத்தி செய்து வாதகோபத்தை நீக்கும். கஞ்சி வீக்க தோஷ வருக்கங்களை ஒழிக்கும். 1485

### சாமைச் சாதம், அதன் கஞ்சி இவைகளின் குணம்

சாமைச்சோ றுண்டாற் றணிவாதங் கோழைகபந்
தீமைக்கா தாரமாய்ச் சேர்சோபை—மோமெத்தப்
பித்தமொடு தாதுவுமாம் பேசுமதன் கஞ்சிக்கு
முத்தோடம் போகு மொழி.

இ-ள். சாமைச் சாதத்தை உண்ணில் வாதநோய் க்ஷயம் சிலேத்ம விருத்தி வீக்கம் இவை போம். பித்தமும் சுக்கிலமும் விருத்தியாம். அதன் கஞ்சிக்கு வாதாதி மூன்று தோஷங்களும் விலகும்.

## வரகுச்சாதத்தின் குணம்

எரிகபத்தோ டேபலநோ யெய்தும் வறட்சி
சொறிசிரங்கு பித்தந் தொடரு—நிறையுங்
கரகமெனப் பூரித்த கச்சுமுலை மாதே
வரகரிசிச் சோற்றால் வழுத்து.

இ-ள். பொன்கரகமன்ன புணர் முலையாளே! வரகுச் சாதத்தினால் மூச்செறிகின்ற சுவாசம் இதைச் சேர்க்கச் சிலநோய்கள் புடைதினவு கிரந்தி பித்தாதிக்கம் இவை உண்டாம். 1487

## சோளச்சாதங்களின் குணம்

கம்பினது சாதத்தாற் காச்சுவா சஞ்சிரங்கும்
பம்பு முடலமிகப் பாரிக்குஞ்—செம்பரலோ
வற்றுவது மன்றிநிற மாறுமென்பார் வாமமெலா
முற்றுமுலை மாதே மொழி.

இ-ள். பெண்ணே! கருமை வெண்மை செம்மை என்னும் சோளச்சாதங்களினால், தினவும் விரணமும் கரப்பானும் அதிகரிக்கும்; நல்ல ஔஷதமும் கெடும். 1488

## காடைக்கண்ணிச்சாற்றின் குணம்

எரிவொடு பித்த மெழும்புமைய வாதங்
கருகி முடிந்தோடிக் காக்கு—மரியசந்த
வாடை பொடிமணக்கு மாமுலைமா தேயுலகில்
காடைக்கண் ணிச்சோற்றைக் கண்டு.

இ-ள். களபமணக்கு முலையாளே! காடைக்கண்ணிச் சாதத்தினால் சரீர எரிச்சலும் பித்தாதிக்கமு முண்டாகும். கபவாதமொந்தம் ஒளிக்குமென்க. 1489

## சித்திரான்ன பாற்பொங்கலின் குணம்

### விருத்தம்

ஒப்பிலாப் பாலில்வெந்த வுயர்சுவை யன்னமுண்ணில்
வெப்பிலா வாதமுண்டாம் வெவ்வழற் பித்தந்தாழுந்
தப்பிலா திதினெய்வெல்லஞ் சார்ந்திடுந் தன்மையாலே
செப்பிலக் கபமேலாடுஞ் செம்பித்த மொடுங்குங்காணே.

இ-ள். உருசியுள்ள பாற்பொங்கல் அருந்துவதினால் தனிவாத கோபமும், இதில் நெய்யுஞ் சருக்கரையுஞ் சேருவதால் சிலேஷ்மாதிக்கமும் உண்டாகும். சுராந்தத்தில் சனித்த பித்தமும் நீங்கும் என்க. 1490

## பருப்புப்பொங்கலின் குணம்—வெண்பா

போகமிக வுண்டாகும் பொங்கியபித் தந்தணியு
தேகமதில் வாதமிகச் சேருங்காண்—வாகார்
பொருப்புப்போல் விம்முமுலைப் பூங்கொடியே பச்சைப்
பருப்புப்பொங் கற்சோற்றைப் பார்.

இ-ள். குன்றனைய தனத்தாளே! பச்சைப்பருப்புப் பொங்கல் அன்னத்தினால் வீரியவிருத்தியும் வாதப்பெருக்கமும் உண்டாகும். பித்தகோபமும் விலகுமென்க. 1491

## சருக்கரைப் பொங்கலின் குணம்

வாயி னரோசகத்தை மாற்றியவமனம் போக்கு
மாயில்பித்த கோபத்தை மாற்றுங்காண்-நேயச்
செருக்கரைசெந் தோளாற் றிருந்துமட மாதே
சருக்கரைப்பொங் கற்சாதங் காண்.

இ-ள். பெண்ணே! சருக்கரைப்பொங்கல் அருசி வாந்தி பயித்தியம் இவைகளை நீக்கும். 1492

## மிளகோதனத்தின் குணம்

மிளகோ தனமருந்த விம்முகின்ற வாத
மிளகும் பசியு மெழும்புங்—களகளெனக்
கூவும் வயிற்றின் குடலிரைச்ச லுங்கபமுந்
தாதுபித்த முந்தணியுஞ் சாற்று.

இ-ள். மிளகோதனம் உண்பதினால் பொருமுகின்ற வாயு குடலிரைச்சல் கபாதிக்கம் பித்தகோபம் இவை விலகும்; தீபனமுண்டாம். 1493

## புளியோதனத்தின் குணம்

வாந்தி யுரமொழிய வாய்நீர்ச் சுரப்போகுஞ்
சாந்தியுறப் பித்தமது சாந்தியாம்—வாய்ந்த
வளியோ வயிலோவென் றையுறச்செய் கண்ணாய்
புளியோ தனத்தால் புகல்.

இ-ள். வண்டோ வேலோவென்றையுறுங் கண்ணாளே! புளியோதனத்தால் வமனவேகம் அருசி பயித்தியமும் போம். 1494

## கடுகோதனத்தின் குணம்

உரியகடுகும் புளியு மொவ்வக் கலந்தே
அரியமனத் தோடமைத்த வன்னம்—பருகினால்
வாதமொடு வையமும்பின் வாங்கி விழிந்தோடுஞ்
சீத மலர்திருவே யோது.

இ-ள். கடுகும் புளியும் சேர்ந்தமைத்து அன்னத்தை உண்டால் வாத தோஷமும் சிலேத்மமும் ஒழியுமென்க. 1495

## எள்ளோதனத்தின் குணம்

செப்பரிய வாதபித்தத் தீமையக லுங்கபப்
துப்பி வளரு முடலிறுகு—முப்பழத்தின்
கள்ளோதுஞ் செய்ய கனிமொழியே நீகேளா
யெள்ளோ தனத்தினு லே.

இ-ள். எள்ளோதனம் உண்டால் வாத பயித்திய தோந்தம் விலகும். சிலேத்மாதிக்கமும் தேக வலிவும் உண்டாகும். 1496

## உளுந்தோதனத்தின் குணம்

எஞ்சுகப வாதமிக வேறுமதி மந்தமும்
விஞ்சுபித் தர்தாழு மெய்புரக்கு—மஞ்சு
மெழுந்தோதம் புக்கு மினியநடை மாதே
வுழுந்தோ தனத்திற் குரை.

இ-ள். இனிய நடையாளே! உளுந்தோதனத்தால் சிலேத்ம வாத தொந்தம் அலஜரோகம் சரீர திடம் அதிகரிக்கும். பித்த கோபம் நீங்கும். 1597

## ததியோதனத்தின் குணம்

ஆறு வழலகற்று மாந்தபித்த நோய்போக்குந்
தேறுத மெய்யைமிகத் தேற்றுங்காண்—மாறு
மதியோதை கொள்ளும் வதன மயிலே
ததியோ தனமெலாஞ் சாற்று.

இ-ள். சந்திரவதனியே! ததியோதனமானது மாறு உட்சூட்டையும் பித்த நோயையும் விலக்கும். உடலை யிரட்சிக்கும். ஆதலால் இது சிறந்ததெனக் கூறுவாயாக. 1598

## கட்டமுதின் குணம்

சூலைசுக்கி லாஸ்மரி சுவாசகா சங்கண்ட
மாலை முதலியநோய் வந்தணுகு—மாலுலகிற்
றுட்ட மிரத்தமொடு தொன்மேக மும்பறக்குங்
கட்டமுதை நீயுண் ணுங் கால்.

இ-ள். கட்டமுதை நித்தியமும் புசிப்பையாகில் தேகமுற்றிலுங் குத்தல் சுக்கிலாஸ்மரி இரைப்பு இருமல் கண்டமாலை முதலிய ரோகங்கள் உண்டாகும். இரத்த பிரமேகமும் ஒழுக்கு வெள்ளை நிவர்த்தியாம். 1599

# பலகார வகை

## உளுந்து வடையின் குணம்

மெறுமுழுந்திற் செய்வடைக்கு மென்மேலும் வாத
முறும்பித்தஞ் சற்றே யொடுங்கு—நறுந்தீ
பனம்போம் புசிப்பிற் பருகநன்றாய் வாலி
பனம்போ னடையா யறி.

இ-ள். அன்ன நடையாளே! சுத்த உளுந்தினாற் செய்த வடைக்கு வாதாதிக்கமாம். பித்த கோபமும் உதிராக்கினியும் கெடும். இதை உண்டியோடுண்ணில் நலமாம். 1500

## தயிருளுந்தின் வடைக் குணம்

உழுந்தின் பருப்பை யுலர்த்தியூ றச்செய்
தழுந்தா தரைத்துவடை யாக்கிச்—செழுந்தேனிற்
கூட்டியுண வையபித்த சோபையறு மூதையிலே
தீட்டியவேற் கண்மாதே தேர்.

இ-ள். வேற்கண்மாதே! உளுத்தம்பருப்பைப் புளித்த தயிரில் ஊறவைத்துப் பெரும்படியாக அரைத்து பாகமாக சுட்ட வடையை நல்ல தேனில் தோய்த்து உண்ணிற் சிலேத்ம பயித்திய ரோகமும் வாத தோஷமும் நீங்கும் என்க. 1501

## பேயன்வாழைக்கனி சேர்ந்த வடைக் குணம்

பேயன் கதலியுலம் பெய்தமா ழத்தின்வடை
நேய முறவமைத்து நித்தலுமே—நேயமுடன்
றுனருந்தில் வாதபித்தந் தந்தநிலை கொண்டமருந்
தேனருந்தாத் தேனே தெளி.

இ-ள். தேன் போன்றவளே! நீ பேயன் வாழைக்கனி சேர்ந்த உளுந்து வடையை நெய்த்தொட்டுத் தினமுண்ணில் திரிதோஷங்கள் அதனதன் இடத்தை உற்றிருக்கும். 1502

## தோசையின் குணம்

மிகுத்தெழுந்த பித்தத்தை வீறு தடக்கு
மகத்துள சில்கப மாற்றுஞ்-சகத்திலுறு
தேசைப் பெருமயிலே தின்னரிசேர் மாழத்தின்
றோசைக் குணமிதனைச் சொல்.

இ-ள். அழகு பொருந்திய பெண்ணே! உளுந்தும் அரிசியும் சேர்த்துச் செய்த தோசையானது பித்த கோபத்தையும் வாத சிலேத்ம தொந்தத்தையும் நீக்கும் என்க. 1503

## சம்பாரதோசையின் குணம்

காயமிளகு இஞ்சி கருவேப் பிலைமுதலாந்
தூயபல காரமிட்ட தோசைக்கு—வாயுவிலை
பித்தகப வேகப் பெருக்கொழியுந் தாதுவுமாஞ்
சுத்தவன சத்திலியே சொல்.

இ-ள். இலக்குமியாளே! பெருங்காயம் மிளகு இஞ்சி கருவேப்பிலை முதலிய பரிசுத்தமுள்ள பல சம்பாரஞ் சேர்த்த தோசைக்கு வாததோஷமும் பயித்திய சிலேஷ்மகோபமும் விலகும், சுக்கில விருத்தியும் உண்டாம். 1504

## சுத்த இட்டிலி, சம்பார இட்டிலி இவைகளின் குணம்

வெறுமாக்க ளிட்டிலிக்கு வேகமறுங் காரப்
பெறுமாக்க ளிட்டிலியைப் பேசி—லறுமனில
மையபித் தங்க ளதிகரிக்கு மோமார
னையவெய்யுங் கண்ணாய் நவில்.

இ-ள். மதனையெய்யுங் கண்ணாளே! உளுந்தரிசி இம்மாவுகளாற்செய்த சுத்த இட்டிலிக்குப் பித்தகோபம் நீங்கும்; காரஞ்சேர்த்த மேற்படி மாவுகளாற் செய்த சம்பார இட்டிலிக்குத் திரிதோஷங்கள் அதிகரிக்கும். 1505

## முருக்கின் குணம்

ஐயமொடு பித்த மதிகரிக்குந் தாழாத
செய்ய வனிலஞ் சிறிதடங்கும்—வைய
நிறுக்குமிகு கற்பையுறு நேரிழையே நாளு
முறுக்கின் குணமா மொழி.

இ-ள். கற்பிற் சிறந்தவளே! முறுக்கு என்கிற ஒருவித பலகாரத்தால் சிலேத்மமும் பித்தமும் விருத்தியாகும். வாத கோபங் கொஞ்சந் தணியுமென்க. 1506

## தேன்குழலின் குணம்

ஓங்குங் கபவாத முட்டினமு மீறிவரும்
வாகுஞ் சலங்கொஞ்ச மந்தமுமாந்—தேங்குமிசை
யான்குழலு மியாழுமிக வஞ்சுமொழிக் கிஞ்சுகமே
தேன்குழலுக் காங்குணத்தைத் தேர்.

இ-ள். யாழினிய மொழியாளே! தேன்குழலுக்கு சிலேஷ்ம வாததொந்தமும் வெப்பமும் அதிதாகமும் உண்டாகும்; பசி கொஞ்சம் மந்தப்படுமென்க. 1507

## அதரசத்தின் குணம்

ஐயமொடு பித்த மிகுமகரந் தூதிக்கவுறுந்
தூய்ய வனிலஞ் சுழிக்குங்காண்—சையத்
தெதிரசத்தை யூர்வோ னெனுங்கற்பு மாதே
அதிரசத்தை நன்று யறி.

இ-ள். கற்புள்ளமாதே! அதிரசத்தினுற் கபமும் பித்தமும் விருத்தியாகும்; தேவரட்சணைக்குரிய சுத்தவாதம் உள்ளடங்கும்.

## பிட்டின் குணம்

செம்புனலுங் கட்டுந் தெளியு முரமாகும்
வெம்பினில முட்புறத்தில் வீறுங்காண்—செம்பழத்தை
வட்டைப் பழிக்கும் வனமுலைமா தேயரிசிப்
பிட்டைப் புசிப்பார்க்குப் பேசு.

இ-ள். வன்னமுலைமாதே! அரிசிமாவின் பிட்டு என்கிற பலகாரத்தை உண்பவருக்கு வன்மையும் உள்ளில் வாதவெப்பமும் உண்டாம். மாதர்கட்கு ருதுகாலத்தில் மிகுமின்றி ஒழுகுகின்ற உதிரம் கட்டுப்பட்டுத் தெளிவையுறுமென்க. 1509

## மோதகத்தின் குணம் (இதுவே கொழுக்கட்டை)

வாதமுறு மந்தமிகு மாருத வெப்பமுமாஞ்
சீத கபவிருத்தி சேருங்காண்—தீறுதூகட்
போதகமுஞ் செப்பும் பொருப்பு நிகர்முலையாய்
மோதகமுண் பார்க்கு மொழி.

இ-ள். ஆனை செப்பு மலை இவற்றை நிகர்த்த முலையாளே! மோதகத்தை யருந்துவர்க்கு வாதவிருத்தி உதராக்கினி மந்தம் சிலேஷ்மாதிக்கம் ஆகியவைகள் உண்டாகும். 1510

## கோதுமை அடையின் குணம்

தேகம் பலக்குமதி தீபனமுண் டாகுநிறை
மோகம் பெருபைய மூர்க்கமறுங்—கோபமிக
வோதி யடையு முயர்கொங்கை மாதரசே
கோதி யடையைக் கொடு.

இ-ள். சிறந்த கொங்கையாளே! கோதுமை அடையினுல் சரவண்மையும் உதராக்கினியும் சுக்கிலதாதுவும் அதிகரிக்கும், சிலேஷ்ம கோபம் நீங்கும். 1511

## பொரியுண்டையின் குணம்

சாந்திபித்த வாதந் தணியும்.வலுத்தெழுந்த
சுத்தகப வாதந் தொலையுங்காண்—மெத்த
வரியுண்ட வேல்விழியாய் வையகத்திற் சாலிப்
பொரியுண்டை நன்றாய்ப் புசி.

இ-ள். வேல் விழியாளே! பாகிற் சேர்த்துப் பிடித்த நெற் பொரி யுண்டையை யுண்பாயாகில் நலமாம். வாந்தி பயித்தியம் வாத கோபம் கபவாத மிஸ்ரம் இவை போம். 1512

## சேர்க்கை அவலின் குணம்

பாநெய்சேர்த் துண்ணிற் பலமாந் ததிகண்மந்தந்
தாநெய்து மோரயர்வு தாகமெரி—தேனிருக்கு
மப்புளிய மஞ்சுங்கா லாகு மிரையொழியு
மெப்புளியும் பித்திலவ லில்.

இ-ள். அவலில் பாலும் நெய்யும் சேர்த்துண்டால் சரீரத் துக்குப் பலம் உண்டாகும். அதைத் தயிரில் கலந்து உண்டால் மந்தம் உண்டாகும்; மோரில் உண்டால் கோபமும் எரிவும் விலகும்; சலத்தில் ஊறவைத்து உண்டால் உளியால் வெட்டினல் அதுவும் வாய் மடங்கத்தக்க உறுதியான வாயுவு உண்டாம்; ஆகாரமும் ஏற்றுக்கொள்ளாது. ஏதாவது புளிகளில் சேர்த்து உண்டால் பித்த ரோகம் நீங்கும். 1513

## நெற்பொரியின் குணம்

நெற்பொரியைத் தின்றா னெடுந்தாகம் வாந்திமந்த
மற்பித்த வாத மதமூர்ச்சை—பற்பலவாம்
பேதி யரோசிகை பேருலகை விட்டொழியுஞ்
சாதி மடமயிலே சாற்று.

இ-ள். மயில் போன்றவளே! நெற்பொரியைப் பாகப்படிக்குத் தின்னில் அதிதாகம் வமனம் மந்தாக்கினி பயித்திய வாத தொந்தம் மதரோகம் மூர்ச்சை அதிசார வருக்கம் அரோசகம் ஆகியவை நிவர்த்தியாம். 1514

## அப்பளம், சோற்றப்பளம் இவைகளின் குணம்

வாதத்தை யுண்டாக்கும் மாபலத்தை யுங்கொடுக்கும்
சீதத்தை மேவுகபந் தீர்க்குங்கா—ணேதுமுழுந்
தப்பளஞ் சோற்றப்பளங்கா லாதிகள்விஞ் சாதுநிலை
யொப்பவளஞ் செய்யு முறை.

இ-ள். உளுந்து மாவின் அப்பளம் வாதப் பெருக்கையும் உடற்குறுதியையும் தரும்; ஆமத்தைப்பற்றிய கபத்தை நீக்கும். அரிசி மாவினுற் செய்த சோற்றப்பளம் திரிதோஷங்களை மீற வொட்டாமற் சமப்படும். 1515

## பாயசத்தின் குணம்

பாயசங் கொண்டாற் பழையமலம் வாந்திபித்த
மாயாசம் போங்கூறி லற்பமந்தந்—தூயசர்
வேந்திரிய நம்மை யெழில்வலி மனத்தெளிவோ
டாந்தபசி மேதையுமுண் டாம்.

இ-ள். பாலில் நெய் முதலியவை சேர்த்துக் காய்ச்சிய பாயசத்தினுல் மலபந்தம் வாந்தி பித்தம் இளைப்பு இவை நீங்கும். அற்ப மந்தம் பஞ்சேந்திரியங்கட்கு நலம். அழகு பலம் மனத்தெளிவு தீபனம் புத்தி இவை உண்டாம் என்க. 1516

## பரமானத்தின் குணம்

பரமானத் தாற்பயித்தி யந்தாக மும்போ
முரமான ருட்சை யுரக்குந்—திரமான
வங்கம் பருக்கு மதிக பலமுண்டாம்
பொங்கமுறு மாதே புகல்.

இ-ள். சிறப்புற்ற பெண்ணே! பரமானத்தால் பித்தகோபமும் தாகமும் விலகும். சுரம் சரீர புஷ்டியும் மிகு வன்மையும் உண்டாகும். 1517

## அன்ன பின்னத்தின் குணம்

சோறுக்கெண் கூறாக்கந் தூமா வவலிவைக்கெண்
கூறுக்க நற்பழம்பாற் கொள்ளிவைக்கெண்—கூறாக்க
மூன்பல மிவைக்கெண் கூறாக்கஞ் சுகாசுகத்துந்
தான்பல வகைத்துப்புந் தான்.

இ-ள். அறுசுவையோடு மிக்கப் புசிக்கின்ற அன்னத்தால் உடலுக்குண்டாகிற பலத்தைவிட, 8-பங்கு பலம் மாவும் அவலும் ஆம், இவ்விரண்டைப்பார்க்கிலும் 8-பங்கு பலம் பாலும் பழமும் ஆம், இவைகளைவிட 8-பங்கு பலம் மாமிசமும் கிழங்கும் ஆம், இவைகளுக்குமேல் 8-பங்கு பலம் பற்பல நெய்கள் ஆம், இந்த நெய்கள் இவ்வாறே பலத்தையும் மிதந்தப்பினுல் தீமையையும் செய்யும்.

## உண்பதற்கு முன்பின் உண்ணுங் கனிகளின் குணம்

அருந்தற்கு முன்பருந்த லாமா மகல
மருந்தற்குப் பின்பிலந்தை யாகும்—பொருந்தியவெங்

காலுங் கபித்தக் கனியாகு மாகாவெக்
காலுங் கதலிக் கனி.

இ-ள். புசித்தற்குமுன் நெல்லிக்கனி பின்பு இலந்தைக்கனி இவ்விரண்டு காலங்களிலும் விளாங்கனியும் புசிக்கலாம், வாழைக் கனி எப்போதுங் கூடாது என்க. 1519

## உண்டபின்பு குறுநடை கொள்ளுதலின் குணம்

உண்டபின்பு நூறடிவைத் தோங்காக் குறுநடையை
கொண்டவர்க்கு முன்புகுடர் கொண்டபருந்-திண்டியெலாஞ்
சேர்ந்தொன்றாய்ச் சீரணிக்குந் தீயமுந் தோடங்களதி
லார்ந்தோன்ற மாட்டா வறி.

இ-ள். இராப்போஜனம் செய்தவுடன் தனது காலால் சிறு நடையாக 100-அடி உலாவியபின் நித்திரைக் கொள்பவர்களுக்கு முன்புண்ட அன்னத்திற் சேர்ந்த விஷம், பதார்த்தங்களெல்லாம் ஒன்றாறக்கலந்து சீரணிப்பதுந்தவிர அவ்வுண்டியில் திரிதோஷமுஞ் சாராதென்றுணர்க. 1520

---

# பரிமள வகை

## மணக்குழம்புப் பூசுதலின் குணம்

பூசுமணத் தாலின்ப பூணு மணுக்கிருமி
நாசமுறு முட்டைக்கு நல்வலியாந்—தேசமறு
நாதவிந்துவும் விரைத்தீ நண்ணா மிகவிளையுஞ்
சீதவிந்துவின் குளிர்ச்சிபோந் தேர்.

இ-ள். புசித்தவுடன் பகலிரவிலும் பூசப்பட்ட மணக்குழம்பி னால் மகிழ்வும் உதராக்கினிக்கு வன்மை இவ்வாசனையின் சூட்டி னால் சோணித சுக்கிலவிளைவும் உண்டாகும் ரசதாதுவில் ஊருகின்ற அணுக்கிருமிகளும் சந்திரகிராணத்தால் வராநின்ற சீதளக்குளிரும் நீங்கும். 1521

## கார்காலமணப்பூச்சியின் குணம்—விருத்தம்

கார்காலந்தனிற்பூசக் கருப்பூரசந்தங்
கஸ்தூரியகிற்கூட்டு காந்தியுமுண்டென்பார்
சீர்மேவுசிறப்புண்டாஞ் சீர்த்தியுவந்தெங்நும்
தேகத்தின்வியர்வகலு மிளைப்போடுட்சுரம்போம்
கூர்மேவுகாசமிழுப் பிருமலிவைவிலகுங்
குட்சிவாய்வதுதொலையு நேத்திரமுந்துலங்கு

மாவமிருந்தாகமறும் வீரியமுமுண்ணு
மறிந்தென்றுநடந்திடுவர்க்கம் புவியின்மீதே.

இ-ள். மழைக்காலத்தில், பரவைக்கருப்பூரம் கஸ்தூரி அகில் கூட்டு இதுகளைக் கிரமப்படி நல்ல சந்தனத்திற் சேர்த்தரைத்துப் பூச அழகு மேன்மை கீர்த்தி விழிக்குட்பிரகாசம் இச்சை சுக்கில விருத்தி ஆகிய இவை உண்டாம் வியர்வை அயர்வு உட்சுரம் இருமல் சுவாசகாசம் வயிற்றுவலி தாகம் இவை விலகும் இது உஷ்ணம் என்பர். 1522

பனிக்கால மணப்பூச்சின் குணம்—விருத்தம்

பனிக்காலந் தன்னைத்தேடிக் குங்குமச்சோரம்
பகருமகில்கஸ்தூரி சாந்துசவ்வாதுடனே
பனிப்பகலச் சமஞ்சேர்த்துப் பனிநீர்குழைத்துப்
பண்புபெறப்பூசிபிடி லூக்கமுடைமையதாஞ்
செனிப்பான தாகமொடு பித்தமறுங்கபம்போந்
தினவுகெடும்வீரியமாஞ் செயமுயருமழகாந்
தனிப்பான செய்யமலர்த் திருவுமருங்கணைவாள்
சவுரியமுஞ்சேருமிகச் சந்தோடமுமுறுமே.

இ-ள். பனிக்காலத்தில் குங்குமப்பூ கிச்சிலிக்கிழங்கு அகிற் சாந்து கஸ்தூரி சந்தனம் சவ்வாது இவைகளை முறைமைப்படிப் பன்னீர்விட்டுக் குழைத்துப்பூசில் சரீரபலம் தாதுவிருத்தி மாதர் கூட்டம் வனப்பு லட்சுமிவிலாசம் வீரியம் களிப்பு இவைகள் உண்டாம்; தாகம் பயித்தியம் சிலேத்மதோஷம் நமைச்சல் ஆகிய இவைகள் நீங்கும். 1523

மாலையணிதலின் குணம்—வெண்பா

முல்லைமுத னீடுமண மொய்த்தலர்ந்த தொத்தணிவாக்
கில்லையெனுந் தாதுநட்ட மில்லைமா—மொல்லைமனத்
துக்கமொழியுஞ் சுகமொழியும் பூரிப்பு
மிக்க மொழியவரு மேல்.

இ-ள். முல்லை முதலிய மிகுவாசனையுள்ள மலர்மாலையைப் புனைபவர்கட்கு சுக்கிலதாது விருத்தியும் மங்களவார்த்தையும் மகிழ்ச்சி நிறைவும் பலர் புகழ்ச்சியும் உண்டாம் மனத்துயரப் போகும். 1524

பன்னீரின் குணம்

பன்னீர் மிகக்குளிர்ச்சி பாராய் சுகசந்திக்
கின்னீருண் ணேரு மிளைப்புமறுஞ்—சந்திகளும்

வாதபித் தையமொடு மானே வியாகுலமும்
பூதலம்விட் டேகும் புகல்.

இ-ள். பன்னீரை ஔஷத அநுபானங்களிற் கூட்டி அருந்தில் சுகசந்நியும் சந்நிபாதங்களும் விலகும்; தனியே குடித்தால் ஆயாசமும் திரிதோஷங்களும் மனச்சங்கடமும் நீங்கும். பன்னீர்ப்பூசி தோஷ்ண திரவியம் ஆதலால் இதில் இறங்கிய நீரைக்குளிர்ச்சி என்றார். 1525

# தாம்பூல வகை

## தாம்பூலப் பொதுக்குணம்—விருத்தம்

தக்கோலந் துவருறைப்பு காரமாமச்
சாரங்கடாயமதிற் சிலதோடம்போம்
நிற்காது கிருமியுந் தாகம்பன்னோய்
நிறைபசியாமாதர்குழா நெருங்கிமேலு
மிக்கான சுவையுதிரஞ் சுத்தியாகும்
விடாய்நீங்கு மடிவொளிருந் தாதுமுண்டா
மெக்காலுந் தருமமெய்துங் கலையுஞ்சேரு
மெக்கருமங்கட்குமிஃ தாகுங்காணே.

இ-ள். தாம்பூலரசத்தினால் கிருமி கபம் தாகம் பல்நோய் விடாய் இவைகள் நீங்கும், பசி ஸ்திரீகளின் உறவு நாவுரிசை மல சுத்தி நுண்ணறிவு சுக்கிலவிருத்தி தரும குணம் அழகு உண்டாம். அன்றியு மது சுபாசுபங்களுக் குதவும் என்க. தக்கோலம் - ஏலம் முதலிய வாசனைத் திரவியம். துவர் - பாக்கு, உறைப்பு - வெற்றிலை, காரம்-சுண்ணாம்பு. 1526

## கொட்டைப்பாக்கின் குணம்—வெண்பா

கொட்டைப்பாக் கென்றுரைக்கிற் கோழைமலம் போமூலத்
தட்டைப்பார்க் குங்கிருமி சாமந்தக்—கொட்டைப்பாக்
கொத்தசுரத் தோர்க்குமருந் துண்டவாய்க் கும்மெடுத்து
மெத்தவுண்ணிற் சோபைவரும் விள்.

இ-ள். கொட்டைப்பாக்கினால் கோழை மலம் மலப்பையினது அடித்தட்டிலிருக்கும் கிருமி இவை நீங்கும். இது சுரநோயுடையவருக்கும் ஔஷதஞ் சாப்பிட்டவருக்கும் வாயிற் போட்டுக்கொள்ள உதவும். அதிகமாகத் தின்றால் சோபாரோகம் உண்டாகும் என்க.

## இளங்கொட்டைப்பாக்கின் குணம்

வளங்கட் டிலங்கைநகர் வாசியென வந்த
விளங்கொட்டைப் பாக்குண்பார்க் கொன்றுங்—களங்கட்டும்

வாயுவே காமறவன் வல்லருசி யேகுமகத்
தேயுவாகா மறைவே தோ.

இ-ள். வளப்பம் பொருந்திய இலங்கை நகராகிய கொழும்புத் தேசத்தில் உண்டாகிற இளங் கொட்டைப்பாக்கைத் தின்பவர்க்குத் தொண்டைக்குள் கோழையடையும். வாதமும் நீங்காக்கபமும் வலிய அருசியும் விலகும். பசி விலகாது, இது ஒளிப்பல்ல. 1528

## இவ்விதப் பாக்குகளை நீக்கவேண்டுமெனல்

அதிபிஞ் சதிமுப் பதிபசுமை மேனி
அதிவீரம் பூச்சிகளுள் ளாட—லதிசொக்க
லுள்ளவிதப் பாக்குகளி லொன்றேனு நேரிலதைத்
தள்ளவிதி முக்காலுந் தள்.

இ-ள். மிகவும் இளம்பிஞ்சு அதி முதிர்ச்சி மிகப்புதிது பச்சை புழுவாடல் சோருதல் ஆகிய இக்குணங்களுள்ள பாக்குகளைத் தின்னுமல் நீக்கவும் என்க. 1529

## சொத்தைப்பாக்கின் குணம்

சொத்தைப் பிளவடித்துத் தோயமதி லூறவிட்டுச்
சத்துவர நூறுவிசை தான்கழுவி—வைத்துலர்த்தி
வாசமமைத் துத்தின்ன மந்தமொடு தோடமறுந்
தேசு மழகுமுறுஞ் செப்பு.

இ-ள். சொத்தைப் பாக்குகளை இடித்து நல்ல ஜலத்தில் ஒரு நாளூறவைத்து நூறுதரங்கழுவி உலர்த்தி அதில் வால்மிளகு முதலிய வாசனைத் திரவியங்களைக்கலந்து தாம்பூலந் தரித்துக்கொள்ளில் அக்கினிமந்தம் திரிதோஷகோபம் விலகும். ஒளியும் அழகும் உண்டாம். 1530

## களிப்பாக்கின் குணம்

களிப்பாக்குத் தின்றக்காற் கண்டத்துட் கோழை
ஒளிப்பாகக் கட்டு மிஃதுண்மை—தளிப்பான
பித்த வரோசகம்போம் பேதிமிக வுண்டாகுஞ்
சித்த மகிழ்ச்சியுறுஞ் செப்பு.

இ-ள். களிப்பாக்கைத் தின்றால் நெஞ்சிற்கோழை அதிசாரம் மனமகிழ்ச்சி உண்டாகும்; பித்த அருசி ஒழியும் என்க. 1531

## வெற்றிலையின் குணம்

ஐய மறுங்கா ணதன்சாரங் கொண்டக்காற்
பையச் சயித்தியம்போம் பைந்தொடியே—மெய்யின்

கடியின் குணம்போகுங் காரவெற் றிலைக்குப்
படியுமுத் தோடமிதைப் பார்.

இ-ள். காரமுள்ள வெற்றிலையின் ரசத்தைப்பருகில் கபம் சீத ளம் காணுக்கடியின் துர்க்குணம் திரிதோஷகோபம் இவைகள் ஒழியும். 1532

## கம்மாறுவெற்றிலையின் குணம்

ஏட்டிலொன் றிகிட்டினீ ரேற்றஞ் சிரோபார
மாட்டிவிடு சந்நி மாந்தமொடு—நாட்டிற்
பரியகுரற் கம்மல்வலி பண்டியுப்பி சம்போ
மரிய கம்மாறு வெற்றிலை.

இ-ள். கம்மாறு வெற்றிலையால் சலதோஷம் சிரோபாரம் சந்நி மந்தாக்கினி குரற்கம்மல் வயிற்றுவலி உப்பிசம் போம். 1533

## கற்சுண்ணத்தின் குணம்—விருத்தம்

உண்டவனஞ்சிரணமா நெய்ச்சிக்கேகு
முறில்விந்து விற்கூக்க முறுங்காண்வாயில்
விண்டவெயிறிறுகுமறற் பேதிவற்றும்
வெந்தளித்தநீர்ச்சுறுங்கும் விலகுமெய்யை
யண்டுபவவிடமொழியுங் கறையோர்க்கு
மழலுறுபுண்சிரங்குநமை யழுபுண்ணூறுங்
கண்டவுருவன்மீகஞ் சிரநோய்சந்நி
களுங்கரக்குங்கற்சுண்ணங் காணுங்காலே.

இ-ள். கற்சுண்ணத்தால் அன்னஞ் சீரணமாவதுந்தவிர குடலிற் பிடித்த நெய்ச்சிக்குபேதி வாதகிரிச்சம் பூரான்கடி முதலிய பல விஷம் காயங்களாலொழுகுகின்ற ரத்தம் நெருப்புச்சுட்டபுண் சிரங்கு தினவு அளிந்தவிரணம் கபநோய் மண்டைப்புற்று தலைநோய் சந்நி இவை நீங்கும். சுக்கிலத்திற்குப் பலமும் தந்தங்களுக்குறுதி உண்டாம். 1534

## முத்துச்சுண்ணத்தின் குணம்

முத்துச் சுண்ணத்தான் முதிர்ந்தவதி சாரமையுங்
குத்துக் கிருமியொடு குன்மநோய்—நத்தியதோர்
வாத வரோசகமு மாறிவிடு மலர்ந்த
போதிலுறை மாதே புகல்.

இ-ள். இலக்குமியனைய பெண்ணே! முத்துச் சுண்ணத்தினால் நீடித்த பேதி கபக்கட்டு மலக்கிருமி வயிற்று நோய் வாத அரோசகம் ஆகிய இவைபோம் என்க. 1535

## தாம்பூலத்தில் காய்ச்சுக்கட்டி சுக்கு லவங்கம் இவைகள் சேருதலின் குணம்

காய்ச்சுக் கட்டிக்கிறுகுங் கட்டவிழ்ந்த தந்தமங்கார்
பூச்சிக் குமிழாப் புனலிற்சா—மாச்சுக்
கிலவங்க மாதிகளா லின்புண்டா மின்னுஞ்
சொலவங்க நோயுமறுஞ் சொல்.

இ-ள். காய்ச்சுக்கட்டி சேர்ந்த தாம்பூலத்தினால் அசையும் பற்கள் இறுகும். அந்தச் சாற்றினால் மலக்கிருமிகள் கெடும்; சுக்கு கிராம்பு மணவருக்கங்கூடிய தாம்பூலத்தினால் முகக்களிப்புண்டாம்; சரீரத்தைப்பற்றிய ரோகம் அஜீரணம் முதலியவை நீங்கும். 1536.

## தாம்பூலந்தின்னுங் காலபேதம்

காலை பிளவதிகக் கட்டுச்சி நீரதிக
மாலை யிலையதிக மாயருந்தில்—வேலைநிலக்
காலை மலங்கழியும் கட்டுச்சி தீபனமா
மாலை மணங்குலவும் வாய்.

இ-ள். தாம்பூலந் தின்னுவதில் காலையில் பாக்கை அதிகமாகச் சேர்க்கில் சரியாக மலங்கழியும் மத்தியானத்தில் சுண்ணத்தை அதிகப்படுத்த நல்ல பசியுண்டாம் மாலையில் வெற்றிலை அதிகப்படுத்த வாயில் மணம்வீசும் என்க. 1537

## இதிலின்னதை முதலிற்றின்னவேண்டு மெனல்

வெற்றிலைக்கு முன்னம் வெறும்பாக்கை வாயிலிட்டாற்
குற்ற முறுமுறவோர் கூட்டம்போம்—வெற்றிலையை
முன்னிட்டுப் பாக்கருந்து மூதறிவோர் தம்மார்பின்
பின்னிட்டு வாழும்பூ மாது.

இ-ள். தாம்பூலந்தரிக்கும்போது முதலில் வெற்றிலையை யன்றிப் பாக்கைமாத்திரம் போட்டுக்கொண்டால் குற்றமுண்டாகும். பந்துக்களின் உறவு நீங்கும். முன்னதாக வெற்றிலையைத் தின்று பின்பு முறைப்படிக்குப் பாக்கு வெற்றிலைகளைத் தின்னவேண்டும். இவ்வண்ணம் நடத்துகிற விவேகிகளிடத்தில் லட்சுமி நிலைபெற்று வாசஞ்செய்வாளென்க. துவர்த்தல் சொக்குதல் மூர்ச்சை உண்டாவது வெற்றிலையில் ஒருவித புழுகுகள் இருப்பதால் இதை முதலில் தின்றால் உடற்கு அபாயம் நேரிடும் என்பதைக் கருதக் குற்றமுறும் என்றும் பந்துக்களின் கூட்டுறவு நீங்குமென்றும் சுண்ணந் தடவாத புனிதமுள்ள ஒரு வெற்றிலையை முதலில் மென்று அந்த

சாற்றை விழுங்கில் நெஞ்சு வறளல் கபக்கட்டு மேற்கூறிய பாக்கின் தோஷங்களும் விலகுவதால் லட்சுமி வாசஞ்செய்வாளென்றும் கூறினர். 1538

### தாம்பூலத்தில் இன்னவை விலக்கவேண்டுமெனல்

நீற்றிலையு மூக்கு நெடியநரம் புடனே
தீற்றும் புறவரியுந் தின்றக்கால்—மாற்றாரை
வெல்லப் போர்செய்யும் விறனெடுமா லாயிடினுஞ்
செல்லப்போய் நிற்குந் திரு.

இ-ள். தாம்பூலந் தின்னும்போது சுண்ணம்வைத்து காம்பு நுனி நீண்ட நடுநரம்பு பிற்புறத்தோல் இவைகளை நீக்காத வெற்றிலையைத் தின்னலாகாது தின்றால் அவர்களிடத்தில் லட்சுமி சேராள்.

### தாம்பூலரசத்தின் குணம்

வாயுமந்தம் பீநச துவாசகாசம் மருசி
ஏயுதர தோடமிவை போக்குந்—தூயுடற்குக்
காந்திதரும் புத்திக்குங் கட்குநலஞ் செய்புமணஞ்
சார்ந்த தாம்பூல ரசம்.

இ-ள். வாசனைவர்க்கஞ் சேர்ந்த தாம்பூலச்சாறானது மண வாத்தவாதம் அக்கினிமந்தம் நாசிரோகம் சுவாசகாசம் அரோசகம் வயிற்றைப்பற்றிய துர்க்குணம் ஆகிய இவைகளை நீக்கும் சரீரத்திற் கொளிவையும் அறிவு இவைக்கு நலத்தையும் விளைக்கும். 1540

### தாம்பூலரசம் விழுங்கும் வகை—விருத்தம்

அடைக்காய்தின்பதி னூறுமுதனீர்நஞ்சா
மதிபித்தமிரண்டாவ தூறுநீரே
கடையமிர்தமூன்றாவ தூறுநீர்தான்
கனமதுரநான்காவ தூறுமந்நீர்
மடையெனவேயைந்தாறிற் சுரந்துள்ளூறி
வருநீர்களைச்சுவைத்து மனங்கொண்டுண்டாற்
றடையுருப்பித்தமொடு மந்தநோயுந்
தவிபாண்டுநோயுமுண்டாந் தரஞ்சொன்னோமே.

இ-ள். பாக்கு வெற்றிலை சுண்ணம் இவைகளை ஒன்றுற மெல்லும்போது அதில் நின்று ஊறிய முதல்நீர் நஞ்சு 2-வது நீர் பயித்தியம் 3-வது நீர் அமிர்தம் 4-வது நீர் அதியினிப்பு 5-வது 6-வது நீர்கள் பித்ததோஷம் அக்கினிமந்தம் பாண்டுரோகம் இவைகளை உண்டாக்கும். 1541

# வாகன வகை

## யானையேற்றத்தின் குணம்—வெண்பா

தாதுவிர்த்தி யும்பசியுந் தாழாது நற்பவமுந்
தீதுபித்த மும்வளருந் திண்ணமே—வாதமைய
மேழு கடல்புவியு ளெங்கு நிலையாவாம்
வேழ நடாத்துவர்க்கு மெய்.

இ-ள். யானையேறி நடத்துபவர்கட்கு சுக்கிலம் ஜடாக்கினி பலம் பித்தம் விருத்தியாகும்; வாதகபதோஷங்கள் ஒழியும். 1542

## குதிரையேற்றத்தின் குணம்

உடலிறுகுந் தீபனமு முண்டாகு நாளும்
குடலிரங்கும் வெப்பாங் குளிரோ—குடிபோகும்
பொரியிருமற் போராடும் பூமாதுஞ் சார்வாள்
பரிநடத்து வார்தமக்குப் பார்.

இ-ள். குதிரையேறுவதற்கு தேகமிறுகல் பசி குடலண்டம் உஷ்ணம் சிற்றிருமல் லட்சுமி விலாசம் இவையுண்டாம். குளிர் நீங்குமென்க. 1543

## பல்லக்கேற்றத்தின் குணம்

வாயுமிக உண்டாகு மாருத பித்தமறு
மேய பசிகலங்கி கயய்துங்காண்—தீயமதன்
வெல்லற் கரியகலை விள்ளுஞ் சுகவணங்கே
பல்லக்கிவர் வையெனிற் பார்.

இ-ள். மதனகலை விள்ளுமாதே! பல்லக்கிலேறினால் வாதகோபம் கலங்கியபசி உண்டாகும் ஒழியாத பித்தகோபம் விலகும். 1544

## தண்டிகையேற்றத்தின் குணம்

கண்ணொளிவு தாதுபுஷ்டி காம மெழிலுடனே
எண்ணொளிருங் காந்தி யிவையுண்டாம்—விண்ணுலகு
ளெண்டிசையு மெச்சு மிளமயிலே யெப்போதுந்
தண்டிகையை யூர்வார் தமக்கு.

இ-ள். இளமயிலனையாளே! தண்டிகையை ஏறுபவர்கட்கு நேத்திரப்பிரகாசம் வீரியவிருத்தி சையோக விருப்பு அழகு ஒளிவு ஆகிய இவையுண்டாகும் என்க. 1545

## ஒயில்வண்டியேற்றத்தின் குணம்

சரீரமுறு நோய்போந் தனிவாத மேகுங்
கரீரமென வூருபித்தங் காணு—தரிய

வயில்வண் டினந்தானென் றண்டியஞ்சுங் கண்ணு
யொயில்வண்டி யேறுவோர்க்கென் றோர்,

இ-ள். வண்டும் வேலும் அஞ்சும் கண்ணுளே! ஒயில்வண்டி ஏறுபவர்கட்கு ஆவிருதவாதமும் தனிவாதரோகமும் அதிக பித்த தோஷமும் நீங்குமென்க. 1546

## பாதுகையிட்ட நடையின் குணம்

பலமண் பேதத்தாற் படருகின்ற ரோகக்
குலமேகும் விந்துநெடுங் கூறி—னிலவரமே
வாதபித்த மையமறு மாதரசே நாடோறும்
பாதுகையை நீயணிந்து பார்.

இ-ள். மாதரசே! மிதியடியிட்டு நடப்பவர்கட்கு மண் பேதங்களால் வருகின்ற சேற்றுப்புண் முதலிய ரோகங்கள் சுக்கில விருத்தி திரிதோஷம் இவை விலகும். 1547

## கால்கவசமிட்ட நடையின் குணம்

தரணிவெப்ப நோயுந் தரையாலா நோயு
மரணிகன் முன்ளா ளாமருப்புந்—தரணியடர்
தேட்புழுக்க ளாதிகளாற் சேரும் பகுவாலுங்
காற்கவசத் தாற்கின்று காண்.

இ-ள். காலிற் சவசமிட்டு நடப்பவர்கட்கு சூரியகிரணம்பட்ட பூமியால் வருநோயும் கட்டை கல் முள் இவைகளால் உண்டாகின்ற ரணங்களும் தேள்கிருமி முதலியவற்றூற் றொடராகின்ற இடருமில்லை. 1548

## சதாபாத நடையின் குணம்

சதாமிகுந்த பாதநடை தன்னு லொளிவுஞ்
சதாவங்க புட்டியொடு ததும்பு—நிதானமுறும்
வீரிய விர்த்தியும்போ மேனிகிழ மேனிபதாஞ்
சீரியநற் கொங்கைமின்னே செப்பு.

இ-ள். சிறப்புற்ற கொங்கைகளை யுடையவளே! எப்போதும் அதிநடை நடப்பதால் காந்தியும் சகசதேக புஷ்டியும் பலமும் மத்திபமாம் சுக்கிலட்க்ஷீணமும் கிழரூபமு முண்டாம். 1549

## அதிக ஓட்டம் சதா உட்கார்ந்திருத்தல் நொந்த சோறுண்ணல், மிகுகாற்று விரும்புதல், இவைகளின் குணம்

ஓட்ட மிகினு முளுக்கார்ந் திருந்திடினுஞ்
சூட்டாவி நொந்தபதந் துய்த்திடினுந்—தாட்டிகமாய்க்

காற்றுடலிற் பட்டிடினுங் காரிகையே நோயுடலாஞ்
சாற்றுகின்ற வாதமுறுந் தான்.

இ-ள். இரைக்கும்படி ஓடுதல் சதா உட்கார்ந்திருத்தல் சுடு புகைபடும்படி உலாவல் நொந்த சோறுண்ணல் மிகுகாற்று விரும்புதல் இச்செய்கைகளினால் முறையே க்ஷயம் அதிதூலம் நேத்திர ரோகம் அக்கினிமந்தம் முதலிய நோய்களும் வாதரோகங்களும் உண்டு. 1550

ஊன்றுகோலின் குணம்

பலமிருந் தாலாம் பயமனைத்து நீக்கு
மூலவுவிழு புத்தியிவைக் கொக்கும்—பலமருளும்
வீறு தயிரியமும் வீரிய முண்டாக்குங்
கூறியலர் வோட்டுங்கைக் கோல்.

இ-ள். கையில் பிடிக்கின்றதடி கண்ணுக்கும் அறிவிற்கும் ஒத்திருப்பதன்றி நாய் முதலிய பற்பல மிருகங்களினால் உண்டாகிற பயத்தையும், இளைப்பையும் நீக்கும். வன்மை திடம் பராக்கிரமம் இவைகள் உண்டாம். 1551

---

# சயன வகை

புஷ்பணையின் குணம்

தீபாக்கினி தழையுந் தின்றமருந் தாலெழுந்த
தாபாக்கினியுந் தணியுங்காண்—யாபார
நட்புவரு விந்துறு நாளுமுடலஞ் செழிக்கும்
புட்பவணைக் கென்றே புகல்.

இ-ள். முல்லை மல்லிகை முதலிய புஷ்ப மெத்தையில் துயில்பவர்களுக்கு பசி போகத்திலிஷ்டம் சுக்கில விருத்தி சரீரம் செழித்தல் இவை உண்டாம் மருந்தினால் உண்டாகிய உஷ்ணந்தீரும். 1552

இலவம்பஞ்சு, பருத்திப்பஞ்சு இவ்வணைகளின் குணம்

இலவம் பஞ்சுபடுக் கைக்கேகு மனலம்
மலர்பருத்திப் பஞ்சி னணையோ—உலவிரத்தம்
விந்திவைகளைப் பெருக்கு மேல்விரக முண்டாக்குங்
குந்து சுரத்தை யழைக்கும்.

இ-ள். இலவம்பஞ்சு மெத்தையிற் படுக்கையால் உட்சூடு நீங்கும் பருத்திமெத்தையிரத்தம் விந்து காமம் சுரம் இவைகளை விருத்தி செய்யுமென்க. 1553

## இரத்தினக் கம்பளத்தின் குணம்

### விருத்தம்

பஞ்சவன்னஞ்சேர்நற்கம் பளத்துறுஞ்சலவைதோடம்
விந்திடும்பித்தந்தாது விர்த்தியுமுண்டாஞ்சீத
மஞ்சிடுங்கோபமைய மலைந்திடும்பாண்டுவோடு
நஞ்சுகளெல்லாந்தீரு நலம்பெருமுஷ்ணமாமே.

இ-ள். வெள்ளை சிவப்பு மஞ்சள் பச்சை கறுப்பு என்னும் 5-நிற ரோமங்களால் நெய்த இரத்தினக் கம்பளத்திற்குச் சீதள தோஷம் குளிர் கபாதிக்கம் பாண்டு வீக்கம் பற்பல விஷம் இவைகள் நீங்கும். பித்தமும் சுக்கில தாதுவும் அதிகரிக்கும். இது மிகவும் உஷ்ணமாம். 1554

## சகலாத்தின் குணம்

### வெண்பா

குளிர்சுரத்திற் கேற்குங் குளிர்பனியைப் போக்கும்
வளர்பெரும் பாடகனை மாற்று—மளிக
ளகலாத் தெரிய லணியளக மின்னே
சகலாத் தெனவே சாற்று.

இ-ள். அழகிய கூந்தலையுடைய பெண்ணே! சகலாத்தென்கிற ரோம வஸ்திரம் நடுக்கற் சுரத்திற் குபயோகப்படுத்துவதுமன்றிக் குளிர் பனி அசிர்க்கர நோய் இவைகளை நீக்கும். இது உஷ்ண குணத்தை யுடையது. வர்ணச் சேர்க்கையால் அனந்த பேதமுற் றிருப்பினும் எவைகட்கும் அக்குணமே ஆம்; ஆனால் வெண்மை பசுமை நீலம் ஊதா என்னும் நிறங்களுள்ளவைகள் அற்ப உஷ்ண மாம் என்க. 1555

## தாழம்பாயின் குணம்

தாழம்பாய் வாந்தி தலைசுழற்றல் பாண்டுபித்த
மாழஞ்சேர் நீராமை யாம்பிணியும்—வீழுந்தண்
ணீரிழிவும் போக்குமிக நேசித் தவர்குலத்திற்
காரிழியுங் கூந்தன்மின்னே காண்.

இ-ள். மேகம்போன்ற கூந்தலாளே! தாழம்பாய் வமனம் தலைச்சுழற்றல் பாண்டுரோகம் பித்த தோஷம் நீராமைக்கட்டி வெகு மூத்திரம் இவைகளை விலக்கும் என்க. 1556

## கோரைப்பாயின் குணம்

கோரையின்பாய் நற்குணமாங் கூறரிய மந்தமறுங்
கூறிய தேகங் குளிர்ச்சியுறும்—வாருலகி
னன்னித் திரைகூடு நாடாது ரூட்சையிதை
யுன்னிப் புவியி லுரை.

இ-ள். நற்குணமுள்ள கோரைப் பாயானல் அக்கினிமந்தம் சுரவேகம் நீங்கும்; தேகக் குளிர்ச்சியும் சுகநித்திரையும் உண்டாம் என்க. 1557

## சாதிப்பாயின் குணம்

சாதிப்பாய் சீதளமாஞ் சாருமித னன்மூலம்
பேதிக்குட் சீதம் பிசறுங்காண்—வாதிக்குஞ்
சீதசுரங் காணுஞ் சிரசு மிகக்கனக்கு
மேதகுநோ யாளர்க் கிசை.

இ-ள். பிரப்பம்பாயினுல், மூல ரோகம் சீதபேதி சீதசுரம் சிரோபாரம் உண்டாம்; இது சீதளமாம். சாதி யென்பது - பிரம்பு. 1558

## பேரீச்சோலைப்பாயின் குணம்

பேரீச்சுப் பாயினிதம் பேரா துறங்குவர்க்குப்
பாரித்த குன்மம் பறக்குங்காண்—பூரித்த
வீக்கமறுந் தீபனமா மெய்யைவெளுப் போடுட்ண
மாக்கிவிடு மென்றே யறி.

இ-ள். பேரீச்சோலைப்பாயில் தூங்குபவருக்கு, வாத குன்மம், சோபை நீங்கும்; பசி பாண்டு உஷ்ணதிக்கம் ஆகிய இவைகள் உண்டாம். 1559

## சிற்றீச்சோலைப்பாயின் குணம்

சிற்றீச்சுப் பாயிற் றினமும் படுப்பவர்க்
குற்றிடுமே காந்த லுடம்புலருஞ்—சுற்றியதோர்
வாயுவுறும் பித்தமறு மற்றுங் கபந்தீருந்
தாயகமா மிக்குணத்தைச் சாற்று.

இ-ள். சிற்றீச்சுப் பாயில் துயில்பவர்க்கு உஷ்ணம் தேக வுலரல் உண்டாம்; ஆவிருதவாதம் அதிபித்தம் கபச்சினம் ஆகிய இவை உண்டாம். 1560

## மூங்கிற்பாயின் குணம்

நீர்க்கடுப்பு மெத்தவுறு நீடுபித்த மூம்பெருகு
மார்க்கு மனல மதிகரிக்கும்—பார்க்குளுறை
கோங்கி னறியமுகைக் கொங்கை மலர்த்திருவே
மூங்கிலின் பாய்க்கு மொழி.

இ-ள். கோங்கரும்பனைய கொங்கை மின்னே! மூங்கிற்பாய்க்கு மூத்திரகிரிச்சரம் பித்தகோபம் மிகு உஷ்ணம் ஆகிய இவைகள் விருத்தியடையும் என்க. 1561

## தலைக்கணையின் குணம்

கழுத்திற்குந் தோளிற்குங் கண்ட வுயர்வாய்
வழுத்துநீ ளத்தில்வைத்த மட்டா—யிழைத்தநறும்
பஞ்சின் றலைக்கணைக்கெப் பானரம்பு நன்குறும்போந்
துஞ்சின் றலைக்குமுச்சிச் சூர்.

இ-ள். கழுத்துக்கும் தோளுக்கும் மத்தியிலிருக்கும் அளவு உயரமுள்ளதாகவும் நீளம் வேண்டியமட்டாகவும் இலவம் பஞ்சினால் தைப்பித்த தலையணையின்மேல், சிரசு வைத்துப் படுத்துக்கொண்டால் பாதாதிகேசம் வரைக்கும் உள்ள எந்தப் பக்கத்து நரம்புகளும் பிசகாமல் சமமாகவிருக்கும். அதுவல்லாமல் சிரசைப்பற்றிய ஆவர்த்த நோய்களும் நீங்கிவிடும். நாம் சொன்னது சந்தேகமிருந்தால் அம்விதமாக இப்போதே நீ நித்திரை செய்து பரீக்ஷைப் பார்ப்பாயாக. 1562

---

# விசிறி வகை

---

## மயில் விசிறியின் குணம்

சந்நிவிடங் குன்மந் தலைச்சுழலல் பித்தம்விக்க
றுன்னுசுவே தம்வாத தோடமும்போம்—பன்னவதி
லுட்டிணமாம் புந்தி யொளிரும் பசுந்தோகை
யிட்ட மயில்விசிறிக் கே.

இ-ள். மயிலிறகினாற் செய்த விசிறிக்கு விஷம் சந்நிபாதம் வயிற்றுவலி தலைச்சுழலல் பித்தகோபம் விக்கல் வியர்வை வாதகோபம் ஆகிய இவை நீங்கும்; அறிவு விளங்கும். இது உஷ்ணகாரியம். 1563

### வெட்டிவேரின் குணம்

வாசவெட்டி வேர்விசிறி வன்பித்த சோபமொடு
வீசு மெரிச்சலையும் வீழ்த்துங்காண்—பேசுங்காற்
றூகமற்றுஞ் சாடும் சகல மனோக்கியமா
மோகமருண் மாதே மொழி.

இ-ள். மோகம் அருள் மாதே! மணமுள்ள வெட்டிவேர் விசிறி பைத்திய தோஷம் தேக எரிவு விதாகம் இவைகளை நீக்கும். மனோற்சாகத்தை உண்டாக்கும் என்க. 1564

### பனையோலை விசிறியின் குணம்

பனைவிசிறி தன்னாற் பருத்தவொரு வாத
வினையைய நோயும் விலகும்—கனபித்த
நோயு மருசியென்ற நோயுங் குடியேகுந்
தேயுமிடை மாதே தெளி.

இ-ள். நுண்ணிய யிடையாளே! பனையோலை விசிறியினால் வாத தோஷம் சிலேத்ம ரோகம் பித்தாதிக்கம் அரோசகம் நீங் கும் என்க. 1565

### வெண்சாமரையின் குணம்

வெண்சா மரத்தால் வியர்வையா யாசமொடு
திண்சோபை மூர்ச்சைத் திருக்குமறும்—தண்சாரத்
தாகமறும் வெப்பந் தணியுந் திருவமரும்
போகமுறு மாதே புகல்.

இ-ள். போகமுறு மாதே! வெள்ளைச் சாமரத்தினால் வியர்வை ஆயாசம் மயக்கம் மூர்ச்சையால் வராநின்ற ஞாபக மறதி நாவறட்சி உஷ்ணம் ஆகிய இவை போம். லட்சுமி விலாசமும் புணர்ச்சியில் இச்சையும் உண்டாகும் என்க. 1566

---

## புணர்ச்சி வகை



### இவ்வித மாதர் போகம் கூடாதெனல்

கலித்துறை

தூக்கம்பயமதிக கேசந்தரிமலந்துஞ்சலலி
வெட்கம்பசிகருப்பந் தாகமூப்புவெறுப்பசுபஞ்

சுட்கமலட்சியங்கோபம் ரூபமெய்த்தூர்க்கந்தங்கோண்
முக்கதிதூலமுடைமாதர்போகம் வினைக்குவித்தே.

இ-ள். துயரம் அச்சம் தேக முழுதும் ரோமம் திரிதோஷ கோபம் தூங்கி விழித்தல் அலித்தன்மை நாணம் பசி கருப்பம் தாகம் தன் வயதுக்குக்கு மேற்பட்ட வயது புணர்ச்சியில் வெறுப்பு சுபமின்மை சூசி மூகயோனி ரோகம் அலட்சியம் கோபம் அழகின்மை கற்றுழை நாற்றம் கோள் சொல்லுதல் அதிதூலரோகம் ஆகிய இவைகளையுடைய மாதர்கள் போகம் சகல ரோகங்களுக்கும் காரணமாம் என்க. 1567

இதுவுமது—வெண்பா

தேவ குருவரச தீனதூ ரத்தையலர்
பாவ வமங்கலமாம் பாவையர்பான்—மேவுமின்பம்
கண்டாரைச் சாருமுறு கண்ணிடுக்க மின்றியே
விண்டாரைச் சாருமுன்னி வள்.

இ-ள். தேவ ஸ்திரீ குருபத்தினி இராஜபத்தினி ஏழை ஸ்திரீ தூரஸ்திரீ பழிமாது விதவை இவர்களைப் போகிப்பவர்களைத் தாரித்திரமும் துன்பமும் தொடருமே அல்லது இவர்களைவிட்டு மற்ற யாரைத்தொடரும். 1568

புணர்ச்சிசெய்யும் விதி

அங்கமுற் றும்பா கியமாயா ரவ்மொன்று
யங்கமுற்றும் போகமொன்று யாருங்கா—லங்கத்
துறையுஞ் சுகசவிற லுற்ற கருவிங்க
னுறையும் பருவத்த வர்.

இ-ள். சுகசபதம் என்கிற பருவமுள்ள ஸ்திரீயும் புருஷனும் சரீரமுழுதும் மறைப்பில்லாமல் இருவருக்கும் ஆசை அன்பு போகம் ஒன்றாகியும் கூடுங்காலத்தில் உண்டாகும் கருவானது தாய் தந்தையர்களுக்கு உள்ள பலத்தைக் குறித்து உண்டாகும். ஆசை, அன்பு என்பது எப்போதும் உண்டாயிருக்கும் ஆசை. 1569

அரோக சந்தானப் புணர்ச்சியின் குணம்

பதினாறெனுமாயுட் பாவையுநா லைந்தென்று
றுதியாயுட் காளையுமெய் யொவ்வின்—மதியோ
தாமிரவி லுண்டாந் தநுசற்குந் தேகந்
தீமிரவி மஞ்சுறுசண் டோர்.

இ-ள். பதினாறு வயதுள்ள ஸ்திரீயும் இருபதுவயதுள்ள புருஷனும் மாதத்துக்கு ஒருநாள் இராத்திரிகாலத்தில் சரீரசம்பந்தப்

பட்டால் உற்பவிக்கும் குழந்தைகளுக்குத் தேக திடமாயிருக்கும் வியாதிவாராது; வந்தாலும் சூரியனைக்கண்ட பனிபோல் நீங்கிவிடு மென்க. தநுசர்க்கும் என்ற எச்ச உம்மையால் தாய்க்கும் தந்தைக் கும் தேகம் உறுதியாயிருப்பதுமன்றி வியாதியு மணுகாதென்பது கருத்து. மேற்சொல்லிய ஸ்திரீக்கு கருப்பையும் சோணிதமுஞ் சுத்தமாயிருக்கவேண்டும்; புருஷனுக்கோவென்றால் சுக்கிலமும் வாத மும் இருதயமும் சுத்தமாயிருக்கவேண்டும். இதில் சொன்ன இவ் வாறு இருந்தால் நல்ல கருத்தரிக்கும். முன்சொன்ன முறைப்படிக் கூடுவது ஸ்திரீக்கு மாதாந்த ருதுகாலமாகிய 12-நாளில் கூடவேண் டும்; ஏனெனில் அந்த நாட்களில் சுக்கிலம்போய்த் தங்குகின்ற கருப் பையினது துவாரம் ராத்திரிகாலத் தாமரைப்பூவைப்போல் மூடிக் கொள்ளாமலிருப்பதினாலென்றுகொள்க. ருதுவான முதல் 3-நாளும் அசுத்த நாளாகையால் புருஷன் சேரக்கூடாது: அதன் விவரம், கருப்பையின் முகத்துவாரமாகிய யோனித்துவாரம் பிரமாணத் தைத் தப்பி அதிகமாகத் திறந்திருப்பதால் அவ்வழியாகச் சுக்கி லத்தின் பங்கு மிகுதியாகச் செல்லப்படுகின்றது; அப்போது அவ் விடத்துச் சோணிதமும் இதுவும் ஏற்றக்குறைச்சலின்றி சமமாகத் திரண்டு ஆணும்பெண்ணும் அல்லாத அலிப்பிள்ளையாகப் பிறக்கும். இந்த ஏதுவைப்பற்றியே முதன் 3-நாளுக்கும் அசுத்த நாளென்ற தும் சேரக் கூடாதென்றதுமாம். மற்ற ஒன்பது நாளுக்குள் இரட் டித்த நாளில் சேர்ந்தால் ஆண் குழந்தையும் ஒற்றைப்பட்ட நாட் களில் சேர்ந்தால் பெண்குழந்தையும் உற்பவிக்கும். அந்தவிவரத்தை யெல்லாம் சரீரம் என்னும் சாத்திரத்தில் முதல் அத்தியாயத்திற் காண்க. இது நிற்க, சில மாதாந்திரத்தில் வசந்தகால முதலிய கால பேதத்தினால் மேற்சொல்லிய முறைதப்பிப் புணரலாமென்று சொல் லப்படுகின்றது; ஆயினும் அவ்விதப் புணர்ச்சியினால் பிறக்கும் சிசு வுக்கும் தாய் தந்தைகளுக்கும் மிகுரோக சம்பவமேயாம். 1570

## தினப்புணர்ச்சியின் குணம்

அனந்தவித பந்தத்தோ டல்லும் பகலு
மனந்தலிட்டுச் சேர்ந்தா ரலக்கண்க ளிந்நோய்ச்
சங்கைக்கு மூப்புமிலைச் சார்ந்த மருத்துவர்க
டங்கைக்கு மூப்புமிலைத் தான்.

இ-ள். கொக்கோக நூலிற் சொல்லாநின்ற பலவித லீலைகளு டன் இரவும்பகலும் நித்திரையின்றி ஸ்திரீபோகத்தில் அழுந்து பவருக்கு மிகுதியாயுண்டாகும் வியாதிகளின் அளவிற்கு முடிவும்

இ-ள். வாயுவென்கிற காற்றானது வெள்ளை விழும்போது ஆண்குறியின் துவாரத்தில் கடுத்தலை யுண்டாக்குவதுந் தவிர, மிகுதாகம் தேக உஷ்ணம் இளைப்பு ஆகிய இவைகளைத் தணிக்கும். ஆனால் மது மேகவிரணம் சுரம் கண்ணோய் இவற்றிற்கு ஆகாது என்க. 4

ஆகாயத்தின் குணம்

உலகுமன முமலவா மோடதியு மண்ணுஞ்
சகலமன லுங்காலுஞ் சாற்ற—அலகில்
அநந்தம் பொருளு மடங்கவுழி நல்கும்
அநந்தந் தனைக்கண் டறி.

இ-ள். ஜீவராசிகளும் அன்னரசமும் பலவகைப்பட்ட ஔஷதிகளும் பிருதிவு அப்பு தேயு வாயுக்களும் சொல்வதற்கு அளவு படாத சகல பதார்த்தங்களும் அடங்குவதற்கு இடந்தருகின்ற ஆகாயத்தின் றன்மையைக் கண்டு நீ அறிவாயாக என்க. மேற் கூறிய ஐம்பூதங்களுள் ஒவ்வொன்றினின்றும் பிரிவுற்ற பேதங்களையும் அவற்றின் குணங்களையும் தனித்தனியே சொல்லப்புகின் மிகவும் பெருகும். ஆதலால் அவைகளைப் பூதகுணகம மகாகுணபாட முதலிய நூல்களிற் காண்க. 5

---

## நிலத்தின் வகை

### குறிஞ்சிநிலத்தின் குணம்

குறிஞ்சி வருநிலத்திற் கொற்றமு முண்டிரத்தம்
உறிஞ்சி வருசுரமு முண்டாம்—அறிஞரைக்
கையமே தங்குதரத் தாமைவல்லை யுங்கதிக்கும்
ஐயமே தங்கு மறி.

இ-ள். சிலேஷ்ம வீடாகிய குறிஞ்சியென்று பெயர்பெற்ற மலைப்பூமியில் விளைகின்ற சகல ஔஷத முதலிய பொருள்களுக்கும் வன்மையுண்டாம். இதில் வசிப்பவர்க்கு உதிரத்தை முறிக்கின்ற சுரமும் வயிற்றில் ஆமைக்கட்டியும் உண்டாகும் என்க. 6

### நெய்தல் நிலத்தின் குணம்

நெய்தனில மேறுவர்ப்பை நீங்கா துறினுமது
வெய்தனில மேதங்கு வீடாகும்—நெய்தன்
மருங்குடலை முக்காக்கு வல்லுறுப்பை வீக்குங்
கருங்குடலைக் கீழிறக்குங் காண்.

அவைகளை நிவிர்த்தி செய்யவந்த மருத்துவர் கைகளுக்கு ஓய்வும் இல்லை என்க. 1571

## சுக்கில நிரோதனத்தின் குணம்

விந்துவை மறுக்குங்கால் வீக்கம் பிரமேக
முந்துவணி கல்லடைப்பு மூடுசுரஞ்—சந்துகைகா
லாசனநற் பக்கமிடுப் பல்வழிநோய் மார்புவலி
வீரனனீர்க் கட்டிவையா மே.

இ-ள். விருப்பமிருந்தும் போகியாமல் சுக்கிலபந்தஞ் செய்வதினால் சோபையும் சீழ்ப்பிரமேகமும் அண்டமும் அஸ்மரியும் காமசுரமும் கீல் கைகால்கள் குதம் நாபாரிசம் சகனம் ஆகிய ஸ்தானங்களில் சரிக்கா நின்ற வியாதிகளும் மார்புநோயும் பித்தகிருச்சரம் உண்டாம். 1572

## நித்திரைசெய்வதின் குணம்

ஐந்திரி யங்க ளசவுக் கியமகலு
மைந்தமனத் தூச்சாக நண்ணுங்காண்—பைந்தொடியே
மேனீட்டு மாயளுறு மெய்யி னயர்வொழியுங்
கானீட்டிப் பள்ளிகொள்ளுங் கால்.

இ-ள். முறைப்படி இடதுபக்கமாகப் படுத்துக் காலை நீட்டிக்கொண்டு நித்திரை செய்தால் பஞ்சேந்திரியங்களின் அயர்வும் சரீர வருத்தமும் தீரும் இளைத்த மனத்திற்கு உற்சாகமும் ஆயுசு விருத்தியுமுண்டு. 1573

## இதுவுமது

முக்காடிட் டங்கமுற்று மூடித் துயிலினிரண்
டக்கிக்குந் தோட்கு மதிபலமா—மிக்கான
சீதம்வெயில் தூசிபனி சீறிவரு காற்றிவையா
லோதவரு துன்பமிலை யுன்.

இ-ள். தேகாதி பாதம்வரைக்கும் வஸ்திரத்தினால் மூடிக்கொண்டு நித்திரை செய்யில் இரண்டு நேத்திரத்துக்கும் இரண்டு புஜங்களுக்கும் வன்மையுண்டாம். அன்றியும் குளிர்வாடை வெய்யிலின் வேகம் தூசி பனி காற்று குற்றங்களும் விலகும். 1574

## தொக்கணத்தின் குணம்

தொக்கணத்தி னுவிரத்தந் தோலூ னிவைகட்கு
மிக்க சவுந்திரிய மீனும்போ—மெய்க்கதிக

புட்டிரக்கம் மீது புணர்ச்சி யிவைகதிக்கும்
பட்ட வலேச்சலறும் பார்.

இ-ள். தொக்கணத்தினால் இரத்தசரும மாமிச தாதுக்களுக்கு மிகவும் போஷணையாவதுந் தவிர தேகபுஷ்டியும் நித்திரையும் புணர்ச்சியில் இச்சையும் அதிகரிக்கும் வாதாதிக்கமும் உழைப்பினால் வந்த வருத்தமும் நீங்கும். தொக்கணம் என்பது கையினால் குத்தி இதவாகம் பிடிப்பதாம். 1575

## இரவில் நித்திரை பங்கத்தின் குணம்

சித்தமயக் கஞ்செறியும் சீரைம்பு லத்தயக்க
மெய்த்தல னுக்கமைந்த மென்மைகை—ணித்தமுற
வண்டு சிலர்நாயாய்ப் பன்னோய் கவ்வுமிராக்
கண்டுஞ் சிலரைநம்பிக் காண்.

இ-ள். இரவில் துயிலாதவர்களை நம்பி, புத்திக்குத் தெளிவின்மை ஐம்புலச்சோர்வு கட்கம் பயம் அக்கினிமந்தம் முதலிய நோய்கள் தினமுஞ் சேருவனவாய் அன்றியும் வேடருடைய நாய்கள் கவ்வுதல்போலப் பல வியாதிகளும் கவ்விக்கொள்ளும் என்க. இரவில் நித்திரை செய்யாதவரை மேற்சொல்லிய ரோகங்கள் வருத்தும் என்பது கருத்து. 1576

## பகல் நித்திரையின் குணம்

### விருத்தம்

தண்டமேட்டாரக்ஷிய மூருத்தம்பஞ்
சருவாங்கமுக்கிராக் கிரகஞ்சுப்தி
துண்டமுறுவனுத்தம்பந் திருக்குத்தம்பஞ்
சோணிதமாட்டியப்புருவா டோபகந்தன்
னண்டுகிருத்திரசியூர்த் துவஞ்சம்பூக
மவபேதமவதந்திர மவதானந்தான்
விண்டவிவுர் பதினெண்காற்கும்
வித்தாகும் பகலனந்தன் மேவின்மாதோ.

இ-ள். பகல் நித்திரையானது தண்டம் மேட்டாரக்ஷியம் ஊருஸ்தம்பம் சருவாங்கம் உக்கிரக்கிரகம் சுப்தி அனுஷ்தம்பம் திருக்குஸ்தம்பம் சோணிதம் ஆட்டியம் புருவாடோபகம் கிருத்திரசி ஊர்த்துவம் சம்பூகம் அவபேதம் அவதந்திரம் அவதானம்

விவர்தாசிமை என்னும் 18-வித வாதரோகங்களைத் தருதற்கு ஒரு வித்தாகும் என்க. 1577

## பத்தியத்தோர் பகற்றுயிலின் குணம்

### வெண்பா

அண்டவங்கி யுண்டவுறை பங்கியரும் பத்தியத்தா
லண்டவகி மூன்றொ டனந்தலது—கொண்டவங்கி
கூடுங்கா னேத்திரநோய் கூடு மிரத்தபித்த
நீடுங்காண் விந்துவுநீ ராம்.

இ-ள். பத்தியங்கொண்டவர்களுக்குச் சூரியவெப்பம் ஔஷத வெப்பம் கடும்பத்தியவெப்பம் என்னும் 3-வெப்பத்துடன் பகல் நித்திரை செய்வதால் பிரிக்கின்ற வெப்பமுங்கூடுமாயின் விழிநோய் உண்டாகும் ரத்தபித்தரோகம் அதிகரிக்கும். விந்துவும் நீர்போலாகிவிடும். 1578

## ரசம்-கெற்கம்-செய்நீர்-குளிர்ந்தநீர் இவைகளின் சீரணகாலம்—விருத்தம்

பாரினின்மாந்தருண்ணும் பற்பலபண்டமெல்லாஞ்
சீரணமாகுங்காலந் தெளியவேசெப்பக்கேண்மோ
காரணரசமோரேழு கடிகையாங்கற்கஞ்செய்நீர்
வீரணத்தண்ணீர்சாமம் வெந்நீருமிரண்டேயாமம்.

இ-ள். உலகினில் மனிதாருந்தும் பலவாகிய பதார்த்தங்களின் சீரணகால அளவை கூறுமிடத்து யாதேனுமொன்றை இடித்துப் பிழிந்தரசம் 7-நாழிகையிலும் அரைத்த மருந்துகள் செய்நீர்கள் குளிர்ந்தநீர் இவைகள் ஒருசாமத்திலும் வெந்நீர் 2-சாமத்திலும் சீரணமாம். 1579

## காய்ந்தாறிய சலம், கஷாயம், பழச்சாறு, சோறு பால், தேன் இவைகளின் சீரணகாலம்

சாலவேகாய்ச்சியாறுஞ் சலம்பதமூன்றேமுக்காற்
சீலமாங்கடாயமூன்று சேர்பழச்சாறுமாறுந்
தாலமாஞ்சோறிரண்டு சாமமாமிருபதாகும்
பாலுதேன்பன்னிரண்டு நாழிகை பகருவாயே.

இ-ள். மிகவும் காய்ந்தாறிய சலம் மூன்றேமுக்கால் நாழிகை; கஷாயம் 3-நாழிகை, கனி ரசங்கள் 6-நாழிகை, அன்னம் 1-சாமம், பால் 20-நாழிகை, தேன் 12-நாழிகையிலும் சீரணமாம். 1580

## தயிர்ச்சோறு, மோர்ச்சோறு, நீர்ச்சோறு, வெண்ணெய்ச் சோறு, சாராயம் இவைகளின் சீரணகாலம்

வார்துவை தயிர்ச்சோறும் வருத்திடிற் பதினொன்றாகு
மோர்விடு பதம்பன்மூன்று மொழிபதம் பதினெட்டாகு
மாறுவச் சோறிரண்டு சாமமா மரியவெண்ணெய்ச்
சாருமா பன்னஞ்சாமஞ் சாராயங் கடிகையைந்தாம்.

இ-ள். தயிர் அன்னம் 11-நாழிகை, மோர் அன்னம் 13-நாழிகை, நீர் அன்னம், 18-நாழிகை, வெண்ணெய் அன்னம் 2-சாமம், சாராயம் 1-சாமம் அல்லது 5-நாழிகையிலும் சீரணமாகும். 1581

## சூரணம், தைலம், லேகியம், கிருதம், பஸ்மம், கறிகள் பழங்கள் இவைகளின் சீரணகாலம்

சூரணந்தலமிலேசங் கிருதஞ்சொற்பனிரெண்டென்னச்
சேருநாழிகையாம்பஸ்பஞ் சீரணமரைச்சாமத்திற்
கூறியகறிகளெல்லாங் கூறினுனாழிகையேயாகுஞ்
சீறியபழங்களெல்லாஞ் சீரணஞ்சாமந்தன்னில்.

இ-ள். சூரணம் தயிலம் லேகியம் கிருதம் இவை 12-நாழிகை, பஸ்பம் மூன்றேமுக்கால் நாழிகை, நல்ல பதார்த்தங்களெல்லாம் 7-நாழிகை, உயர்ந்த பழவர்க்கங்களெல்லாம் ஏழரை நாழிகையிலும் சீரணமாம். 1582

## கருணை முதலிய கிழங்குகள், வெந்து பாகமான விதைகள் பழச் சாறுகள், பச்சையாய் அல்லது வெந்ததாயுள்ள ஆறுவகைச்சுவை இவைகளின் சீரணகாலம்

உரைகருணைக் கிழங்கோ டெட்கிழங்கெல்லாஞ் சாமம்
விரைகளும் பழத்தின்சாறும் வெந்திடிற் சாமமேயாம்
பரிசுறுமவைகள் பச்சை யதாய்த் தின்றாலுங்
கரைவெந்ததைத் தின்றாலுங் கடிகையைந் ததன்மேயில்லை.

இ-ள். கருணை காராக்கருணை புளிகருணை நீர்க்கருணை சேனைக் கருணை முதலிய கிழங்குகளெல்லாம் ஏழரை நாழிகை, வித்துக் களும், கனி ரசங்களும் ஏழரை நாழிகை, அறுசுவைப் பதார்த்தங்

ஊளப் பச்சையாக அல்லது பாகஞ்செய்ததாக உண்ணில் 5-நாழிகை யிலும் சீரணமாம். 1583

## கழுநீர், காடி, மா, உண்டை, பொங்கல், பசும்பால் இவைகளின் சீரணகாலம்

காவிநேர்கண்ணாய்கேளாய் கழுநீர்காடியுமைந்தாகு
மாவுடனுண்டைபொங்கல் வகைகளோடாவினற்பான்
மேவுமோர்தினத்திந்நான்கு விதமுஞ்சேர்த்தருந்துமுண்டி
பூவினாலைந்துநாழி போயபின்சீரணிக்கும்.

இ-ள். நீலோற்பலம் போன்ற கண்ணாளே! கழுநீர், காடி 5-நாழிகையிலும், மா பொரியுண்டை மிளகோதனம் பசுவின் பால் இவைகளையெல்லாம் ஒன்றாகக் கலந்து ஒரு தினத்தில் அருந்தில் 20-நாழிகையிலும் சீரணமாம் என்க. 1584

## கஞ்சி வகை, நல்ல வெல்லம், தேன், காய்கள் பச்சரிசி இவைகளின் சீரணகாலம்

வர்த்திக்கும்வடித்தகஞ்சி வகையெட்டிற்சீரணங்காண்
தித்திக்கு நல்லவெல்லந் தேனிருபது நாழிகைக்கு
ஞற்றிடுங் காயினங்க ளற்றிடு மெண்பதத்துட்
கத்தும்பச்சரிசி நாலைங் கடிகையுட் சீரணிக்கும்.

இ-ள். தேகத்தைத் தூலிக்கச் செய்கின்ற வடிகஞ்சி முதலிய கஞ்சிகள் 9-நாழிகை, நல்லவெல்லம் தேன் பச்சரிசி 20-நாழிகை, கக்கரிக்காய் முதலிய காய் வருக்கரிக்காய் முதலிய காய் வருக்கங்கள் 8-நாழிகையில் சீரணிக்கும் என்க. 1585

## இளநீர், சருக்கரை, பாணக்கம், தயிர், மோர்களின் மேல்சலம், வறுத்தமா இவைகளின் சீரணகாலம்

இளநீர்சர்க்கரைபாணக்க மேழுநாழிகையிற்செரிக்கும்
வளமுள தயிரின்மேலும் வார்துணுமோரின்மேலுங்
தெளிவுறு தண்ணீருண்ணச் செரிந்திடுங்கடிகையைந்தில்
தெளியநல்வறுமாநீருஞ் செரிந்திடுங்கடிகையேழில்.

இ-ள். இளநீர் சருக்கரை பாணக்கம் 7-நாழிகை, தயிரன்னம் அல்லது மோரன்னம் புசித்து அதன்மேல் தண்ணீர் குடிக்கில் 4-நாழிகை, வறுத்த மாவைத் தண்ணீரிற் கரைத்துக் குடிக்கில் 7-நாழிகையில் சீரணம். 1586

## சுடுநீர், முக்காற் சுண்டிய நீர், ஆறிய நீர், இவைகளின் சீரணகாலம்

சுட்டநீருண்ணுங்காலை சொல்லியவாறுமுக்கான்
மட்டிலேகொதித்தவெந்நீர் வருக்கிலேழரையேயாகுந்
திட்டமாய்க்குளிர்ந்தநீர்தான் செரிக்குமொன்பதின்மேலென்ன
வட்டிட்டமுலையினாளே வழுத்துநாழிகையைத்தானே.

இ-ள். அடி பரந்த தனங்களை யுடையாளே! காய்ந்த நீர் 6-நாழிகை, முக்காற்கூறு சுண்டிய நீர் ஏழரை நாழிகை, அருந்தும் பதமாயாற்றிய நீர் 9-நாழிகையிலும் சீரணமாம். 1587

## மரம், பூ, தளிர் இவைகளின் சீரணகாலம்

தருசெடிகளிலுண்டாங்கேச ரங்கள்பூகொழுந்தேயெல்லா
மரிவையேநின்றிடிற்சீ ரணஞ்சாமந்தனிவிவ்வாறே
திரவியவினங்கட்கெல்லாஞ் செப்பிடும்வேதமென்றே
குருபரனடியைப்போற்றுங் குறுமுனியுரைத்தவாறே.

இ-ள். விருக்ஷம் செடி கொடி புல் இவற்றால் உண்டாகிற கேசரம் புஷ்பம் தளிர் இவைகள் ஏழரை நாழிகையில் சீரணமாம். இவ்வண்ணமாகவே சகல திரவியங்களுக்கும் சீரணகால அளவையை ஆயுள் வேதங் கூறுகின்றதெனை அகத்திய முனிவர் கூறிய வாறும். 1588

## நோயணுகா விதி—வெண்பா

திண்ண மிரண்டுள்ளே சிக்க வடக்காமற்
பெண்ணின்பா லொன்றைப் பெருக்காம—லுண்ணுங்கா
ணீர்சுருக்கி மோர்பெருக்கி நெய்யுருக்கி யுண்பவர்தம்
பேருரைக்கிற் போமே பிணி.

இ-ள். மல சலத்தை அடக்காமலும் விந்துவை அதிகமாக விடாமலும் உண்ணுமிடத்து நீரைக் காய்ச்சி மோரை விளாவி நெய்யை யுருக்கி உண்ணலுமாகிய தன்மையுள்ளவர்கள் பேர் கேட்டாலே பிணி விலகும். 1589

## இதுவுமது—விருத்தம்

பாலுண்போமெண்ணெய்பெறின் வெந்நீரிற்குளிப்போம்
பகற்புணரோம்பகற் றுயிலோம்பருவமுற்ற
வேலஞ்சேர்குழலியரோ டிளவெயிலும்விரும்போ
மிரண்டடக்கோமென்றைவிடோ மிடதுகையிற்படுப்போ

மூலமுஞ்சேர்கறிநுகமோ மூத்ததயிருண்போ
முதனுளிற்சமைத்தகறி யமுதெனினுமருந்தோம்
ஞாலந்தான்படைத்திடினும் பசித்தொழியவுண்ணோ
நமனார்க்கிங்கேதுகவை நாமிருக்குமிடத்தே. 1590

இதுவுமது

உண்பதிருபொழுதொழிய மூன்றுபொழுதுண்ணோ
முறங்குவதிராவொழியப் பகலுறக்கஞ்செய்யோ
மண்பரவுகிழங்குகளிற் கருணையன்றிப்புசியோம்
வாழையிளம்பிஞ்சொழியக் கனியருந்தல்செய்யோம்
பெண்கடம்மைத்திங்களுக்கோர் காலன்றிமருவோம்
பெருந்தாகமெடுத்திடினும் பெயர்த்துநீரருந்தோம்
நண்பெறவுண்டபின்பு குறுநடையுங்கொள்வோ
நமனார்க்கிங்கேதுகவை நாமிருக்குமிடத்தே. 1591

இதுவுமது

ஆறுதிங்கட்கொருதடவை வமனமருந்தயில்வோ
மடர்நான்குமதிக்கொருகாற் பேதியுறைநுகர்வோந்
தேறுமதியொன்றரைக்கோர் தரநசியம்பெறுவோந்
திங்களரைக்கிரண்டுதரஞ் சவரவிருப்புறுவோம்
வீறுசதுர்நாட்கொருக்கா னெய்முழுக்கைத்தவிரோம்
விருதுகளுக்கஞ்சன மூன்றுநாட்கொருக்காவிடுவோ
நாறுகந்தப்புட்பமிவை நடுநிசியின்முகரோ
நமனார்க்கிங்கேதுகவை நாமிருக்குமிடத்தே. 1592

இதுவுமது

பகத்தொழுக்குமாதாயாங் கந்துடைப்பமிவைதூட்
படநெருங்கோந்தீபமைந்தர் மரநிழலில்வசியோஞ்
சுகப்புணர்ச்சியன்னசீரணத் தருணஞ்செய்யோந்
துஞ்சலுணவிருமலஞ் சையோகமழுக்காடை
வகுப்பெடுக்கிற்சிந்துகச மிவைமாலைவிடுப்போம்
வற்கலந்தெய்வம்பிதுர் சற்குருவைவிடமாட்டோ
நகச்சலமுமுனைச்சலமுந் தெரிக்குமிடமணுகோ
நமனார்க்கிங்கேதுகவை நாமிருக்குமிடத்தே.

இ-ள். பசுவின்பாலை உண்போம், எண்ணெயிட்டுக்கொள்ளில் வெந்நீரில் ஸ்நானஞ்செய்வோம், பகற்காலத்தில் மைதுனமும் நித்திரையுஞ் செய்யோம், தன் வயதுக்கு மேற்பட்ட வயதுள்ள மாதரையும் இளவெய்யிலையும் இச்சியோம், மலசலங்களை யடக்கோம், சுக்கிலத்தை யடுத்தடுத்து விடோம், இடதுகைக் கீழாகப் படுப்போம், மூலரோகத்தை யுண்டாக்கும் பதார்த்த வகைகளை யுண்ணோம், புளித்த தயிரை யுண்போம், முன்னாளிற் சமைத்தகறி அமிர்தத்துக் கொப்பானாலும் புசியோம், பசித்தாலல்லது சாப்பிடோம், தினமொன்றுக்கு இரண்டுதர மல்லது மூன்றுதர முண்ணோம், புசித்தவுடன் உட்கார்ந்துறங்குதல் நன்மையென்று ஜயின நூலிற் சொல்லியிருப்பினும் அதையும் பகலிற் செய்யோம், மாதரை மாதத்திற் கோர்தரமே சேர்வோம், மிகுந்த தாகமுண்டாயினும் போஜன முடிவிலன்றிப் பின்பு ஜலபானஞ் செய்யோம், கருணைக்கிழங்கின்றி மற்றைக் கிழங்குகளைத் தின்னோம், வாழையின் இளங்காயையேயல்லாது பழத்தைத் தின்னோம், புசித்தபின் குறுநடையாக நடப்போம், ஆறுமாதத்திற் கொருதரம் வாந்தியாகும்படியாகவும், நான்குமாதத்திற் கொருதரம் பேதியாகும்படியாகவும் மருந்துண்போம், ஒன்றரை மாதத்திற் கொருதரம் நசியஞ் செய்துகொள்வோம், மாதத்திற்கு 4-தரஞ் சவரஞ் செய்துக்கொள்வோம், 4-தினத்துக் கொருதரம் அப்பியங்கஞ் செய்வோம், மூன்றுநாட் கொருதரம் கண்களுக்கு மையிடுவோம், கஸ்தூரி முதலிய வாசனைத் திரவியங்களையும், புட்பங்களையும் நடுராத்திரியில் ஆக்கிராணியோம், தூரஸ்திரீ நடக்கும்போது பறக்குந் தூசியும் மேலடிபடும்படி நெருங்கோம், இரவில் தீபத்தினிழல் மனிதர் நிழல் விருக்ஷநிழல் இவைகளிற் றங்கோம், போசனஞ் ஜீரணிக்குங் காலத்தில் புணர்ச்சி செய்யோம், நித்திரை போசனம் மலசலம் புணர்ச்சி அழுக்கு வஸ்திரம் சீப்பிட்டுச் சீவும்பொழுது சிந்துகின்ற ரோமம் ஆகியவைகளை மாலைக்காலத்தில் விடுப்போம், கன்றோடுகூடிய பசுவையும் தெய்வத்தையும் பிதுர்க்களையும் ஆசிரியரையும் அம்மாலைகாலத்தில் பூசிப்போம், நகச்சலமும் சிகைச்சலமும் தெறிக்குமிடத்தில் நெருங்கோம், ஆதலால் நோயை முன்னிட்டுவரும் இயமனுக்கு நம்மிடத்தி லென்னவேலை யிருக்கிறது, ஒன்றுமில்லை என்க. 1593

## தீநெறி இழிவுகூறல்

### விருத்தம்

சொல்லாருந்தேகபேதங்களினூறிற் கவிநூறுகளுரைத்தற்
கில்லாதுமுள்ளதுமாகியபதார்த்தங்களு மற்றியலுஞ்சொன்னோ
நல்லாரினெறிநடப்பார்சிலர்பிறழ்ந்து நடப்பரெனினுமென்செய்வேம்
பொல்லாவல்லரவுடனேபழகுமவர் பயனடைவர்புகலுங்காலே.

இ-ள். தேசங்கள்தோறும் உண்ணுகின்ற உணவுகள் தவிர இந்நாட்டிலிருப்பவர்கள் உண்ணத்தக்க குற்றமில்லாத பதார்த்தங்களையும் குற்றமுள்ள பதார்த்தங்களையும் அவைகளைப் பாகஞ் செய்து புசிக்கவேண்டிய இலக்கணத்தையும் இதுவரையும் விவரமாகச் சொன்னோம்; விவேகிகள் இம்முறையில் நின்றும் வழுவாது நடப்பார்கள். சிலர் இதற்கு மாறி நடப்பார்களேயாகில் நாம் செய்யக்கடவதியாது? இதனால் அவர்கள் அடைகின்ற பயனை சொல்லுமிடத்து மகா விஷசர்ப்பத்துடன் நாடோறும் பழகுபவர்கள் அடையும் பயனை யடைவார்கள். 1594

## நன்னெறிப் பெருமைகூறல்

### வெண்பா

திரவியமூழ் தில்லுணர்ந்தே தின்றனுப விப்பார்
பரவியநோய் காணாராய்ப் பால—ரிரவியைநேர்
மெய்யங் களித்திடுகோன் மிக்காயுள் பெற்றீரேழ்
வையங் களித்திட வாழ்வார்.

இ-ள். பதார்த்தங்களின் குணங்களையும் அவைகளைப் புசிக்கவேண்டிய காலபேதங்களையும் பகுத்தறிந்து புசித்து அதனால் கிடைக்கிற சுகத்தை அனுபவிப்பவர்கள் பலவாகக் கூறப்பட்ட பிணிகளைக் காணாதவர்களாய்ப் புத்திரர்களையும் மலையைப்போல உறுதியுள்ள சரீரத்தையும் சிருஷ்டி கர்த்தாவைப்போல மிகுந்த ஆயுள்பெற்று 14 உலகத்திலிருப்பவர்களுங் கண்டு களிக்கத்தக்கதாக வாழ்வார்கள். 1595

இவ்வாறே தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனாரும் மருந்து என்னும் அதிகாரத்திற் கட்டளையிட்டனர்.

அற்ற தறிந்து கடைப்பிடித்து மாறல்ல
துய்க்க துவரப் பசித்து.

இ-ள். ஒருவன் முன்னுண்டது அற்றபடியையறிந்து பின் மிகப் பசித்து உண்ணுமிடத்து மாறுகொள்ளாத உணவுகளைக் குறுக்கிக் குறிக்கிக்கொண்டு உண்ணக்கடவை—மாறுகொள்ளாமை யாவது உண்பவன் சரீர சுபாவத்தோடு மாறுகொள்ளாமையும் கால இயல்போடு மாறுகொள்ளாமையும் மாறுபாடில்லாத உணவு களே யானாலும் மனம் வேண்டியமட்டும் உண்ணாமல் பிணிவாரா அளவினால் உண்ணவேண்டும். இவ்வாறு உண்பவன் உயிர் பிணிக ளால் துன்பமுறாமல் சுகமுறும். 1596

பதார்த்தகுண சிந்தாமணி

மூலமும் - உரையும் முற்றிற்று.



காந்தியுண்டா நாளுங் களிப்புண்டாந் தேகத்திற்
சேர்ந்துவரும் வாதமுண்டாஞ் செப்பு.

இ-ள். வெள்ளிப்பாத்திரத்தில் அருந்த சிலேத்மகோபம் பித்த கோபமும் நீங்கும், தேஜசு மகிழ்ச்சி வாதாதிக்கமும் உண்டாம்.

## செம்புக்கலத்தின் குணம்

செம்பு கலத்திலுண்ணத் தேகா அரோக்கியமாம்
பம்பிரத்த தோடம் பறக்குங்கா—ணம்புவியி
லண்ணியிடுங் காந்தி யணங்கே விழியொளியாம்
புண்ணியமு நண்ணும் புகல்.

இ-ள். தேவமகளிரையொத்த பெண்ணே! செப்புப் பாத்திரத்திலுண்ணில் சரீரசவுக்கியம் தேஜசு கண்ணுக்கொளிவு சுகிர்தம் இவையுண்டாம். ரத்த பித்தரோகம் விலகும். 1429

## வெண்கலத்தின் குணம்

தாம்பரத்தில் வெள்ளீயந் தான்கலக்க வெண்கலமென்
றும்பெயர் பெறுங்கலத்து ளன்னமுண்ணிற்—றேம்புகின்ற
சோபமொடு ரத்தபித்தந் தோன்றவறி யாதனங்கள்
சாபமெனச் சொன்னுதலே சாற்று.

இ-ள். மதன்வில்லனைய புருவத்தாளே! வெண்கலப் பாத்திரத்திற் புசிக்கச் சோர்வும் உதிரபித்தமும் போம் என்க. 1430

## தாம்பரம், வெள்ளி, கலப்பு வெண்கலம் இக்கலங் களின் குணம் - விருத்தம்

தக்கதாம்பரத்தின்வட்டிற் றூனதிரத்தபித்த
மெயக்குறு தகற்றும்வெள்ளி விலக்கிடுமையந்தன்னை
யொக்கவேகலப்புவட்டி லுறுதிரிதோடம்போக்குங்
கக்கியவுதிரமேறுங் கனத்தவெண்கலத்திற்கென்னே.

இ-ள். செப்புக்கலம் சததபித்தத்தை விலக்கும், வெள்ளிக் கிண்ணி கபத்துன்பத்தை நீக்கும், கலப்புலோகவட்டில் திரி தோஷங்களை மாற்றும் வெண்கல உண்கலத்தினல் குறைந்த ரத்த தாதுவிருத்தி செய்யும். 1431

## உண்கலத்தில் இவைகள் முக்கியமெனல் - வெண்பா

வாழைவெள்ளைப் பன்னநன்று மற்றிலைகண் மத்திமமா
மாவைவெள்ளி வெண்கலமு மாநன்றாங்—கோழை
கயப்பாண்ட நோய்போகுங் கருதினிவைக் கெல்லாங்
கயப்பாண்ட மேலசனங் கொள்.